# சங்க அகப்பாடல்கள்
# தோழி கூற்று

முனைவர் இரா. நிர்மலா

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

இரண்டாம் முதன்மைச் சாலை
மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்
தரமணி, சென்னை - 600 113

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the book | : | Caṅka paṭalkaḷ : tōḻi kūṟṟu |
| Author | : | Dr. R. Nirmala<br>Associate Professor<br>Department of Tamil<br>Avvaiyar Govt. College from Women<br>Karaikkal - 609 602 |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus,<br>Chennai-600 113<br>Ph: 22542992 |
| Publication No. | : | 665 |
| Language | : | Tamil |
| Edition | : | 2010 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type used | : | 10 Point |
| No. of Pages | : | viii + 384 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs.170/- (Rupees One hundred and seventy only) |
| Printed by | : | Abi Offset<br>Offset Print House<br>Old No. 26, New No. 57, Thayar Sahib Street,<br>Mount Road, Chennai - 600 002. |
| Subject | : | Sangam Akam Poetry : Thōzhi kūṟṟu |

பேரா. முனைவர் கரு. அழ. குணசேகரன்
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை-600 113

# அணிந்துரை

செம்மொழியான தமிழ்மொழியின் பழந்தமிழ் இலக்கியங்களை உலக அரங்கில் பலரும் பல நிலைகளில் வாசிக்கலாம். அவற்றில் ஆய்வு மேற்கொள்ளவும் அமையும் காலமாக இது விளங்குகிறது. சங்க இலக்கியங்களில் ஆழ்ந்த ஆய்வுகள் மேற்கொள்வதற்கு ஏதுவாக இன்று பல்வேறு வாய்ப்புக்களை ஒரு புறம் செய்தளிக்க மறுபுறம் ஆய்வு மேற்கொள்ள இன்னொரு நிலையில் உலக மொழிகளொடு ஒப்பிட்டு ஆய்வு செய்திட, மறுநிலையில் இளந்தலைமுறை யினரிடையே எடுத்துச் செல்ல எனுமாறு பல்வேறு பணிகள் நடைபெற்றுக் கொண்டிருக்கக் கூடிய நிறுவனம் எம் நிறுவனமாகும்.

ஐந்திணைகளில் உருப்பெற்ற சங்க இலக்கிய அகப்பாடல்கள் மட்டும் தனித்த நிலையில் தொகுத்துத் தரும் பணிகளில் ஒன்று இது எனக் கொள்ளலாம். தோழி கூற்று, தலைவி கூற்று, தலைவன் கூற்று, நற்றாய் கூற்று எனுமாறு பல்வேறு கூற்று நிலைகளில் பாடல்கள் தொகுத்தும், வகுத்தும் ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

தோழி கூற்றில் அமைந்த பாடல்களே சங்க இலக்கியங்களில் மிகுந்து காணப்படுகின்றன. இந்தத் தொகுப்பு தோழி கூற்றுக்களாக அமைந்த அனைத்துப் பாடல்களையும் ஒன்று திரட்டித் தந்துள்ள அரும்பணியாக அமைகிறது. ஒருசேர அமைந்த ஒரு தொகுப்பினைக் காணும்போது ஆய்வுக் கண்ணோட்டத்தோடு இதனைப் பயில்வோருக்குப் புதுப்புது வெளிச்சங்கள் தோன்றிட வாய்ப்புண்டு. தோழியின் ஒட்டுமொத்த குரலாக எப்பொருள் முதன்மைப்படுத்தப் படுகிறது எனச் சட்டென ஓர் ஒளிக்கீற்று ஆய்வில் தென்பட வாய்ப்புண்டு. களவு, கற்பு, பண்பு, நாடு, வளம், இலக்கியச் செறிவு, உளவியல் பாங்கு, தலைவனை விளக்கும் பாங்கு, தலைவியுடனான

அமையும் எண் சுவை, பாலியல் உணர்வு, மொழி வளம், ஐவகை நில வருணனை எனுமாறு பற்பல நிலைகளில் தோழி விதந்தோதும் முறையைக் குறித்த தொகுப்பு நிலைப் பார்வை, தோழி கூற்றில் அமைந்துள்ள இத்தொகுப்பில் காண முடியும். மேற்குறிப்பிட்ட வற்றுள் எந்நிலையைத் தோழி தலைவியிடம் சிறப்புடன் எடுத்துக் கூறுகிறாள் என அறிந்துகொள்ள இந்நூல் மிகுந்த துணை செய்வதாய் அமைகிறது.

> **இனிய உள்ளம் இன்னா வாக**
> **முனிதக நிறுத்த நல்கல் எவ்வம்**
> **ஆருறை வெற்பன் மார்புறத் தணிதல்**
> **அறிந்தனர் அல்லள் அன்னை வார்கோல்**

எனும் பாடலில் அமைந்த உளவியல் தன்மையை உணருந்தோறும் உவகை மிஞ்சும்.

> **புணர்ந்தோர் புன்கண் அருளலும் உணர்ந்தோர்க்**
> **கொத்தன்று மன்னால் எவன்கொல் முத்தம்**

எனும் தோழியின் இப்பாடலடிகள் தொடக்கத்தில் கொண்ட உளவியல் பாங்கினை மனம் கொண்டவாறு பாடலின் பிற அடிகளை வாசிக்கும்போது கொள்ளும் பொருள் ஆழம் கூடுதலானது என்பதை சொல்லில் விளக்கவிட முடியாது. இது போன்ற தோழியின் பல உள்ளப் பதிவுகளையும், பாட்டின் தன்மைகளையும் உலகின் பிற செம்மொழி இலக்கியங்களோடு ஒப்ப வைத்து ஆய்வு செய்ய வேண்டிய ஒப்பற்ற பல ஆய்வுப் பணிகளுக்குத் தோழியின் ஒட்டுமொத்த குரல் எனப் பதில் கொண்ட இத்தொகுப்பு மிகுந்த துணை செய்யும் என்பதில் ஐயம் இல்லை. இந்நூலினை வெளியிடும் எம் நிறுவனம் இப் பதிப்புக் குறித்துப் பெருமை கொள்ளும்.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையைக் காட்டிவரும் **நிறுவனத் தலைவரும் தமிழக அரசின் முதல்வருமான மாண்புமிகு டாக்டர் கலைஞர்** அவர்களுக்குத் தமிழுலகம் என்றும் நன்றிக் கடன்பட்டுள்ளது.

தமிழ்ப்பணிகளுக்கு ஆற்றுப்படுத்தி வரும் **மாண்புமிகு தமிழக நிதியமைச்சர் பேராசிரியர் க. அன்பழகன்** அவர்களுக்கு எம் நன்றி என்றும் உரியது.

நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் **தமிழ் வளர்ச்சி, அறநிலையம் மற்றும் செய்தித் துறை அரசுச் செயலாளர் திரு சு. முத்துசாமி இ.ஆ.ப.** அவர்களுக்கும் நன்றி.

இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த அபி ஆப்செட் அச்சகத்தாருக்கு எம் பாராட்டுகள்.

**இயக்குநர்**

**முனைவர் இரா நிர்மலா**
**தமிழ் இணைப்பேராசிரியர்**
**அவ்வையார் அரசினர் மகளிர் கல்லூரி**
**காரைக்கால் 609 602.**

## நூலிற் புகுமுன் . . .

உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு நிகழும் இத் தருணத்தில் சங்க அகப்பாடல்கள் : தோழி கூற்று என்னும் இத்தொகுப்பு நூல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவன வெளியீடாக வருவது மிகவும் பொருத்தமானதாகும்.

சங்க அகப்பாடல்கள் பெரும்பாலும் மகளிரை மையமிட்டமைந் துள்ள நிலையில் தலைவன் - தலைவியின் களவு மற்றும் கற்பு வாழ்க்கையில் தோழியின் பங்கு மிகப் பெரிதாக இருப்பதைத் தமிழுலகம் நன்கு அறியச் செய்யும் முயற்சியாக இந்நூல் அமைகிறது.

இந்நூலில் அக இலக்கியங்கள் அறிஞர் அனைவரும் ஏற்றுக்கொள்ளும் கால அடைவின் அடிப்படையிலும் தமிழரின் வாழ்வியல் பண்பாட்டிலான திணை அடிப்படையிலும் இடம்பெறு கின்றன. சங்க அகப்பாடல்கள் குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்னும் திணை வரிசையில் அகநானூறு, ஐங்குறுநூறு, குறுந்தொகை, நற்றிணை, கலித்தொகை, பரிபாடல் என்னும் நூல்வரிசையில் தொகுக்கப்பெற்றுள்ளன.

எண்ணிக்கை அடிப்படையில் முதலிடம் வகிக்கின்ற தோழி கூற்றுப் பாடல்கள் முதலாவதாகத் தொகுக்கப் பெற்றுள்ளன. அடுத்தநிலையில் தலைவி, தலைவன் மற்றும் பிற மாந்தர் கூற்றுகள் எண்ணிக்கை அடிப்படையில் தொடர்ந்து அடுத்தடுத்த தொகுதிகளாக இடம்பெற உள்ளன. இந்நூல் தொகுப்பு, இன்றைய ஆய்வுலகில் பேரிடம் வகிக்கும் பெண்ணிய ஆய்வுகளுக்குத் துணையாக அமையும் என்பதில் ஐயமில்லை.

இந்நூல் வெளிவரும் இந்நேரத்தில், இத்தகு முயற்சிக்குக் களமமைத்துக் கொடுத்த பேராசிரியர் முனைவர் அ.அ. மணவாளன் அவர்களுக்கும் இத்தொகுப்பு செப்பமுற வெளிவரத் துணைபுரிந்த என் துணைவர் முனைவர் ந. கிருட்டினமூர்த்தி அவர்களுக்கும் நன்றி பாராட்டுகிறேன்.

நூலை வெளிக்கொணரும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் முனைவர் கரு. அழ. குணசேகரன் அவர்களுக்கும் மற்றும் நிறுவன அலுவலர் அனைவருக்கும் என் அன்புகலந்த நன்றி என்றும் உரித்து.

இரா நிர்மலா

# பொருளடக்கம்

# குறிஞ்சித் திணை

## கபிலர்

*கோழிலை வாழைக் கோண்மிகு பெருங்குலை*
*யூழுறு தீங்கனி யுண்ணுநர்த் தடுத்த*
*சாரற் பலவின் சுளையொ டூழ்படு*
*பாசறை நெடுஞ்சுனை விளைந்த தேற*
*லறியா துண்ட கடுவ னயலது*
*கறிவளர் சாந்த மேறல்செல் லாது*
*நறுவீ யடுக்கத்து மகிழ்ந்துகண் படுக்குங்*
*குறியா வின்ப மெளிதி னின்மலைப்*
*பல்வேறு விலங்கு மெய்து நாட*
*குறித்த வின்ப நினக்கெவ னரிய*
*வெறுத்த வேஎர் வேய்புரை பணைத்தோ*
*ணிறுப்ப நில்லா நெஞ்சமொடு நின்மாட்*
*டிவளு மினைய ளாயிற் றந்தை*
*யருங்கடிக் காவலர் சோர்பத னொற்றிக்*
*கங்குல் வருதலு முரியை பைம்புதல்*
*வேங்கையு மொள்ளிணர் விரிந்தன*
*நெடுவெண் டிங்களு மூர்கொண் டன்றே* **(அகம். 2)**

பகற்குறிக்கட் செறிப்பறிவுறீஇத் தோழி வரைவுகடாயது. 1

## கபிலர்

*யாயே கண்ணினுங் கடுங்கா தலளே*
*யெந்தையும் நிலனுறப் பொறாஅன் சீறடி சிவப்ப*
*வெவனில குறுமக ளியங்குதி யென்னும்*
*யாமே, பிரிவின் றியைந்த துவரா நட்பி*
*னிருதலைப் புள்ளி னோருயி ரம்மே*
*யேனலங் காவல ரானா தார்த்தொறுங்*
*கிளிவிளி பயிற்றும் வெளிலாடு பெருஞ்சினை*
*விழுக்கோட் பலவின் பழுப்பயன் கொண்மார்*

*குறவ ரூன்றிய குரம்பை புதைய*
*வேங்கை தாஅய தேம்பாய் தோற்றம்*
*புலிசெத்து வெரீஇய புகர்முக வேழ*
*மழைபடு சிலம்பிற் கழைபடப் பெயரு*
*நல்வரை நாட நீவரின்*
*மெல்லிய லோருந் தான்வா ழலனே* **(அகம். 12)**

பகற்குறி வாராநின்ற தலைமகன் தோழியாற் செறிப்பறிவுறுக்கப்பட்டு இரவுக்குறிவாரா வரைவல் என்றாற்கு, அதுவும் மறுத்து வரைவு கடாயது. **2**

**கபிலர்**

*நீர்நிறங் கரப்ப வூழுறு புதிர்ந்து*
*பூமலர் கஞலிய கடுவரற் கான்யாற்றுக்*
*கராஅந் துஞ்சுங் கல்லுயர் மறிசுழி*
*மராஅ யானை மதந்தப வொற்றி*
*யுராஅ வீர்க்கு முட்குவரு நீத்தங்*
*கடுங்கட் பன்றியி னடுங்காது துறந்து*
*நாம வருந்துறைப் பேர்தந் தியாமத்*
*தீங்கும் வருபவோ வோங்கல் வெற்ப*
*வொருநாள் விழும முறினும் வழிநாள்*
*வாழ்குவ ளல்லளென் தோழி யாவது*
*மூறில் வழிகளும் பயில வழங்குநர்*
*நீடின் றாக விழுக்குவ ரதனா*
*லுலமரல் வருத்த முறுதுமெம் படப்பைக்*
*கொடுந்தே னிழைத்த கோடுயர் நெடுவரைப்*
*பழந்தூங்கு நளிப்பிற் காந்தளம் பொதும்பிற்*
*பகனீ வரினும் புணர்குவை யகன்மலை*
*வாங்கமைக் கண்ணிடை கடுப்பயா*
*யோம்பின ளெடுத்த தடமென் றோளே* **(அகம். 18)**

தோழி இரவு வருவானைப் பகல் வரவென்றது. 3

## பாண்டியன் அறிவுடைநம்பி

*மெய்யிற் றீரா மேவரு காமமொடு*
*எய்யா யாயினு முரைப்பல் தோழி*
*கொய்யா முன்உகுங் குரல்வார்பு தினையே*
*அருவி யான்ற பைங்கால் தோறும்*
*இருவி தோன்றின பலவே நீயே*
*முருகுமுரண் கொள்ளுந் தேம்பாய் கண்ணிப்*
*பரியல் நாயொடு பன்மலைப் படரும்*
*வேட்டுவற் பெறலொ டமைந்தனை யாழநின்*
*பூக்கெழு தொடலை நுடங்க எழுந்தெழுந்து*
*கிள்ளைத் தெள்விளி யிடையிடை பயிற்றி*
*ஆங்காங் கொழுகா யாயின் அன்னை*
*சிறுகிளி கடிதல் தேற்றா ளிவளெனப்*
*பிறர்த்தந்து நிறுக்குவ ளாயின்*
*உறற்கரி தாகுமவன் மலர்ந்த மார்பே* (அகம். 28)

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தோழி சொல்லியது. 4

## நல்வெள்ளியார்

*நெருந லெல்லை யேனற் றோன்றித்*
*திருமணி யொளிர்வரும் பூணன் வந்து*
*புரவலன் போலுந் தோற்ற முறழ்கொள*
*விரவன் மாக்களிற் பணிமொழி பயிற்றிச்*
*சிறுதினைப் படுகிளி கடீஇயர் பன்மாண்*
*குளிர்கொ டட்டை மதனில புடையாச்*
*சூரர மகளிரி னின்ற நீமற்*
*றியாரை யோவெம் மணங்கியோ யுண்கெனச்*
*சிறுபுறங் கவையின னாக வதற்கொண்*
*டிகுபெயன் மண்ணின் ஞெகிழ்பஞ ருற்றவென்*
*னுள்ளவ னறித லஞ்சி யுள்ளில்*
*கடிய கூறிக் கைபிணி விடாஅ*
*வெரூஉமான் பிணையி னொரீஇ நின்ற*

வென்னுரத் தகைமையிற் பெயர்த்துப்பிறி தென்வயிற்
சொல்ல வல்லிற்று மிலனே யல்லாத்
தினந்தீர் களிற்றிற் பெயர்ந்தோ னின்றுந்
தோலாவா றில்லை தோழிநாஞ் சென்மோ
சாயிறைப் பணைத்தோட் கிழமை தனக்கே
மாசின் றாதலு மறியா னேசற்
றென்குறைப் புறனிலை முயலு
மண்க ணாளனை நகுகம் யாமே (அகம். 32)

பின்னின்ற தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி தலைமகட்குக் குறைநயப்பக் கூறியது. 5

## வடமவண்ணக்கண் பேரிசாத்தனார்

விரியிணர் வேங்கை வண்டுபடு கண்ணியன்
றெரியிதழ்க் குவளைத் தேம்பாய் தார
னஞ்சிலை யிடவ தாக வெஞ்செலற்
கணைவலந் தெரிந்து துணைபடர்ந் துள்ளி
வருதல் வாய்வது வான்றோய் வெற்பன்
வந்தன னாயி னந்தளிர்ச் செயலைத்
தாழ்வி லோங்குசினைத் தொடுத்த வீழ்கயிற்
றூசன் மாறிய மருங்கும் பாய்புட
னாடா மையிற் கலுழ்பில தேறி
நீடிதழ் தலைஇய கவின்பெறு நீலங்
கண்ணென மலர்ந்த சுனையும் வண்பறை
மடக்கிளி யெடுத்தல் செல்லாத் தடக்குரற்
குலவுப்பொறை யிறுத்த கோற்றலை யிருவி
கொய்தொழி புனமு நோக்கி நெடிதுநினைந்து
பைதலன் பெயரலன் கொல்லோ வைதேய்
கயவெள் ளருவி சூடிய வுயர்வரைக்
கூஉங்க ணஃதெம் மூரென
வாங்கதை யறிவுறன் மறந்திசின் யானே (அகம். 38)

தோழி தலைமகன் குறைகூறியது. 6

## கபிலர்

*மலிபெயற் கலித்த மாரிப் பித்திகத்துக்*
*கொயலரு நிலைஇய பெயலேர் மணமுகைச்*
*செவ்வெரி நுறழுங் கொழுங்கடை மழைக்கட்*
*டளிரேர் மேனி மாஅ யோயே*
*நடுவறங் கூர நாஞ்சி றுஞ்சக்*
*கோடை நீடிய பைதறு காலைக்*
*குன்றுகண் டன்ன கோட்ட யாவையுஞ்*
*சென்றுசேக் கல்லாப் புள்ள வுள்ளி*
*லென்றூழ் வியன்குள நிறைய வீசிப்*
*பெரும்பெயல் பொழிந்த வேம வைகறைப்*
*பல்லோ ருவந்த வுவகை யெல்லா*
*மென்னுட் பெய்தந் தற்றே சேணிடை*
*யோங்கித் தோன்று முயர்வரை*
*வான்றோய் வெற்பன் வந்த மாறே* (அகம். 42)

தலைமகன் வரைவு மலிந்தமை தோழி தலைமகட்குச் சொல்லியது. 7

## தங்கால் முடக்கொற்றனார்

*அன்னாய் வாழிவேண் டன்னை நின்மகள்*
*பாலு முண்ணாள் பழங்கண் கொண்டு*
*நனிபசந் தனளென வினவுதி யதன்றிறம்*
*யானுந் தெற்றென வுணரேன் மேனாள்*
*மலிபூஞ் சாரலென் றோழி மாரோ*
*டொலிசினை வேங்கை கொய்குவஞ் சென்றுழிப்*
*புலிபுலி யென்னும் பூச றோன்ற*
*வொண்செங் கழுநீர்க் கண்போ லாயித*
*ழூசி போகிய சூழ்செய் மாலையன்*
*பக்கஞ் சேர்த்திய செச்சைக் கண்ணியன்*
*குயமண் டாகஞ் செஞ்சாந்து நீவி*
*வரிபுனை வில்ல னொருகணை தெரிந்துகொண்*
*டியாதோ மற்றம் மாதிறம் படரென*

*வினவி நிற்றந் தோனே யவற்கண்*
*டெம்முள் ளெம்முண் மெய்ம்மறை பொடுங்கி*
*நாணி நின்றனெ மாகப் பேணி*
*யைவகை வகுத்த கூந்த லாய்நுதன்*
*மையீ ரோதி மடவீர் நும்வாய்ப்*
*பொய்யு முளவோ வென்றனன் பையெனப்*
*பரிமுடுகு தவிர்த்த தேர னெதிர்மறுத்து*
*நின்மக ளுண்கண் பன்மா ணோக்கிச்*
*சென்றோன் மன்றவக் குன்றுகிழ வோனே*
*பகன்மா யந்திப் படுகட ரமையத்*
*தவன்மறை தேஎ நோக்கி மற்றிவன்*
*மகனே தோழி யென்றனள்*
*ளதனள வுண்டுகோண் மதிவல் லோர்க்கே* **(அகம். 48)**

செவிலித்தாய்க்குத் தோழி அறத்தொடு நின்றது. 8

## ஊட்டியார்

*அன்னாய் வாழிவேண் டன்னைநம் படப்பைத்*
*தண்ணயத் தமன்ற கூதளங் குழைய*
*இன்னிசை அருவி பாடும் என்னதூஉங்*
*கேட்டியோ வாழிவேண் டன்னைநம் படப்பை*
*ஊட்டி அன்ன ஒண்தளிர்ச் செயலை*
*ஓங்குசினைத் தொடுத்த ஊசல் பாம்பென*
*முழுமுதல் துமிய உருமெறிந் தன்றே*
*பின்னுங் கேட்டியோ எனவுமஃ தறியாள்*
*அன்னையும் கனைதுயில் மடிந்தனள் அதன்றலை*
*மன்னுயிர் மடிந்தன்றால் பொழுதே காதலர்*
*வருவ ராயின் பருவம் இதுவெனச்*
*சுடர்ந்திலங் கெல்வளை நெகிழ்ந்த நம்வயின்*
*படர்ந்த உள்ளம் பழுதன் றாக*
*வந்தனர் வாழி தோழி அந்தரத்து*
*இமிழ்பெயல் தலைஇய இனப்பல கொண்மூத்*

தவிர்வில் வெள்ளம் தலைத்தலை சிறப்பக்
கன்றுகால் ஒய்யும் கடுஞ்சுழி நீத்தம்
புன்றலை மடப்பிடிப் பூசல் பலவுடன்
வெண்கோட் டியானை விளிபடத் துழவும்
அகல்வாய்ப் பாந்தட் படாஅர்ப்
பகலும் அஞ்சும் பனிக்கடுஞ் சுரனே (அகம். 68)

தலைமகன் இரவுக்குறி வந்தமையறிந்த தோழி தலைமகட்குச் சொல்லியது. 9

## மதுரை நக்கீரனார்

நனந்தலைக் கானத் தாளி யஞ்சி
இனந்தலைத் தரூஉ மெறுழ்கிளர் முன்பின்
வரிஞிமி றார்க்கும் வாய்புகு கடாஅத்துப்
பொறிநுதற் பொலிந்த வயக்களிற் றொருத்தல்
இரும்பிணர்த் தடக்கையின் ஏமுறத் தழுவக்
கடுஞ்சூன் மடப்பிடி நடுங்குஞ் சாரல்
தேம்பிழி நறவின் குறவர் முன்றில்
முந்தூ ழாய்மலர் உதிரக் காந்தள்
நீடிதழ் நெடுந்துடுப் பொசியத் தண்ணென
வாடை தூக்கும் வருபனி யற்சிரம்
நம்மில் புலம்பிற் றம்மூர்த் தமியர்
என்னா குவர்கொல் அளியர் தாமென
எம்விட் டகன்ற சின்னாட் சிறிதும்
உள்ளியும் அறிதிரோ ஓங்குமலை நாட
உலகுடன் திரிதரும் பலர்புகழ் நல்லிசை
வாய்மொழிக் கபிலன் சூழச் சேய்நின்று
செழுஞ்செய்ந் நெல்லின் விளைகதிர் கொண்டு
தடந்தாள் ஆம்பல் மலரொடு கூட்டி
யாண்டுபல கழிய வேண்டுவயிற் பிழையா
தாளிடூஉக் கடந்து வாளமர் உழக்கி
ஏந்துகோட் டியானை வேந்தர் ஓட்டிய
கடும்பரிப் புரவிக் கைவண் பாரி

*தீம்பெரும் பைஞ்சுனைப் பூத்த*
*தேங்கமழ் புதுமலர் நாறுமிவள் நுதலே* **(அகம். 78)**

களவுக் காலத்துப் பிரிந்துவந்த தலைமகற்குத் தோழி சொல்லியது. 10

## ஈழத்துப் பூதன்தேவனார்

*முதைச்சுவல் கலித்த மூரிச் செந்தினை*
*ஓங்குவணர்ப் பெருங்குரல் உணீஇய பாங்கர்ப்*
*பகுவாய்ப் பல்லிப் பாடோர்த்துக் குறுகும்*
*புருவைப் பன்றி வருதிறம் நோக்கிக்*
*கடுங்கைக் கானவன் கழுதுமிசைக் கொளீஇய*
*நெடுஞ்சுடர் விளக்கம் நோக்கி வந்துநம்*
*நடுங்குதுயர் களைந்த நன்ன ராளன்*
*சென்றனன் கொல்லோ தானே குன்றத்*
*திரும்புலி தொலைத்த பெருங்கை யானைக்*
*கவுள்மலி பிழிதரும் காமர் கடாஅம்*
*இருஞ்சிறைத் தொழுதி யார்ப்ப யாழ்செத்*
*திருங்கல் விடரளை அசுணம் ஓர்க்கும்*
*காம்பமல் இறும்பில் பாம்புபடத் துவன்றிக்*
*கொடுவிரல் உளியம் கெண்டும்*
*வடுவாழ் புற்றின வழக்கரு நெறியே* **(அகம். 88)**

இரவுக்குறி வந்த தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி சொல்லியது. 11

## மதுரைப் பாலாசிரியர் நற்றாமனார்

*நெடுமலை யடுக்கம் கண்கெட மின்னிப்*
*படுமழை பொழிந்த பானாட் கங்குல்*
*குஞ்சரம் நடுங்கத் தாக்கிக் கொடுவரிச்*
*செங்கண் இரும்புலி குழுமுஞ் சாரல்*
*வாரல் வாழியர் ஐய நேரிறை*
*நெடுமென் பணைத்தோள் இவளும் யானும்*
*காவல் கண்ணினம் தினையே நாளை*

*மந்தியும் அறியா மரம்பயில் இறும்பின்*
*ஒண்செங் காந்தள் அவிழ்ந்த ஆங்கண்*
*தண்பல் அருவித் தாழ்நீர் ஒருசிறை*
*உருமுச்சிவந் தெறிந்த உரனழி பாம்பின்*
*திருமணி விளக்கிற் பெறுகுவை*
*இருண்மென் கூந்தல் ஏமுறு துயிலே* (அகம். 92)

இரவுக்குறிச் சென்று தலைமகளைக் கண்ணுற்று நீங்குந் தலைமகனைப் பகற்குறி நேர்ந்த வாய்பாட்டால் தோழி வரைவுகடாயது. 12

## வெறிபாடிய காமக்கண்ணியார்

*பனிவரை நிவந்த பயங்கெழு கவாஅன்*
*துனியில் கொள்கையொடு அவர்நமக் குவந்த*
*இனிய உள்ளம் இன்னா வாக*
*முனிதக நிறுத்த நல்கல் எவ்வம்*
*சூருறை வெற்பன் மார்புறத் தணிதல்*
*அறிந்தனர் அல்லள் அன்னை வார்கோல்*
*செறிந்திலங்கு எல்வளை நெகிழ்ந்தமை நோக்கிக்*
*கையறு நெஞ்சினள் வினவலின் முதுவாய்ப்*
*பொய்வல் பெண்டிர் பிரப்புளர் பிரீஇ*
*முருகன் ஆரணங் கென்றலின் அதுசெத்*
*தோவத் தன்ன வினைபுனை நல்லில்*
*பாவை யன்ன பலராய் மாண்கவின்*
*பண்டையிற் சிறக்கஎன் மகட்கெனப் பரைஇக்*
*கூடுகொள் இன்னியம் கறங்கக் களனிழைத்*
*தாடணி அயர்ந்த அகன்பெரும் பந்தர்*
*வெண்போழ் கடம்பொடு சூடி இன்சீர்*
*ஐதமை பாணி இரீஇக்கை பெயராச்*
*செல்வன் பெரும்பெயர் ஏத்தி வேலன்*
*வெறியயர் வியன்களம் பொற்ப வல்லோன்*
*பொறியமை பாவையின் தூங்கல் வேண்டின்*
*என்னாங் கொல்லோ தோழி மயங்கிய*

*மையற் பெண்டிர்க்கு நொவ்வ லாக*
*ஆடிய பின்னும் வாடிய மேனி*
*பண்டையிற் சிறவா தாயின் இம்மறை*
*அலரா காமையோ அரிதே அஃதான்*
*றறிவர் உறுவிய அல்லல்கண் டருளி*
*வெறிகமழ் நெடுவேள் நல்குவன் எனினே*
*செறிதொடி யுற்ற செல்லலும் பிறிதெனக்*
*கான்கெழு நாடன் கேட்பின்*
*யானுயிர் வாழ்தல் அதனினும் அரிதே* **(அகம். 98)**

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைமகற்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது. 13

## தங்கால் பொற்கொல்லனார்

*புணர்ந்தோர் புன்கண் அருளலும் உணர்ந்தோர்க்*
*கொத்தன்று மன்னால் எவன்கொல் முத்தம்*
*வரைமுதல் சிதறி யவைபோல் யானைப்*
*புகர்முகம் பொருத புதுநீர் ஆலி*
*பளிங்குசொரி வதுபோல் பாறை வரிப்பக்*
*கார்கதம் பட்ட கண்ணகன் விசும்பின்*
*விடுபொறி ஞெகிழியில் கொடிபட மின்னிப்*
*படுமழை பொழிந்த பானாட் கங்குல்*
*ஆருயிர்த் துப்பில் கோண்மா வழங்கும்*
*இருளிடைத் தமியன் வருதல் யாவதும்*
*அருளான் வாழி தோழி அல்கல்*
*விரவுப்பொறி மஞ்ஞை வெரீஇ யரவின்*
*அணங்குடை யருந்தலை பைவிரிப் பவைபோல்*
*காயா மென்சினை தோய நீடிப்*
*பஃறுடுப் பெடுத்த அலங்குகுலைக் காந்தள்*
*அணிமலர் நறுந்தா தூதுந் தும்பி*
*கையாடு வட்டின் தோன்றும்*
*மையாடு சென்னிய மலைகிழ வோனே* **(அகம். 108)**

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தோழி சொல்லியது. 14

## நெய்தற் சாய்த்துய்த்த ஆவூர்கிழார்

கூனல் எண்கின் குறுநடைத் தொழுதி
சிதலை செய்த செந்நிலைப் புற்றின்
மண்புனை நெடுங்கோ டுடைய வாங்கி
இரைநசைஇப் பரிக்கும் அரைநாட் கங்குல்
ஈன்றணி வயவுப்பிணப் பசித்தென மறப்புலி
ஒளிறேந்து மருப்பின் களிறட்டுக் குழுமும்
பனியிருஞ் சோலை யெமியம் என்னாய்
தீங்குசெய் தனையே யீங்குவந் தோயே
நாளிடைப் படினென் றோழி வாழாள்
தோளிடை முயக்கம் நீயும் வெய்யை
கழியக் காதலர் ஆயினும் சான்றோர்
பழியொடு வரூஉம் இன்பம் வெஃகார்
வரையின் எவனோ வான்தோய் வெற்ப
கணக்கலை இகுக்கும் கறியிவர் சிலம்பின்
மணப்பருங் காமம் புணர்ந்தமை அறியார்
தொன்றியல் மரபின் மன்றல் அயரப்
பெண்கோள் ஒழுக்கம் கண்கொள நோக்கி
நொதுமல் விருந்தினம் போலவிவள்
புதுநாண் ஒடுக்கமும் காண்குவம் யாமே (அகம். 112)

இரவுக்குறி வந்த தலைமகனை யெதிர்ப்பட்டு நின்று தோழி சொல்லி வரைவுகடாயது. 15

## கபிலர்

கறங்குவெள் ளருவி பிறங்குமலைக் கவாஅன்
தேங்கமழ் இணர வேங்கை சூடித்
தொண்டகப் பறைச்சீர் பெண்டிரொடு விரைஇ
மறுகிற் றூங்கும் சிறுகுடிப் பாக்கத்து
இயன்முரு கொப்பினை வயநாய் பிற்படப்
பகல்வரிற் கவ்வை அஞ்சுதும் இகல்கொள
இரும்பிடி கன்றொடு விரைஇய கயவாய்ப்
பெருங்கை யானைக் கோள்பிழைத் திரீஇய
அடுபுலி வழங்கும் ஆரிருள் நடுநாள்

தனியை வருதல் அதனினும் அஞ்சுதும்
என்னா குவள்கொல் தானே பன்னாள்
புணர்குறி செய்த புலர்குரல் ஏனல்
கிளிகடி பாடலும் ஒழிந்தனள்
அளியள் தானின் அளியல திலளே (அகம். 118)

செறிப்பறிவுறீஇ இரவும் பகலும் வாரலென்று வரைவுகடாயது. 16

## தாயங்கண்ணனார்

ஏனலு மிறங்குகுர லிறுத்தன நோய்மலிந்து
ஆய்கவின் றொலைந்தவிவ ளுதலு நோக்கி
ஏதில மொழியுமிவ் வூரு மாகலிற்
களிற்றுமுகந் திறந்த கவுளுடைப் பகழி
வானிணப் புகவிற் கானவர் தங்கை
அம்பணை மென்றோ ளாயிதழ் மழைக்கண்
ஒல்கியல் கொடிச்சியை நல்கினை யாயிற்
கொண்டனை சென்மோ நுண்பூண் மார்ப
துளிதலைத் தலைஇய சார னளிசுனைக்
கூம்புமுகை யவிழ்த்த குறுஞ்சிறைப் பறவை
வேங்கை விரியிணர் ஊதிக் காந்தட்
டேனுடைக் குவிகுலைத் துஞ்சி யானை
யிருங்கவுட் கடாஅங் கனவும்
பெருங்கல் வேலிநும் முறைவி னூர்க்கே (அகம். 132)

தோழி தலைமகளை இடத்துய்த்துவந்து தலைமகனை எதிர்ப்பட்டுநின்று வரைவுகடாயது. 17

## பரணர்

பனைத்திர ளன்ன பரேரெறுழ்த் தடக்கைக்
கொலைச்சினந் தவிரா மதனுடை முன்பின்
வண்டுபடு கடாஅத் துயர்மருப் பியானை
தண்கமழ் சிலம்பின் மரம்படத் தொலைச்சி
உறுபுலி யுரறக் குத்தி விறல்கடிந்து
சிறுதினைப் பெரும்புனம் வவ்வு நாட

*கடும்பரிக் குதிரை யாஅ யெயின*
*னெடுந்தேர் மிஞிலியொடு பொருதுகளம் பட்டெனக்*
*காணிய செல்லாக் கூகை நாணிக்*
*கடும்பகல் வழங்கா தாஅங் கிடும்பை*
*பெரிதா லம்ம விவட்கே யதனான்*
*மாலை வருதல் வேண்டுஞ் சோலை*
*முளைமேய் பெருங்களிறு வழங்கு*
*மலைமுத லடுக்கத்த சிறுக லாறே*        **(அகம். 148)**

பகல் வருவானை இரவு வருகென்றது. 18

## கபிலர்

*உருமுரறு கருவிய பெருமழை தலைஇப்*
*பெயலான் றவிந்த தூங்கிரு ணடுநாண்*
*மின்னுநிமிர்ந் தன்ன கனங்குழை யிமைப்பப்*
*பின்னுவிடு நெறியிற் கிளைஇய கூந்தலள்*
*வரையிழி மயிலி னொல்குவன ளொதுங்கி*
*மிடையூர் பிழியக் கண்டனெ னிவளென*
*வலையயல் வாழிவேண் டன்னைநம் படப்பைச்*
*சூருடைச் சிலம்பிற் சுடர்ப்பூ வேய்ந்து*
*தாம்வேண் டுருவி னணங்குமார் வருமே*
*நனவின் வாயே போலத் துஞ்சுநர்க்*
*கனவாண்டு மருட்டலு முண்டே யிவடான்*
*சுடரின்று தமியளும் பனிக்கும் வெருவர*
*மன்ற மராஅத்த கூகை குழறினும்*
*நெஞ்சழிந் தரணஞ் சேரு மதன்றலைப்*
*புலிக்கணத் தன்ன நாய்தொடர் விட்டு*
*முருக னன்ன சீற்றத்துக் கடுந்திற*
*லெந்தையு மில்ல னாக*
*வஞ்சுவ ளல்லளோ விவளிது செயலே*        **(அகம். 158)**

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி செவிலித்தாய்க்குச் சொல்லுவாளாய்த் தலைமகன் கேட்பச் சொல்லியது. 19

## கோட்டம்பலத்துத் துஞ்சிய சேரமான்

*யாம நும்மொடு கழிப்பி நோய்மிகப்*
*பனிவார் கண்ணேம் வைகுது மினியே*
*யான்றல் வேண்டும் வான்றோய் வெற்ப*
*பல்லான் குன்றிற் படுநிழற் சேர்ந்த*
*நல்லான் பரப்பிற் குழுமூ ராங்கட்*
*கொடைக்கட னேன்ற கோடா நெஞ்சி*
*னுதிய னட்டில் போல வொலியெழுந்*
*தருவி யார்க்கும் பெருவரைச் சிலம்பின்*
*ஈன்றணி யிரும்பிடி தழீஇக் களிறுதன்*
*தூங்குநடைக் குழவி துயில்புறங் காப்ப*
*ஓடுங்களை புலம்பப் போகிக் கடுங்கண்*
*வாள்வரி வயப்புலி கன்முழை யுரறக்*
*கானவர் மடிந்த கங்குன்*
*மானதர்ச் சிறுநெறி வருத னீயே* **(அகம். 168)**

இரவுக்குறிவந்த தலைமகனை இரவுக்குறி விலக்கி வரைவுகடாயது. 20

## மதுரைப் பாலாசிரியர் நப்பாலனார்

*வாரண முரறு நீர்திகழ் சிலம்பிற்*
*பிரசமொடு விரைஇய வயங்குவெள் ளருவி*
*இன்னிசை யிமிழியங் கடுப்ப விம்மெனக்*
*கன்முகை விடரகஞ் சிலம்ப வீழும்*
*காம்புதலை மணந்த வோங்குமலைச் சாரல்*
*இரும்புவடித் தன்ன கருங்கைக் கானவன்*
*விரிமலர் மராஅம் பொருந்திக் கோறெரிந்து*
*வரிநுதல் யானை யருநிறத் தழுத்தி*
*இகலடு முன்பின் வெண்கோடு கொண்டுதன்*
*புல்வேய் குரம்பை புலர வூன்றி*
*முன்றி னீடிய முழவுறழ் பலவிற்*
*பிழமகி ழுவகையன் கிளையொடு கலிசிறந்து*
*சாந்த ஞெகிழியி னூன்புழுக் கயருங்*
*குன்ற நாடநீ யன்பிலை யாகுதல்*

*அறியேன் யானஃ தறிந்தென னாயின்*
*அணியிழை யுண்க ணாயிதழ்க் குறுமகள்*
*மணியேர் மாணலஞ் சிதையப்*
*பொன்னேர் பசலை பாவின்று மன்னே* **(அகம். 172)**

தோழி தலைமகளை இடத்துய்த்துவந்து தலைமகனை வரைவுகடாயது. 21

## பரணர்

*வயிரத் தன்ன வையேந்து மருப்பின்*
*வெதிர்வே ரன்ன பரூஉமயிர்ப் பன்றி*
*பறைக்க ணன்ன நிறைச்சுனை பருகி*
*நீலத் தன்ன வகலிலைச் சேம்பின்*
*பிண்ட மன்ன கொழுங்கிழங்கு மாந்திப்*
*பிடிமடிந் தன்ன கன்மிசை யூழ்ழ்பு*
*யாறுசேர்ந் தன்ன வூறுநீர்ப் படாஅர்ப்*
*பைம்புத லளிசினைக் குருகிருந் தன்ன*
*வண்பிணி யவிழ்ந்த வெண்கூ தாளத்*
*தலங்குகுலை யலரி தீண்டித் தாதுகப்*
*பொன்னுரை கட்டளை கடுப்பக் காண்வரக்*
*கிளையமல் சிறுதினை விளைகுரன் மேய்ந்து*
*கண்ணினிது படுக்கு நன்மலை நாடனொ*
*டுணர்ந்தனை புணர்ந்த நீயு நின்றோட்*
*பணைக்கவி னழியாது துணைப்புணர்ந் தென்றுந்*
*தவலி லுலகத் துறைஇயரோ தோழி*
*யெல்லையு மிரவு மென்னாது கல்லெனக்*
*கொண்டல் வான்மழை பொழிந்த வைகறைத்*
*தண்பனி யற்சிரந் தமியோர்க் கரிதெனக்*
*கனவினும் பிரிவறி யலனே யதன்றலை*
*முற்றான் கண்ட ஞான்றினும்*
*பிற்பெரி தளிக்குந்தன் பண்பி னானே* **(அகம். 178)**

தோழி வரைவுமலிந்து சொல்லியது. 22

## கபிலர்

*பூங்கண் வேங்கைப் பொன்னிணர் மிலைந்து*
*வாங்கமை நோன்சிலை யெருத்தத் திரீஇத்*
*தீம்பழுப் பலவின் சுளைவிளை தேறல்*
*வீளை அம்பின் இளையரொடு மாந்தி*
*யோட்டியல் பிழையா வயநாய் பிற்பட*
*வேட்டம் போகிய குறவன் காட்ட*
*குளவித் தண்புதல் குருதியொடு துயல்வர*
*முளவுமாத் தொலைச்சுங் குன்ற நாட*
*அரவெறி யுருமோ டொன்றிக் கால்வீழ்த்து*
*உரவுமழை பொழிந்த பானாட் கங்குல்*
*தனியை வந்த வாறுநினைந் தல்கலும்*
*பனியொடு கலுழுமிவள் கண்ணே அதனால்*
*கடும்பகல் வருதல் வேண்டுந் தெய்ய*
*அதிர்குரல் முதுகலை கறிமுறி முனைஇ*
*உயர்சிமை நெடுங்கோட் டுகள உக்க*
*கமழ்தழ் அலரி தாஅய் வேலன்*
*வெறியயர் வியன்களங் கடுக்கும்*
*பெருவரை நண்ணிய சார லானே* (அகம். 182)

தோழி இராவருவானைப் பகல்வரவென்றது. 23

## வீரை வெளியன் தித்தனார்

*பெருங்கடல் முகந்த இருங்கிளைக் கொண்மூ*
*இருண்டுயர் விசும்பின் வலனேர்பு வளைஇப்*
*போர்ப்புறு முரசின் இரங்கி முறைபுரிந்து*
*அறனெறி பிழையாத் திறனறி மன்னர்*
*அருஞ்சமத் ததிர்ந்த பெருஞ்செய் ஆடவர்*
*கழித்தெறி வாளின் நளிப்பன விளங்கும்*
*மின்னுடைக் கருவியை ஆகி நாளும்*
*கொன்னே செய்தியோ அரவம் பொன்னென*
*மலர்ந்த வேங்கை மலிதொடர் அடைச்சிப்*

*பொலிந்த ஆயமொடு காண்டக இயலித்*
*தழலை வாங்கியும் தட்டை யோப்பியும்*
*அழலேர் செயலை அந்தழை அசைஇயும்*
*குறமகள் காக்கும் ஏனல்*
*புறமும் தருதியோ வாழிய மழையே* (அகம். 188)

இரவில் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது. 24

## பொதும்பில்கிழான் வெண்கண்ணனார்

*மதியிருப் பன்ன மாசறு சுடர்நுதல்*
*பொன்னேர் வண்ணம் கொண்டன்று அன்னோ*
*யாங்கா குவள்கொல் தானே விசும்பின்*
*எய்யா வரிவில் அன்ன பைந்தார்ச்*
*செவ்வாய்ச் சிறுகிளி சிதைய வாங்கிப்*
*பொறைமெலிந் திட்ட புன்புறப் பெருங்குரல்*
*வளைசிறை வாரணங் கிளையொடு கவர*
*ஏனலும் இறங்குபொறை உயிர்த்தன பானாள்*
*நீவந் தளிக்குவை யெனினே மால்வரை*
*மைபடு விடரகந் துழைஇ ஒய்யென*
*அருவி தந்த அரவுமிழ் திருமணி*
*பெருவரைச் சிறுகுடி மறுகுவிளக் குறுத்தலின்*
*இரவும் இழந்தனள் அளியள் உரவுப்பெயல்*
*உருமிறை கொண்ட உயர்சிமைப்*
*பெருமலை நாடநின் மலர்ந்த மார்பே* (அகம். 192)

தோழி தலைமகனைச் செறிப்பறிவுறீஇ இரவுக்குறி மறுத்தது. 25

## ஆவூர்கிழார் மகனார் கண்ணனார்

*வயங்குவெள் ளருவிய குன்றத்துக் கவாஅன்*
*கயந்தலை மடப்பிடி இனனே மார்ப்பப்*
*புலிப்பகை வென்ற புண்கூர் யானை*
*கல்லகச் சிலம்பிற் கையெடுத் துயிர்ப்பின்*

*நல்லிணர் வேங்கை நறுவீ கொல்லன்*
*குருகூது மிதியுலைப் பிதிர்விற் பொங்கிச்*
*சிறுபன் மின்மினி போலப் பலவுடன்*
*மணிநிற இரும்புதல் தாவும் நாட*
*யாமே அன்றியும் உளர்கொல் பானாள்*
*உத்தி அரவின் பைத்தலை துமிய*
*உரவுரு முரறும் உட்குவரு நனந்தலைத்*
*தவிர்வில் உள்ளமொடு எஃகு துணையாகக்*
*கனையிருள் பரந்த கல்லதர்ச் சிறுநெறி*
*தேராது வருஉம் நின்வயின்*
*ஆரஞர் அரும்படர் நீந்து வோரே* **(அகம். 202)**

இரவுக்குறிக்கண் வந்து நீங்குந் தலைமகற்குத் தோழி சொல்லி வரைவுகடாயது 26

## கபிலர்

*கிளைபா ராட்டுங் கடுநடை வயக்களிறு*
*முளைதரு பூட்டி வேண்டுகுள கருத்த*
*வாள்நிற உருவின் ஒளிருபு மின்னிப்*
*பருஉவுறைப் பஃறுளி சிதறிவான் நவின்று*
*பெருவரை நளிர்சிமை அதிர வட்டித்துப்*
*புயலேறு உரைஇய வியலிருள் நடுநாள்*
*விறலிழைப் பொலிந்த காண்பின் சாயல்*
*தடைஇத் திரண்டநின் தோள்சேர்பு அல்லதைப்*
*படாஅ வாகுமெங் கண்ணென நீயும்*
*இருண்மயங் கியாமத் தியவுக்கெட விலங்கி*
*வரிவயங் கிரும்புலி வழங்குநர்ப் பார்க்கும்*
*பெருமலை விடரகம் வரலரி தென்னாய்*
*வரவெளி தாக எண்ணுதி அதனான்*
*நுண்ணிதிற் கூட்டிய படுமாண் ஆரந்*
*தண்ணிது கமழும் நின்மார்பு ஒருநாள்*
*அடைய முயங்கே மாயின் யாமும்*
*விறலிழை நெகிழச் சாஅய்தும் அதுவே*

*அன்னை யறியினும் அறிக அலர்வாய்*
*அம்பல் மூதூர் கேட்பினுங் கேட்க*
*வண்டிறை கொண்ட எரிமருள் தோன்றியொடு*
*ஒண்பூ வேங்கை கமழுந்*
*தண்பெருஞ் சாரல் பகல்வந் தீமே* **(அகம். 218)**

தோழி தலைமகளை இடத்துய்த்து வந்து பகற்குறி நேர்ந்த வாய்பாட்டாற் றலைமகனை வரைவுகடாயது. 27

## பரணர்

*வானுற நிவந்த நீல்நிறப் பெருமலைக்*
*கான நாடன் உறீஇய நோய்க்குன்*
*மேனி ஆய்நலந் தொலைதலின் மொழிவென்*
*முழவுமுகம் புலராக் கலிகொள் ஆங்கண்*
*கழாஅர்ப் பெருந்துறை விழவின் ஆடும்*
*ஈட்டெழில் பொலிந்த ஏந்துகுவவு மொய்ம்பின்*
*ஆட்ட னத்தி நலனயந் துரைஇத்*
*தாழிருங் கதுப்பின் காவிரி வவ்வலின்*
*மாதிரந் துழைஇ மதிமருண் டலந்த*
*ஆதி மந்தி காதலற் காட்டிப்*
*படுகடல் புக்க பாடல்சால் சிறப்பின்*
*மருதி யன்ன மாண்புகழ் பெறீஇயர்*
*சென்மோ வாழி தோழி பன்னாள்*
*உரவுரும் ஏறொடு மயங்கி*
*இரவுப்பெயல் பொழிந்த ஈர்ந்தண் ஆறே* **(அகம். 222)**

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைமகட்குச் சொல்லியது. 28

## அண்டர்மகன் குறுவழுதியார்

*பிரசப் பல்கிளை யார்ப்பக் கல்லென*
*வரையிழி யருவி யாரந் தீண்டித்*
*தண்ணென நனைக்கும் நளிமலைச் சிலம்பிற்*

*கண்ணென மலர்ந்த மாயிதழ்க் குவளைக்*
*கன்முகை நெடுஞ்சுனை நம்மொ டாடிப்*
*பகலே யினிதுடன் கழிப்பி யிரவே*
*செல்வ ராயினும் நன்றுமற் றில்ல*
*வான்கண் விரிந்த பகன்மருள் நிலவிற்*
*சூரல் மிளைய சாரல் ஆராற்று*
*ஓங்கல் மிசைய வேங்கை யொள்வீப்*
*புலிப்பொறி கடுப்பத் தோன்றலிற் கயவாய்*
*இரும்பிடி யிரியுஞ் சோலைப்*
*பெருங்கல் யாணர்த்தஞ் சிறுகுடி யானே* **(அகம். 228)**

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தோழி சொல்லியது. 29

## கொடிமங்கலத்து வாதுளி நற்சேந்தனார்

*காணினி வாழி தோழி பானாள்*
*மழைமுழங் கரவங் கேட்ட கழைதின்*
*மாஅல் யானை புலிசெத்து வெரீஇ*
*இருங்கல் விடரகஞ் சிலம்பப் பெயரும்*
*பெருங்கல் நாடன் கேண்மை இனியே*
*குன்ற வேலிச் சிறுகுடி யாங்கண்*
*மன்ற வேங்கை மணநாட் பூத்த*
*மணியே ரரும்பின் பொன்வீ தாஅய்*
*வியலறை வரிக்கும் முன்றிற் குறவர்*
*மனைமுதிர் மகளிரொடு குரவை தூங்கும்*
*ஆர்கலின் விழவுக்களங் கடுப்ப நாளும்*
*விரவுப்பூம் பலியொடு விரைஇ அன்னை*
*கடியுடை வியனகர்க் காவல் கண்ணி*
*முருகென வேலற் றரூஉம்*
*பருவ மாகப் பயந்தன்றால் நமக்கே* **(அகம். 232)**

தோழி தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது. 30

## கபிலர்

*மான்றமை யறியா மரம்பயில் இறும்பின்*
*ஈன்றிளைப் பட்ட வயவுப்பிணப் பசித்தென*
*மடமான் வல்சி தரீஇய நடுநாள்*
*இருண்முகைச் சிலம்பின் இரைவேட் டெழுந்த*
*பனைமருள் எருத்திற் பல்வரி இரும்போத்து*
*மடக்கண் ஆமான் மாதிரத் தலறத்*
*தடக்கோட் டாமான் அண்ணல் ஏஎறு*
*நனந்தலைக் கானத்து வலம்படத் தொலைச்சி*
*இருங்கல் வியலறை சிவப்ப ஈர்க்கும்*
*பெருங்கல் நாட பிரிதி யாயின்*
*மருந்தும் உடையையோ மற்றே இரப்போர்க்கு*
*இழையணி நெடுந்தேர் களிறொ டென்றும்*
*மழைசுரந் தன்ன ஈகை வண்மகிழ்க்*
*கழறொடித் தடக்கைக் கலிமான் நள்ளி*
*நளிமுகை யுடைந்த நறுங்கா ரடுக்கத்துப்*
*போந்தை முழுமுதல் நிலைஇய காந்தள்*
*மென்பிணி முகையவிழ்ந் தலர்ந்த*
*தண்கமழ் புதுமலர் நாறுநறு நுதற்கே* **(அகம். 238)**

இரவுக்குறி வந்த தலைமகற்குத் தோழி சொல்லியது. 31

## பேரிசாத்தனார்

*அரும்புமுதிர் வேங்கை அலங்கல் மென்சினைச்*
*சுரும்புவாய் திறந்த பொன்புரை நுண்டாது*
*மணிமருள் கலவத் துறைப்ப அணிமிக்கு*
*அவிர்பொறி மஞ்ஞை யாடுஞ் சோலைப்*
*பைந்தாட் செந்தினைக் கொடுங்குரல் வியன்புனம்*
*செந்தார்க் கிள்ளை நம்மொடு கடிந்தோன்*
*பண்புதர வந்தமை அறியாள் நுண்கேழ்*
*முறிபுரை யெழினலத் தென்மகள் துயர்மருங்கு*

அறிதல் வேண்டுமெனப் பல்பிரப் பிரீஇ
அறியா வேலற் றரீஇ அன்னை
வெறியயர் வியன்களம் பொலிய ஏத்தி
மறியுயிர் வழங்கா அளவைச் சென்றியாம்
செலவரத் துணிந்த சேண்விளங் கெல்வளை
நெகிழ்ந்த முன்கை நேரிறைப் பணைத்தோள்
நல்லெழில் அழிவிற் றொல்கவின் பெறீஇய
முகிழ்த்துவரல் இளமுலை மூழ்கப் பல்லூழ்
முயங்க லியைவது மன்னோ தோழி
நறைகால் யாத்த நளிர்முகைச் சிலம்பிற்
பெருமலை விடரகம் நீடிய சிறியிலைச்
சாந்த மென்சினை தீண்டி மேலது
பிரசந் தூங்கு சேட்சிமை
வரையக வெற்பன் மணந்த மார்பே (அகம். 242)

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.

32

## கபிலர்

நகைநீ கேளாய் தோழி அல்கல்
வயநாய் எறிந்து வன்பறழ் தழீஇ
இளைய ரெய்துதன் மடக்கிக் கிளையொடு
நான்முலைப் பிணவல் சொலியக் கானொழிந்து
அரும்புழை முடுக்கர் ஆட்குறித்து நின்ற
தறுகட் பன்றி நோக்கிக் கானவன்
குறுகினன் தொடுத்த கூர்வாய்ப் பகழி
மடைசெலன் முன்பிற்றன் படைசெலச் செல்லாது
அருவழி விலக்குமெம் பெருவிறல் போன்மென
எய்யாது பெயருங் குன்ற நாடன்
செறியரில் துடக்கலிற் பரீஇப் புரியவிழ்ந்து
ஏந்துகுவவு மொய்ம்பிற் பூச்சோர் மாலை
ஏற்றிமில் கயிற்றின் எழில்வந்து துயல்வர
இல்வந்து நின்றோற் கண்டனள் அன்னை

*வல்லே யென்முகம் நோக்கி*
*நல்லை மன்னென நகூஉப்பெயர்ந் தோளே (அகம். 248)*

இரவுக்குறிச் சிறைப்புறமாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தலைமகன் கேட்பத் தோழி சொல்லியது. 33

## வடமவண்ணக்கன் பேரிசாத்தனார்

*அறியாய் வாழி தோழி பொறிவரிப்*
*பூநுதல் யானையொடு புலிபொரக் குழைந்த*
*குருதிச் செங்களம் புலவற வேங்கை*
*உருகெழு நாற்றங் குளவியொடு விலங்கும்*
*மாமலை நாடனொடு மறுவின் றாகிய*
*காமங் கலந்த காதல் உண்டெனின்*
*நன்றுமன் னதுநீ நாடாய் கூறுதி*
*நாணும் நட்பும் இல்லோர்த் தேரின்*
*யானல தில்லையிவ் வுலகத் தானே*
*இன்னுயி ரன்ன நின்னொடுஞ் சூழாது*
*முளையணி மூங்கிலிற் கிளையொடு பொலிந்த*
*பெரும்பெய ரெந்தை அருங்கடி நீவிச்*
*செய்துபின் இரங்கா வினையொடு*
*மெய்யல் பெரும்பழி யெய்தி னேனே (அகம். 268)*

குறைவேண்டிப் பின்னின்ற தலைமகனுக்குக் குறைநேர்ந்த தோழி தலைமகட்குக் குறைநயப்பக் கூறியது. 34

## மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார்

*இரும்புலி தொலைத்த பெருங்கை வேழத்துப்*
*புலவுநாறு புகர்நுதல் கழுவக் கங்குல்*
*அருவி தந்த அணங்குடை நெடுங்கோட்டு*
*அஞ்சுவரு விடர்முகை ஆரிருள் அகற்றிய*
*மின்னொளிர் எஃகஞ் சென்னெறி விளக்கத்*
*தனியன் வந்து பனியலை முனியான்*

*நீரிழி மருங்கின் ஆரிடத் தமன்ற*
*குளவியொடு மிடைந்த கூதளங் கண்ணி*
*அசையா நாற்றம் அசைவளி பகரத்*
*துறுகல் நண்ணிய கறியிவர் படப்பைக்*
*குறியிறைக் குரம்பைநம் மனைவயிற் புகுதரும்*
*மெய்ம்மலி யுவகையன் அந்நிலை கண்டு*
*முருகென உணர்ந்து முகமன் கூறி*
*உருவச் செந்திளை நீரொடு தூஉய்*
*நெடுவேட் பரவும் அன்னை அன்னோ*
*என்னா வதுகொ றானே பொன்னென*
*மலர்ந்த வேங்கை அலங்குசினை பொலிய*
*மணிநிற மஞ்ஞை யகவும்*
*அணிமலை நாடனொ டமைந்தநந் தொடர்பே* **(அகம். 272)**

இரவுக்குறிவந்த தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தோழி சொல்லியது.

35

## கபிலர்

*குணகடன் முகந்த கொள்ளை வானம்*
*பணைகெழு வேந்தர் பல்படைத் தானைத்*
*தோனிரைத் தனைய வாகி வலனேர்பு*
*கோனிமிர் கொடியின் வசிபட மின்னி*
*உருமுர றதிர்குரல் தலைஇப் பானாட்*
*பெருமலை மீமிசை முற்றின வாயின்*
*வாளிலங் கருவி தாஅய் நாளை*
*இருவெதி ரெங்கழை ஒசியத் தீண்டி*
*வருவது மாதோ வண்பரி யுந்தி*
*நனிபெரும் பரப்பின் நம்மூர் முன்றுறைப்*
*பனிபொரு மழைக்கண் சிவப்பப் பானாள்*
*முனிபட ரகல மூழ்குவங் கொல்லோ*
*மணிமருண் மேனி யாய்நலந் தொலையத்*

*தணிவருந் துயரஞ் செய்தோன்*
*அணிகிளர் நெடுவரை யாடிய நீரே* (**அகம்.** *278*)

இரவுக்குறிக்கட் தலைமகன் சிறைப்புறமாகத் தலைமகட்குத் தோழி சொல்லியது. 36

## தொல்கபிலர்

*பெருமலைச் சிலம்பின் வேட்டம் போகிய*
*செறிமடை யம்பின் வல்விற் கானவன்*
*பொருதுதொலை யானை வெண்கோடு கொண்டு*
*நீர்திகழ் சிலம்பின் நன்பொன் அகழ்வோன்*
*கண்பொரு திமைக்குந் திண்மணி கிளர்ப்ப*
*வைந்நுதி வான்மருப் பொடிய வுக்க*
*தெண்ணீ ராலி கடுக்கும் முத்தமொடு*
*மூவேறு தாரமும் ஒருங்குடன் கொண்டு*
*சாந்தம் பொறைமர மாக நறைநார்*
*வேங்கைக் கண்ணியன் இழிதரு நாடற்கு*
*இன்றீம் பலவின் ஏர்கெழு செல்வத்து*
*எந்தையும் எதிர்ந்தனன் கொடையே அலர்வாய்*
*அம்ப லூரும் அவனொடு மொழியுஞ்*
*சாயிறைத் திரண்ட தோள்பா ராட்டி*
*யாயு மவனே யென்னும் யாமும்*
*வல்லே வருக வரைந்த நாளென*
*நல்லிறை மெல்விரல் கூப்பி*
*இல்லுறை கடவுட் கோக்குதும் பலியே* (**அகம்.** *282*)

இரவுக்குறிக்கண் தலைமகன் சிறைப்புறமாகத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது. 37

## விற்றூற்று மூதெயினனார்

*சென்மதி சிறக்கநின் உள்ளம் நின்மலை*
*ஆரம் நீவிய அம்பகட்டு மார்பினை*

*சாரல் வேங்கைப் படுசினைப் புதுப்பூ*
*முருகுமுரண் கொள்ளும் உருவக் கண்ணியை*
*எரிதின் கொல்லை யிறைஞ்சிய ஏனல்*
*எவ்வங் கூறிய வைகலும் வருவோய்*
*கனிமுதி ரடுக்கத்தெந் தனிமை காண்டலின்*
*எண்மை செய்தனை யாகுவை நண்ணிக்*
*கொடியோர் குறுகும் நெடியிருங் குன்றத்து*
*இட்டா றிரங்கும் விட்டொளி ரருவி*
*அருவரை யிழிதரும் வெருவரு படாஅர்க்*
*கயந்தல மந்தி உயங்குபசி களைஇயர்*
*பார்ப்பின் றந்தை பழச்சுளை தொடினும்*
*நனிநோய் ஏய்க்கும் பனிகூ ரடுக்கத்து*
*மகளிர் மாங்காட் டற்றே துகளறக்*
*கொந்தோ டுதிர்ந்த கதுப்பின்*
*அந்தீங் கிளவி தந்தை காப்பே* **(அகம். 288)**

பகற்குறிக்கட் தோழி செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது. 38

## மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார்

*சிலம்பிற் போகிய செம்முக வாழை*
*அலங்கல் அந்தோ டசைவளி யுறுதொறும்*
*பள்ளி யானைப் பரூஉப்புறந் தைவரும்*
*நல்வரை நாடனொ டருவி யாடியும்*
*பல்லிதழ் நீலம் படுசுனைக் குற்றும்*
*நறுவீ வேங்கை இனவண் டார்க்கும்*
*வெறிகமழ் சோலை நயந்துவிளை யாடலும்*
*அரிய போலுங் காதலந் தோழி*
*இருங்கல் அடுக்கத் தென்னையர் உழுத*
*கரும்பெனக் கவினிய பெருங்குரல் ஏனல்*
*கிளிபட விளைந்தமை யறிந்துஞ் செல்கென*
*நம்மவண் விடுநள் போலாள் கைம்மிகச்*
*சில்சுணங் கணிந்த செறிந்துவீங் கிளமுலை*

*மெல்லியல் ஒலிவருங் கதுப்பொடு*
*பல்கால் நோக்கும் அறனில் யாயே* (அகம். 302)

பகலே சிறைப்புறமாகத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது. 39

## பிசிராந்தையார்

*உழுவையொ டுழந்த உயங்குநடை யொருத்தல்*
*நெடுவகிர் விழுப்புண் கழாஅக் கங்குல்*
*ஆலி யழிதுளி பொழிந்த வைகறை*
*வால்வெள் ளருவிப் புனன்மலிந் தொழுகலின்*
*இலங்குமலை புதைய வெண்மழை கவைஇக்*
*கலஞ்சுடு புகையிற் றோன்றும் நாட*
*இரவின் வருதல் எவனோ பகல்வரின்*
*தொலையா வேலின் வண்மகி ழெந்தை*
*களிறணந் தெய்தாக் கன்முகை இதணத்துச்*
*சிறுதினைப் படுகிளி யெம்மொ டோப்பி*
*மல்ல லறைய மலிர்சுனைக் குவளைத்*
*தேம்பா யொண்பூ நறும்பல அடைச்சிய*
*கூந்தல் மெல்லணைத் துஞ்சிப் பொழுதுபடக்*
*காவலர்க் கரந்து கடிபுனந் துழைஇய*
*பெருங்களிற் றொருத்தலிற் பெயர்குவை*
*கருங்கோற் குறிஞ்சிநும் உறைவி னூர்க்கே* (அகம். 308)

இரவு வருவானைப் பகல்வருகென்றது. 40

## மதுரை மருதனிளநாகனார்

*நெஞ்சுடம் படுதலின் ஒன்றுபுரிந் தடங்கி*
*இரவின் வரூஉம் இடும்பை நீங்க*
*வரையக் கருதும் ஆயின் பெரிதுவந்து*
*ஓங்குவரை யிழிதரும் வீங்குபெயல் நீத்தம்*
*காந்தளஞ் சிறுகுடிக் கௌவை பேணாது*
*அரிமதர் மழைக்கண் சிவப்ப நாளைப்*
*பெருமலை நாடன் மார்புபுணை யாக*

*ஆடுகம் வம்மோ காதலந் தோழி*
*வேய்பயில் அடுக்கம் புதையக் கால்வீழ்த்து*
*இன்னிசை முரசின் இரங்கி ஒன்னார்*
*ஓடுபுறங் கண்ட தாடோய் தடக்கை*
*வெல்போர் வழுதி செல்சமத் துயர்த்த*
*அடுபுகழ் எஃகம் போலக்*
*கொடிபட மின்னிப் பாயின்றால் மழையே* **(அகம். 312)**

தலைமகன் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது. 41

## கபிலர்

*கான மானதர் யானையும் வழங்கும்*
*வான மீமிசை உருமுநனி உரறும்*
*அரவும் புலியும் அஞ்சுதக வுடைய*
*இரவழங்கு சிறுநெறி தமியை வருதி*
*வரையிழி யருவிப் பாட்டொடு பிரசம்*
*முழவுசேர் நரம்பின் இம்மென இமிரும்*
*பழவிறல் நனந்தலைப் பயமலை நாட*
*மன்றல் வேண்டினும் பெறுகுவை ஒன்றோ*
*இன்றுதலை யாக வாரல் வரினே*
*ஏமுறு துயரம் யாமிவண் ஒழிய*
*எற்கண்டு பெயருங் காலை யாழநின்*
*கற்கெழு சிறுகுடி எய்திய பின்றை*
*ஊதல் வேண்டுமாற் சிறிதே வேட்டொடு*
*வேய்பயி லழுவத்துப் பிரிந்தநின்*
*நாய்பயிர் குறிநிலை கொண்ட கோடே* **(அகம். 318)**

இரவுக்குறி வந்த தலைமகனை வரவு விலக்கி வரைவுகடாயது. 42

## மதுரை மருதனிளநாகனார்

*நீலத் தன்ன நிறங்கிளர் எருத்திற்*
*காமர் பீலி ஆய்மயிற் றோகை*
*இன்றீங் குரல துவன்றி மென்சீர்*

*ஆடுதகை எழினலங் கடுப்பக் கூடிக்*
*கண்ணேர் இதழ தண்ணறுங் குவளைக்*
*குறுந்தொடர் அடைச்சி நறும்பல் கூழை*
*நீடுநீர் நெடுஞ்சுனை ஆயமொ டாடாய்*
*உயங்கிய மனத்தை யாகிப் புலம்புகொண்டு*
*இன்னை யாகிய நின்னிறம் நோக்கி*
*அன்னை வினவின ளாயின் அன்னோ*
*என்னென உரைக்கோ யானே துன்னிய*
*பெருவரை இழிதரும் நெடுவெள் ளருவி*
*ஓடை யானை உயர்மிசை யெடுத்த*
*ஆடுகொடி கடுப்பத் தோன்றும்*
*கோடுயர் வெற்பன் உறீஇய நோயே* **(அகம். 358)**

பகலே சிறைப்புறமாகத் தோழி தலைமகட்குச் சொல்லியது. 43

## வெள்ளிவீதியார்

*பாம்புடை விடர பனிநீர் இட்டுத்துறைத்*
*தேங்கலந் தொழுக யாறுநிறைந் தனவே*
*வெண்கோட் டியானை பொருத புண்கூர்ந்து*
*பைங்கண் வல்லியம் கல்லளைச் செறிய*
*முருக்கரும் பன்ன வள்ளுகிர் வயப்பிணவு*
*கடிகொள வழங்கார் ஆறே ஆயிடை*
*எல்லிற் றென்னான் வென்வேல் ஏந்தி*
*நசைதர வந்த நன்ன ராளன்*
*நெஞ்சுபழு தாக வறுவியன் பெயரின்*
*இன்றிப் பொழுதும் யான்வா ழலனே*
*எவன்கொல் வாழி தோழிநம் இடைமுலைச்*
*சுணங்கணி முற்றத் தாரம் போலவுஞ்*
*சிலம்பநீடு சோலைச் சிதர்தூங்கு நளிர்ப்பின்*
*இலங்குவெள் ளருவி போலவும்*
*நிலங்கொண் டனவால் திங்களங் கதிரே* **(அகம். 362)**

இரவுக்குறிச் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது. 44

## மதுரை மருதனிளநாகனார்

*தொடுதோற் கானவன் சூடுறு வியன்புனம்*
*கரிபுறங் கழீஇய பெரும்பாட் டீரத்துத்*
*தோடுவளர் பைந்தினை நீடுகுரல் காக்கும்*
*ஒண்டொடி மகளிர்க்கு ஊச லாக*
*ஆடுசினை யொழித்த கோடிணர் கஞலிய*
*குறும்பொறை அயலது நெடுந்தாள் வேங்கை*
*மடமயிற் குடுமியிற் றோன்றும் நாடன்*
*உயர்வரை மருங்கிற் காந்தளஞ் சோலைக்*
*குரங்கறி வாரா மரம்பயில் இறும்பிற்*
*கடிசுனைத் தெளிந்த மணிமருள் தீநீர்*
*பிடிபுணர் களிற்றின் எம்மொ டாடிப்*
*பன்னாள் உம்பர்ப் பெயர்ந்து சின்னாள்*
*கழியா மையே வழிவழிப் பெருகி*
*அம்பணை விளைந்த தேக்கட் டேறல்*
*வண்டுபடு கண்ணியர் மகிழும் சீறூர்*
*எவன்கொல் வாழி தோழி கொங்கர்*
*மணியரை யாத்து மறுகின் ஆடும்*
*உள்ளி விழவின் அன்ன*
*அலரா கின்றது பலர்வாய்ப் பட்டே* **(அகம். *368*)**

பகலே சிறைப்புறமாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தோழி சொல்லியது.

45

## கபிலர்

*பிறருறு விழுமம் பிறரும் நோப*
*தம்முறு விழுமம் தமக்கோ தஞ்சம்*
*கடம்புகொடி யாத்துக் கண்ணி சூட்டி*
*வேறுபல் குரல ஒருதூக் கின்னியம்*
*காடுகெழு நெடுவேட் பாடுகொளைக் கேற்ப*
*அணங்கயர் வியன்களம் பொலியப் பையத்*
*தூங்குதல் புரிந்தனர் நமரென ஆங்கவற்கு*

அறியக் கூறல் வேண்டும் தோழி
அருவி பாய்ந்த கருவிரல் மந்தி
செழுங்கோட் பலவின் பழம்புணை யாகச்
சாரற் பேரூர் முன்றுறை இழிதரும்
வறனுறல் அறியாச் சோலை
விறன்மலை நாடன் சொன்னயந் தோயே (அகம். 382)

இரவுக்குறிச் சிறைப்புறமாகத் தோழி தலைமகட்குச் சொல்லியது. 46

## மோசிகீரனார்

தாழ்பெருந் தடக்கை தலைஇய கானத்து
வீழ்பிடி கெடுத்த வெண்கோட்டு யானை
உண்குளகு மறுத்த உயக்கத் தன்ன
பண்புடை யாக்கைச் சிதைவுநன்கு அறீஇப்
பின்னிலை முனியான் ஆகி நன்றுந்
தாதுசெய் பாவை அன்ன தையல்
மாதர் மெல்லியல் மடநல் லோள்வயின்
தீதின் றாக நீபுணை புகுகென
என்னுந் தண்டு மாயின் மற்றவன்
அழிதகப் பெயர்தல் நனியின் னாதே
ஒல்லினி வாழி தோழி கல்லெனக்
கணமழை பொழிந்த கான்மடி யிரவில்
தினைமேய் யானை இனனிரிந் தோடக்
கல்லுயர் கழுதிற் சேணோன் எறிந்த
வல்வாய்க் கவணின் கடுவெடி ஒல்லென
மறப்புலி உரற வாரணம் கதற
நனவுறு கட்சியின் நன்மயில் ஆல
மலையுடன் வெரூஉம் மாக்கல் வெற்பன்
பிரியுநன் ஆகலோ அரிதே அதாஅன்று
உரிதல் பண்பிற் பிரியுநன் ஆயின்
வினைதவப் பெயர்ந்த வென்வேல் வேந்தன்
முனைகொல் தானையொடு முன்வந் திறுப்பத்

*தன்வரம் பாகிய மன்னெயில் இருக்கை*
*ஆற்றா மையிற் பிடித்த வேல்வலித்*
*தோற்றம் பிழையாத் தொல்புகழ் பெற்ற*
*விழைதக ஓங்கிய கழைதுஞ்சு மருங்கிற்*
*கானமர் நன்னன் போல*
*யானா குவல்நின் நலந்தரு வேனே* **(அகம். 392)**

பின்னின்ற தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி தலைமகட்குக் குறைநயப்பக் கூறியது. 47

## கபிலர்

*அன்னாய் வாழிவேண் டன்னை நம்மூர்ப்*
*பார்ப்பனக் குறுமகப் போலத் தாமும்*
*குடுமித் தலைய மன்ற*
*நெடுமலை நாட னூர்ந்த மாவே* (ஐங். 202)

தலைமகன் வரைதல் வேண்டித் தானே வருகின்றமை கண்ட தோழி உவந்தவுள்ளத்தளாய்த் தலைமகட்குக் காட்டிச் சொல்லியது. 48

*அன்னாய் வாழிவேண் டன்னையென் றோழி*
*நனிநா ணுடைய ணின்னு மஞ்சு*
*மொலிவெள் ளருவி யோங்குமலை நாடன்*
*மலர்ந்த மார்பிற் பாயற்*
*றுஞ்சிய வெய்ய ணோகோ யானே* (ஐங். 205)

நொதுமலர் வரைவுவேண்டி விட்டுழி தலைமகட்கு உளதாகிய வருத்தம் நோக்கி, 'இவள் இவ்வாறாதற்குக் காரணம் என்னை?' என்று வினவிய செவிலிக்குத் தோழி அறத்தொடு நின்றது. 49

*அன்னாய் வாழிவேண் டன்னை யுவக்காண்*
*மாரிக் குன்றத்துக் காப்பா ளன்னன்*
*தூவலி னனைந்த தொடலை யொள்வாட்*
*பாசி சூழ்ந்த பெருங்கழற்*
*றண்பனி வைகிய வரிக்கச் சினனே* (ஐங். 206)

இரவுக்குறிக்கண் தலைமகன் வந்து குறியிடத்து நின்றமை அறிந்த தோழி தலைமகட்குச் சொல்லியது. 50

*அன்னாய் வாழிவேண் டன்னை நன்று*
*முணங்கல கொல்லோநின் றினையே யுவக்கா*
*ணிணம்பொதி வழுக்கிற் றோன்று*
*மழைதலை வைத்தவர் மணிநெடுங் குன்றே* (ஐங். 207)

'மழையின்மையால் தினை உணங்கும்; விளையமாட்டா; புனங்காப்பச் சென்று அவரை எதிர்ப்படலாம் என்று எண்ணியிருந்த இது கூடாதாயிற்று' என வெறுத்திருந்த தலைமகட்குத் தோழி சொல்லியது. 51

*அன்னாய் வாழிவேண் டன்னை கானவர்*
*கிழங்ககழ் நெடுங்குழி மல்க வேங்கைப்*
*பொன்மலி புதுவீத் தாஅ மவர்நாட்டு*
*மணிநிற மால்வரை மறைதோ*
*றணிமலர் நெடுங்க ணார்ந்தன பனியே* (ஐங். 208)

செவிலிக்கு அறத்தொடு நின்ற தோழி அவளால் வரைவு மாட்சிமைப்பட்ட பின்பு, 'இவள் இவ்வாறுபட்ட வருத்தமெல்லாம் நின்னிற்றீர்ந்தது' என்பது குறிப்பிற்றோன்ற அவட்குச் சொல்லியது. 52

*அன்னாய் வாழிவேண் டன்னைநம் படப்பைப்*
*புலவுசேர் துறுக லேறி யவர்நாட்டுப்*
*பூக்கெழு குன்ற நோக்கி நின்று*
*மணிபுரை வயங்கிழை நிலைபெறத்*
*தணிதற்கு முரித்தவ ளுற்ற நோயே* (ஐங். 210)

காப்பு மிகுதிக்கண் தலைமகள் மெலிவு கண்டு தெய்வத்தினான் ஆயிற்றென்று வெறியெடுப்புழித் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது. 53

*நெய்யொடு மயக்கிய வுழுந்துநூற் றன்ன*
*வயலையஞ் சிலம்பின் றலையது*
*செயலையம் பகைத்தழை வாடு மன்னாய்* (ஐங். 211)

தலைமகன் ஆற்றாமை கண்டு கையுறை ஏற்ற தோழி தலைமகள் தழையேற்க வேண்டிக் கூறியது. 54

*சாந்த மரத்த பூழி லெழுபுகை*
*கூட்டுவிரை கமழு நாடன்*
*அறவற் கெவனோ நாமகல் வன்னாய்* (ஐங். 212)

வரைவெதிர் கொள்ளார் தமர் அவண் மறுத்தவழி தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது. 55

*சாரற் பலவின் கொழுந்துணர் நறும்பழ*
*மிருங்கல் விடரளை வீழ்ந்தென வெற்பிற்*
*பெருந்தே னிறாஅல் கீறு நாடன்*
*பேரமர் மழைக்கண் கலிழத்தன்*
*சீருடை நன்னாட்டுச் செல்லு மன்னாய்* (ஐங். 214)

தலைமகன், 'ஒருவழித் தணப்பல்' என்று கூறியவதனை அவன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குத் தோழி சொல்லியது. 56

*குறுங்கை யிரும்புலிக் கோள்வ லேற்றை*
*நெடும்புதற் கானத்து மடப்பிடி யீன்ற*
*நடுங்குநடைக் குழவி கொளீஇய பலவின்*
*பழங்தூங்கு கொழுநிழ லொளிக்கு நாடற்குக்*
*கொய்திடு தளிரின் வாடிநின்*
*மெய்பிறி தாத லெவன்கொ லன்னாய்* (ஐங். 216)

வரைவுநீட ஆற்றாளாகிய தலைமகட்குத் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி கூறியது. 57

*பெருவரை வேங்கைப் பொன்மரு ணறுவீ*
*மானினப் பெருங்கிளை மேய லாருங்*
*கானக நாடன் வரவுமிவண்*
*மேனி பசப்ப தெவன்கொ லன்னாய்* (ஐங். 217)

வரைவிடை வைத்துப் பிரிந்த தலைமகன் மீட்சி உணர்ந்த தோழி ஆற்றாளாகிய தலைமகட்குச் சொல்லியது. 58

*நுண்ணேர் புருவத்த கண்ணு மாடும்*
*மயிர்வார் முன்கை வளையுஞ் செறூஉம்*

*களிறுகோட் பிழைத்த கதஞ்சிறந் தெழுபுலி*
*யெழுதரு மழையிற் குழுமும்*
*பெருங்கன் னாடன் வருங்கொ லன்னாய்* **(ஐங். 218)**

தலைமகன் வரைவுவேண்டிவிடத் தமர் மறுத்துழி அது கேட்டு, 'இஃது என்னாங்கொல்?' என்று ஆற்றாளாகிய தலைமகட்குத் தோழி தனக்கு நற்குறி செய்யக்கண்டு, 'கடிதின் வந்து வரைவான்' எனச் சொல்லியது. 59

*கருங்கால் வேங்கை மாத்தகட் டொள்வீ*
*யிருங்கல் வியலறை வரிப்பத் தாஅம்*
*நன்மலை நாடன் பிரிந்தென*
*ஒண்ணுதல் பசப்ப தெவன்கொ லன்னாய்* **(ஐங். 219)**

வரைவிடை வைத்துப் பிரிந்த அணுமைக்கண்ணே ஆற்றாளாகிய தலைமகட்குத் தோழி கூறியது. 60

*அலங்குமழை பொழிந்த வகன்க ணருவி*
*யாடுகழை யடுக்கத் திழிதரு நாடன்*
*பெருவரை யன்ன திருவிறல் வியன்மார்பு*
*முயங்காது கழிந்த நாளிவண்*
*மயங்கிதழ் மழைக்கண் கலிழு மன்னாய்* **(ஐங். 220)**

நொதுமலர் வரைவின்கண் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது. 61

*அம்ம வாழி தோழி நம்மலை*
*வரையா மிழியக் கோட னீடக்*
*காதலர்ப் பிரிந்தோர் கையற நலியும்*
*தண்பனி வடந்தை யச்சிரம்*
*முந்துவந் தனர்நங் காத லோரே* **(ஐங். 223)**

வரைவிடைவைத்துப் பிரிந்த தலைமகன் குறித்த பருவத்திற்கு முன்னே வருகின்றமை அறிந்த தோழி, தலைமகட்கு மகிழ்ந்து சொல்லியது. 62

*அம்ம வாழி தோழி பைஞ்சுனைப்*
*பாசடை நிவந்த பனிமலர்க் குவளை*

*யுள்ளகங் கமழுங் கூந்தன் மெல்லிய*
*வேர்திக ழொண்ணுதல் பசத்த*
*லோரார் கொன்னங் காத லோரே* (ஐங். 225)

மெலிவுகூறி வரைவுகடாவக் கேட்ட தலைமகன் தான் வரைதற்பொருட்டாய் ஒருவழித்தணந்து நீட்டித்தானாக, ஆற்றாளாகிய தலைமகட்குத் தோழி கூறியது.

63

*அம்ம வாழி தோழி நம்மலை*
*நறுந்தண் சிலம்பி னாறுகுலைக் காந்தட்*
*கொங்குண் வண்டிற் பெயர்ந்துபுற மாறிநின்*
*வன்புடை விறற்கவின் கொண்ட*
*வன்பி லாளன் வந்தன னினியே* (ஐங். 226)

வரைவிடை வைத்துப் பிரிந்த தலைமகன் நீட்டித்து வந்துழித் தோழி தலைமகட்குச் சொல்லியது.

64

*அம்ம வாழி தோழி நாளும்*
*நன்னுதல் பசப்பவு நறுந்தோண் ஞெகிழவு*
*மாற்றலம் யாமென மதிப்பக் கூறி*
*நப்பிரிந் துறைந்தோர் மன்றநீ*
*விட்டனை யோவவ ருற்ற சூளே* (ஐங். 227)

ஒருவழித்தணந்து வந்த தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குத் தோழி சொல்லியது.

65

*அம்ம வாழி தோழி நம்மூர்*
*நிரந்திலங் கருவிய நெடுமலை நாட*
*னிரந்துகுறை யுறாஅன் பெயரி*
*னென்னா வதுகொனம் மின்னுயிர் நிலையே* (ஐங். 228)

தலைமகன் வரைவுவேண்டிவிடத் தமர் மறுத்துழி அவர் கேட்குமாற்றால் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தோழி அறத்தொடு நின்றது.

66

*அம்ம வாழி தோழி நாமழப்*
*பன்னாள் பிரிந்த வறனி லாளன்*

*வந்தன னோமற் றிரவிற்*
*பொன்போல் விறற்கவின் கொள்ளுநின் னுதலே* **(ஐங். 229)**

வரைவிடைவைத்துப் பிரிந்த தலைமகன் மீண்டான் என்பதுகேட்டுத் தலைமகட்கு எய்திய கவினைத் தோழி, தான் அறியாள்போன்று அவளை வினாவியது. 87

*அம்ம வாழி தோழி நம்மொடு*
*சிறுதினைக் காவல னாகிப் பெரிதுநின்*
*மென்றோள் நெகிழவுந் திருநுதல் பசப்பவும்*
*பொன்போல் விறற்கவின் றொலைத்த*
*குன்ற நாடற் கயர்வர்நன் மணனே* **(ஐங். 230)**

தலைமகன் வரைவுவேண்டித் தமரை விடுத்துழி மறுப்பர் கொல்லோவென்று அச்சமுறுகின்ற தலைவிக்குத் தோழி சொல்லியது. 68

*யாங்குவல் லுநையோ வோங்கல் வெற்ப*
*விரும்பல் கூந்தற் றிருந்திழை யரிவை*
*திதலை மாமை தேயப்*
*பசலை பாயப் பிரிவு தெய்யோ* **(ஐங். 231)**

ஒருவழித்தணந்து வந்த தலைமகற்குத் தோழி கூறியது. 69

*போதார் கூந்த லியலணி யழுங்க*
*வேதி லாளனை நீபிரிந் ததற்கே*
*யழலவிர் மணிப்பூ ணனையப்*
*பெயலா னாவென் கண்ணே தெய்யோ* **(ஐங். 232)**

ஒருவழித்தணந்துவந்த தலைமகன், 'நான் பிரிந்த நாட்கண் நீர் என் செய்தீர்?' எனக் கேட்க தோழி அவற்குச் சொல்லியது. 70

*வருவை யல்லை வாடைநனி கொடிதே*
*யருவரை மருங்கி னாய்மணி வரன்றி*
*யொல்லென விழிதரு மருவிநின்*
*கல்லுடை நாட்டுச் செல்ல றெய்யோ* **(ஐங். 233)**

'ஒருவழித்தணந்து வரைய வேண்டும்' என்ற தலைமகற்குத் தோழி சொல்லியது. 71

*மின்னவிர் வயங்கிழை ஞெகிழச் சாஅய்*
*நன்னுதல் பசத்த லாவது துன்னிக்*
*கனவிற் காணு மிவளே*
*நனவிற் காணாணின் மார்பே தெய்யோ (ஐங். 234)*

இடைவிடாது வந்து ஒழுகாநின்றே களவு நீடாமல் வரைதற்கு முயல்கின்ற தலைமகன் தலைமகள் வேறுபாடு கண்டு, 'இதற்குக் காரணம் என்?' என்று வினாயவழி, 'நின்னைக் கனவிற்கண்டு விழித்துக் காணாளாய் வந்தது' எனத் தோழி சொல்லி வரைவு முடுக்கியது. 72

*கையுற வீழ்ந்த மையில் வானமொ*
*டறிது காதலர்ப் பொழுதே யதனாற்*
*றெரியிழை தெளிர்ப்ப முயங்கிப்*
*பிரியல மென்கமோ வெழுகமோ தெய்யோ (ஐங். 235)*

உடன்போக்கு நேர்வித்த பின்பு தலைமகன் உடன்கொண்டு போவான் இடையாமத்து வந்துழித் தலைமகட்குத் தோழி சொல்லியது. 73

*அன்னையு மறிந்தன ளலரு மாயின்று*
*நன்மனை நெடுநகர் புலம்புகொள வுறுதரு*
*மின்னா வாடையு மலையும்*
*நும்மூர்ச் செல்க மெழுகமோ தெய்யோ (ஐங். 236)*

களவொழுக்கம் வெளிப்பட்டமையும் தம் மெலிவும் உணர்த்தித் தோழி உடன்போக்கு நயந்தாள்போன்று வரைவுகடாயது. 74

*காமங் கடவ வுள்ள மினைப்ப*
*யாம்வந்து காண்பதோர் பருவ மாயி*
*னோங்கித் தோன்று முயர்வரைக்*
*கியாங்கெனப் படுவது நும்மூர் தெய்யோ (ஐங். 237)*

அல்லகுறிப்பட்டு நீங்கிய தலைமகனை வந்திலனாகக்கொண்டு அவன் பின்பு வந்துழி அவற்குத் தோழி சொல்லியது. 75

*வார்கோட்டு வயத்தகர் வாராது மாறினும்*
*குரூஉமயிர்ப் புருவை யாசையி னல்கு*

*மாஅ வருவித் தண்பெருஞ் சிலம்ப*
*நீயிவண் வரூஉங் காலை*
*மேவரு மாதோ விவணலனே தெய்யோ* **(ஐங். 238)**

வரையாது வந்தொழுகும் தலைமகனுக்கு, 'இவள் கவின் நீ வந்தகாலத்து வருதலால் நீ போன காலத்து அதன் தொலைவு உனக்கு அறியப்படாது' எனத் தோழி சொல்லி வரைவுகடாயது. 76

*சுரும்புணக் களித்த புகர்முக வேழ*
*மிரும்பிணர்த் துறுகற் பிடிசெத்துத் தழூஉநின்*
*குன்றுகெழு நன்னாட்டுச் சென்ற பின்றை*
*நேரிறைப் பணைத்தோண் ஞெகிழ*
*வாரா யாயின் வாழேந் தெய்யோ* **(ஐங். 239)**

'வரைவிடைவைத்துப் பிரிவல்' என்ற தலைமகற்குத் தோழி கூறியது. 77

*அறியே மல்லே மறிந்தன மாதோ*
*பொறிவரிச் சிறைய வண்டின் மொய்ப்பச்*
*சாந்த நாறு நறியோள்*
*கூந்த னாறுநின் மார்பே தெய்யோ* **(ஐங். 240)**

தலைமகற்குப் புறத்தொழுக்கம் உளதானமை அறிந்து தலைமகள் புலந்தவழி, அவன் அதனை இல்லை என்று மறைத்தானாகத் தோழி சொல்லியது. 78

*நம்முறு துயர நோக்கி யன்னை*
*வேலற் றந்தா ளாயினவ் வேலன்*
*வெறிகமழ் நாடன் கேண்மை*
*யறியுமோ தில்ல செறியெயிற் றோயோ* **(ஐங். 241)**

இற்செறித்தவழித் தலைமகட்கு எய்திய மெலிவு கண்டு, 'இஃது எற்றினான் ஆயிற்று?' என்று வேலனைக் கேட்பத் துணிந்துழி அறத்தொடுநிலை துணிந்த தோழி செவிலி கேட்குமாற்றால் தலைமகட்குச் சொல்லியது. 79

*அறியா மையின் வெறியென மயங்கி*
*அன்னையு மருந்துய ருழந்தன ளதனா*

*லெய்யாது விடுதலோ கொடிதே நிரையிதழ்*
*ழாய்மல ருண்கண் பசப்பச்*
*சேய்மலை நாடன் செய்த நோயே* (ஐங். 242)

தலைமகள் அறத்தொடுநிலை நயப்ப வேண்டித் தோழி அவட்குச் சொல்லியது.
80

*கறிவளர் சிலம்பிற் கடவுட் பேணி*
*யறியா வேலன் வெறியெனக் கூறு*
*மதுமனங் கொள்குவை யனையிவள்*
*புதுமலர் மழைக்கண் புலம்பிய நோய்க்கே* (ஐங். 243)

தா புழை அறியாமை கூறித் தோழி வெறிவிலக்கியது. 81

*அம்ம வாழி தோழி பன்மலர்*
*நறுந்தண் சோலை நாடுகெழு நெடுந்தகை*
*குன்றம் பாடா னாயி*
*னென்பயஞ் செய்யுமோ வேலற்கவ் வெறியே* (ஐங். 244)

வெறியாடல் துணிந்துழி விலக்கலுறும் தோழி, செவிலி கேட்குமாற்றால் தலைமகட்குச் சொல்லியது. 82

*பொய்யா மரபி னூர்முது வேலன்*
*கழங்குமெய்ப் படுத்துக் கன்னந் தூக்கி*
*முருகென மொழியு மாயிற்*
*கெழுதகை கொல்லிவ ளணங்கி யோற்கே* (ஐங். 245)

தலைமகன் சிறைப்புறத்தானாக வெறிஅறிவுறீஇத் தோழி வரைவுகடாயது. 83

*வெறிசெறித் தனனே வேலன் கறிய*
*கன்முகை வயப்புலி கழங்குமெய்ப் படூஉ*
*புன்புலம் வித்திய புனவர் புணர்த்த*
*மெய்ம்மை யன்ன பெண்பாற் புணர்ந்து*
*மன்றிற் பையு ளுறும்*
*குன்ற நாட னுறீஇய நோயே* (ஐங். 246)

வரையாது வந்தொழுகும் தலைமகன் சிறைப்புறத்தானாய் நின்றுழி அவன் கேட்குமாற்றால் வெறி நிகழா நின்றமை தோழி தலைமகட்குச் சொல்லியது. 84

*அன்னை தந்த தாகுவ தறிவன்*
*பென்னகர் வரைப்பிற் கன்னந் தூக்கி*
*முருகென மொழியு மாயி*
*னருவரை நாடன் பெயர்கொலோ வதுவே (ஐங். 247)*

வெறி விலக்கலுறும் தோழி தமர் கேட்பத் தலைமகளை வினவுவாளாய்ச் சொல்லியது.
85

*பெய்ம்மணன் முற்றங் கவின்பெற வியற்றி*
*மலைவான் கொண்ட சினைஇய வேலன்*
*கழங்கினா னறிகுவ தென்றா*
*னன்றா லம்ம நின்றஇவ் வணலனே (ஐங். 248)*

தலைமகள் வேறுபாடு கழங்கினால் தெரியும் என்று வேலன் கூறியவழி, அதனைப் பொய்யென இகழ்ந்த தோழி வெறிவிலக்கிச் செவிலிக்கு அறத்தொடு நின்றது.
86

*பெய்ம்மணல் வரைப்பிற் கழங்குபடுத் தன்னைக்கு*
*முருகென மொழியும் வேலன் மற்றவன்*
*வாழிய விலங்கு மருவிச்*
*சூர்மலை நாடனை யறியா தோனே (ஐங். 249)*

வேலன் கூறிய மாற்றத்தை மெய்யெனக் கொண்ட தாய்கேட்ப தலைமகட்குத் தோழி கூறியது.
87

*பொய்படு பறியாக் கழங்கே மெய்யே*
*மணிவரைக் கட்சி மடமயி லாலுநம்*
*மலர்ந்த வள்ளியங் கானங் கிழவோ*
*னாண்டகை விறல்வேளல் லனிவள்*
*பூண்டாங் கிளமுலை யணங்கி யோனே (ஐங். 250)*

தலைமகட்கு வந்த நோய் முருகனால் தந்தமை இக் கழங்கு கூறிற்றென்று வேலன் சொன்னான் என்பது கேட்ட தோழி அக்கழங்கிற்கு உரைப்பாளாய்ச் செவிலி கேட்குமாற்றால் அறத்தொடுநிலை குறித்துச் சொல்லியது. 88

*குன்றக் குறவ னார்ப்பி னெழிலி*
*நுண்ப வழிதுளி பொழியு நாட*
*நெடுவரைப் படப்பை நும்மூர்க்*
*கடுவர லருவி காணினு மழுமே* **(ஐங். 251)**

வரையாது வந்தொழுகும் தலைமகற்கு வரைவுவேட்ட தோழி கூறியது. 89

*குன்றக் குறவன் புல்வேய் குரம்பை*
*மன்றா டிளமழை மறைக்கு நாடன்*
*புரையோன் வாழி தோழி விரைபெய*
*லரும்பனி யளைஇய கூதிர்ப்*
*பெருந்தண் வாடையின் முந்துவந் தனனே* **(ஐங். 252)**

வரைவிடைவைத்துப் பிரிந்த தலைமகன் குறித்த பருவத்திற்கு முன்னே வந்தானாக உவந்த தோழி தலைமகட்குச் சொல்லியது. 90

*குன்றக் குறவ னார மறுத்தென*
*நறும்புகை சூழ்ந்து காந்த ணாறும்*
*வண்டிமிர் சுடர்நுதற் குறுமகள்*
*கொண்டனர் செல்வர்தங் குன்றுகெழு நாட்டே* **(ஐங். 254)**

உடன்போக்கு உடன்படவேண்டிய தோழி தலைமகட்குச் சொல்லியது. 91

*குன்றக் குறவன் கடவுட் பேணி*
*யிரந்தனன் பெற்ற வெல்வளைக் குறுமக*
*ளாயரி நெடுங்கண் கலிழச்*
*சேயதாற் றெய்யநீ பிரியு நாடே* **(ஐங். 257)**

'வரைவிடைவைத்துப் பிரிவல்' என்ற தலைமகற்குத் தோழி உடன்படாது கூறியது. 92

*குன்றக் குறவன் காதன் மடமகள்*
*அணிமயி லன்ன வசைநடைக் கொடிச்சியைப்*
*பெருவரை நாடன் வரையு மாயிற்*

*கொடுத்தனெ மாயினோ நன்றே*
*யின்னு மானாது நன்னுத றுயரே* (ஐங். 258)

வரைவுவேண்டிவிட மறுத்துழித் தமர்க்குரைப்பாளாய் வரையாது வந்தொழுகும் தலைமகற்குத் தோழி அவன் மலை காண்டலே பற்றாகத் தாங்கள் உயிர்வாழ்கின்றமை தோன்றச் சொல்லியது. 93

*குன்றக் குறவன் காதன் மடமகள்*
*மென்றோட் கொடிச்சியைப் பெறற்கரிது தில்ல*
*பைம்புறப் படுகிளி யோப்பலர்*
*புன்புல மயக்கத்து விளைந்தன தினையே* (ஐங். 260)

பகற்குறிக்கண் வந்த தலைமகனைத் தோழி, 'இனிப் புனங்காவற்கு வாரோம்' எனக்கூறி வரைவுகடாயது. 94

*மென்றினை மேய்ந்த தறுகட் பன்றி*
*வன்க லடுக்கத்துத் துஞ்சு நாட*
*னெந்தை யறித லஞ்சிக்கொல்*
*அதுவே மன்ற வாரா மையே* (ஐங். 261)

அல்லகுறிப்பட்டு தலைமகன் நீங்கினமை அறியாள்போன்று தோழி பிற்றை ஞான்று அவன் சிறைப்புறத்தானாய் நிற்ப தலைமகட்குச் சொல்லியது. 95

*இளம்பிறை யன்ன கோட்ட கேழல்*
*களங்கனி யன்ன பெண்பாற் புணரும்*
*அயந்திகழ் சிலம்ப கண்டிகும்*
*பயந்தன மாதோநீ நயந்தோள் கண்ணே* (ஐங். 264)

வரையாது வந்தொழுகும் தலைமகனைப் பகற்குறிக்கண்ணே எதிர்பட்டுத் தோழி வரைவுகடாயது. 96

*சிறுகட் பன்றிப் பெருஞ்சின வொருத்தலொடு*
*குறுங்கை யிரும்புலி பொரூஉ நாட*

*நனிநா ணுடைமைய மன்ற*
*பனிப்பயந் தனநீ நயந்தோள் கண்ணே* (ஐங். 266)

நொதுமலர் வரைவு பிறந்துழித் தலைமகட்கு உளதாகிய வேறுபாடு தோழி கூறித் தலைமகனை வரைவுகடாயது. 97

*சிறுகட் பன்றிப் பெருஞ்சின வொருத்த*
*லுறுக லடுக்கத்து வில்லோர் மாற்றி*
*யைவனங் கவருங் குன்ற நாடன்*
*வண்டுபடு கூந்தலைப் பேணிப்*
*பண்பில சொல்லுந் தேறுதல் செத்தே* (ஐங். 267)

தலைமகளைத் தலைமகன் வரைவல் எனத் தெளித்தான் என்று அவள் கூறக்கேட்ட தோழி அவன் சிறைப்புறத்தானாகச் சொல்லியது. 98

*தாஅ யிழந்த தழுவரிக் குருளையொடு*
*வளமலைச் சிறுதினை யுணீஇக் கானவர்*
*வரையோங் குயர்சிமைக் கேழ லுறங்கும்*
*நன்மலை நாடன் பிரித*
*லென்பயக் கும்மோ நம்விட்டுத் துறந்தே* (ஐங். 268)

அவன் குறிப்பிருந்தவாற்றால் நம்மைப் பிரிந்துவந்தல்லது வரையமாட்டான் போன்றிருந்தது' எனத் தலைமகள் கூறக்கேட்ட தோழி அவட்குத் தலைமகன் சிறைப்புறத்தானாகச் சொல்லியது. 99

*கேழ லுழுதெனக் கிளர்ந்த வெருவை*
*விளைந்த செறுவிற் றோன்று நாடன்*
*வாரா தவணுறை நீடி னேர்வளை*
*யிணையீ ரோதி நீயழத்*
*துணைநனி யிழக்குவென் மடமை யானே* (ஐங். 269)

குறைநயப்பக் கூறி தலைமகளைக் கூட்டிய தோழி அவனிடையிட்டு வந்து சிறைப்புறத்து நின்றுழி தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது. 100

*கிழங்ககழ் கேழ லுழுத சிலம்பில்*
*தலைவிளை கானவர் கொய்தனர் பெயரும்*

*புல்லென் குன்றத்துப் புலம்புகொ ணெடுவரை*
*காணினுங் கலிழுநோய் செத்துத்*
*தாம்வந் தனர்நங் காத லோரே* (ஐங். 270)

வரைவு காரணமாக நெட்டிடைகழிந்து பொருள்வயிற்போகிய தலைமகன் வந்தமை அறிந்த தோழி உவந்த உள்ளத்தளாய்த் தலைமகட்குச் சொல்லியது. 101

*அவரை யருந்த மந்தி பகர்வர்*
*பக்கிற் றோன்று நாடன் வேண்டிற்*
*பசுப்போல் பெண்டிரும் பெருகுவன்*
*தொல்கே ளாகலி னல்குமா லிவட்கே* (ஐங். 271)

தலைமகன் வரைவு வேண்டிவிடத் தமர் மறுத்துழிச் செவிலிக்குத் தோழி அறத்தொடு நின்றது. 102

*அத்தச் செயலை துப்புற ழொண்டளிர்*
*புன்றலை மந்தி வன்பற ழாரும்*
*நன்மலை நாட நீசெலி*
*னின்னயந் துறைவி யென்னினுங் கலிழ்மே* (ஐங். 273)

வரைவிடைவைத்துப் பிரியும் தலைமகன், 'நின் துணைவியை உடம்படுவித்தேன், இனி நீயே இதற்கு உடன்படாது கலுழ்கின்றாய்' என்றாற்குத் தோழி கூறியது. 103

*குரங்கின் றலைவன் குருமயிர்க் கடுவன்*
*சூரலஞ் சிறுகோல் கொண்டு வியலறை*
*மாரி மொக்குள் புடைக்கு நாட*
*யாநின் னயந்தன மெனினுமெம்*
*மாய்நலம் வாடுமோ வருளுதி யெனினே* (ஐங். 275)

வரையாது வந்தொழுகும் தலைமகன் இடையிட்டு வருதலால் எதிர்ப்பாடு பெறாத தோழி குறியிடத்து எதிர்ப்பட்டு அவன் கொடுமைகூறி நெருங்கிச் சொல்லியது. 104

*மந்திக் காதலன் முறிமேய் கடுவன்*
*றண்கமழ் நறைக்கொடி கொண்டு வியலறைப்*

*பொங்க விளமழை புடைக்கு நாட*
*நயவா யாயினும் வரைந்தனை சென்மோ*
*கன்முகை வேங்கை மலரும்*
*நன்மலை நாடன் பெண்டெனப் படுத்தே (ஐங். 276)*

வரையாது வந்தொழுகும் தலைமகனைத் தோழி நெருங்கிச் சொல்லியது. 105

*குறவர் முன்றின் மாதீண்டு துறுகற்*
*கல்லா மந்தி கடுவனோ டுகளும்*
*குன்ற நாடநின் மொழிவ லென்றும்*
*பயப்ப நீத்த லென்னிவள்*
*கயத்துவளர் குவளையி னமர்த்த கண்ணே (ஐங். 277)*

வரையாது வந்தொழுகும் தலைமகன் புணர்ந்து நீங்குழி எதிர்ப்பட்ட தோழி வரைவுகடாயது. 106

*கல்லிவ ரிற்றி புல்லுவன வேறிக்*
*குளவி மேய்ந்த மந்தி துணையொடு*
*வரைமிசை யுகளு நாட நீவரிற்*
*கல்லகத் ததுவெம் மூரே*
*அம்பற் சேரி யலராங் கட்டே (ஐங். 279)*

இரவுக்குறி வேண்டும் தலைமகனைத் தோழி வரலருமை கூறி மறுத்தது. 107

*கருவிரன் மந்திக் கல்லா வன்பார்ப்*
*பிருவெதி ரீர்ங்கழை யேறிச் சிறுகோல்*
*மதிபுடைப் பதுபோற் றோன்று நாட*
*வரைந்தனை நீயெனக் கேட்டியா*
*னுரைத்தனெ னல்லனோ வஃதென் யாய்க்கே (ஐங். 280)*

புணர்ந்துடன்போகிய தலைமகன் தலைமகளை கரணவகையால் வரைந்தானாக, எதிர்சென்ற தோழிக்கு, 'யான் இவளை வரைந்தமை நுமர்க்கு உணர்த்தவேண்டும்' என்றானாக அவள் சொல்லியது. 108

*சாரற் புறத்த பெருங்குரற் சிறுதினைப்*
*பேரமர் மழைக்கட் கொடிச்சி கடியவுஞ்*

*சோலைச் சிறுகிளி யுன்னு நாட*
*வாரிருள் பெருகின வாரல்*
*கோட்டுமா வழங்குங் காட்டக நெறியே* (ஐங். 282)

இரவுக்குறி நேர்ந்த தோழி தலைமகன்வந்து புணர்ந்து நீங்குழி அவனை எதிர்ப்பட்டுச் சொல்லியது. 109

*வன்கட் கானவன் மென்சொன் மடமகள்*
*புன்புல மயக்கத் துழுத வேனற்*
*பைம்புறச் சிறுகிளி கடியு நாட*
*பெரிய கூறி நீப்பினும்*
*பொய்வலைப் படூஉம் பெண்டுதவப் பலவே* (ஐங். 283)

தோழி வாயில் மறுக்கவும் தலைமகன் ஆற்றாமைகண்டு தலைமகள் வாயில் நேர அவன் பள்ளியிடத்தானாய் இருந்துழிப் புக்க தோழி கூறியது. 110

*அளிய தாமே செவ்வாய்ப் பைங்கிளி*
*குன்றக் குறவர் கொய்தினைப் பைங்கா*
*லிருவி நீள்புனங் கண்டும்*
*பிரித றேற்றாப் பேரன் பினவே* (ஐங். 284)

தினை அரிந்துழி கிளியை நோக்கிக் கூறுவாள்போற் சிறைப்புறமாக ஓம்படுத்தது. 111

*பின்னிருங் கூந்த னன்னுதற் குறமகள்*
*மென்றினை நுவணை யுண்டு தட்டையின்*
*ஐவனச் சிறுகிளி கடியு நாட*
*வீங்குவளை நெகிழப் பிரிதல்*
*யாங்கு வல்லுநையோ வீங்கிவட் டுறந்தே* (ஐங். 285)

ஒருவழித்தணந்துவந்த தலைமகற்குத் தோழி கூறியது. 112

*நெடுவரை மிசையது குறுங்கால் வருடை*
*தினைபாய் கிள்ளை வெரூஉ நாட*

*வல்லை மன்ற பொய்த்தல்*
*வல்லாய் மன்றநீ யல்லது செயலே* (ஐங். 287)

இன்ன நாளில் வரைவல் எனக் கூறி அந்நாளில் வரையாது பின் அவ்வாறு கூறும் தலைமகற்குத் தோழி கூறியது. 113

*கொடிச்சி யின்குரல் கிளிசெத் தடுக்கத்துப்*
*பைங்குர லேனற் படர்தருங் கிளியெனக்*
*காவலுங் கடியுநர் போல்வர்*
*மால்வரை நாட வரைந்தனை கொண்மோ* (ஐங். 289)

இற்செறித்த பின்னர்த் தோழி வரைவுகடாவுழி முதிர்ந்த தினைப்புனம் இவள் காத்தொழிந்தால் வரைவல் என்றாற்கு அவள் சொல்லியது. 114

*அறம்புரி செங்கோன் மன்னனிற் றாநனி*
*சிறந்தன போலுங் கிள்ளை பிறங்கிய*
*பூக்கமழ் கூந்தற் கொடிச்சி*
*நோக்கவும் படுமவ ளோப்பவும் படுமே* (ஐங். 290)

காவல் மிகுதியான் இரவுக்குறி மறுக்கப்பட்டு நீங்கிய தலைமகன் வந்துழி அவன் கேட்டு வெறுப்பு தீர்த்தற்பொருட்டால் தினைப்புனம் காவல் தொடங்கா நின்றாளென்பது தோன்றத் தோழி கூறியது. 115

*எரிமருள் வேங்கை யிருந்த தோகை*
*இழையணி மடந்தையிற் றோன்று நாட*
*வினிதுசெய் தனையா னுந்தை வாழியர்*
*நன்மனை வதுவை யயரவிவள்*
*பின்னிருங் கூந்தன் மலரணிந் தோயே* (ஐங். 294)

வதுவை செல்லா நின்றுழித் தலைமகற்குத் தோழி கூறியது. 116

*கொடிச்சி காக்கும் பெருங்குர லேன*
*லடுக்கன் மஞ்ஞை கவரு நாட*
*நடுநாட் கங்குலும் வருதி*
*கடுமா தாக்கி னறியேன் யானே* (ஐங். 296)

இரவுக்குறி வருகின்ற தலைமகற்குத் தோழி ஆற்றருமை கூறி மறுத்தது. 117

*விரிந்த வேங்கைப் பெருஞ்சினைத் தோகை*
*பூக்கொய் மகளிரிற் றோன்று நாட*
*பிரியினும் பிரிவ தன்றே*
*நின்னொடு மேய மடந்தை நட்பே* (ஐங். 297)

ஒருவழித்தணந்து வரையவேண்டும் என்ற தலைமகற்குத் தோழி கூறியது. 118

*கொடிச்சி கூந்தல் போலத் தோகை*
*அஞ்சிறை விரிக்கும் பெருங்கல் வெற்பன்*
*வந்தன னெதிர்ந்தனர் கொடையே*
*அந்தீங் கிளவி பொலிகநின் சிறப்பே* (ஐங். 300)

தலைமகன் தானே வரைவுவேண்டிவிட சுற்றத்தார் கொடை நேர்ந்தமை தலைமகட்குத் தோழி சொல்லியது. 119

## திப்புத்தோளார்

*செங்களம் படக்கொன் றவுணர்த் தேய்த்த*
*செங்கோ லம்பிற் செங்கோட்டி யானைக்*
*கழறொடிச் சேஎய் குன்றம்*
*குருதிப் பூவின் குலைக்காந் தட்டே* (குறுந். 1)

தோழி கையுறை மறுத்தது. 120

## கபிலர்

*வேரல் வேலி வேர்க்கோட் பலவின்*
*சார னாட செவ்வியை யாகுமதி*
*யாரஃ தறிந்திசி னோரே சாரற்*
*சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கி யாங்கிவள்*
*உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே* (குறுந். 18)

இரவுக்குறி வந்து நீங்கும் தலைமகனைத் தோழி எதிர்ப்பட்டு வரைவுகடாயது. 121

## ஔவையார்

*அகவன் மகளே யகவன் மகளே*
*மனவுக்கோப் பன்ன நன்னெடுங் கூந்தல்*
*அகவன் மகளே பாடுக பாட்டே*
*இன்னும் பாடுக பாட்டேஅவர்*
*நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டே* (குறுந். 23)

கட்டுக்காணிய நின்றவிடத்துத் தோழி அறத்தொடு நின்றது. 122

## வெள்ளிவீதியார்

*அரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கை*
*மேக்கெழு பெருஞ்சினை யிருந்த தோகை*
*பூக்கொய் மகளிரிற் றோன்று நாடன்*
*தகாஅன் போலத் தான்றீது மொழியினும்*
*தன்கண் கண்டது பொய்க்குவ தன்றே*
*தேக்கொக் கருந்து முள்ளெயிற்றுத் துவர்வாய்*
*வரையாடு வன்பறழ்த் தந்தைக்*
*கடுவனு மறியுமக் கொடியோ னையே* (குறுந். 26)

நற்றாயுஞ் செவிலித்தாயும் தலைமகளது வேறுபாடு கண்டு, இஃது எற்றினா னாயிற்றென்று கட்டுவிச்சியை வினவிக் கட்டுக் காண்கின்ற காலத்துத் தலைமகளது வேறுபாட்டிற்குக் காரணம் பிறிதோர் தெய்வமென்று கூறக் கேட்டுத் தோழி அறத்தொடு நின்றது. 123

## கபிலர்

*காம மொழிவ தாயினும் யாமத்துக்*
*கருவி மாமழை வீழ்ந்தென வருவி*
*விடரகத் தியம்பு நாடவெம்*
*தொடர்புந் தேயுமோ நின்வயி னானே* (குறுந். 42)

இரவுக்குறி வேண்டிய கிழவற்குத் தோழி நேர்ந்த வாய்பாட்டான் மறுத்தது. 124

## நெடுவெண்ணிலவினார்

*கருங்கால் வேங்கை வீயுகு துறுகல்*
*இரும்புலிக் குருளையிற் றோன்றுங் காட்டிடை*
*எல்லி வருநர் களவிற்கு*
*நல்லை யல்லை நெடுவெண் ணிலவே (குறுந். 47)*

இராவந்தொழுகுங்காலை முன்னிலைப் புறமொழியாக நிலாவிற்கு உரைப்பாளாகத் தோழி உரைத்தது. 125

## பனம்பாரனார்

*ஆர்களிறு மிதித்த நீர்திகழ் சிலம்பிற்*
*சூர்நசைத் தனையையாய் நடுங்கல் கண்டே*
*நரந்த நாறுங் குவையிருங் கூந்தல்*
*நிரந்திலங்கு வெண்பன் மடந்தை*
*பரிந்தனெ னல்லனோ விறையிறை யானே (குறுந். 52)*

வரைவுமலிவுகேட்ட தலைமகட்குத் தோழி முன்னாளின் அறத்தொடு நின்றமை காரணத்தான் இது விளைந்தது என்பதுபடக் கூறியது. 126

## கடுந்தோட் கரவீரனார்

*கருங்கட் டாக்கலை பெரும்பிறி துற்றெனக்*
*கைம்மை யுய்யாக் காமர் மந்தி*
*கல்லா வன்பறழ் கிளைமுதற் சேர்த்தி*
*ஓங்குவரை யடுக்கத்துப் பாய்ந்துயிர் செகுக்கும்*
*சார னாட நடுநாள்*
*வாரல் வாழியோ வருந்துதும் யாமே (குறுந். 69)*

தோழி இரவுக்குறி மறுத்தது. 127

## பரணர்

*மகிழ்நன் மார்பே வெய்யை யானீ*
*அழியல் வாழி தோழி நன்னன்*

*நறுமா கொன்று நாட்டிற் போகிய*
*ஒன்றுமொழிக் கோசர் போல*
*வன்கட் சூழ்ச்சியும் வேண்டுமாற் சிறிதே* **(குறுந். 73)**

பகற்குறி மறுத்து, இரவுக்குறி நேர்ந்து, அதுவும் மறுத்தமைபடத் தலைமகட்குத் தோழி சொல்லியது. 128

## விட்டகுதிரையார்

*விட்ட குதிரை விசைப்பி னன்ன*
*விசும்புதோல் பசுங்கழைக் குன்ற நாடன்*
*யாந்தற் படர்ந்தமை யறியான் றானும்*
*வேனி லானேறு போலச்*
*சாயின னென்பதம் மாணல நயந்தே* **(குறுந். 74)**

தோழி தலைமகன் குறை மறாதவாற்றாற் கூறியது. 129

## வடமவண்ணக்கன் பேரிசாத்தனார்

*இவளே, நின்சொற் கொண்ட வென்சொற் றேறிப்*
*பசுநனை ஞாழற் பல்சினை யொருசிறைப்*
*புதுநல னிழந்த புலம்புமா ருடையள்*
*உதுக்காண் டெய்ய வுள்ளல் வேண்டும்*
*நிலவு மிருளும் போலப் புலவுத்திரைக்*
*கடலுங் கானலுந் தோன்றும்*
*மடறாழ் பெண்ணையெஞ் சிறுநல் லூரே* **(குறுந். 81)**

தோழியிற்கூட்டங் கூடிப் பிரியும் தலைமகற்குத் தோழி சொல்லியது. 130

## வெண்பூதனார்

*அரும்பெற லமிழ்த மார்பத மாகப்*
*பெரும்பெய ருலகம் பெறீஇயரோ வன்னை*
*தம்மிற் றமதுண் டன்ன சினைதொறும்*
*தீம்பழந் தூங்கும் பலவின்*
*ஓங்குமலை நாடனை வருமென் றோளே* **(குறுந். 83)**

தலைமகன் வரைந்தெய்துதல் உணர்த்திச் செவிலியைத் தோழி வாழ்த்தியது. 131

## மதுரைக் கதக்கண்ணனார்

*ஒலிவெள் ளருவி யோங்குமலை நாடன்*
*சிறுகட் பெருங்களிறு வயப்புலி தாக்கித்*
*தொன்முரண் சோருந் துன்னருஞ் சாரல்*
*நடுநாள் வருதலும் வரூஉம்*
*வடுநா ணலமே தோழி நாமே* **(குறுந். 88)**

இரவுக்குறி நேர்ந்த வாய்பாட்டால் தோழி தலைமகட்குச் சொல்லியது. 132

## மதுரை எழுத்தாளன் சேந்தம்பூதனார்

*எற்றோ வாழி தோழி முற்றுபு*
*கறிவள ரடுக்கத் திரவின் முழங்கிய*
*மங்குன் மாமழை வீழ்ந்தெனப் பொங்குமயிர்க்*
*கலைதொட விழுக்கிய பூநாறு பலவுக்கனி*
*வரையிழி யருவி யுண்டுறைத் தரூஉம்*
*குன்ற நாடன் கேண்மை*
*மென்றோள் சாய்த்துஞ் சால்பீன் றன்றே* **(குறுந். 90)**

வரைவு நீட்டித்தவழி ஆற்றாளாகிய தலைமகட்குத் தலைமகன் சிறைப்புறமாகத் தோழி கூறியது. 133

## தீன்மிதி நாகனார்

*மென்றோ ணெகிழ்த்த செல்லல் வேலன்*
*வென்றி நெடுவே ளென்னு மன்னையும்*
*அதுவென வுணரு மாயி னாயிடைக்*
*கூழை யிரும்பிடிக் கைகரந் தன்ன*
*கேழிருந் துறுகற் கெழுமலை நாடன்*
*வல்லே வருக தோழிநம்*
*இல்லோர் பெருநகை காணிய சிறிதே* **(குறுந். 111)**

வரைவு நீட்டித்தவழித் தலைமகள் வேறுபாடு கண்டு வெறியெடுப்பக் கருதிய தாயது நிலைமை தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தலைவன் சிறைப்புறமாகத் தோழி கூறியது. 134

## கபிலர்

*பெருநன் றாற்றிற் பேணாரு முளரே*
*ஒருநன் றுடைய ளாயினும் புரிமாண்டு*
*புலவி தீர வளிமதி யிலைகவர்*
*பாடமை யொழுகிய தண்ணறுஞ் சாரல்*
*மென்னடை மரையா துஞ்சும்*
*நன்மலை நாட நின்னல திலளே* **(குறுந். 115)**

உடன்போக்கு ஒருப்படுத்துமீளுந் தோழி தலைமகற்குக் கூறியது. 135

## கொல்லன் அழிசியார்

*கொன்னூர் துஞ்சினும் யாந்துஞ் சலமே*
*எம்மி லயல தேழி லும்பர்*
*மயிலடி யிலைய மாக்குர னொச்சி*
*அணிமிகு மென்கொம் பூழ்த்த*
*மணிமருள் பூவின் பாடுநனி கேட்டே* **(குறுந். 138)**

குறிபிழைத்த தலைமகன் பிற்றை ஞான்று இரவுக்குறி வந்துழித் தோழி சிறைப்புறமாகக் கூறியது. 136

## மதுரைக்கணக்காயன் மகன் நக்கீரனார்

*அழிய லாயிழை யழிபுபெரி துடையன்*
*பழியு மஞ்சும் பயமலை நாடன்*
*நில்லா மையே நிலையிற் றாகலின்*
*நல்லிசை வேட்ட நயனுடை நெஞ்சிற்*
*கடப்பாட் டாள னுடைப்பொருள் போலத்*
*தங்குதற் குரிய தன்றுநின்*
*அங்கலுழ் மேனிப் பாய பசப்பே* **(குறுந். 143)**

வரைவிடை வைத்துப் பிரிந்தவிடத்துத் தலைமகட்குத் தோழி கூறியது. 137

## வெள்ளிவீதியார்

*அம்ம வாழி தோழி நம்மூர்ப்*
*பிரிந்தோர்ப் புணர்ப்போ ரிருந்தனர் கொல்லோ*
*தண்டுடைக் கையர் வெண்டலைச் சிதவலர்*
*நன்றுநன் றென்னு மாக்களோ*
*டின்றுபெரி தென்னு மாங்கண தவையே* (குறுந். 146)

தலைமகன் தமர் வரைவொடு வந்து சொல்லாடுகின்றுழி வரைவு மறுப்பவோ எனக்கவன்ற தலைமகட்குத் தோழி சொல்லியது. 138

## வடமவண்ணக்கன் பேரிசாத்தனார்

*தழையணி யல்கு றாங்கல் செல்லா*
*நுழைசிறு நுசுப்பிற் கெவ்வ மாக*
*அம்மெல் லாக நிறைய வீங்கிக்*
*கொம்மை வரிமுலை செப்புட னெதிரின*
*யாங்கா குவள்கொல் பூங்குழை யென்னும்*
*அவல நெஞ்சமொ டுசாவாக்*
*கவலை மாக்கட்டிப் பேதை யூரே* (குறுந். 159)

தலைமகன் சிறைப்புறமாகத் தோழி செறிப்பறிவுறுத்தது. 139

## வருமுலையாரித்தியார்

*ஒருநாள் வாரல னிருநாள் வாரலன்*
*பன்னாள் வந்து பணிமொழி பயிற்றியென்*
*நன்னர் நெஞ்ச நெகிழ்த்த பின்றை*
*வரைமுதிர் தேனிற் போகி யோனே*
*ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ*
*வேறுபுல னன்னாட்டுப் பெய்த*
*ஏறுடை மழையிற் கலிழுமென் னெஞ்சே* (குறுந். 176)

தோழி கிழத்தியைக் குறைநயப்பக் கூறியது. 140

## குட்டுவன் கண்ணனார்

*கல்லென் கானத்துக் கடமா வாட்டி*
*எல்லு மெல்லின்று ஞமலியு மிளைத்தன*
*செல்ல லைஇய வுதுவெம் மூரே*
*ஓங்குவரை யடுக்கத்துத் தீந்தேன் கிழித்த*
*குவையுடைப் பசுங்கழை தின்ற கயவாய்ப்*
*பேதை யானை சுவைத்த*
*கூழை மூங்கிற் குவட்டிடை யதுவே* (குறுந். 179)

பகல் வருவானை இரவுக்குறி நேர்ந்தாள்போன்று வரைவுகடாயது. 141

## கபிலர்

*யாஅங் கொன்ற மரஞ்சுட் டியவிற்*
*கரும்புமருண் முதல பைந்தாட் செந்தினை*
*மடப்பிடித் தடக்கை யன்ன பால்வார்பு*
*கரிக்குறட் டிறைஞ்சிய செறிகோட் பைங்குரற்*
*படுகிளி கடிகஞ் சேறு மடுபோர்*
*எஃகுவிளங்கு தடக்கை மலையன் கானத்*
*தார நாறு மார்பினை*
*வாரற்க தில்ல வருகுவள் யாயே* (குறுந். 198)

தோழி குறியிடம் பெயர்த்துக் கூறியது. 142

## கூடலூர்கிழார்

*மரங்கொல் கானவன் புனந்துளர்ந்து வித்திய*
*பிறங்குகுர லிறடி காக்கும் புறந்தாழ்*
*அஞ்சி லோதி யசையியற் கொடிச்சி*
*திருந்திழை யல்குற்குப் பெருந்தழை யுதவிச்*
*செயலை முழுமுத லொழிய வயல*
*தரலை மாலை சூட்டி*
*ஏமுற் றன்றிவ் வழுங்க லூரே* (குறுந். 214)

தோழி வெறியாட்டு எடுத்துக்கொண்டவிடத்து அறத்தொடு நின்றது. 143

## கபிலர்

*கன்றுதன் பயமுலை மாந்த முன்றிற்*
*றினைபிடி யுண்ணும் பெருங்கன் னாட*
*கெட்டிடத் துவந்த வுதவி கட்டில்*
*வீறுபெற்று மறந்த மன்னன் போல*
*நன்றிமறந் தமையா யாயின் மென்சீர்க்*
*கலிமயிற் கலாவத் தன்னவிவள்*
*ஒலிமென் கூந்த லுரியவா நினக்கே* (குறுந். 225)

வரைவிடைவைத்துப் பிரிவாற்குத் தோழி சொல்லியது. 144

## ஆசிரியன் பெருங்கண்ணனார்

*தொடிநெகிழ்ந் தனவே தோள்சா யினவே*
*விடுநா ணுண்டோ தோழி விடர்முகைச்*
*சிலம்புடன் கமழு மலங்குகுலைக் காந்தள்*
*நறுந்தா தூதுங் குறுஞ்சிறைத் தும்பி*
*பாம்புமிழ் மணியிற் றோன்றும்*
*முந்தூழ் வேலிய மலைகிழ வோற்கே* (குறுந். 239)

சிறைப்புறம். 145

## கண்ணனார்

*பல்லோர் துஞ்சு நள்ளென் யாமத்*
*துரவுக்களிறு போல்வந் திரவுக்கதவு முயறல்*
*கேளே மல்லேங் கேட்டனம் பெரும*
*ஓரி முருங்கப் பீலி சாய*
*நன்மயில் வலைப்பட் டாங்கியாம்*
*உயங்குதொறு முயங்கு மறனில் யாயே* (குறுந். 244)

இரவுக்குறி வந்தொழுகா நின்ற தலைமகற்குத் தம் காவல் மிகுதியாற் புறப்பட்டு எதிர்கொள்ளப் பெறாதவழி பிற்றை ஞான்று தோழி வரைந்து கொளினல்லது இவ்வொழுகலாற்றின் இனிக் கூடல் அரிது என வரைவுகடாயது. 146

## சேந்தம்பூதனார்

*எழின்மிக வுடைய தீங்கணிப் படூஉம்*
*திறவோர் செய்வினை யறவ தாகும்*
*கிளையுடை மாந்தர்க்குப் புணையுமா மிவ்வென*
*ஆங்கறிந் திசினே தோழி வேங்கை*
*வீயா மென்சினை வீயுக யானை*
*ஆர்துயில் இயம்பு நாடன்*
*மார்புரித் தாகிய மறுவி னட்பே* (குறுந். 247)

கடிநகர்த் தெளிவு விலங்கினமையறிய தோழி கூறியது. 147

## பெருஞ்சாத்தனார்

*மறிக்குர லறுத்துத் தினைப்பிரப் பிரீஇச்*
*செல்லாற்றுக் கவலைப் பல்லியங் கறங்கத்*
*தோற்ற மல்லது நோய்க்குமருந் தாகா*
*வேற்றுப்பெருந் தெய்வம் பலவுடன் வாழ்த்திப்*
*பேஎய்க் கொளீஇய ளிவளெனப் படுதல்*
*நோதக் கன்றே தோழி மால்வரை*
*மழைவிளை யாடு நாடனைப்*
*பிழையே மாகிய நாமிதற் படவே* (குறுந். 263)

'அன்னை வெறியாட்டெடுக்கக் கருதாநின்றாள். இனி யாம் இதற்கு என்கொலோ செயற்பாலது?' எனத் தோழி, தலைமகட்குத் தலைமகன் சிறைப்புறமாகக் கூறியது.
148

## கருவூர்க் கதப்பிள்ளை

*காந்தளங் கொழுமுகை காவல் செல்லாது*
*வண்டுவாய் திறக்கும் பொழுதிற் பண்டும்*
*தாமறி செம்மைச் சான்றோர்க் கண்ட*
*கடனறி மாக்கள் போல விடன்விட்*
*டிதழ்தளை யவிழ்ந்த லேகல் வெற்பன்*
*நன்னர் நெஞ்சத்தன் றோழி நின்னிலை*

*யான்றனக் குரைத்தனெ னாகத்*
*தானா ணினனிஃ தாகா வாறே* (குறுந். 265)

வரையாது பிரிந்தவிடத்து, அவர் பிரிந்தது நின்னை வரைந்து கோடல் காரணமாகத் தாமெனத் தோழி தலைமகட்குக் கூறியது. 149

## கருவூர்ச் சேரமான் சாத்தனார்

*சேறி ரோவெனச் செப்பலு மாற்றாம்*
*வருவி ரோவென வினவலும் வினவாம்*
*யாங்குச்செய் வாங்கொல் தோழி பாம்பின்*
*பையுடை இருந்தலை துமிக்கும் ஏற்றொடு*
*நடுநாள் என்னார் வந்து*
*நெடுமென் பணைத்தோள் அடைந்திசி னோரே* (குறுந். 268)

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குத் தோழி சொல்லியது.150

## மிளைவேல் தித்தனார்

*பொருத யானைப் புகர்முகங் கடுப்ப*
*மன்றத் துறுகன் மீமிசைப் பலவுடன்*
*ஒண்செங் காந்த ளவிழு நாடன்*
*அறவ னாயினு மல்ல னாயினும்*
*நம்மே சுவரோ தம்மிலர் கொல்லோ*
*வரையிற் றாழ்ந்த வால்வெள் ளருவி*
*கொன்னிலைக் குரம்பையி னிழிதரும்*
*இன்னா திருந்தவிச் சிறுகுடி யோரே* (குறுந். 284)

வரைவிடைத் தோழி, கிழத்திக்கு உரைப்பாளாய் உரைத்தது. 151

## பரணர்

*மண்ணிய சென்ற வொண்ணுத லரிவை*
*புனறரு பசுங்காய் தின்றதன் றப்பற்*
*கொன்பதிற் றொன்பது களிற்றொ டவணிறை*
*பொன்செய் பாவை கொடுப்பவுங் கொள்ளான்*

*பெண்கொலை புரிந்த நன்னன் போல*
*வரையா நிரையத்துச் செலீஇயரோ வன்னை*
*ஒருநாள், நகைமுக விருந்தினன் வந்தெனப்*
*பகைமுக வூரிற் றுஞ்சலோ விலளே* (குறுந். 292)

தோழி இரவுக்குறிக்கட் சிறைப்புறமாகக் காப்பு மிகுதி சொல்லியது. 152

## காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார்

*அவ்விளிம் புரீஇய கொடுஞ்சிலை மறவர்*
*வைவார் வாளி விறற்பகை பேணார்*
*மாறுநின் றிறந்த ஆறுசெல் வம்பலர்*
*உவலிடு பதுக்கை யூரிற் றோன்றும்*
*கல்லுயர் நனந்தலை நல்ல கூறிப்*
*புணர்ந்துடன் போதல் பொருளென*
*உணர்ந்தேன் மன்றவவ ருணரா வூங்கே* (குறுந். 297)

தோழி வரைவு மலிந்தது. 153

## பரணர்

*சேரி சேர மெல்ல வந்துவந்*
*தரிது வாய்விட் டினியகூறி*
*வைக றோறு நிறம்பெயர்ந் துறையுமவன்*
*பைத னோக்க நினையாய் தோழி*
*இன்கடுங் கள்ளி னகுதை தந்தை*
*வெண்கடைச் சிறுகோ லகவன் மகளிர்*
*மடப்பிடிப் பரிசின் மானப்*
*பிறிதொன்று குறித்தவ னெடும்புற நிலையே* (குறுந். 298)

கிழத்திக்குத் தோழி குறைமறாமற் கூறியது. 154

## பெருந்தோட் குறுஞ்சாத்தனார்

*சோலை வாழைச் சுரிநுகும் பினைய*
*அணங்குடை யருந்தலை நீவலின் மதனழிந்து*

*மயங்குதுய ருற்ற மையல் வேழம்*
*உயங்குயிர் மடப்பிடி யுலைபுறந் தைவர*
*ஆமிழி சிலம்பி னரிதுகண் படுக்கும்*
*மாமலை நாடன் கேண்மை*
*காமந் தருவதோர் கைதாழ்ந் தன்றே* (குறுந். 308)

வரைவிடைக் கிழத்தியை வன்சொற் சொல்லி வற்புறுத்தியது. 155

## மதுரைக் கண்டரத்தனார்

*புரிமட மரையான் கருநரை நல்லேறு*
*தீம்புளி நெல்லி மாந்தி யயலது*
*தேம்பாய் மாமலர் நடுங்க வெய்துயிர்த்*
*தோங்குமலைப் பைஞ்சுனை பருகு நாடன்*
*நம்மைவிட் டமையுமோ மற்றோ கைம்மிக*
*வடபுல வாடைக் கழிமழை*
*தென்புலம் படருந் தண்பனி நாளே* (குறுந். 317)

பிரிவிடைக் கிழத்தியைத் தோழி வற்புறுத்தியது. 156

• • • • •

*மலைச்செஞ் சாந்தி னார மார்பினன்*
*சுனைப்பூங் குவளைச் சுரும்பார் கண்ணியன்*
*நடுநாள் வந்து நம்மனைப் பெயரும்*
*மடவர லரிவைநின் மார்பம ரின்றுணை*
*மன்ற மரையா விரிய வேறட்டுச்*
*செங்க ணிரும்புலி குழுமு மதனால்*
*மறைத்தற் காலையோ வன்றே*
*திறப்பல் வாழிவேண் டன்னைநங் கதவே* (குறுந். 321)

தோழி கிழத்திக்கு நொதுமலர் வரையுமிடத்து அறத்தொடு நிற்பேன் என்றது. 157

## மதுரை மருதங்கிழார் மகன் இளம்போத்தனார்

*வந்த வாடைச் சில்பெயற் கடைநாள்*
*நோய்நீத் தரும்படர் தீர நீநயந்து*

*கூறி னெவனோ தோழி நாறுமயிர்*
*மடப்பிடி தழீஇத் தடக்கை யானை*
*குன்றச் சிறுகுடி யிழிதரு*
*மன்ற நண்ணிய மலைகிழ வோற்கே* (குறுந். 332)

வரையாது வந்தொழுகாநின்ற காலத்துக் கிழவன் கேட்பக் கிழத்திக்குத் தோழி கூறியது.
158

## உழுந்தினைம் புலவனார்

*குறும்படைப் பகழிக் கொடுவிற் கானவன்*
*புனமுண்டு கடிந்த பைங்கண் யானை*
*நறுந்தழை மகளி ரோப்புங் கிள்ளையொடு*
*குறும்பொறைக் கணவுங் குன்ற நாடன்*
*பணிக்குறை வருத்தம் வீடத்*
*துணியி னெவனோ தோழிநம் மறையே* (குறுந். 333)

அறத்தொடு நிற்பலெனக் கிழத்திக்குத் தோழி உரைத்தது. 159

## இருந்தையூர்க் கொற்றன் புலவனார்

*நிரைவளை முன்கை நேரிழை மகளிர்*
*இருங்கல் வியலறைச் செந்தினை பரப்பிச்*
*சுனைபாய் சோர்விடை நோக்கிச் சினையிழிந்து*
*பைங்கண் மந்தி பார்ப்பொடு கவரும்*
*வெற்பிடை நண்ணி யதுவே வார்கோல்*
*வல்விற் கானவர் தங்கைப்*
*பெருந்தோட் கொடிச்சி யிருந்த வூரே* (குறுந். 335)

இரவுக்குறி நயவாமைத் தோழி செறிப்பறிவுறீஇயது. 160

## குன்றியனார்

*செறுவர்க் குவகை யாகத் தெறுவர*
*ஈங்ஙனம் வருபவோ தேம்பாய் துறைவ*
*சிறுநா வொண்மணி விளரி யார்ப்பக்*

*கடுமா நெடுந்தேர் நேமி போகிய*
*இருங்கழி நெய்தல் போல*
*வருந்தின ளளியணீ பிரிந்திசி னோரே* **(குறுந். 336)**

தலைமகன் இரவுக்குறி நயந்தானைத் தோழி சொல்லி மறுத்தது. 161

## பேயார்

*நறையகில் வயங்கிய நளிபுன நறும்புகை*
*உறையறு மையிற் போகிச் சாரற்*
*குறவர் பாக்கத் திழிதரு நாடன்*
*மயங்குமலர்க் கோதை நன்மார்பு முயங்கல்*
*இனிதுமன் வாழி தோழி மாயிதழ்க்*
*குவளை யுண்கண் கலுழப்*
*பசலை யாகா வூங்கலங் கடையே* **(குறுந். 339)**

வரைவிடை வேறுபட்ட கிழத்தியைத் தோழி கடுஞ்சொற் சொல்லி வற்புறீஇயது.
162

## காவிரிப்பூம்பட்டினத்துக் கந்தரத்தனார்

*கலைகை தொட்ட கமழ்சுளைப் பெரும்பழம்*
*காவன் மறந்த கானவன் ஞாங்கர்க்*
*கடியுடை மரந்தொறும் படுவலை மாட்டும்*
*குன்ற நாட தகுமோ பைஞ்சுனைக்*
*குவளைத் தண்டழை யிவளீண்டு வருந்த*
*நயந்தோர் புன்கண் டீர்க்கும்*
*பயந்தலைப் படாஅப் பண்பினை யெனினே* **(குறுந். 342)**

செறிப்பறிவுறுக்கப்பட்டான் வரைவின்கட் செல்லாது, பின்னும் வரவு வேண்டின தலைமகனைத் தோழி நெருங்கிச்சொல்லி வரைவுகடாயது. 163

## வாயிலங் கண்ணனார்

*நாகுபிடி நயந்த முளைக்கோட் டிளங்களிறு*
*குன்ற நண்ணிக் குறவ ரார்ப்ப*
*மன்றம் போழு நாடன் றோழி*

*சுனைப்பூங் குவளைத் தொடலை தந்தும்*
*தினைப்புன மருங்கிற் படுகிளி யோப்பியும்*
*காலை வந்து மாலைப் பொழுதில்*
*நல்லக நயந்துதா னுயங்கிச்*
*சொல்லவு மாகா தஃகி யோனே* (குறுந். 346)

தோழி கிழத்தியை இரவுக்குறி நயப்பக் கூறியது. 164

## உறையூர் முதுகூற்றனார்

*ஆர்கலி வெற்பன் மார்புபுணை யாகக்*
*கோடுயர் நெடுவரைக் கவாஅற் பகலே*
*பாடின் னருவி யாடுத லினிதே*
*நிரையிதழ் பொருந்தாக் கண்ணோ டிரவிற்*
*பஞ்சி வெண்டிரிச் செஞ்சுடர் நல்லிற்*
*பின்னுவீழ் சிறுபுறந் தழீஇ*
*அன்னை முயங்கத் துயிலின் னாதே* (குறுந். 353)

பகற்குறிவந்து ஒழுகும் தலைமகன் வெளிப்பாடஞ்சி இரவுக்குறி நயந்தானது குறிப்பறிந்த தோழி, இரவின்கண் அன்னையது காவலறிந்து பின்னும் பகற் குறியே நன்று அவ்விரவுக் குறியினென்று பகற்குறியும் இரவுக்குறியும் மறுத்துத் தலைமகன் சிறைப்புறத்தானாக வரைவுகடாயது. 165

## கபிலர்

*பெயல்கண் மறைத்தலின் விசும்புகா ணலையே*
*நீர்பரந் தொழுகலி னிலங்கா ணலையே*
*எல்லை சேறலி னிருள்பெரிது பட்டன்று*
*பல்லோர் துஞ்சும் பானாட் கங்குல்*
*யாங்குவந் தனையோ வோங்கல் வெற்ப*
*வேங்கை கமழுமெஞ் சிறுகுடி*
*யாங்கறிந் தனையோ நோகோ யானே* (குறுந். 355)

இரவுக்குறி வந்த தலைமகற்குத் தோழி நொந்து கூறியது. 166

## கபிலர்

*முனிபட ருழந்த பாடி லுண்கட்*
*பனிகால் போழ்ந்து பணியெழின் ஞெகிழ்ந்தோள்*
*மெல்லிய வாகலின் மேவரத் திரண்டு*
*நல்ல வென்னுஞ் சொல்லை மன்னிய*
*ஏனலஞ் சிறுதினை காக்குஞ் சேணோன்*
*ஞெகிழியிற் பெயர்ந்த நெடுநல் யானை*
*மீன்படு சுடரொளி வெரூஉம்*
*வான்றோய் வெற்பன் மணவா லூங்கே* (குறுந். 357)

தோழி கிழவன் கேட்கும் அண்மையனாகக் கிழத்திக்குச் சொல்லியது. 167

## வேம்பற்றூர்க் கண்ணன் கூத்தனார்

*முருகயர்ந்து வந்த முதுவாய் வேல*
*சினவ லோம்புமதி வினவுவ துடையேன்*
*பல்வே றுருவிற் சில்லவிழ் மடையொடு*
*சிறுமறி கொன்றிவ ணறுநுத னீவி*
*வணங்கினை கொடுத்தி யாயி னணங்கிய*
*விண்டோய் மாமலைச் சிலம்பன்*
*ஒண்டா ரகலமு முண்ணுமோ பலியே* (குறுந். 362)

வெறிவிலக்கித் தோழி அறத்தொடு நின்றது. 168

## மதுரை நல்வெள்ளியார்

*கோடீ ரிலங்குவளை நெகிழ நாளும்*
*பாடில கலிழ்ந்து பனியா னாவே*
*துன்னரு நெடுவரைத் ததும்பிய வருவி*
*தண்ணெ னுரசி னிமிழிசை காட்டும்*
*மருங்கிற் கொண்ட பலவிற்*
*பெருங்க னாடநீ நயந்தோள் கண்ணே* (குறுந். 365)

**யான் வரையுந்துணையும் ஆற்றவல்லளோ? என்று வினாய கிழவற்குத் தோழி சொல்லியது.** **169**

## பேரிசாத்தனார்

*பால்வரைந் தமைத்த லல்ல தவர்வயிற்*
*சால்பளந் தறிதற் கியாஅம் யாரோ*
*வெறியாள் கூறவு மமையா ளதன்றலைப்*
*பைங்கண் மாச்சுனைப் பல்பிணி யவிழ்ந்த*
*வள்ளிதழ் நீல நோக்கி யுள்ளகை*
*பழுத கண்ண ளாகிப்*
*பழுதன் றம்மவிவ் வாயிழை துணிவே* **(குறுந். 366)**

காவல்மிகுதிக்கண் வேறுபட்ட தலைமகளது வேறுபாடுகண்டு இவ் வேறுபாடு எற்றினானாயது? என்று செவிலி வினாவத் தோழி கூறியது. 170

## விற்றூற்று மூதெயினனார்

*பனைத்தலைக், கருக்குடை நெடுமடல் குறுத்தொடு மாயக்*
*கடுவளி தொகுத்த நெடுவெண் குப்பைக்*
*கணங்கொள் சிமைய வணங்குங் கானல்*
*ஆழிதலை வீசிய வயிர்ச்சேற் றருவிக்*
*கூழைபெ யெக்கர்க் குழீஇய பதுக்கை*
*புலர்பதங் கொள்ளா வளவை*
*அலரெழுந் தன்றிவ் வழுங்க லூரே* **(குறுந். 372)**

இரவுக்குறி வந்து ஒழுகாநின்ற தலைமகன் கேட்பத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது. 171

## மதுரைக் கொல்லன் புல்லனார்

*நிலம்புடை பெயரினு நீர்தீப் பிறழினும்*
*இலங்குதிரைப் பெருங்கடற் கெல்லை தோன்றினும்*
*வெவ்வாய்ப் பெண்டிர் கௌவை யஞ்சிக்*
*கேடெவ னுடைத்தோ தோழி நீடுமயிர்க்*
*கடும்ப லூகக் கறைவிர லேற்றை*
*புடைத்தொடு புடைஇப் பூநாறு பலவுக்கனி*

*காந்தளஞ் சிறுகுடிக் கமழும்*
*ஓங்குமலை நாடனொ டமைந்தநந் தொடர்பே* (குறுந். 373)

அலர் மிக்கவழித் தலைமகட்குத் தோழி சொல்லியது. 172

## உறையூர்ப் பல்காயனார்

*எந்தையும் யாயு முணரக் காட்டி*
*ஒளித்த செய்தி வெளிப்படக் கிளந்தபின்*
*மலைகெழு வெற்பன் றலைவந் திரப்ப*
*நன்றுபுரி கொள்கையி னொன்றா கின்றே*
*முடங்க லிறைய தூங்கணங் குரீஇ*
*நீடிரும் பெண்ணைத் தொடுத்த*
*கூடினு மயங்கிய மைய லூரே* (குறுந். 374)

அறத்தொடு நின்றமை தோழி கிழத்திக்கு உரைத்தது. 173

. . . . .

*அம்ம வாழி தோழி யின்றவர்*
*வாரா ராயினோ நன்றே சாரற்*
*சிறுதினை விளைந்த வியன்க ணிரும்புனத்*
*திரவரி வாரிற் றொண்டகச் சிறுபறை*
*பானாள் யாமத்துங் கறங்கும்*
*யாமங் காவல ரவியா மாறே* (குறுந். 375)

இரவுக்குறிக்கண் சிறைப்புறமாகத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய் இருபொழுதும் மறுத்து வரைவுகடாயது. 174

. . . . .

*இன்றியாண் டையனோ தோழி குன்றத்துப்*
*பழங்குழி யகழ்ந்த கானவன் கிழங்கினொடு*
*கண்ணகன் றூமணி பெறூஉ நாடன்*
*அறிவுகாழ்க் கொள்ளு மளவைச் செறிதொடி*

## பேரிசாத்தனார்

*பால்வரைந் தமைத்த லல்ல தவர்வயிற்*
*சால்பளந் தறிதற் கியாஅம் யாரோ*
*வெறியாள் கூறவு மமையா ளதன்றலைப்*
*பைங்கண் மாச்சுனைப் பல்பிணி யவிழ்ந்த*
*வள்ளிதழ் நீல நோக்கி யுள்ளகை*
*பழுத கண்ண ளாகிப்*
*பழுதன் றம்மவிவ் வாயிழை துணிவே* **(குறுந். 366)**

காவல்மிகுதிக்கண் வேறுபட்ட தலைமகளது வேறுபாடுகண்டு இவ் வேறுபாடு எற்றினானாயது? என்று செவிலி வினாவத் தோழி கூறியது. 170

## விற்றூற்று மூதெயினனார்

*பனைத்தலைக், கருக்குடை நெடுமடல் குறுத்தொடு மாயக்*
*கடுவளி தொகுத்த நெடுவெண் குப்பைக்*
*கணங்கொள் சிமைய வணங்குங் கானல்*
*ஆழிதலை வீசிய வயிர்ச்சேற் றருவிக்*
*கூழைபெ யெக்கர்க் குழீஇய பதுக்கை*
*புலர்பதங் கொள்ளா வளவை*
*அலரெழுந் தன்றிவ் வழுங்க லூரே* **(குறுந். 372)**

இரவுக்குறி வந்து ஒழுகாநின்ற தலைமகன் கேட்பத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது. 171

## மதுரைக் கொல்லன் புல்லனார்

*நிலம்புடை பெயரினு நீர்தீப் பிறழினும்*
*இலங்குதிரைப் பெருங்கடற் கெல்லை தோன்றினும்*
*வெவ்வாய்ப் பெண்டிர் கெளவை யஞ்சிக்*
*கேடெவ னுடைத்தோ தோழி நீடுமயிர்க்*
*கடும்ப லூகக் கறைவிர லேற்றை*
*புடைத்தொடு புடைஇப் பூநாறு பலவுக்கனி*

*காந்தளஞ் சிறுகுடிக் கமழும்*
*ஓங்குமலை நாடனொ டமைந்தநந் தொடர்பே (குறுந். 373)*

அலர் மிக்கவழித் தலைமகட்குத் தோழி சொல்லியது. 172

## உறையூர்ப் பல்காயனார்

*எந்தையும் யாயு முணரக் காட்டி*
*ஒளித்த செய்தி வெளிப்படக் கிளந்தபின்*
*மலைகெழு வெற்பன் றலைவந் திரப்ப*
*நன்றுபுரி கொள்கையி னொன்றா கின்றே*
*முடங்க லிறைய தூங்கணங் குரீஇ*
*நீடிரும் பெண்ணைத் தொடுத்த*
*கூடினு மயங்கிய மைய லூரே (குறுந். 374)*

அறத்தொடு நின்றமை தோழி கிழத்திக்கு உரைத்தது. 173

• • • • •

*அம்ம வாழி தோழி யின்றவர்*
*வாரா ராயினோ நன்றே சாரற்*
*சிறுதினை விளைந்த வியன்க ணிரும்புனத்*
*திரவரி வாரிற் றொண்டகச் சிறுபறை*
*பானாள் யாமத்துங் கறங்கும்*
*யாமங் காவல ரவியா மாறே (குறுந். 375)*

இரவுக்குறிக்கண் சிறைப்புறமாகத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய் இருபொழுதும் மறுத்து வரைவுகடாயது. 174

• • • • •

*இன்றியாண் டையனோ தோழி குன்றத்துப்*
*பழங்குழி யகழ்ந்த கானவன் கிழங்கினொடு*
*கண்ணகன் றூமணி பெறூஉ நாடன்*
*அறிவுகாழ்க் கொள்ளு மளவைச் செறிதொடி*

*எம்மில் வருகுவை நீயெனப்*
*பொம்ம லோதி நீவி யோனே* **(குறுந். 379)**

நொதுமலர் வரைவுழித் தோழி அறத்தொடு நின்றது. 175

## கபிலர்

*பலவிற் சேர்ந்த பழமார் இனக்கலை*
*சிலைவிற் கானவன் செந்தொடை வெரீஇச்*
*செருவுறு குதிரையிற் பொங்கிச் சாரல்*
*இருவெதிர் நீடமை தயங்கப் பாயும்*
*பெருவரை அடுக்கத்துக் கிழவோ னென்றும்*
*அன்றை யன்ன நட்பினன்*
*புதுவோர்த் தம்மவிவ் அழுங்க லூரே* **(குறுந். 385)**

வேற்றுவரைவு மாற்றியது. 176

## வேட்ட கண்ணனார்

*நெய்கனி குறும்பூழ் காய மாக*
*ஆர்பதம் பெறுக தோழி யத்தை*
*பெருங்க னாடன் வரைந்தென வவனெதிர்*
*நன்றோ மகனே யென்றனென்*
*நன்றே போலு மென்றுரைத் தோனே* **(குறுந். 389)**

தலைமகன் குற்றேவன்மகனால் வரைவுமலிந்த தோழி தலைமகட்குச் சொல்லியது. 177

## தும்பிசேர் கீரனார்

*அம்ம வாழியோ வணிச்சிறைத் தும்பி*
*நன்மொழிக் கச்ச மில்லை யவர்நாட்*
*டண்ண னெடுவரைச் சேறி யாயிற்*
*கடமை மிடைந்த துடவையஞ் சிறுதினைத்*
*துளரெறி நுண்டுகட் களைஞர் தங்கை*
*தமரிற் றீரா ளென்மோ வரசர்*

*நிரைசெல நுண்டோல் போலப்*
*பிரசந் தூங்கு மலைகிழ வோர்க்கே* (குறுந். 392)

வரைவிடைக் கிழத்தியது நிலைமை தும்பிக்குச் சொல்லுவாளாய்ச் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது. 178

## குறியிறையார்

*முழந்தா ளிரும்பிடிக் கயந்தலைக் குழவி*
*நறவுமலி பாக்கத்துக் குறமக ளீன்ற*
*குறியிறைப் புதல்வரொடு மறுவந் தோடி*
*முன்னா ளினிய தாகிப் பின்னாள்*
*அவர்தினை மேய்தந் தாங்குப்*
*பகையா கின்றவர் நகைவிளை யாட்டே* (குறுந். 394)

வரைவிடை ஆற்றாளாகிய கிழத்தியை ஆற்றுவிக்கும் தோழி தலைமகனை இயற்பழித்துக் கூறியது. 179

## பெருங்குன்றூர்கிழார்

*நிலநீர் ஆரக் குன்றங் குழைப்ப*
*அகல்வாய்ப் பைஞ்சுனைப் பயிர்கால் யாப்பக்*
*குறவர் கொன்ற குறைக்கொடி நறைப்பவர்*
*நறுங்காழ் ஆரஞ் சுற்றுவன அகைப்பப்*
*பெரும்புயல் பொழிந்த தொழில எழிலி*
*தெற்கேர் பிரங்கும் அற்சிரக் காலையு*
*மரிதே காதலர்ப் பிரிதல் இன்றுசெல்*
*இகுளையர்த் தரூஉம் வாடையொடு*
*மயங்கிதழ் மழைக்கண் பயந்த தூதே* (நற். 5)

தலைவன் செலவுக் குறிப்பு அறிந்து வேறுபட்ட தலைவிக்குத் தோழி சொல்லியது. 180

## கபிலர்

*எழாஅ யாகலி னெழில்நலந் தொலைய*
*அழாஅ தீமோ நொதுமலர் தலையே*

*ஏனல் காவலர் மாவீழ்த்துப் பறித்த*
*பகழி யன்ன சேயரி மழைக்கண்*
*நல்ல பெருந்தோ ளோயே கொல்லன்*
*எறிபொற் பிதிரிற் சிறுபல தாய*
*வேங்கை வீயுகு மோங்குமலைக் கட்சி*
*மயிலறி பறியா மன்னோ*
*பயில்குரல் கவரும் பைம்புறக் கிளியே (நற். 13)*

இயற்கைப் புணர்ச்சியின் பிற்றைஞான்று, தலைவியின் வேறுபாடு கண்ட தோழி தலைவி மறைத்தற்குச் சொல்லியது. 181

• • • • •

*கொடிச்சி காக்கும் அடுக்கற் பைந்தினை*
*முந்துவிளை பெருங்குரல் கொண்ட மந்தி*
*கல்லாக் கடுவனொடு நல்வரை யேறி*
*அங்கை நிறைய ஞெமிடிக் கொண்டுதன்*
*திரையணற் கொடுங்கவுள் நிறைய முக்கி*
*வான்பெயல் நனைந்த புறத்த நோன்பியர்*
*கையூ ணிருக்கையில் தோன்று நாடன்*
*வந்தனன் வாழி தோழி யுலகங்*
*கயங்கண் அற்ற பைதறு காலைப்*
*பீளொடு திரங்கிய நெல்லிற்கு*
*நள்ளென் யாமத்து மழைபொழிந் தாங்கே (நற். 22)*

வரைவுமலிந்த தோழி தலைமகட்குச் சொல்லியது. 182

## கணக்காயனார்

*தொடிபழி மறைத்தலின் தோளுய்ந் தனவே*
*வடிக்கொள் கூழை ஆயமோ டாடலின்*
*இடிப்பு மெய்யதொன் றுடைத்தே கடிக்கொள*
*அன்னை காக்குந் தொன்னலஞ் சிதையக்*
*காண்டொறுங் கலுழ்த லன்றியு மீண்டுநீர்*
*முத்துப்படு பரப்பிற் கொற்கை முன்றுறைச்*

*சிறுபா சடைய செப்பூர் நெய்தல்*
*தெண்ணீர் மலரின் தொலைந்த*
*கண்ணே காமங் கரப்பரி யவ்வே* (நற். 23)

தலைவி துயர் ஆற்றாமை உணர்ந்த தோழி வரைவுகடாயது. 183

## பேரிசாத்தனார்

*அவ்வளை வெரிநி னரக்கீர்த் தன்ன*
*செவ்வரி யிதழ சேணாறு நறவின்*
*நறுந்தா தாடிய தும்பி பசுங்கேழ்ப்*
*பொன்னுரை கல்லின் நன்னிறம் பெறூஉம்*
*வளமலை நாடன் நெருநல் நம்மொடு*
*கிளைமலி சிறுதினைக் கிளிகடிந் தசைஇச்*
*சொல்லிடம் பெறாஅன் பெயர்ந்தனன் பெயர்ந்த*
*தல்ல லன்றது காதலந் தோழி*
*தாதுண் வேட்கையிற் போதுதெரிந் தூதா*
*வண்டோ ரன்னவவன் தண்டாக் காட்சி*
*கண்டுங் கழல்தொடி வலித்தவென்*
*பண்பில் செய்தி நினைப்பா கின்றே* (நற். 25)

தலைமகளைத் தோழி குறைநயப்புக் கூறியது. 184

## கபிலர்

*மாயோ னன்ன மால்வரைக் கவாஅன்*
*வாலியோ னன்ன வயங்குவெள் ளருவி*
*அம்மலை கிழவோன் நந்நயந் தென்றும்*
*வருந்தின னென்பதோர் வாய்ச்சொல் தேறாய்*
*நீயுங் கண்டு நுமரொடும் எண்ணி*
*அறிவறிந் தளவல் வேண்டு மறுதரற்கு*
*அரிய வாழி தோழி பெரியோர்*
*நாடி நட்பி னல்லது*
*நட்டு நாடார்தம் ஒட்டியோர் திறத்தே* (நற். 32)

தலைவிக்குக் குறைநயப்புக் கூறியது. 185

## பிரமசாரி

கடவுட் கற்சுனை அடையிறந் தவிழ்ந்த
பறியாக் குவளை மலரொடு காந்தள்
குருதி யொண்பூ உருகெழக் கட்டிப்
பெருவரை யடுக்கம் பொற்பச் சூர்மகள்
அருவி யின்னியத் தாடு நாடன்
மார்புதர வந்த படர்மலி யருநோய்
நின்னணங் கன்மை யறிந்தும் அண்ணாந்து
கார்நறுங் கடம்பின் கண்ணி சூடி
வேலன் வேண்ட வெறிமனை வந்தோய்
கடவு ளாயினும் ஆக
மடவை மன்ற வாழிய முருகே (நற். 34)

தோழி தெய்வத்துக் குரைப்பாளாய் வெறி விலக்கியது. 186

## சீத்தலைச்சாத்தனார்

குறுங்கை யிரும்புலிக் கோள்வல் ஏற்றை
பூநுத லிரும்பிடி புலம்பத் தாக்கித்
தாழ்நீர் நனந்தலைப் பெருங்களி றடூஉங்
கல்லக வெற்பன் சொல்லின் தேறி
யாமெந் நலனிழந் தனமே யாமத்து
அலர்வாய்ப் பெண்டிர் அம்பலோ டொன்றிப்
புரையில் தீமொழி பயிற்றிய வுரையெடுத்து
ஆனாக் கௌவைத் தாகத்
தானென் இழந்ததிவ் வழுங்க லூரே (நற். 36)

இரவுக்குறிச் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது. 187

## நல்வெள்ளியார்

பெருங்களிறு உழுவை அட்டென இரும்பிடி
உயங்குபிணி வருத்தமொடு இயங்கல்செல் லாது
நெய்தற் பாசடை புரையும் அஞ்செவிப்

*பைதலங் குழவி தழீஇ ஒய்யென*
*அரும்புண் ணுறுநரின் வருந்தி வைகுங்*
*கானக நாடற் கிதுவென யானது*
*கூறின் எவனோ தோழி வேறுணர்ந்து*
*அணங்கறி கழங்கிற் கோட்டங் காட்டி*
*வெறியென உணர்ந்த உள்ளமொடு மறியறுத்து*
*அன்னை அயரும் முருகுநின்*
*பொன்னேர் பசலைக் குதவா மாறே* (நற். 47)

சிறைப்புறமாகத் தோழி தலைமகளுக்குரைப்பாளாய்ச் சொல்லியது. 188

## நல்வேட்டனார்

*யானஃது அஞ்சினென் கரப்பவுந் தானஃது*
*அறிந்தனள் கொல்லோ அருளினள் கொல்லோ*
*எவன்கொல் தோழி அன்னை கண்ணியது*
*வானுற நிவந்த பெருமலைக் கவாஅன்*
*ஆர்கலி வானந் தலைஇ நடுநாள்*
*கனைபெயல் பொழிந்தெனக் கானக் கல்யாற்று*
*முளியிலை கழித்தன முகிழிண ரொடுவரு*
*விருந்தின் தீநீர் மருந்து மாகும்*
*தண்ணென உண்டு கண்ணின் நோக்கி*
*முனியா தாடப் பெறினிவள்*
*பனியுந் தீர்குவள் செல்கென் றோளே* (நற். 53)

வரைவுநீட்டிப்பத் தோழி சிறைப்புறமாகச் சொல்லியது. 189

## பெருவழுதி

*ஓங்குமலை நாட ஒழிகநின் வாய்மை*
*காம்புதலை மணந்த கல்லதர்ச் சிறுநெறி*
*உறுபகை பேணாது இரவின் வந்திவள்*
*பொறிகிளர் ஆகம் புல்லத் தோள்சேர்பு*
*அறுகாற் பறவை அளவில மொய்த்தலிற்*

*கண்கோ ளாக நோக்கிப் பண்டும்*
*இனையை யோவென வினவினள் யாயே*
*அதனெதிர் சொல்லா ளாகி அல்லாந்து*
*என்முக நோக்கி யோளே அன்னாய்*
*யாங்குணர்ந் துய்குவள் கொல்லென மடுத்த*
*சாந்த ஞெகிழி காட்டி*
*ஈங்கா யினவால் என்றிசின் யானே* (நற். 55)

வரைவிடை மெலிவாற்றுவிக்குந் தோழி தலைவற்குச் சொல்லியது. 190

## பொதும்பில்கிழார்

*தடங்கோட் டாமான் மடங்கல் மாநிரைக்*
*குன்ற வேங்கைக் கன்றொடு வதிந்தெனத்*
*துஞ்சுபதம் பெற்ற துய்த்தலை மந்தி*
*கல்லென் சுற்றங் கைகவியாக் குறுகி*
*வீங்குசுரை ஞெமுங்க வாங்கித் தீம்பால்*
*கல்லா வன்பறழ்க் கைந்நிறை பிழியும்*
*மாமலை நாட மருட்கை யுடைத்தே*
*செங்கோற் கொடுங்குரற் சிறுதினை வியன்புனம்*
*கொய்பதங் குறுகுங் காலையெம்*
*மையீர் ஓதி மாணலந் தொலைவே* (நற். 57)

செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது. 191

## சிறுமோலிகனார்

*கேளாய் எல்ல தோழி அல்கல்*
*வேணவா நலிய வெய்ய உயிரா*
*ஏமான் பிணையின் வருந்தினே னாகத்*
*துயர்மருங் கறிந்தனள் போல அன்னை*
*துஞ்சா யோவென் குறுமக ளென்றலிற்*
*சொல்வெளிப் படாமை மெல்லவென் நெஞ்சிற்*
*படுமழை பொழிந்த பாறை மருங்கில்*

*சிரல்வா யுற்ற தளவிற் பரலவற்*
*கான்கெழு நாடற் படர்ந்தோர்க்குக்*
*கண்ணும் படுமோ என்றிசின் யானே* (நற். 61)

தலைவன் வரவுணர்ந்து தலைவிக்குத் தோழி சொல்லியது. 192

## கபிலர்

*அமுதம் உண்கநம் அயலில் ஆட்டி*
*கிடங்கில் அன்ன விட்டுக்கரைக் கான்யாற்றுக்*
*கலங்கும் பாசி நீரலைக் கலாவ*
*ஒளிறுவெள் அருவி யொண்டுறை மடுத்துப்*
*புலியொடு பொருத புண்கூர் யானை*
*நற்கோடு நயந்த அன்பில் கானவர்*
*விற்சுழிப் பட்ட நாமப் பூசல்*
*உருமிடைக் கடியிடி கரையும்*
*பெருமலை நாடனை வரூஉம்என் றோளே* (நற். 65)

விரிச்சி பெற்றுப் புகன்ற தோழி தலைமகட்குச் சொல்லியது. 193

## பிரான்சாத்தனார்

*விளையா டாயமொடு ஓரை யாடாது*
*இளையோர் இல்லிடத் திற்செறிந் திருத்தல்*
*அறனும் அன்றே ஆக்கமுந் தேய்ம்மெனக்*
*குறுநுரை சுமந்து நறுமலர் உந்திப்*
*பொங்கிவரு புதுநீர் நெஞ்சுண ஆடுகம்*
*வல்லிதின் வணங்கிச் சொல்லுநர்ப் பெறினே*
*செல்கென விடுநள்மன் கொல்லோ எல்லுமிழ்ந்து*
*உரவுரும் உரறும் அரையிருள் நடுநாள்*
*கொடிநுடங் கிலங்கின மின்னி*
*ஆடுமழை இறுத்தன்றவர் கோடுயர் குன்றே* (நற். 68)

சிறைப்புறமாகத் தோழி தலைவிக்குரைப்பாளாய்ச் செறிப்பறிவுறீஇயது. 194

## பெருந்தேவனார்

*எம்மூர் வாயில் உண்டுறைத் தடைஇய*
*கடவுள் முதுமரத்து உடனுறை பழகிய*
*தேயா வளைவாய்த் தெண்கண் கூருகிர்*
*வாய்ப்பறை அசாஅம் வலிமுந்து கூகை*
*மையூன் தெரிந்த நெய்வெண் புழுக்கல்*
*எலிவான் சூட்டொடு மலியப் பேணுதும்*
*எஞ்சாக் கொள்கைஎங் காதலர் வரல்நசைஇத்*
*துஞ்சாது அலமரு பொழுதின்*
*அஞ்சுவரக் கடுங்குரல் பயிற்றா தீமே (நற். 83)*

இரவுக்குறிவந்த தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழி சொல்லியது. 195

## நல்விளக்கனார்

*ஆய்மலர் மழைக்கண் தெண்பனி யுறைப்பவும்*
*வேய்மருள் பணைத்தோள் விறலிழை நெகிழவும்*
*அம்பன் மூதூர் அரவ மாயினுங்*
*குறிவரி இரும்புலி அஞ்சிக் குறுநடைக்*
*கன்றுடை வேழம் நின்றுகாத்து அல்கும்*
*ஆரிருள் கடுகிய அஞ்சுவரு சிறுநெறி*
*வாரற்க தில்ல தோழி சாரல்*
*கானவன் எய்த முளவுமான் கொழுங்குறை*
*தேங்கமழ் கதுப்பின் கொடிச்சி மகிழ்ந்துகொடு*
*காந்தளஞ் சிறுகுடிப் பகுக்கும்*
*ஓங்குமலை நாடன்நின் நசையி னானே (நற். 85)*

தலைவன் வரவுணர்ந்த தோழி தலைவிக்குரைத்தது. 196

## நல்லந்துவனார்

*யாஞ்செய் தொல்வினைக்கு எவன்பேது உற்றனை*
*வருந்தல் வாழி தோழி யாஞ்சென்று*
*உரைத்தனம் வருகம் எழுமதி புணர்திரைக்*

கடல்விளை அமுதம் பெயற்கேற் றாஅங்கு
உருகி உகுதல் அஞ்சுவல் உதுக்காண்
தம்மோன் கொடுமை நம்வயின் ஏற்றி
நயம்பெரிது உடைமையின் தாங்கல் செல்லாது
கண்ணீர் அருவி யாக
அழுமே தோழிஅவர் பழமுதிர் குன்றே (நற். 88)

சிறைப்புறமாகத் தோழி தலைவிக்குரைப்பாளாய்ச் சொல்லியது. 197

## மலையனார்

பிரசந் தூங்கப் பெரும்பழந் துணர
வரைவெள் ளருவி மாலையின் இழிதரக்
கூலம் எல்லாம் புலம்புக நாளும்
மல்லற்று அம்மஇம் மலைகெழு வெற்பெனப்
பிரிந்தோர் இரங்கும் பெருங்கல் நாட!
செல்கம் எழுமோ சிறக்கநின் ஊழி
மருங்கு மறைத்த திருந்திழைப் பணைத்தோள்
நல்கூர் நுசுப்பின் மெல்லியல் குறுமகள்
பூண்தாழ் ஆகம் நாணட வருந்திய
பழங்கண் மாமையும் உடைய தழங்குகுரல்
மயிர்க்கண் முரசின் ஒருமுன்
உயிர்க்குறி எதிர்ப்பை பெறலருங் குரைத்தே (நற். 93)

வரைவுகடாயது. 198

## உக்கிரப்பெருவழுதி

எய்ம்முள் அன்ன பரூஉமயிர் எருத்தின்
செய்ய்ம்ம் மேவல் சிறுகட் பன்றி
ஓங்குமலை வியன்புனம் படீஇயர் வீங்குபொறி
நூழை நுழையும் பொழுதின் தாழாது
பாங்கர்ப் பக்கத்துப் பல்லி பட்டென
மெல்ல மெல்லப் பிறக்கே பெயர்ந்துதன்
கல்லளைப் பள்ளி வதியும் நாடன்

*எந்தை ஓம்புங் கடியுடை வியல்நகர்த்*
*துஞ்சாக் காவலர் இகழ்பதம் நோக்கி*
*இரவின் வரூஉம் அதனினும் கொடிதே*
*வைகலும் பொருந்தல் ஒல்லாக்*
*கண்ணொடு வாராஎன் நாரில் நெஞ்சே (நற். 98)*

இரவுக்குறி வந்தொழுகுந் தலைவனைத் தோழி வரைவுகடாயது. 199

• • • • •

*மலையயற் கலித்த மையார் ஏனல்*
*துணையின் தீர்ந்த கடுங்கண் யானை*
*அணையக் கண்ட அங்குடிக் குறவர்*
*கணையர் கிணையர் கைபுனை கவணர்*
*விளியர் புறக்குடி யார்க்கும் நாட*
*பழகிய பகையும் பிரிவின் னாதே*
*முகையேர் இலங்கெயிற்று இன்நகை மடந்தை*
*சுடர்புரை திருநுதல் பசப்பத்*
*தொடர்பியாங்கு விட்டனை நோகோ யானே (நற். 108)*

வரையாது நெடுங்காலம் வந்தொழுகலாற்றாளாய தோழி தலைமகளது ஆற்றாமைகூறி வரைவுகடாயது. 200

## பெருங்குன்றூர்கிழார்

*விருந்தெவன் செய்கோ தோழி சாரல்*
*அரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கைச்*
*சுரும்பிமிர் அடுக்கம் புலம்பக் களிறட்டு*
*உரும்பின் உள்ளத்து அரிமா வழங்கும்*
*பெருங்கல் நாடன் வரவறிந்து விரும்பி*
*மாக்கடல் முகந்து மணிநிறத் தருவித்*
*தாழ்நீர் நனந்தலை அழுந்துடப் பாஅய்*
*மலையிமைப் பதுபோல் மின்னிச்*
*சிலைவல் ஏற்றொடு செறிந்தஇம் மழைக்கே (நற். 112)*

பருவவரவின்கண் ஆற்றாளாய தலைவியைத் தோழி வற்புறுத்தியது. 201

## தொல்கபிலர்

வெண்கோடு கொண்டு வியலறை வைப்பவும்
பச்சூன் கெண்டி வள்ளுகிர் முணக்கவும்
மறுகுதொறு புலாவஞ் சிறுகுடி அரவம்
வைகிக் கேட்டுப் பையாந் திசினே
அளிதோ தானே தோழி அல்கல்
வந்தோன் மன்ற குன்ற நாடன்
துளிபெயல் பொறித்த புள்ளித் தொல்கரை
பொருதிரை நிவப்பின் வரும்யாறு அஞ்சுவல்
ஈர்ங்குரல் உருமின் ஆர்கலி நல்லேறு
பாம்புகவின் அழிக்கும் ஓங்குவரை பொத்தி
மையின் மடப்பிடி இனையக்
கையூன்றுபு இழிதரு களிறெறிந் தன்றே (நற். 114)

ஆறுபார்த்துற்ற அச்சத்தால் தோழி, தலைவிக்கு உரைப்பாளாய்ச் சிறைப்புறமாகச் சொல்லியது. 202

## பெருங்குன்றூர்கிழார்

தினையுண் கேழல் இரியப் புனவன்
சிறுபொறி மாட்டிய பெருங்கல் அடாஅர்
ஒண்கேழ் வயப்புலி படூஉம் நாடன்
ஆர்தர வந்தனன் ஆயினும் படப்பை
இன்முசுப் பெருங்கலை நன்மேயல் ஆரும்
பன்மலர்க் கான்யாற்று உம்பர்க் கருங்கலை
கடும்பாட்டு வருடையொடு தாவன உகளும்
பெருவரை நீழல் வருகுவன் குளவியொடு
கூவிளந் ததைந்த கண்ணியன் யாவதும்
முயங்கல் பெறுகுவன் அல்லன்
புலவி கொளீஇயர்தன் மலையினும் பெரிதே (நற். 119)

சிறைப்புறமாகத் தோழி செறிப்பறிவுறீஇயது. 203

## செங்கண்ணனார்

*இருங்கல் அடுக்கத்து என்னையர் உழுத*
*கருங்காற் செந்தினை கடியும் உண்டன*
*கல்லக வரைப்பில் கான்கெழு சிறுகுடி*
*மல்லன் மருங்கின் மெளவலும் அரும்பின*
*நகையுரும் உரறும் நாம நள்ளிருள்*
*வரையக நாடன் வரூஉம் என்பது*
*உண்டுகொல் அன்றுகொல் யாதுகொல் மற்றென*
*நின்று மதிவல் உள்ளமொடு மறைந்தவை ஆடி*
*அன்னையும் அமரா முகத்தினள் நின்னொடு*
*நீயே சூழ்தல் வேண்டும்*
*பூஎய் கண்ணியது பொருந்து மாறே* (நற். 122)

சிறைப்புறமாகத் தோழி தலைவிக்குரைப்பாளாய்த் தலைவன் கேட்பச் சொல்லியது.

204

• • • • •

*இரைதேர் எண்கின் பகுவாய் ஏற்றை*
*கொடுவரிப் புற்றம் வாய்ப்ப வாங்கி*
*நல்லரா நடுங்க உரறிக் கொல்லன்*
*ஊதுலைக் குருகின் உள்ளுயிர்த்து அகழும்*
*நடுநாள் வருதல் அஞ்சுதும் யாமென*
*வரைந்துவரல் இரக்குவம் ஆயின் நம்மலை*
*நன்னாள் வதுவை கூடி நீடின்று*
*நம்மொடு செல்வர்மன் தோழி மெல்ல*
*வேங்கைக் கண்ணியர் எருதெறி களமர்*
*நிலங்கண் டன்ன அகன்கண் பாசறை*
*மென்தினை நெடும்போர் புரிமார்*
*துஞ்சுகளிறு எடுப்புந்தம் பெருங்கல் நாட்டே* (நற். 125)

வரைவுநீட்டிப்ப வாற்றாளாய தலைவியைத் தோழி வற்புறுத்தியது. 205

## நற்சேந்தனார்

*பகலெரி சுடரின் மேனி சாயவும்*
*பாம்பூர் மதியின் நுதலொளி கரப்பவும்*
*எனக்குநீ உரையா யாயினை நினக்கியான்*
*உயிர்பகுத் தன்ன மாண்பினேன் ஆகலின்*
*அதுகண் டிசினால் யானே என்றுநனி*
*அழுதல் ஆன்றிசின் ஆயிழை ஒலிகுரல்*
*ஏனல் காவலின் இடையுற் றொருவன்*
*கண்ணியன் கழலன் தாரன் தண்ணெனச்*
*சிறுபுறங் கவையினன் ஆக அதற்கொண்டு*
*அஃதே நினைந்த நெஞ்சமொடு*
*இஃதா கின்றியான் உற்ற நோயே* (நற். 128)

குறைநேர்ந்த தோழி தலைவி குறைநயப்பக் கூறியது. 206

## ஔவையார்

*பெருநகை கேளாய் தோழி காதலர்*
*ஒருநாள் கழியினும் உயிர்வேறு படூஉம்*
*பொம்மல் ஓதி நம்மிவண் ஒழியச்*
*செல்ப என்ப தாமே சென்று*
*தம்வினை முற்றி வரூஉம்வரை நம்மனை*
*வாழ்தும் என்ப நாமே அதன்தலைக்*
*கேழ்கிளர் உத்தி அரவுத்தலை பனிப்பப்*
*படுமழை உருமின் உரற்றுகுரல்*
*நடுநாள் யாமத்துந் தமியங் கேட்டே* (நற். 129)

பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைமகளை முகம் புக்கது. 207

• • • • •

*இனிதின் இனிது தலைப்படுதும் என்பது*
*இதுகொல் வாழி தோழி காதலர்*
*வருகுறி செய்த வரையகச் சிறுதினைச்*

*செவ்வாய்ப் பாசினங் கடீஇயர் கொடிச்சி*
*அவ்வாய்த் தட்டையொடு அவணை யாகென*
*ஏயள்மன் யாயும் நுந்தை வாழியர்*
*அம்மா மேனி நிரைதொடிக் குறுமகள்*
*செல்லா யோநின் முள்ளெயிறு உண்கென*
*மெல்லிய இனிய கூறலின் இனியானஃது*
*ஒல்லேன் போல உரையா டுவலே* (நற். 134)

இற்செறிப்பாரென ஆற்றாளாய தலைவியை அஃதிலரென்பதுபடத் தோழி சொல்லியது.

208

## கொள்ளம்பக்கனார்

*யாங்கா குவமோ அணிநுதற் குறுமகள்*
*தேம்படு சாரல் சிறுதினைப் பெருங்குரல்*
*செவ்வாய்ப் பைங்கிளி கவர நீமற்று*
*எவ்வாய்ச் சென்றனை அவணெனக் கூறி*
*அன்னை ஆனாள் கழற முன்நின்று*
*அருவி ஆர்க்கும் பெருவரை நாடனை*
*அறியலும் அறியேன் காண்டலும் இலனே*
*வெதிர்புனை தட்டையேன் மலர்பூக் கொய்து*
*சுனைபாய்ந் தாடிற்றும் இலனென நினைவிலை*
*பொய்யல் அந்தோ வாய்த்தனை அதுகேட்டுத்*
*தலையிறைஞ் சினளே அன்னை*
*செலவொழிந் தனையால் அளியைநீ புனத்தே* (நற். 147)

சிறைப்புறமாகத் தோழி சொல்லியது.

209

## இளநாகனார்

*நன்னுதல் பசப்பினும் பெருந்தோள் நெகிழினும்*
*கொன்முரண் இரும்புலி அரும்புழைத் தாக்கிச்*
*செம்மறுக் கொண்ட வெண்கோட்டு யானை*
*கன்மிசை அருவியில் கழூஉஞ் சாரல்*
*வாரற்க தில்ல தோழி கடுவன்*

முறியார் பெருங்கிளை அறிதல் அஞ்சிக்
கறிவளர் அடுக்கத்தில் களவினில் புணர்ந்த
செம்முக மந்தி செல்குறி கருங்கால்
பொன்இணர் வேங்கைப் பூஞ்சினைச் செலீஇயர்
குண்டுநீர் நெடுஞ்சினை நோக்கிக் கவிழ்ந்துதன்
புன்றலைப் பாறுமயிர் திருத்துங்
குன்ற நாடன் இரவி னானே (நற். 151)

இரவுக்குறிச் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது. 210

## நல்லாவூர்கிழார்

கானமுங் கம்மென் றன்றே வானமும்
வரைகிழிப்பு அன்ன மையிருள் பரப்பிப்
பல்குரல் எழிலி பாடோ வாதே
மஞ்சுதவழ் இறும்பில் களிறுவலம் படுத்த
வெஞ்சின உழுவைப் பேழ்வாய் ஏற்றை
அஞ்சுதக உரறும் ஓசை கேளாது
துஞ்சுதி யோஇல தூவி லாட்டி
பேரஞர் பொருத புகர்படு நெஞ்சம்
நீரடு நெருப்பில் தணிய இன்றவர்
வாரா ராயினோ நன்றே சாரல்
விலங்குமலை யாராறு உள்ளுதொறும்
நிலம்பரந்து ஒழுகுமென் நிறையில் நெஞ்சே (நற். 154)

இரவுக்குறித் தலைவன் சிறைப்புறமாக வரைவுகடாயது. 211

## கண்ணங்கொற்றனார்

நீயே, அடியறிந்து ஒதுங்கா ஆரிருள் வந்தெம்
கடியுடை வியனகர்க் காவல் நீவியும்
பேரன் பினையே பெருங்கடல் நாட
யாமே, நின்னுநின் மலையும் பாடிப் பன்னாள்
சிறுதினை காக்குவஞ் சேறும் அதனால்
பகல்வந் தீமோ பல்படர் அகல

*எருவை நீடிய பெருவரைச் சிறுகுடி*
*அரியல் ஆர்ந்தவ ராயினும் பெரியர்*
*பாடிமிழ் விடர்முகை முழங்க*
*ஆடுமழை இறுத்ததெங் கோடுயர் குன்றே* (நற். 156)

இரவுக்குறி மறுத்தது. 212

## வெள்ளைக்குடி நாகனார்

*அம்ம வாழி தோழி நம்வயின்*
*யானோ காணேன் அதுதான் கரந்தே*
*கல்லதர் மன்னுங் கான்கொல் லும்மே*
*கனையிருள் மன்னுங் கண்கொல் லும்மே*
*விடர்முகைச் செறிந்த வெஞ்சின இரும்புலி*
*புகர்முக வேழம் புலம்பத் தாக்கிக்*
*குருதி பருகிய கொழுங்கவுள் கயவாய்*
*வேங்கை முதலொடு துடைக்கும்*
*ஓங்குமலை நாடன் வரூஉம் ஆறே* (நற். 158)

ஆறுபார்த்துற்ற அச்சத்தாற் சிறைப்புறமாகச் சொல்லியது. 213

• • • • •

*அமர்க்கண் ஆமான் அருநிற முள்காது*
*பணைத்த பகழிப் போக்குநினைந்து கானவன்*
*அணங்கொடு நின்றது மலைவான் கொள்கெனக்*
*கடவுள் ஓங்குவரை பேண்மார் வேட்டெழுந்து*
*கிளையொடு மகிழுங் குன்ற நாடன்*
*அடைதருந் தோறும் அருமைதனக் குரைப்ப*
*நப்புணர்வு இல்லா நயனி லோர்நட்பு*
*அன்ன ஆகுக என்னான்*
*ஒல்காது ஒழிமிகப் பல்கின தூதே* (நற். 165)

நொதுமலர் வரையும் பருவத்துத் தோழி தலைவிக்கு அறத்தொடு நிலைபயப்பச் சொல்லியது. 214

*சுரும்புண விரிந்த கருங்கால் வேங்கைப்*
*பெருஞ்சினைத் தொடுத்த கொழுங்கண் இறாஅல்*
*புள்ளூற்றுக் கசிந்த தீந்தேன் கல்லளைக்*
*குறக்குறு மாக்கள் உண்ட மிச்சிலைப்*
*புன்தலை மந்தி வன்பறழ் நக்கும்*
*நன்மலை நாட பண்பெனப் படுமோ*
*நின்னயந் துறைவி இன்னுயிர் உள்ளாய்*
*அணங்குடை அரவின் ஆரிருள் நடுநாள்*
*மைபடு சிறுநெறி எஃகுதுணை ஆக*
*ஆரங் கமழும் மார்பினை*
*சாரல் சிறுகுடி ஈங்குநீ வரலே* (நற். 168)

தோழி இரவுக்குறி மறுத்தது. 215

. . . . .

*சுனைப்பூக் குற்றும் தொடலை தைஇயும்*
*மலைச்செங் காந்தள் கண்ணி தந்தும்*
*தன்வழிப் படூஉம் நம்நயந்து அருளி*
*வெளியென உணர்ந்த அரிய அன்னையைக்*
*கண்ணினுங் கனவினுங் காட்டி இந்நோய்*
*என்னினும் வாராது மணியின் தோன்றும்*
*அம்மலை கிழவோன் செய்தனன் இதுவெனின்*
*படுவண்டு ஆர்க்கும் பைந்தார் மார்பின்*
*நெடுவேட்கு ஏதம் உடைத்தோ*
*தொடியோய் கூறுமதி வினவுவல் யானே* (நற். 173)

தோழி தலைவிக்குரைப்பாளாய்ச் சிறைப்புறமாகச் சொல்லியது. 216

. . . . .

*நிலவு மறைந்தன்று இருளும் பட்டன்று*
*ஓவத் தன்ன இடனுடை வரைப்பின்*
*பாவை யன்ன நப்புறங் காக்குஞ்*
*சிறந்த செல்வத்து அன்னையுந் துஞ்சினள்*
*கெடுத்துப்படு நன்கலம் எடுத்துக் கொண்டாங்கு*

நன்மார்பு அடைய முயங்கி மென்மெலக்
கண்டனம் வருகஞ் சென்மோ தோழி
கீழும் மேலும் காப்போர் நீத்த
வறுந்தலைப் பெருங்களிறு போலத்
தமியன் வந்தோன் பனியலை நிலையே (நற். 182)

வரைவுநீட்டிப்பத் தலைமகளாற்றாமையறிந்த தோழி சிறைப்புறமாகச்சொல்லி வரைவுகடாயது. 217

. . . . .

படுநீர்ச் சிலம்பின் கலித்த வாழைக்
கொடுமடல் ஈன்ற கூர்வாய்க் குவிமுகை
ஒள்ளிழை மகளிர் இலங்குவளைத் தொடூஉம்
மெல்விரல் மோசை போலக் காந்தள்
வள்ளிதழ் தோயும் வான்தோய் வெற்ப
நன்றி விளைவுந் தீதொடு வருமென
அன்றுநன் கறிந்தனள் ஆயிற் குன்றத்துத்
தேமுதிர் சிலம்பில் தடைஇய
வேய்மருள் பணைத்தோள் அழியலள் மன்னே (நற். 188)

பகற்குறி மறுத்து வரைவுகடாயது. 218

## மதுரை மருதனிளநாகனார்

அம்ம வாழி தோழி கைம்மாறு
யாதுசெய் வாம்கொல் நாமே கயவாய்க்
கன்றுடை மருங்கிற் பிடிபுணர்ந் தியலும்
வலனுயர் மருப்பின் நிலன்ஈர்த் தடக்கை
அண்ணல் யானைக்கு அன்றியும் கல்மிசைத்
தனிநிலை இதணம் புலம்பப் போகி
மந்தியு மறியா மரம்பயில் ஒருசிறைக்
குன்ற வெற்பனொடு நாம்விளை யாட
விரும்புகவர் கொண்ட ஏனற்
பெருங்குரல் கொள்ளாச் சிறுபசுங் கிளிக்கே (நற். 194)

சிறைப்புறமாகச் செறிப்பறிவுறீஇயது. 219

## ஐயூர் முடவனார்

*துய்த்தலைப் புனிற்றுக்குரல் பால்வார் பிறைஞ்சித்*
*தோடலைக் கொண்டன் ஏனல் என்று*
*துறுகல் மீமிசைக் குறுவன குழீஇச்*
*செவ்வாய்ப் பாசினங் கவருமென் றவ்வாய்த்*
*தட்டையும் புடைத்தனை கவணையுந் தொடுக்கென*
*எந்தைவந் துரைத்தனன் ஆக அன்னையும்*
*நன்னாள் வேங்கையும் மலர்கமா இனியென*
*என்முகம் நோக்கினள் எவன்கொல் தோழி*
*செல்வாள் என்றுகொல் செறிப்பல் என்றுகொல்*
*கல்கெழு நாடன் கேண்மை*
*அறிந்தனள் கொல்லஃது அறிகலென் யானே (நற். 206)*

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி சொல்லியது. 220

## குண்டுகட்பாலியாதனார்

*சிறுமணி தொடர்ந்து பெருங்கச்சு நிறீஇக்*
*குறுமுகிழ் எருக்கங் கண்ணி சூடி*
*உண்ணா நன்மாப் பண்ணி எம்முடன்*
*மறுகுடன் திரிதருஞ் சிறுகுறு மாக்கள்*
*பெரிதுஞ் சான்றோர் மன்ற விசிபிணி*
*முழவுக்கண் புலரா விழவுடை ஆங்கண்*
*ஊரேம் என்னுமிப் பேரேம் உறுநர்*
*தாமே ஒப்புரவு அறியின் தேமொழிக்*
*கயலேர் உண்கட் குறுமகட்கு*
*அயலோர் ஆகலென்று எம்மொடு படலே (நற். 220)*

குறைநேர்ந்த தோழி தலைமகளை முகம்புக்கது. 221

## கபிலர்

*கருங்கால் வேங்கைச் செவ்வீ வாங்குசினை*
*வடுக்கொளப் பிணித்த விடுமுரி முரற்சிக்*

*கைபுனை சிறுநெறி ...ாங்கிப் பையென*
*விசும்பாடு ஆய்மயில் கடுப்பயான் இன்று*
*பசுங்கா ழல்குல் பற்றுவன் ஊக்கிச்*
*செலவுடன் விடுகோ தோழி பலவுடன்*
*வாழை ஓங்கிய வழையமை சிலம்பில்*
*துஞ்சுபிடி மருங்கின் மஞ்சுபடக் காணாது*
*பெருங்களிறு பிளிறுஞ் சோலையவர்*
*சேணெடுங் குன்றங் காணிய நீயே* (நற். 222)

தோழி தலைமகன் வரவுணர்ந்து சிறைப்புறமாகச் செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது. 222

## முடத்திருமாறனார்

*என்னெனப் படுமோ தோழி மின்னுவசிபு*
*அதிர்குரல் எழிலி முதிர்கடன் தீரக்*
*கண்டூர்பு விரிந்த கனையிருள் நடுநாள்*
*பண்பி லாரிடை வரூஉம் நந்திறத்து*
*அருளான் கொல்லோ தானே கானவன்*
*சிறுபுறங் கடுக்கும் பெருங்கை வேழம்*
*வெறிகொள் சாபத்து எறிகணை வெரீஇ*
*அழுந்துபட விடரகத்து இயம்பும்*
*எழுந்துவீழ் அருவிய மலைகிழ வோனே* (நற். 228)

தோழி சிறைப்புறமாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தலைமகன் கேட்பச் சொல்லியது. 223

## முதுவெங்கண்ணனார்

*சிறுகண் யானைப் பெருங்கை ஈரினம்*
*குளவித் தண்கயங் குழையத் தீண்டிச்*
*சோலை வாழை முணைஇ அயலது*
*வேரல் வேலிச் சிறுகுடி அலறச்*
*செங்கால் பலவின் தீம்பழ மிசையும்*
*மாமலை நாட காமம் நல்கென*

*வேண்டுதும் வாழிய எந்தை வேங்கை*
*வீயுக விரிந்த முன்றில்*
*கல்கெழு பாக்கத்து அல்கினை செலினே* (நற். 232)

பகல்வருவானை இரவுவரவெனத் தோழி சொல்லியது. 224

## அஞ்சிலாந்தையார்

*கல்லாக் கடுவன் நடுங்கமுள் எயிற்று*
*மடமா மந்தி மாணா வன்பறழ்*
*கோடுயர் அடுக்கத்து ஆடுமழை ஒளிக்கும்*
*பெருங்கல் நாடனை அருளினை யாயின்*
*இனியென கொள்ளலை மன்னே கொன்னொன்று*
*கூறுவன் வாழி தோழி முன்னுற*
*நாருடை நெஞ்சத்து ஈரம் பொத்தி*
*ஆன்றோர் செல்நெறி வழாச்*
*சான்றோன் ஆதல்நன் கறிந்தனை தெரிமே* (நற். 233)

வரையாது நெடுங்காலம் வந்தொழுக இவள் ஆற்றாள் என்பதுணர்ந்து சிறைப்புறமாகத் தலைமகட்குத் தோழி சொல்லியது. 225

## பரணர்

*தொன்றுபடு துப்பொடு முரண்மிகச் சினைஇக்*
*கொன்ற யானைச் செங்கோடு கழாஅ*
*வழிதுளி பொழிந்த இன்குரல் எழிலி*
*எஃகுறு பஞ்சிற் றாகி வைகறைக்*
*கோடுயர் நெடுவரை ஆடும் நாடநீ*
*நல்கா யாயினும் நயனில செய்யினும்*
*நின்வழிப் படூஉமென் தோழி நன்னுதல்*
*இருந்திறை கூடிய பசலைக்கு*
*மருந்துபிறி தின்மைநன் கறிந்தனை சென்மே* (நற். 247)

நீட்டியாமை வரையெனத் தோழி சொல்லியது. 226

## மதுரைப் பெருமருதிள நாகனார்

*நெடுநீர் அருவிய கடும்பாட்டு ஆங்கண்*
*பிணிமுதல் அரைய பெருங்கல் வாழைக்*
*கொழுமுதல் ஆய்கனி மந்தி கவரும்*
*நன்மலை நாடனை நயவாய் யாமவன்*
*அளிபேர் அன்பின் நின்குரல் ஓப்பி*
*நின்புறங் காத்தலும் காண்போய் நீயென்*
*தளிரேர் மேனித் தொல்கவின் அழியப்*
*பலிபெறு கடவுட் பேணிக் கலிசிறந்து*
*தொடங்குநிலைப் பறவை உடங்குகுரல் கவருந்*
*தோடிடங் கோடாய் கிளர்ந்து*
*நீடினை விளைமோ வாழிய தினையே* (நற். 251)

சிறைப்புறமாகச் செறிப்பறிவுறீஇயது. 227

## கபிலர்

*புள்ளுப்பதி சேரினும் புணர்ந்தோர்க் காணினும்*
*பள்ளி யானையின் வெய்ய உயிரினை*
*கழிபட வருந்திய எவ்வமொடு பெரிதழிந்து*
*எனவ கேளாய் நினையினை நீநனி*
*உள்ளினும் பனிக்கும் ஒள்ளிழைக் குறுமகள்*
*பேரிசை உருமொடு மாரி முற்றிய*
*பல்குடைக் கள்ளின் வண்மகிழ்ப் பாரி*
*பலவுறு குன்றம் போலப்*
*பெருங்கவின் எய்திய அருங்காப் பினளே* (நற். 253)

செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது. 228

## ஆலம்பேரி சாத்தனார்

*கழுதுகால் கிளர ஊர்மடிந் தன்றே*
*உருகெழு மரபிற் குறிஞ்சி பாடிக்*
*கடியுடை வியனகர்க் கானவர் துஞ்சார்*

*வயக்களிறு பொருத வாள்வரி யுழுவை*
*கன்முகைச் சிலம்பிற் குழுமு மன்னோ*
*மென்றோள் நெகிழ்ந்துநாம் வருந்தினும் இன்றவர்*
*வாரா ராயினோ நன்றுமற் றில்ல*
*உயர்வரை யடுக்கத் தொளிறுபு மின்னிப்*
*பெயல்கால் மயங்கிய பொழுதுகழி பானாள்*
*திருமணி யரவுத்தேர்ந் துழல*
*உருமுச்சிவந் தெறியு மோங்குவரை யாறே (நற். 255)*

ஆறுபார்த்து உற்றது. 229

## வண்ணக்கன் சொருமருங் குமரனார்

*விளிவில் அரவமொடு தளிசிறந்து உறைஇ*
*மழையெழுந்து இறுத்த நளிர்தூங்கு சிலம்பின்*
*கழைஅமல்பு நீடிய வானுயர் நெடுங்கோட்டு*
*இலங்குவெள் ளருவி வியன்மலைக் கவாஅன்*
*அரும்புவாய் அவிழ்ந்த கருங்கால் வேங்கைப்*
*பொன்மருள் நறுவீ கன்மிசைத் தாஅம்*
*நன்மலை நாட நயந்தனை அருளாய்*
*இயங்குநர் மடிந்த வயந்திகழ் சிறுநெறிக்*
*கடுமா வழங்குதல் அறிந்து*
*நடுநாள் வருதி நோகோ யானே (நற். 257)*

தோழி தலைமகனது ஏதஞ்சொல்லி வரைவுகடாயது. 230

## கொற்றங் கொற்றனார்

*யாங்குச்செய் வாங்கொல் தோழி பொன்வீ*
*வேங்கை ஓங்கிய தேம்கமழ் சாரல்*
*பெருங்கல் நாடனொடு இரும்புனத்து அல்கிச்*
*செவ்வாய்ப் பைங்கிளி ஓப்பி அவ்வாய்ப்*
*பெருவரை அடுக்கத்து அருவி ஆடிச்*
*சாரல் ஆரம் வண்டுபட நீவிப்*
*பெரிதமர்ந்து இயைந்த கேண்மை சிறுநனி*

*அரிய போலக் காண்பேன் விரிதிரைக்*
*கடல்பெயர்ந் தனைய ஆகிப்*
*புலர்பதங் கொண்டன ஏனற் குரலே* (நற். 259)

தோழி தலைமகளைச் செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது. 231

## சேந்தம்பூதனார்

*அருளிலர் வாழி தோழி மின்னுவசிபு*
*இருள்தூங்கு விசும்பின் அதிரும் ஏறொடு*
*வெஞ்சுடர் கரந்த கமஞ்சூல் வானம்*
*நெடும்பெருங் குன்றத்துக் குறும்பல மறுகித்*
*தாவில் பெரும்பெயல் தலைஇய யாமத்துக்*
*களிறகப் படுத்த பெருஞ்சின மாசுணம்*
*வெளிறில் காழ்மரம் பிணித்து நனிமிளிர்க்கும்*
*சாந்தம் போகிய தேங்கமழ் விடர்முகை*
*எருவை நறும்பூ நீடிய*
*பெருவரைச் சிறுநெறி வருத லானே* (நற். 261)

சிறைப்புறமாகத் தோழி இரவுக்குறி விலக்கி வரைவுகடாயது. 232

## வெறிபாடிய காமக்கண்ணியார்

*சூருடை நனந்தலைச் சுனைநீர் மல்க*
*மால்பெயல் தலைஇய மன்னெடுங் குன்றத்துக்*
*கருங்கால் குறிஞ்சி மதனில வான்பூ*
*ஓவுக்கண் டன்ன இல்வரை இழைத்த*
*நாறுகொள் பிரசம் ஊறுநா டற்குக்*
*காதல் செய்தும் காதலம் அன்மை*
*யாதெனிற் கொல்லோ தோழி வினவுகம்*
*பெய்ம்மணல் முற்றங் கடிகொண்டு*
*மெய்ம்மலி கழங்கின் வேலற் றந்தே* (நற். 268)

தலைமகட்குச் சொல்லியது. 233

## மதுரை இளம்பாலாசிரியன் சேந்தன் கூத்தனார்

*இஃதெவன் கொல்லோ தோழி மெய்பரந்து*
*எவ்வங் கூர்ந்த ஏமுறு துயரம்*
*வெம்மையின் தான்வருத் துறீஇ நம்வயின்*
*அறியாது அயர்ந்த அன்னைக்கு வெறியென*
*வேலன் உரைக்கும் என்ப ஆகலின்*
*வண்ணம் மிகுந்த அண்ணல் யானை*
*நீர்கொள் நெடுஞ்சுனை யமைந்துவார்ந் துறைந்தென்*
*கண்போல் நீலந் தண்கமழ் சிறக்குங்*
*குன்ற நாடனை உள்ளுதொறும்*
*நெஞ்சுநடுக் குறூஉமவன் பண்புதரு படரே (நற். 273)*

தோழி தலைமகனது வரவுணர்ந்து தலைமகட்குரைப்பாளாய் நின் வேறுபாடு தாய்க்குப் புலனாக அவள் வேலனைக் கூவி வெறி அயருமென்பதுபடச் சொல்லியது. 234

## தொல்கபிலர்

*கோடு துவையாக் கோள்வாய் நாயொடு*
*காடுதேர் நசைஇய வயமான் வேட்டு*
*வயவர் மகளிர் என்றி ஆயின்*
*குறவர் மகளிரேம் குன்றுகெழு கொடிச்சியேம்*
*சேணோன் இழைத்த நெடுங்கால் கழுதின்*
*கான மஞ்ஞை கட்சி சேக்கும்*
*கல்லகத் ததுஎம் ஊரே செல்லாது*
*சேந்தனை சென்மதி நீயே பெருமலை*
*வாங்கமை பழுனிய நறவுண்டு*
*வேங்கை முன்றிற் குரவையுங் கண்டே (நற். 276)*

பகற்குறிவந்து பெயருந் தலைமகனை உலகியல் சொல்லியது. 235

## நல்லூர் சிறுமேதாவியார்

*தோடமை செறிப்பின் இலங்குவளை ஞெகிழக்*
*கோடேந்து அல்குல் அவ்வரி வாட*

*நன்னுதல் சாய படர்மலி அருநோய்*
*காதலன் தந்தமை அறியா துணர்த்த*
*வணங்குறு கழங்கின் முதுவாய் வேலன்*
*கிளவியின் தணியின் நன்றுமன் சாரல்*
*அகில்சுடு கானவன் உவல்சுடு கமழ்புகை*
*ஆடுமழை மங்குலின் மறைக்கும்*
*நாடுகெழு வெற்பனொடு அமைந்தநம் தொடர்பே (நற். 282)*

சிறைப்புறமாகத் தோழி செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது. 236

## மதுரைக் கொல்லன் வெண்ணாகனார்

*அரவிரை தேரும் ஆரிருள் நடுநாள்*
*இரவின் வருதல் அன்றியும் உரவுக்கணை*
*வன்கைக் கானவன் வெஞ்சிலை வணக்கி*
*உளமிசைத் தவிர்த்த முளவுமான் ஏற்றையொடு*
*மனைவாய் ஞமலி ஒருங்குபுடை ஆட*
*வேட்டுவலம் படுத்த உவகையன் காட்ட*
*நடுகாற் குரம்பைத்தன் குடிவயிற் பெயரும்*
*குன்ற நாடன் கேண்மை நமக்கே*
*நன்றால் வாழி தோழி என்றும்*
*அயலோர் அம்பலின் அகலான்*
*பகலின் வரூஉம் எறிபுனத் தானே (நற். 285)*

தோழி சிறைப்புறமாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தலைமகன் கேட்ப அம்பலும் அலருமாயிற்றென்று சொல்லியது. 237

## குளம்பனார்

*அருவி யார்க்கும் அணங்குடை நெடுங்கோட்டு*
*ஞாங்கர் இளவெயில் உணீஇய ஓங்குசினைப்*
*பீலி மஞ்ஞை பெடையோ டாடுங்*
*குன்ற நாடன் பிரிவிற் சென்று*
*நன்னுதல் பரந்த பசலைகண்டு அன்னை*
*செம்முது பெண்டிரொடு நெல்முன் நிறீஇக்*

*கட்டிற் கேட்கும் ஆயின் வெற்பில்*
*ஏனற் செந்தினைப் பாலார் கொழுங்குரல்*
*சிறுகிளி கடிகஞ் சென்றும்இந்*
*நெடுவேள் அணங்கிற் றென்னுங்கொல் அதுவே (நற். 288)*

தோழி சிறைப்புறமாகத் தலைமகட்குரைப்பாளாய் வெறியறிவுறீஇ வரைவு கடாயது. 238

## நல்வேட்டனார்

*நெடுங்கண் ஆரத்து அலங்குசினை வலந்த*
*பசுங்கேழ் இலைய நறுங்கொடித் தமாலந்*
*தீந்தேன் கொள்பவர் வாங்குபு பரியும்*
*யாணர் வைப்பிற் கானம் என்னாய்*
*களிறுபொரக் கரைந்த கயவாய்க் குண்டுகரை*
*ஒளிறுவான் பளிங்கொடு செம்பொன் மின்னுங்*
*கருங்கற் கான்யாற்று அருஞ்சுழி வழங்குங்*
*கராஅம் பேணாய் இரவரின்*
*வாழேன் ஐய மைகூர் பனியே (நற். 292)*

இரவுக்குறி மறுத்தது. 239

## புதுக்கயத்து வண்ணக்கன் கம்பூர்கிழான்

*தீயும் வளியும் விசும்புபயந் தாங்கு*
*நோயும் இன்பமும் ஆகின்று மாதோ*
*மாயம் அன்று தோழி வேய்பயின்று*
*எருவை நீடிய பெருவரை அகந்தொறுந்*
*தொன்றுறை துப்பொடு முரண்மிகச் சினைஇக்*
*கொன்ற யானைக் கோடுகண்டு அன்ன*
*செம்புடைக் கொழுமுகை அவிழ்ந்த காந்தள்*
*சிலம்புடன் கமழுஞ் சாரல்*
*இலங்குமலை நாடன் மலர்ந்த மார்பே (நற். 294)*

மணமனை உட்புக்க தோழி தலைமகளது கவின்கண்டு சொல்லியது. 240

## மதுரை அளக்கர்ஞாழார் மகனார் மள்ளனார்

*பொன்செய் வள்ளத்துப் பால்கிழக் கிருப்ப*
*தின்னொளி ஏறிய சேவடி ஒதுங்காய்*
*பன்மாண் சேக்கைப் பகைகொள நினைஇ*
*மகிழா நோக்க மகிழ்ந்தனை போன்றனை*
*எவன்கொல் என்று நினைக்கலும் நினைத்திலை*
*நின்னுள் தோன்றுங் குறிப்புநனி பெரிதே*
*சிதர்நனை முனைஇய சிதர்கால் வாரணம்*
*முதிர்கறி யாப்பின் துஞ்சும் நாடன்*
*மெல்ல வந்து நல்லகம் பெற்றமை*
*மையல் உறுகுவள் அன்னை*
*ஐயம் இன்றிக் கடுங்கூ வினளே* (நற். 297)

தோழி சிறைப்புறமாகத் தலைமகட் குரைப்பாளாய்த் தலைமகன் கேட்பச் சொல்லியது.

241

## பாண்டியன் மாறன்வழுதி

*நீண்மலைக் கலித்த பெருங்கோல் குறிஞ்சி*
*நாள்மலர் புரையும் மேனிப் பெருஞ்சுனை*
*மலர்பிணைத்து அன்ன மாயிதழ் மழைக்கண்*
*மயிலோர் அன்ன சாயல் செந்தார்க்*
*கிளியோர் அன்ன கிளவிப் பணைத்தோள்*
*பாவை அன்ன வனப்பினள் இவளெனக்*
*காமர் நெஞ்சமொடு பலபா ராட்டி*
*யாய்மறப்பு அறியா மடந்தை*
*தேமறப்பு அறியாக் கமழ்கூந் தலளே* (நற். 301)

சேட்படுத்துப் பிரிவின்கண் அன்பின் இயற்கையில் தகுவகையதோர் ஆற்றாமையினான் என்று தோழி தன்னுள்ளே சொல்லியது.

242

## உரோடோகத்துக் கந்தரத்தனார்

*தந்தை வித்திய மென்தினை பைபயச்*
*சிறுகிளி கடிதல் பிறக்கியா வணதோ*

*குளிர்படு கையள் கொடிச்சி செல்கென*
*நல்ல இனிய கூறி மெல்லக்*
*கொயல்தொடங் கினரே கானவர் கொடுங்குரல்*
*குலவுப்பொறை இறுத்த கோல்தலை இருவி*
*விழவொழி வியன்களங் கடுப்பத் தெறுவரப்*
*பைதல் ஒருநிலை காண வைகல்*
*யாங்கு வருவது கொல்லோ தீஞ்சொல்*
*செறிதோட்டு எல்வளைக் குறுமகள்*
*சிறுபுனத்து அல்கிய பெரும்புற நிலையே (நற். 306)*

புனமடிவுரைத்துச் செறிப்பறிவுறீஇயது. 243

## தங்கால் பொற்கொல்லன் வெண்ணாகனார்

*கருங்கால் வேங்கை நாளுறு புதுப்பூப்*
*பொன்செய் கம்மியன் கைவினை கடுப்பத்*
*தகைவனப்பு உற்ற கண்ணழி கட்டழித்து*
*ஒலிபல் கூந்தல் அணிபெறப் புனைஇக்*
*காண்டற் காதல் கைம்மிகக் கடீஇயாற்கு*
*யாங்கா குவங்கொல் தோழி காந்தள்*
*கமழ்குலை அவிழ்ந்த நயவருஞ் சாரல்*
*கூதள நறும்பொழில் புலம்ப ஊர்வயின்*
*மீள்குவம் போலத் தோன்றுந் தோடுபுலர்ந்து*
*அருவியின் ஒலித்தல் ஆனா*
*கொய்பதங் கொள்ளுநாங் கூஉந் தினையே (நற். 313)*

தோழி சிறைப்புறமாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்ப் புனம் அழிவுரைத்துச் செறிப்பறிவுறீஇயது. 244

## மதுரைப் பூவண்டனாகன் வேட்டனார்

*நீடிருஞ் சிலம்பில் பிடியொடு புணர்ந்த*
*பூம்பொறி ஒருத்தல் ஏந்துகை கடுப்பத்*
*தோடுதலை வாங்கிய நீடுகுரல் பைந்தினை*

*பவளச் செவ்வாய்ப் பைங்கிளி கவரும்*
*உயர்வரை நாடநீ நயந்தோள் கேண்மை*
*அன்னை அறிகுவள் ஆயின் பனிகலந்து*
*என்னா குவகொல் தானே எந்தை*
*ஓங்குவரைச் சாரல் தீஞ்சுனை ஆடி*
*ஆயமொடு குற்ற குவளை*
*மாயிதழ் மாமலர் புரைஇய கண்ணே* (நற். 317)

தோழி தலைமகனை வரைவுகடாயது. 245

## மதுரைப் பாலாசிரியன் சேந்தன் கொற்றனார்

*ஆங்கனந் தணிகுவது ஆயின் யாங்கும்*
*இதனிற் கொடியது பிறிதொன் றில்லை*
*வாய்கொல் வாழி தோழி வேயுயர்ந்து*
*எறிந்துசெறித் தன்ன பிணங்கரில் விடர்முகை*
*ஊன்தின் பிணவின் உட்குபசி களைஇயர்*
*ஆளியங்கு அரும்புழை ஒற்றி வாள்வரிக்*
*கடுங்கண் வயப்புலி ஒடுங்கும் நாடன்*
*தண்கமழ் வியன்மார்பு உரிதினிற் பெறாது*
*நன்னுதற் பசந்த படர்மலி அருநோய்*
*அணங்கென உணரக் கூறி வேலன்*
*இன்னியங் கறங்கப் பாடிப்*
*பன்மலர் சிதறியர் பரவுறு பலிக்கே* (நற். 322)

தோழி சிறைப்புறமாகச் சொல்லியது. 246

## மதுரை மருதனிளநாகனார்

*கொழுஞ்சுளைப் பலவின் பயங்கெழு கவாஅன்*
*செழுங்கோள் வாங்கிய மாச்சினைக் கொக்கின்*
*மீன்குடை நாற்றந் தாங்கல்செல் லாது*
*துய்த்தலை மந்தி தும்மும் நாட*
*நினக்கும் உரைத்தல் நாணுவல் இவட்கே*
*நுண்கொடிப் பீரத்தின் ஊழுறு பூவெனப்*

*பசலை ஊரும் மன்னோ பன்னாள்*
*அறிஅமர் வனப்பினெங் கானம் நண்ண*
*வண்டெனும் உணரா வாகி*
*மலரென மரீஇவரூஉம் இவள் கண்ணே* (நற். 326)

தோழி தலைமகனை வரைவுகடாயது. 247

## தொல்கபிலர்

*கிழங்குகீழ் வீழ்ந்து தேன்மேல் தூங்கிச்*
*சிற்சில வித்திப் பற்பல விளைந்து*
*தினைக்கிளி கடியும் பெருங்கல் நாடன்*
*பிறப்போர் அன்மை அறிந்தனம் அதனால்*
*அதுவினி வாழி தோழி ஒருநாள்*
*சிறுபல் கருவித் தாகி வலனேர்பு*
*பெரும்பெயல் தலைக புனனே இனியே*
*எண்பிழி நெய்யொடு வெண்கிழி வேண்டாது*
*சாந்துதலைக் கொண்ட ஓங்குபெருஞ் சாரல்*
*விலங்குமலை அடுக்கத் தானும்*
*கலம்பெறு விறலி ஆடுமிவ் வூரே* (நற். 328)

தோழி வரைவிடை யாற்றாளாகிய தலைமகளை வற்புறுத்தது. 248

## ஐயூர் முடவனார்

*கருவிரல் மந்திச் செம்முகப் பெருங்கிளை*
*பெருவரை அடுக்கத்து அருவி ஆடி*
*ஓங்குகழை ஊசல் தூங்கி வேங்கை*
*வெற்பணி நறுவீ கற்சுனை உறைப்பக்*
*கலையொடு திளைக்கும் வரையக நாடன்*
*மாரி நின்ற ஆரிருள் நடுநாள்*
*அருவி அடுக்கத்து ஒருவேல் ஏந்தி*
*மின்னுவசி விளக்கத்து வருமெனின்*
*என்னோ தோழிநம் இன்னுயிர் நிலையே* (நற். 334)

தோழி இரவுக்குறி முகம் புக்கது. 249

## கபிலர்

*பிணர்ச்சுவல் பன்றி தோன்முலைப் பிணவொடு*
*கணைக்கால் ஏனல் கைம்மிகக் கவர்தலின்*
*கல்லதர் அரும்புழை அல்கிக் கானவன்*
*வில்லின் தந்த வெண்கோட்டு ஏற்றைப்*
*புனையிருங் கதுப்பின் மனையோள் கெண்டிக்*
*குடிமுறை பகுக்கும் நெடுமலை நாட*
*உரவுச்சின வேழம் உறுபுலி பார்க்கும்*
*இரவின் அஞ்சாய் அஞ்சுவல் அரவின்*
*ஈரளைப் புற்றங் காரென முற்றி*
*இரைதேர் எண்கினம் அகழும்*
*வரைசேர் சிறுநெறி வாரா தீமோ* (நற். 336)

ஆறு பார்த்துற்றுச் சொல்லியது. 250

## சீத்தலைச்சாத்தனார்

*தோலாக் காதலர் துறந்துநம் அருளார்*
*அலர்வது அன்றுகொல் இதுவென்று நன்றும்*
*புலரா நெஞ்சமொடு புதுவ கூறி*
*இருவேம் நீந்தும் பருவரல் வெள்ளம்*
*அறிந்தனள் போலும் அன்னை சிறந்த*
*சீர்கெழு வியன்நகர் வருவனள் முயங்கி*
*நீரலைக் கலைஇய ஈரிதழ்த் தொடையல்*
*ஒண்ணுதல் பெதும்பை நல்நலம் பெறீஇ*
*மின்நேர் ஓதி இவளொடும் நாளைப்*
*பன்மலர் கஞலிய வெறிகமழ் வேலித்*
*தெண்ணீர் மணிச்சுனை ஆடின்*
*என்னோ மகளிர்தம் பண்பென் றோளே* (நற். 339)

சிறைப்புறமாகத் தலைவன் கேட்பச் சொல்லியது. 251

## மதுரை அறுவைவாணிகன் இளவேட்டனார்

அணிவரை மருங்கின் ஐதுவளர்ந் திட்ட
மணியேர் தோட்ட மையார் ஏனல்
இரும்பிடித் தடக்கையின் தடைஇய பெரும்புனம்
காவல் கண்ணினம் ஆயின் ஆயிழை
நம்நிலை இடைதெரிந்து உணரான் தன்மலை
ஆரம் நீவிய அணிகிளர் ஆகம்
சாரல் நீளிடைச் சாலவண் டார்ப்பச்
செல்வன் செல்லுங்கொல் தானே உணர்வரைப்
பெருங்கல் விடரகஞ் சிலம்ப இரும்புலி
களிறுதொலைத்து உரறுங் கடிஇடி மழைசெத்துச்
செந்தினை உணங்கல் தொகுக்கும்
இன்கல் யாணர்த்தம் உறைவின் ஊர்க்கே (நற். 344)

252

தோழி சிறைப்புறமாகத் தலைமகன் கேட்பச் சொல்லியது.

## மதுரைக் கண்ணத்தனார்

இளமை தீர்ந்தனள் இவளென வளமனை
அருங்கடிப் படுத்தனை யாயினுஞ் சிறந்திவள்
பசந்தனள் என்பது உணராய் பல்நாள்
எவ்வ நெஞ்சமொடு தெய்வம் பேணி
வருந்தல் வாழிவேண்டு அன்னை கருந்தாள்
வேங்கைஅம் கவட்டிடைச் சாந்தில் செய்த
களிற்றுத்துப்பு அஞ்சாப் புலியதள் இதணத்துச்
சிறுதினை வியன்புனங் காப்பின்
பெறுகுவள் மன்னோஎன் தோழிதன் நலனே (நற். 351)

253

தோழி அருகடுத்தது.

## கபிலர்

ஆளில் பெண்டிர் தாளின் செய்த
நுணங்குநுண் பனுவல் போலக் கணங்கொள

*ஆடுமழை தவழுங் கோடுயர் நெடுவரை*
*முடமுதிர் பலவின் குடமருள் பெரும்பழங்*
*கல்லுழு குறவர் காதல் மடமகள்*
*கருவிரன் மந்திக்கு வருவிருந்து அயரும்*
*வான்தோய் வெற்ப சான்றோய் அல்லைஎம்*
*காமங் கனிவது ஆயினும் யாமத்து*
*இரும்புலி தொலைத்த பெருங்கை யானை*
*வெஞ்சின உருமின் உரறும்*
*அஞ்சுவரு சிறுநெறி வருத லானே* (நற். 353)

தோழி ஆற்றதருமையஞ்சித் தான் ஆற்றாளாய்ச் சொல்லியது. 254

• • • • •

*புதல்வன் ஈன்ற பூங்கண் மடந்தை*
*முலைவாய் உறுக்குங் கைபோல் காந்தள்*
*குலைவாய் தோயுங் கொழுமடல் வாழை*
*அம்மடற் பட்ட அருவித் தீநீர்*
*செம்முக மந்தி ஆரும் நாட*
*முந்தை இருந்து நட்டோர் கொடுப்பின்*
*நஞ்சும் உண்பர் நனிநா கரிகர்*
*அஞ்சில் ஓதியென் தோழி தோள்துயில்*
*நெஞ்சின் இன்புறாய் ஆயினும் அதுநீ*
*என்கண் ஓடி அளிமதி*
*நின்கண் அல்லது பிறிதியாதும் இலளே* (நற். 355)

தோழி அருகடுத்தது. 255

## கபிலர்

*சிலம்பின் மேய்ந்த சிறுகோட்டுச் சேதா*
*அலங்குகுலைக் காந்தள் தீண்டித் தாதுகக்*
*கன்றுதாய் மருளுங் குன்ற நாடன்*
*உடுக்குந் தழைதந் தனனே அவையாம்*
*உடுப்பின் யாயஞ் சுதுமே கொடுப்பின்*

*கேளுடைக் கேடஞ் சுதுமே ஆயிடை*
*வாடல கொல்லோ தாமே அவன்மலைப்*
*போருடை வருடையும் பாயாச்*
*சூருடை அடுக்கத்த கொயற்கருந் தழையே* (நற். 359)

தோழி தழையேற்றுக்கொண்டு நின்று தலைமகள் குறிப்பின் ஓடியது. 256

## கிள்ளிமங்கலங்கிழார் மகனார் சோகோவனார்

*அருங்கடி அன்னை காவல் நீவிப்*
*பெருங்கடை இறந்து மன்றம் போகிப்*
*பகலே பலருங் காண வாய்விட்டு*
*அகல்வயல் படப்பை அவனூர் வினவிச்*
*சென்மோ வாழி தோழி பல்நாள்*
*கருவி வானம் பெய்யாது ஆயினும்*
*அருவி ஆர்க்கும் அயந்திகழ் சிலம்பின்*
*வான்தோய் மாமலை நாடனைச்*
*சான்றோய் அல்லை என்றனம் வரற்கே* (நற். 365)

தோழி தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்கு உரைப்பாளாய் இயற்பழித்து இன்னது செய்து மென்பாளாய்ச் சொல்லியது. 257

## கபிலர்

*பெரும்புனங் கவருஞ் சிறுகிளி ஓப்பிக்*
*கருங்கால் வேங்கை ஊசல் தூங்கிக்*
*கோடேந்து அல்குல் தழையணிந்து உம்மோடு*
*ஆடினம் வருதலின் இனியதும் உண்டோ*
*நெறிபடு கூழைக் கார்முதிர்பு இருந்த*
*வெறிகமழ் கொண்ட நாற்றமுஞ் சிறிய*
*பசலை பாய்தரு நுதலும் நோக்கி*
*வறிதுகு நெஞ்சினன் பிறிதொன்று சுட்டி*
*வெய்ய உயிர்த்தனள் யாயே*
*ஐய அஞ்சினம் அளியம் யாமே* (நற். 368)

தோழி தலைமகற்குச் செறிப்பறிவுறீஇயது. 258

## கபிலர்

*முன்றில் பலவின் படுசுளை மரீஇப்*
*புன்தலை மந்தி தூர்ப்பத் தந்தை*
*மைபடு மால்வரை பாடினள் கொடிச்சி*
*ஐவன வெண்நெல் குறூஉம் நாடனொடு*
*சூருடைச் சிலம்பின் அருவி ஆடிக்*
*காரரும்பு அவிழ்ந்த கணிவாய் வேங்கைப்*
*பாவமை இதணம் ஏறிப் பாசினம்*
*வணர்குரல் சிறுதினை கடியப்*
*புணர்வது கொல்லோ நாளையும் நமக்கே* (நற். 373)

செறிப்பறிவுறீஇயது. 259

## கபிலர்

*முறஞ்செவி யானைத் தடக்கையில் தடைஇ*
*இறைஞ்சிய குரல பைந்தாள் செந்தினை*
*வரையோன் வண்மை போலப் பலவுடன்*
*கிளையோடு உண்ணும் வளைவாய்ப் பாசினம்*
*குல்லை குளவி கூதளங் குவளை*
*இல்லமொடு மிடைந்த ஈர்ந்தண் கண்ணியன்*
*சுற்றமை வில்லன் செயலைத் தோன்றும்*
*நற்றார் மார்பன் காண்குறின் சிறிய*
*நன்கவற்கு அரிய உரைமின் பிற்றை*
*அணங்கும் அணங்கும் போலும் அணங்கி*
*வறும்புனல் காவல் விடாமை*
*அறிந்தனிர் அல்லிரோ அறனில் யாயே* (நற். 376)

தோழி கிளிமேல் வைத்துச் சிறைப்புறமாகச் செறிப்பறிவுறீஇயது. 260

## குடவாயிற் கீரத்தனார்

*புன்தலை மந்திக் கல்லா வன்பறழ்*
*குன்றுழை நண்ணிய முன்றில் போகாது*

*எரியகைந் தன்ன வீததை இணர*
*வேங்கையம் படுசினைப் பொருந்திக் கைய*
*தேம்பெய் தீம்பால் வெளவலின் கொடிச்சி*
*எழுதெழில் சிதைய அழுத கண்ணே*
*தேர்வண் சோழர் குடந்தை வாயில்*
*மாரியங் கிடங்கின் ஈரிய மலர்ந்த*
*பெயலுறு நீலம் போன்றன விரலே*
*பாஅய் அவ்வயிறு அலைத்தலின் ஆனாது*
*ஆடுமழை தவழுங் கோடுயர் பொதியின்*
*ஓங்கிருஞ் சிலம்பில் பூத்த*
*காந்தளங் கொழுமுகை போன்றன சிவந்தே (நற். 379)*

தோழி தலைமகற்குத் தலைமகள் மடமை கூறியது. 261

## கோளியூர்கிழார் மகனார் செழியனார்

*கல்வயல் கலித்த கருங்கால் வேங்கை*
*அலங்கலம் தொடலை அன்ன குருளை*
*வயப்புனிற்று இரும்பிணப் பசித்தென வயப்புலி*
*புகர்முகஞ் சிதையத் தாக்கிக் களிறட்டு*
*உருமிசை உரறும் உட்குவரு நடுநாள்*
*அருளினை போலினும் அருளாய் அன்றே*
*கனையிருள் புதைத்த அஞ்சுவரும் இயவில்*
*பாம்புடன் றிரிக்கும் உருமோடு*
*ஓங்குவரை நாடநீ வருத லானே (நற். 383)*

தோழி ஆறு பார்த்துற்றுச் சொல்லியது. 262

## தங்கால் ஆத்திரேயன் செங்கண்ணனார்

*சிறுகண் பன்றிப் பெருஞ்சின ஒருத்தல்*
*துறுகண் கண்ணிக் கானவர் உழுத*
*குலவுக்குரல் ஏனல் மாந்தி ஞாங்கர்*
*விடரளைப் பள்ளி வேங்கை அஞ்சாது*
*கழைவளர் சாரல் துஞ்சும் நாடன்*

*அணங்குடை அருஞ்சூள் தருகுவன் எனநீ*
*நும்மோர் அன்னோர் துன்னார் இவையெனத்*
*தெரிந்தது வியந்தனென் தோழி பணிந்துநம்*
*கல்கெழு சிறுகுடிப் பொலிய*
*வதுவை என்றவர் வந்த ஞான்றே* (நற். 386)

பரத்தையின் மறுத்தந்த தலைமகற்கு வாயில் நேர்ந்த தோழி, தலைமகளை முகம்புகுவலென முற்பட்டாள் தலைமகள் மாட்டு நின்ற பொறாமை நீங்காமை அறிந்தும் பிறிதொன்றன்மேல் வைத்துப் பாவியேன் இன்று பேதைமை செய்தேன் எம்பெருமாட்டி குறிப்பு உணர்ந்து வழிப்படுவேன் ஆவேன் மன்னோ எனச் சொல்லியது. 263

## காவிரிப்பூம்பட்டினத்துச் செங்கண்ணனார்

*வேங்கை யும்புலி ஈன்றன அருவியும்*
*தேம்படு நெடுவரை மணியின் மானும்*
*அன்னையும் அமர்ந்துநோக் கினளே என்னையும்*
*களிற்றுமுகந் திறந்த கல்லா விழுத்தொடை*
*ஏவல் இளையரொடு மாவழிப் பட்டெனச்*
*சிறுகிளி முரணிய பெருங்குரல் ஏனல்*
*காவல் இனியென் றோளே சேவலொடு*
*சிலம்பில் போகிய சிதர்கால் வாரணம்*
*முதைச்சுவல் கிளைத்த பூழி மிகப்பல*
*நன்பொன் இமைக்கும் நாடனொடு*
*அன்புறு காமம் அமைந்தனம் தொடர்பே* (நற். 389)

பகற்குறி வந்தொழுகா நின்றகாலத்துத் தலைமகன் கேட்பச் சொல்லியது. 264

## கோவூர்கிழார்

*நெடுங்கழை நிவந்த நிழல்படு சிலம்பின்*
*கடுஞ்சூல் வயப்பிடி கன்றீன்று உயங்கப்*
*பாலார் பசும்புனிறு தீரிய களிசிறந்து*
*வாலா வேழம் வணர்குரல் கவர்தலின்*
*கானவன் எறிந்த கடுஞ்செலல் ஞெகிழி*
*வேய்பயில் அடுக்கஞ் சுடர மின்னி*

*நிலைகிளர் மின்னில் தோன்றும் நாடன்*
*இரவின் வரூஉம் இடும்பை நாம்உய*
*வரைய வந்த வாய்மைக்கு ஏற்ப*
*நமர்கொடை நேர்ந்தனர் ஆயின் அவருடன்*
*நேர்வர்கொல் வாழி தோழிநம் காதலர்*
*புதுவர் ஆகிய வரவுநின்*
*வதுவைநாண் ஒடுக்கமுங் காணுங் காலே* (நற். 393)

வரைவு மலிந்தது. 265

• • • • •

*பெய்துபோகு எழிலி வைகுமலை சேரத்*
*தேன்தூங்கு உயர்வரை அருவி ஆர்ப்ப*
*வேங்கை தந்த வெற்பணி நன்னாள்*
*பொன்னின் அன்ன பூஞ்சினை துழைஇக்*
*கமழ்தாது ஆடிய கவின்பெறு தோகை*
*பாசறை மீமிசைக் கணங்கொள்பு ஞாயிற்று*
*உறுகதிர் இளவெயில் உண்ணும் நாடன்*
*நின்மார்பு அணங்கிய செல்லல் அருநோய்*
*யார்க்குநொந் துரைக்கோ யானே பன்னாள்*
*காமர் நனிசொல் சொல்லி*
*ஏமமென் றருளாய் நீமயங் கினையே* (நற். 396)

தோழி தலைமகனை வரைவுகடாயது. 266

## தொல்கபிலர்

*அருவி ஆர்க்கும் பெருவரை அடுக்கத்துக்*
*குருதி ஒப்பின் கமழ்பூங் காந்தள்*
*வரியணி சிறகின் வண்டுண மலரும்*
*வாழையஞ் சிலம்பின் கேழல் கெண்டிய*
*நிலவரை நிவந்த பலவுறு திருமணி*
*ஒளிதிகழ் விளக்கத்து ஈன்ற மடப்பிடி*
*களிறுபுறங் காப்பக் கன்றொடு வதியும்*
*மாமலை நாடன் நயந்தனன் வரூஉம்*

*பெருமை உடையள் என்பது*
*தருமோ தோழிநின் திருநுதற் கவினே* (நற். 399)

நெடுங்காலம் வந்தொழுக ஆற்றாமை வேறுபடநின்ற தலைமகளைத் தோழி எம்பெருமான் இதற்காய நல்ல புரியுமென்று தலைமகன் சிறைப் புறத்தானாகச் சொல்லியது. 267

## கபிலர்

*கயமலர் உண்கண்ணாய் காணாய் ஒருவன்*
*வயமான் அடித்தேர்வான் போலத் தொடைமாண்ட*
*கண்ணியன் வில்லன் வருமென்னை நோக்குபு*
*முன்னத்திற் காட்டுத லல்லது தானுற்ற*
*நோயுரைக் கல்லான் பெயருமற் பன்னாளும்*
*பாயல் பெறேஎன் படர்கூர்ந் தவன்வயிற்*
*சேயேன்மன் யானுந் துயருழப்பே னாயிடைக்*
*கண்ணின்று கூறுத லாற்றான் அவனாயின்*
*பெண்ணன் றுரைத்தல் நமக்காயின் இன்னதூஉங்*
*காணான் கழிதலு முண்டென் றொருநாளென்*
*தோணெகிழ் புற்ற துயரால் துணிதந்தோர்*
*நாணின்மை செய்தேன் நறுநுதால் ஏனல்*
*இனக்கிளி யாங்கடிந் தோம்பும் புனத்தயல்*
*ஊசலூர்ந் தாட ஒருஞான்று வந்தானை*
*ஐய சிறிதென்னை யூக்கி யெனக்கூறத்*
*தையால் நன்றென் றவனூக்கக் கைநெகிழ்பு*
*பொய்யாக வீழ்ந்தேன் அவன்மார்பின் வாயாச்செத்*
*தொய்யென ஆங்கே எடுத்தனன் கொண்டான்மேல்*
*மெய்யறியா தேன்போற் கிடந்தேன்மன் ஆயிடை*
*மெய்யறிந் தேற்றெழுவே னாயின்மற் றொய்யென*
*ஒண்குழாய் செல்கெனக் கூறி விடும்பண்பின்*
*அங்கண் உடையன் அவன்* (கலி. 37)

'நாற்றமும் தோற்றமும் ஒழுக்கமும் உண்டியும், செய்வினை மறைப்பினும் செலவினும் பயில்வினும், புணர்ச்சி எதிர்பாடு உள்ளுறுத்து வரூஉம், உணர்ச்சி ஏழினும் உணர்ந்த பின்றை' தன்னை அவள் மறையாமை காரணமாக, 'மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது, பல்வேறு கவர்பொருள் நாட்டத்தால்' தலைமகட்குத் தோழி கூறியது. 268

இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை யந்தணன்
உமையமர்ந் துயர்மலை இருந்தன னாக
ஐயிரு தலையின் அரக்கர் கோமான்
தொடிப்பொலி தடக்கையிற் கீழ்புகுத் தம்மலை
எடுக்கல் செல்லா துழப்பவன் போல
உறுபுலி யுருவேய்ப்பப் பூத்த வேங்கையைக்
கறுவுகொண் டதன்முதற் குத்திய மதயானை
நீடிரு விடரகஞ் சிலம்பக் கூய்த்தன்
கோடுபுய்க் கல்லா துழக்கு நாடகேள்
ஆரிடை யென்னாய்நீ அரவஞ்சாய் வந்தக்கால்
நீரற்ற புலமேபோற் புல்லென்றாள் வைகறை
கார்பெற்ற புலமேபோற் கவின்பெறும் அக்கவின்
தீராமற் காப்பதோர் திறனுண்டேல் உரைத்தைக்காண்;
இருளிடை யென்னாய்நீ இரவஞ்சாய் வந்தக்கால்
பொருளில்லான் இளமைபோற் புல்லென்றாள் வைகறை
அருள்வல்லான் ஆக்கம்போல் அணிபெறும் அவ்வணி
தெருளாமற் காப்பதோர் திறனுண்டேல் உரைத்தைக்காண்;
மறந்திருந்தா ரென்னாய்நீ மலையிடை வந்தக்கால்
அறஞ்சாரான் மூப்பேபோல் அழிதக்காள் வைகறை
திறஞ்சேர்ந்தான் ஆக்கம்போல் திருத்தகும் அத்திருப்
புறங்கூற்றுத் தீர்ப்பதோர் பொருளுண்டேல் உரைத்தைக்காண்;
எனவாங்கு,
நின்னுறு விழுமங் கூறக் கேட்டு
வருமே தோழி நன்மலை நாடன்
வேங்கை விரிவிட நோக்கி
வீங்கிறைப் பணைத்தோள் வரைந்தனன் கொளற்கே (கலி. 38)

இரவுக்குறி வந்துநீங்கும் தலைவனை எதிர்ப்பட்டு, தோழி தலைவியது நிலைமை கூறி அவனை வரைவுகடாவ, அவன் வரைய வருகின்றமை தோழி தலைவிக்கு வரைவு மலிந்து கூறியது.

269

காமர் கடும்புனல் கலந்தெம்மோ டாடுவாள்
தாமரைக்கண் புதைத்தஞ்சித் தளர்ந்ததனோ டொழுகலான்
நீணாக நறுந்தண்டார் தயங்கப்பாய்ந் தருளினாற்

பூணாக முறத்தழீஇப் போதந்தான் அகனகலம்
வருமுலை புணர்ந்தன என்பதனால் என்தோழி
அருமழை தரல்வேண்டில் தருகிற்கும் பெருமையளே;

அவனுந்தான், ஏனல்இதணத் தகிற்புகை யுண்டியங்கும்
வானூர் மதியம் வரைசேரின் அவ்வரைத்
தேனின் இறாலென ஏணி இழைத்திருக்குங்
கானகல் நாடன் மகன்;

சிறுகுடி யீரே சிறுகுடி யீரே
வள்ளிகீழ் வீழா வரைமிசைத் தேன்தொடா
கொல்லை குரல்வாங்கி ஈனா மலைவாழ்நர்
அல்ல புரிந்தொழுக லான்;

காந்தள் கடிகமழுங் கண்வாங் கிருஞ்சிலம்பின்
வாங்கமை மென்றோட் குறவர் மடமகளிர்
தாம்பிழையார் கேள்வர்த் தொழுதெழலாற் றம்மையருந்
தாம்பிழையார் தாந்தொடுத்த கோல்;

எனவாங்கு,
அறத்தொடு நின்றேனைக் கண்டு திறப்பட
என்னையர்க் குய்த்துரைத்தாள் யாய்;

அவருந் தெரிகணை நோக்கிச் சிலைநோக்கிக் கண்சேந்
தொருபக லெல்லாம் உருத்தெழுந் தாறி
இருவர்கட் குற்றமும் இல்லையால் என்று
தெருமந்து சாய்த்தார் தலை;

தெரியிழாய் நீயுநின் கேளும் புணர
வரையுறை தெய்வம் உவப்ப உவந்து
குரவை தழீஇயாம் ஆடக் குரவையுட்
கொண்டு நிலைபாடிக் காண்;
நல்லாய்,
நன்னாள் தலைவரும் எல்லை நமர்மலைத்
தந்நாண்தாம் தாங்குவார் என்னோற் றனர்கொல்;

புனவேங்கைத் தாதுறைக்கும் பொன்னறை முன்றில்
நனவிற் புணர்ச்சி நடக்குமா மன்றோ

*நனவிற் புணர்ச்சி நடக்கலும் ஆங்கே*
*கனவிற் புணர்ச்சி கடிதுமா மன்றோ;*

*விண்டோய்கல் நாடனும் நீயும் வதுவையுட்*
*பண்டறியா தீர்போற் படர்கிற்பீர் மற்கொலோ*
*பண்டறியா தீர்போற் படர்ந்தீர் பழங்கேண்மை*
*கண்டறியா தேன்போற் கரக்கிற்பென் மற்கொலோ;*

*மைதவழ் வெற்பன் மணவணி காணாமற்*
*கையாற் புதைபெறூஉங் கண்களுங் கண்களோ;*

*என்னைமன் நின்கண்ணாற் காண்பென்மன் யான்*
*நெய்த லிதழுண்கண், நின்கண்ணா கென்கண்மன்;*

*எனவாங்கு,*
*நெறியறி செறிகுறி புரிதிரி பறியா அறிவனை முந்துறீஇத்*
*தகைமிகு தொகைவகை யறியுஞ் சான்றவ ரினமாக*
*வேய்புரை மென்றோட் பசலையும் அம்பலும்*
*மாயப் புணர்ச்சியு மெல்லா முடனீங்கச்*
*சேயுயர் வெற்பனும் வந்தனன்*
*பூவெழி லுண்கணும் பொலிகமா இனியே* (கலி. 39)

'முன்னிலை அறனெனப் படுதல் என்றிருவகை, புரைதீர் கிளவி தாயிடைப் புகுப்பினும்' என்னும் விதிபற்றி தமர் வரைவு மறுத்துழி தோழி தாயர்க்கு அறத்தொடு நிற்ப, அவள் நற்றாய்க்கு அறத்தொடு நிற்ப, அவள் தன் ஐயர் முதலியோர்க்கு அறத்தொடு நிற்ப, அவரும் ஒருவாற்றான் உடன்பட்டமை தோழி தலைவிக்குக் கூறி, தானும் அவளும் வரைவு கடிதின் முடிதற்பொருட்டு, வரையுறை தெய்வத்திற்குக் குரவையாட அவன் வரைய வருகின்றமை தோழி தலைவிக்கு உரைத்தது. 270

*அகவினம் பாடுவாந் தோழி அமர்க்கண்*
*நகைமொழி நல்லவர் நாணு நிலைபோல்*
*தகைகொண்ட ஏனலுள் தாழ்குரல் உரீஇ*
*முகைவளர் சாந்துரல் முத்தார் மருப்பின்*
*வகைசால் உலக்கை வயின்வயின் ஓச்சிப்*
*பகையில்நோய் செய்தான் பயமலை யேத்தி*
*அகவினம் பாடுவாம் நாம்;*

ஆய்நுதல் அணிகூந்தல் அம்பணைத் தடமென்றோள்
தேனாறு கதுப்பினாய் யானுமொன் றேத்துகு
வேய்நரல் விடரகம் நீயொன்று பாடித்தை;

கொடிச்சியர் கூப்பி வரைதொழு கைபோல்
எடுத்த நறவின் குலையலங் காந்தள்
தொடுத்ததேன் சோரத் தயங்குந்தன் உற்றார்
இடுக்கண் தவிர்ப்பான் மலை;

கல்லாக் கடுவன் கணமலி சுற்றத்து
மெல்விரல் மந்தி குறைகூறுஞ் செம்மற்றே
தொல்லெழில் தோய்ந்தார் தொலையின் அவரினும்
அல்லற்படுவான் மலை;

புரிவிரி புதைதுதை பூத்ததைந்த தாழ்சினைத்
தளிரன்ன எழில்மேனி தகைவாட நோய்செய்தான்
அருவரை அடுக்கல்நாம் அழித்தொன்று பாடுவாம்;

விண்டோய் வரைப்பந் தெறிந்த வயாவிடத்
தண்டா ழருவி அரமகளி ராடுபவே
பெண்டிர் நலம்வெளவித் தண்சாரல் தாதுண்ணும்
வண்டிற் றுறப்பான் மலை;

ஒடுங்கா எழில்வேழம் வீழ்பிடிக் குற்ற
கடுஞ்சூல் வயாவிற் கமர்ந்து நெடுஞ்சினைத்
தீங்கட் கரும்பின் கழைவாங்கும் உற்றாரின்
நீங்கல மென்பான் மலை;

எனநாம்,
தன்மலை பாட நயவந்து கேட்டருளி
மெய்ம்மலி யுவகையன் புகுதந்தான் புணர்ந்தாரா
மென்முலை யாகங் கவின்பெறச்
செம்மலை யாகிய மலைகிழ வோனே (கலி. 40)

தோழியும் தலைமகளும் தலைமகனது மலையை வாழ்த்திப்பாடுகின்ற வள்ளைப் பாட்டில், தோழி இயற்படமொழிய, தலைமகள் இயற்பழித்தமை தலைமகன் சிறைப் புறமாகக்கேட்டு, வரையவருகின்றமை தோழி தலைமகட்கு உரைத்தது. 271

பாடுகம் வாவாழி தோழி வயக்களிற்றுக்
கோடுலக்கை யாகநற் சேம்பின் இலைசுளகா
ஆடுகழை நெல்லை அரையுரலுட் பெய்திருவாம்
பாடுகம் வாவாழி தோழிநற் றோழிபாடுற்று;

இடியுமிழ் பிரங்கிய விரவுபெயல் நடுநாட்
கொடிவிடு பிருளிய மின்னுச்செய் விளக்கத்துப்
பிடியொடு மேயுஞ் செய்புன் யானை
அடியொதுங் கியக்கங் கேட்ட கானவன்
நெடுவரை ஆசினிப் பணவை யேறிக்
கடுவிசைக் கவணையிற் கல்கை விடுதலின்
இறுவரை வேங்கையின் ஒள்வீ சிதறி
ஆசினி மென்பழம் அளிந்தவை உதிராத்
தேன்செய் இறாஅல் துளைபடப் போகி
நறுவடி மாவின் பைந்துணர் உழக்கிக்
குலையுடை வாழைக் கொடுமடல் கிழியாப்
பலவின் பழத்துள் தங்கும் மலைகெழு வெற்பனைப்
பாடுகம் வாவாழி தோழிநற் றோழிபாடுற்று;

இலங்கு மருவித் திலங்கு மருவித்தே
வானி னிலங்கு மருவித்தே தானுற்ற
சூள்பேணான் பொய்த்தான் மலை;

பொய்த்தற் குரியனோ பொய்த்தற் குரியனோ
அஞ்சலோம் பென்றாரைப் பொய்த்தற் குரியனோ
குன்றகல் நன்னாடன் வாய்மையிற் பொய்தோன்றின்
திங்களுள் தீத்தோன்றி யற்று;

இளமழை யாடும் இளமழை யாடும்
இளமழை வைகலும் ஆடுமென் முன்கை
வளைநெகிழ வாராதோன் குன்று;
வாரா தமைவானோ வாரா தமைவானே
வாரா தமைகுவா னல்லன் மலைநாடன்
ஈரத்துள் இன்னவை தோன்றின் நிழற்கயத்துள்
நீருட் குவளைவெந் தற்று;

*மணிபோலத் தோன்றும் மணிபோலத் தோன்றும்*
*மண்ணா மணிபோலத் தோன்றுமென் மேனியைத்*
*துன்னான் துறந்தான் மலை;*

*துறக்குவ னல்லன் துறக்குவ னல்லன்*
*தொடர்வரை வெற்பன் துறக்குவ னல்லன்*
*தொடர்புள் இனையவை தோன்றின் விசும்பிற்*
*சுடருள் இருள்தோன்றி யற்று;*

*எனவாங்கு,*
*நன்றா கின்றால் தோழிநம் வள்ளையுள்*
*ஒன்றிநாம் பாட மறைநின்று கேட்டருளி*
*மென்றோட் கிழவனும் வந்தனன் நுந்தையும்*
*மன்றல் வேங்கைக் கீழிருந்து*
*மணநயந் தனன்நம் மலைகிழ வோற்கே* (கலி. 41)

இருவரும் இவ்வகையால் பாடிய வள்ளைப்பாட்டு, தலைவன் சிறைப்புறமாகக் கேட்டு, வரைவு வேண்டிவிட தந்தையும் வரைவு உடன்பட்டமை தோழி தலைவிக்கு உரைத்தது. 272

*வேங்கை தொலைத்த வெறிபொறி வாரணத்*
*தேந்து மருப்பின் இனவண் டிமிர்பூதுஞ்*
*சாந்தமரத்தின் இயன்ற உலக்கையால்*
*ஐவன வெண்ணெல் அரையுரலுட் பெய்திருவாம்*
*ஐயனை ஏத்துவாம் போல அணிபெற்ற*
*மைபடு சென்னிப் பயமலை நாடனைத்*
*தையலாய் பாடுவாம் நாம்;*

*தகையவர் கைச்செறித்த தாள்போலக் காந்தள்*
*முகையின்மேல் தும்பி யிருக்கும் பகையெனின்*
*கூற்றம் வரினுந் தொலையான்றன் நட்டார்க்குத்*
*தோற்றலை நாணாதோன் குன்று;*

*வெருள்புடன் நோக்கி வியலறை யூகம்*
*இருடேங் கிறுவரை யூர்பிழி பாடும்*
*வருடைமான் குழவிய வளமலை நாடனைத்*
*தெருளத் தெரியிழாய் நீயொன்று பாடித்தை;*

*நுண்பொறி மான்செவி போல வெதிர்முளைக்*
*கண்பொதி பாளை கழன்றுகும் பண்பிற்றே*
*மாறுகொண் டாற்றா ரெனினும் பிறர்குற்றங்*
*கூறுதல் தேற்றாதோன் குன்று;*
*புணர்நிலை வளகின் குளகமர்ந் துண்ட*
*புணர்மருப் பெழில்கொண்ட வரைபுரை செலவின்*
*வயங்கெழில் யானைப் பயமலை நாடனை*
*மணநாறு கதுப்பினாய் மறுத்தொன்று பாடித்தை;*

*கடுங்கண் உழுவை யடிபோல வாழைக்*
*கொடுங்காய் குலைதொறூஉந் தூங்கும் இடும்பையால்*
*இன்மை யுரைத்தார்க் கதுநிறைக்க லாற்றாக்கால்*
*தன்மெய் துறப்பான் மலை;*

*எனவாங்கு,*
*கூடி யவர்திறம் பாடவென் தோழிக்கு*
*வாடிய மென்றோளும் வீங்கின*
*ஆடமை வெற்பன் அளித்தக்காற் போன்றே* (கலி. 43)

வரைவுநீட ஆற்றாளாயின இடத்து தோழி தானும் தலைவியும் வள்ளைப் பாடலுள் முருகனைப் பாடுவார்போல இருவர்க்கும் ஏற்பத் தலைவனைப் பாட, தலைவி ஆற்றினமை தோழி தன்னுள்ளே கூறுவாளாய்த் தலைவன் சிறைப்புறமாகக் கூறியது. 273

*கதிர்விரி கனைசுடர்க் கவின்கொண்ட நனஞ்சாரல்*
*எதிரெதி ரோங்கிய மால்வரை யடுக்கத்*
*ததிரிசை யருவிதன் அஞ்சினை மிசைவீழ*
*முதிரிணர் ஊழ்கொண்ட முழவுத்தாள் எரிவேங்கை*
*வரிநுதல் எழில்வேழம் பூநீர்மேற் சொரிதரப்*
*புரிநெகிழ் தாமரை மலரங்கண் வீறெய்தித்*
*திருநயந் திருந்தன்ன தேங்கமழ் விறல்வெற்ப;*

*தன்னெவ்வங் கூரினும் நீசெய்த அருளின்மை*
*என்னையு மறைத்தாளென் றோழி அதுகேட்டு*
*நின்னையான் பிறர்முன்னர்ப் பழிகூறல் தான்நாணி;*

கூருநோய் சிறப்பவும் நீசெய்த அருளின்மை
சேரியும் மறைத்தாளென் றோழி அதுகேட்டாங்
கோருநீ நிலையலை யெனக்கூறல் தான்நாணி;

நோயட வருந்தியும் நீசெய்த அருளின்மை
ஆயமும் மறைத்தாளென் றோழி அதுகேட்டு
மாயநின் பண்பின்மை பிறர்கூறல் தான்நாணி;

எனவாங்கு,
இனையன தீமை நினைவனள் காத்தாங்
கனையரும் பண்பினான் நின்தீமை காத்தவள்
அருந்துயர் ஆரஞர் தீர்க்கும்
மருந்தாகிச் செல்கம் பெருமநாம் விரைந்தே (**கலி.** 44)

வரையாது வந்தொழுகும் தலைவனைத் தோழி, தலைவியது கற்பு மிகுதியும் இவ்வொழுக்கம் அலராகின்றமையும், அவளது ஆற்றாமையும் கூறி, வரைவு கடாயது.

274

விடியல்வெங் கதிர்காயும் வேயமல் அகலறைக்
கடிசுனைக் கவினிய காந்தளங் குலையினை
அருமணி அவிருத்தி யரவுநீர் உணர்செத்துப்
பெருமலை மிளிர்ப்பன்ன சாற்றுடைக் கனைபெயல்
உருமுக்கண் உறுதலின் உயர்குரல் ஒலியோடி
நறுவீய நனஞ்சாரற் சிலம்பலின் கதுமெனச்
சிறுகுடி துயிலெழூஉஞ் சேணுயர் விறல்வெற்ப;

கால்பொர நுடங்கல கறங்கிசை யருவிநின்
மால்வரை மலிசுனை மலரேய்க்கும் என்பதோ
புல்லாராப் புணர்ச்சியாற் புலம்பிய என்தோழி
பல்லிதழ் மலருண்கண் பசப்பநீ சிதைத்ததை;

புகர்முகக் களிறொடு புலிபொரு துழக்குநின்
அகன்மலை யடுக்கத்த அமையேய்க்கும் என்பதோ
கடையெனக் கலுழுநோய் கைம்மிக என்தோழி
தடையின திரண்டதோள் தகைவாடச் சிதைத்ததை;

சுடருற உறநீண்ட சுரும்பிமிர் அடுக்கத்த
விடர்வரை எரிவேங்கை யிணரேய்க்கும் என்பதோ
யாமத்துந் துயிலலள் அலமரும் என்தோழி
காமரு நல்லெழில் கவின்வாடச் சிதைத்ததை;

எனவாங்கு,
தன்தீமை பலகூறிக் கழறலின் என்தோழி
மறையில்தான் மருவுற மணந்தநட் பருகலான்
பிறைபுரை நுதலவர்ப் பேணிநம்
முறைவரைந் தனர்அவர் உவக்கும் நாளே (கலி. 45)

வரைவிடை ஆற்றாத தலைவிக்கு, தோழி தான் தலைவனை நெருங்கி வரைவுகடாவ அதுகேட்ட தலைவன், வரைவு முயற்சியான் வருதல் இடையிட்டதூஉம் தமர் வரைவு எதிர்ந்ததூஉம் கூறி அவளை ஆற்றுவித்தது.

275

வீயகம் புலம்ப வேட்டம் போகிய
மாஅல் அஞ்சிறை மணிநிறத் தும்பி
வாய்இழ் கடாத்த வான்மருப் பொருத்தலோ
டாய்பொறி யுழுவை தாக்கிய பொழுதின்
வேங்கையஞ் சினையென விறற்புலி முற்றியும்
பூம்பொறி யானைப் புகர்முகங் குறுகியும்
வலிமிகு வெகுளியால் வாளுற்ற மன்னரை
நயனாடி நட்பாக்கும் வினைவர்போல் மறிதரும்
அயமிழி யருவிய அணிமலை நன்னாட,
ஏறிரங் கிருளிடை யிரவினிற் பதம்பெறாஅன்
மாறினென் எனக்கூறி மனங்கொள்ளுந் தானென்ப
கூடுதல் வேட்கையாற் குறிபார்த்துக் குரல்நொச்சிப்
பாடோர்க்குஞ் செவியொடு பைதலேன் யானாக;

அருஞ்செல வாரிடை யருளிவந் தளிபெறாஅன்
வருந்தினென் எனப்பல வாய்விடூஉந் தானென்ப
நிலையுயர் கடவுட்குக் கடம்பூண்டு தன்மாட்டுப்
பலசூழு மனத்தோடு பைதலேன் யானாக;

*கனைபெயல் நடுநாள்யான் கண்மாறக் குறிபெறாஅன்*
*புனையிழாய் என்புழி நினக்குரைக்குந் தானென்ப*
*துளிநசை வேட்கையான் மிசைபாடும் புள்ளின்றன்*
*அளிநசை ஆர்வுற்ற அன்பினேன் யானாக;*

*எனவாங்கு,*
*கலந்தநோய் கைம்மிகக் கண்படா என்வயின்*
*புலந்தாயும் நீயாயிற் பொய்யானே வெல்குவை*
*இலங்குதா ழருவியோ டணிகொண்ட நின்மலைச்*
*சிலம்புபோற் கூறுவ கூறும்*
*இலங்கே ரெல்வளை யிவளுடை நோயே (கலி. 46)*

அல்லகுறிப்பட்டுத் தலைவன் மீள அதனை, 'என் பிழையாகக் கருதுவன்' எனக் கவன்று ஆற்றாளாகி, தன் குறி தள்ளிய தெருளாக் காலை வந்தனன் பெயர்ந்த வறுங்கலம் நோக்கித் தன்பிழைப்பாகத் தழீஇத் தேறிய' தலைவியது நிலைமை தோழி தலைவற்குக் கூறி இவ் இடையீடு நின் தோழியின் ஆயிற்று" என, எனது பிழைப்பாக்கி அவளை ஆற்றுவிப்பாய் நீ உரைத்ததே உரையாம் அவட்கு' என அவளது ஆற்றாமை கூறி வரைவுகடாயது. 276

*ஒன்று, இரப்பான்போல் எளிவந்துஞ் சொல்லும் உலகம்*
*புரப்பான் போல்வதோர் மதுகையு முடையன்*
*வல்லாரை வழிபட் டொன்றறிந் தான்போல்*
*நல்லார்கட் டோன்றும் அடக்கமு முடையன்*
*இல்லோர் புன்கண் ஈகையின் தணிக்க*
*வல்லான் போல்வதோர் வன்மையு முடையன்*
*அன்னா னொருவன்தன் ஆண்டகை விட்டென்னைச்*
*சொல்லுஞ்சொற் கேட்டீ சுடரிழாய் பன்மாணும்;*

*நின்னின்றி அமையலேன் யானென்னு மவனாயின்*
*அன்னான்சொல் நம்புண்டல் யார்க்குமிங் கரிதாயின்*
*என்னுற்ற பிறர்க்குமாங் குளகொல்லோ நறுநுதால்;*

*அறியாய்நீ வருந்துவல் யானென்னு மவனாயின்*
*தமியரே துணிகிற்றல் பெண்டிர்க்கு மரிதாயின்*
*அளியரோ எம்போல ஈங்கிவன் வலைப்பட்டார்;*

*வாழலேன் யானென்னு நீநீப்பி னவனாயின்*
*ஏழைய ரெனப்பலர் கூறுஞ்சொற் பழியாயின்*
*சூழுங்கால் நினைப்பதொன் றறிகிலேன் வருந்துவல்*
*சூழுங்கால் நறுநுதால் நம்முளே சூழ்குவம்;*

*அவனை,*
*நாணடப் பெயர்த்தல் நமக்குமாங் கொல்லாது*
*பேணின ரெனப்படுதல் பெண்மையு மன்றவன்*
*வெளவினன் முயங்கு மாத்திரம் வாவெனக்*
*கூறுவென் போலக் காட்டி*
*மற்றவன் மேஎவழி மேவாய் நெஞ்சே* (கலி. 47)

தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி, அவன் தன்மையும் அவன் தனக்குக் கூறுவனவும் அக்கூற்று தன்னால் பொறுக்க ஒண்ணாதவாறும் அவன் கருத்தும் தலைவிக்குக் கூறி அவள் குறைநயப்பத் தன்னுள்ளே சொல்லியது. 277

*ஆமிழ் யணிமலை அலர்வேங்கைத் தகைபோலத்*
*தேமுசு நனைகவுட் டிசைகாவல் கொளற்கொத்த*
*வாய்நில்லா வலிமுன்பின் வண்டூது புகர்முகப்*
*படுமழை யடுக்கத்த மாவிசும் போங்கிய*
*கடிமரத் துருத்திய கமழ்கடாந் திகழ்தரும்*
*பொருங்களிற் றினத்தொடு வீங்கெருத் தெறுழ்முன்பின்*
*இரும்புலி மயக்குற்ற இகன்மலை நன்னாட;*

*வீழ்பெயற் கங்குனின் விளியோர்த்த வொடுக்கத்தால்*
*வாழுநாட் சிறந்தவள் வருந்துதோள் தவறுண்டோ*
*தாழ்செறி கடுங்காப்பின் தாய்முன்னர் நின்சாரல்*
*ஊழுறு கோடல்போல் எல்வளை யுகுபவால்;*

*இனையிரு ளிதுவென ஏங்கிநின் வரனசைஇ*
*நினைதுய ருழப்பவள் பாடில்கட் பழியுண்டோ*
*இளையளென் றெடுத்தரற்றும் அயன்முன்னர் நின்சுனைக்*
*கனைபெயல் நீலம்போற் கண்பனி கலுழ்பவால்;*

*பன்னாளும் படரடப் பசலையால் உணப்பட்டாள்*
*பொன்னுரை மணியன்ன மாமைகட் பழியுண்டோ*

இன்னுரைச் செதும்பரற்றுஞ் செவ்வியுள் நின்சோலை
மின்னுகு தளிரன்ன மெலிவுவந் துரைப்பதால்;

எனவாங்கு,
பின்னீதல் வேண்டுநீ பிரிந்தோள்நட் பெனநீவிப்
பூங்கண் படுதலும் அஞ்சுவல் தாங்கிய
வருந்துய ரவலந் தூக்கின்
மருங்கறி வாரா மலையினும் பெரிதே (கலி. 48)

வரையாது வந்தொழுகும் தலைவற்குத் தோழி, தலைவி ஆற்றாமையும், இவ்வொழுக்கம் புறத்தார் அறியப்படுகின்றமையும் கூறி வரைவுகடாயது. 278

கொடுவரி தாக்கி வென்ற வருத்தமொடு
நெடுவரை மருங்கின் துஞ்சும் யானை
நனவிற்றான் செய்தது மனத்த தாகலின்
கனவிற் கண்டு கதுமென வெரீஇப்
புதுவ தாக மலர்ந்த வேங்கையை
அதுவென உணர்ந்ததன் அணிநல முருக்கிப்
பேணா முன்பிற்றன் சினந்தணிந் தம்மரங்
காணும் பொழுதின் நோக்கல் செல்லாது
நாணி யிறைஞ்சு நன்மலை நன்னாட;

போதெழின் மலருண்கன் இவண்மாட்டு நீயின்ன
காதலை யென்பதோ இனிதுமற் றின்னாதே
மின்னோருங் கண்ணாக இடியென்னாய் பெயலென்னாய்
இன்னதோ ராரிடை ஈங்குநீ வருவதை;

இன்புற அளித்தனை இவண்மாட்டு நீயின்ன
அன்பினை யென்பதோ இனிதுமற் றின்னாதே
மணங்கமழ் மார்பினை மஞ்சிவ ரடுக்கம்போழ்ந்
தணங்குடை யாரிடை ஈங்குநீ வருவதை;

இருளூற ழிருங்கூந்தல் இவண்மாட்டு நீயின்ன
அருளினை யென்பதோ இனிதுமற் றின்னாதே
ஒளிறுவேல் வலனேந்தி ஒருவன்யா னென்னாது
களிறியங் காரிடை யீங்குநீ வருவதை;

அதனால்,
இரவின் வாரல் ஐய விரவுவீ
அகலறை வரிக்குஞ் சாரற்
பகலும் பெறுவையிவள் தடமென் தோளே (கலி. 49)

'நீர் இவ்வாறு வருகின்ற வரவு எமக்கும் துன்பத்திற்குக் காரணமாகா நின்றது' எனக்கூறி, இரவு வருவானைத் தோழி 'பகல்வருக' என்றது. 279

வாங்குகோல் நெல்லொடு வாங்கி வருவைகல்
மூங்கில் மிசைந்த முழந்தா ளிரும்பிடி
தூங்கிலை வாழை நளிபுக்கு ஞாங்கர்
வருடை மடமறி யூர்விடைத் துஞ்சும்
இருள்தூங்கு சோலை இலங்குநீர் வெற்ப;

அரவின் பொறியும் அணங்கும் புணர்ந்த
உரவுவில் மேலசைத்த கையை ஓராங்கு
நிரைவளை முன்கையென் றோழியை நோக்கிப்
படிகிளி பாயும் பசுங்குர லேனல்
கடிதல் மறப்பித்தா யாயின் இனிநீ
நெடிதுள்ளல் ஓம்புதல் வேண்டு மிவளே
பல்கோட் பலவின் பயிர்ப்புறு தீங்கனி
அல்கறைக் கொண்டூண் அமலைச் சிறுகுடி
நல்கூர்ந்தார் செல்வமகள்;

நீயே, வளியின் இயல்மிகுந் தேருங் களிறுந்
தளியிற் சிறந்தனை வந்த புலவர்க்
களியொடு கைதூ வலை;

அதனால்,
கடுமா கடவுறூஉங் கோல்போல் எனைத்துங்
கொடுமையிலை யாவ தறிந்து மடுப்பல்
வழைவளர் சாரல் வருடை நன்மான்
குழவி வளர்ப்பவர் போலப் பாராட்டி

உழையிற் பிரியிற் பிரியும்
இழையணி யல்குலென் தோழியது களினே (கலி. 50)

'புணர்ந்தபின் அவன் வயின் வணங்கற்கண்' தோழி கூறியது. அது தோழியிற் கூட்டம் நிகழ்ந்தபின், முற்காலத்துப் பணிந்து பின்னின்றோனைத் தோழி தானே பணிந்து ஒழுகுதலாம்.

280

முறஞ்செவி மறைப்பாய்பு முரண்செய்த புலிசெற்று
மறந்தலைக் கொண்ட நூற்றுவர் தலைவனைக்
குறங்கறுத் திடுவான்போற் கூர்நுதி மடுத்ததன்
நிறஞ்சாடி முரண்தீர்ந்த நீண்மருப் பெழில்யானை
மல்லரை மறஞ்சாய்த்த மால்போற்றன் கிளைநாப்பண்
கல்லுயர் நனஞ்சாரற் கலந்தியலு நாடகேள்;

தாமரைக் கண்ணியை தண்ணறுஞ் சாந்தினை
நேரிதழ்க் கோதையாள் செய்குறி நீவரின்
மணங்கமழ் நாற்றத்த மலைநின்று பல்பெறூஉம்
அணங்கென அஞ்சுவர் சிறுகுடி யோரே;

ஈர்ந்தண் ஆடையை எல்லி மாலையை
சோர்ந்துவீழ் கதுப்பினாள் செய்குறி நீவரின்
ஒளிதிகழ் ஞெகிழியர் கவணையர் வில்லர்
களிறென ஆர்ப்பரவ் வேனல்கா வலரே;

ஆர மார்பினை யண்ணலை யளியை
ஐதக வல்குலாள் செய்குறி நீவரின்
கறிவளர் சிலம்பில் வழங்க லானாப்
புலியென் றோர்க்குமிக் கலிகே ழூரே;

எனவாங்கு,
விலங்கோரார் மெய்யோர்ப்பின் இவள்வாழாள் இவளன்றிப்
புலம்புகழ் ஒருவ யானும் வாழேன்
அதனாற் பொதியவிழ் வைகறை வந்துநீ குறைகூறி
வதுவை யயர்தல் வேண்டுவ லாங்குப்
புதுவை போலுநின் வரவுமிவள்

*வதுவைநாண் ஒடுக்கமுங் காண்குவல் யானே* (**கலி. 52**)

இரவுக்குறி வந்த தலைவனை எதிர்ப்பட்டு, தோழி இரவுக்குறியது ஏதமும் ஏதத்தால் வரும் துன்பமும், தன் உள்ளத்து விழைவும் கூறி, வரைவுகடாயது. 281

*வறனுறல் அறியாத வழையமை நறுஞ்சாரல்*
*விறன்மலை வியலறை வீழ்பிடி யுழையதா*
*மறமிகு வேழந்தன் மாறுகொள் மைந்தினால்*
*புகர்நுதல் புண்செய்த புய்கோடு போல*
*உயர்முகை நறுங்காந்தள் நாடோறும் புதிதீன*
*அயல்நந்தி அணிபெற அருவியார்த் திழிதரும்*
*பயமழை தலைஇய பாடுசால் விறல்வெற்ப;*

*மறையினின் மணந்தாங்கே மருவறத் துறந்தபின்*
*இறைவளை நெகிழ்போட ஏற்பவும் ஒல்லுமன்*
*அயலலர் தூற்றலின் ஆய்நலன் இழந்தகண்*
*கயலுமிழ் நீர்போலக் கண்பனி கலுழாக்கால்;*

*இனியசெய் தகன்றுநீ இன்னாதாத் துறத்தலின்*
*பனியிவள் படரெனப் பரவாமை ஒல்லுமன்*
*ஊரலர் தூற்றலின் ஒளியோடி நறுநுதல்*
*பீரல ரணிகொண்டு பிறைவனப் பிழவாக்கால்;*

*அஞ்சலென் றகன்றுநீ அருளாது துறத்தலின்*
*நெஞ்சளி துயரட நிறுப்பவும் இயையுமன்*
*நனவினால் நலம்வாட நலிதந்த நடுங்கஞர்*
*களவினால் அழிவுற்றுக் கங்குலும் ஆற்றாக்கால்;*

*எனவாங்கு,*
*விளியாநோ யுழந்தானா என்றோழி நின்மலை*
*முளிவுற வருந்திய முளைமுதிர் சிறுதினை*
*தளிபெறத் தகைபெற் றாங்குநின்*
*அளிபெற நந்துமிவ ளாய்நுதற் கவினே* (**கலி. 53**)

ஒருவழித் தணந்துவந்த தலைவற்குத் தோழி தலைவி ஆற்றாமையும் ஆற்றுவித்தலது அருமையும் சொல்லி வுரைவுகடாயது. 282

சுணங்கணி வனமுலைச் சுடர்கொண்ட நறுநுதல்
மணங்கமழ் நறுங்கோதை மாரிவீ ழிருங்கூந்தல்
நுணங்கெழில் ஒண்தித்தி நுழைநொசி மடமருங்குல்
வணங்கிறை வரிமுன்கை வரியார்ந்த அல்குலாய்;

கண்ணார்ந்த நலத்தாரைக் கதுமெனக் கண்டவர்க்
குண்ணின்ற நோய்மிக உயிரெஞ்சு துயர்செய்தல்
பெண்ணன்று புனையிழாய் எனக்கூறித் தொழூஉந்தொழுதே
கண்ணுநீ ராக நடுங்கினன் இன்நகாய்
என்செய்தான் கொல்லோ இஃதொத்தன் தன்கண்
பொருகளி றன்ன தகைசாம்பி யுள்ளுள்
உருகுவான் போலு முடைந்து;

தெருவின்கண் காரண மின்றிக் கலங்குவார்க் கண்டுநீ
வாரணா வாசிப் பதம்பெயர்த்தல் ஏதில
நீரின்மேற் கொள்வ தெவன்;

அலர்முலை யாயிழை நல்லாய் கதுமெனப்
பேரம ருண்கணின் தோழி உறீஇய
ஆரஞ ரெவ்வம் உயிர்வாங்கும்
மற்றிந்நோய் தீரும் மருந்தருளாய் ஒண்டொடீ;

நின்முகங் காணும் மருந்தினேன் என்னுமால்
நின்முகந் தான்பெறி னல்லது கொன்னே
மருந்து பிறிதியாதும் இல்லேன் திருந்திழாய்
என்செய்வாங் கொல்இனி நாம்;

பொன்செய்வாம்;
ஆறு விலங்கித் தெருவின்கண் நின்றொருவன்
கூறுஞ்சொல் வாயெனக் கொண்டதன் பண்புணராந்
தேறல் எளிதென்பாம் நாம்;
ஒருவன் சாமா றெளிதென்பாம் மற்று;

சிறிதாங்கே மாணாவூ ரம்பல் அலரின் அலர்கென
நாணும் நிறையும் நயப்பில் பிறப்பிலி
பூணாகம் நோக்கி இமையான் நயந்துநங்

கேண்மை விருப்புற் றவனை யெதிர்நின்று
நாணடப் பெயர்த்த நயவர வின்றே (கலி. 60)

தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி தலைமகளோடு உறழ்ந்து, அவனது குறைநயப்பக் கூறியது. 283

எல்லா இஃதொத்தன் என்பெறான் கேட்டைக்காண்
செல்வங் கடைகொளச் சாஅய்ச் சான்றவர்
அல்லல் களைதக்க கேளி ருழைச்சென்று
சொல்லுத லுற்றுரைக் கல்லா தவர்போலப்
பல்லூழ் பெயர்ந்தென்னை நோக்குமற் றியான்நோக்கின்
மெல்ல இறைஞ்சுந் தலை;

எல்லாநீ முன்னத்தானொன்று குறித்தாய்போற் காட்டினை
நின்னின் விடாஅ நிழற்போல் திரிதருவாய்
என்னீ பெறாததீ தென்;

சொல்லின் மறாதீவாள் மன்னோ இவள்;

செறாஅதுஊத லிரந்தார்க்கொன் றாற்றாது வாழ்தலின்
சாதலுங் கூடுமோ மற்று;

இவள் தந்தை, காதலின் யார்க்குங் கொடுக்கும் விழுப்பொருள்
யாதுநீ வேண்டி யது
பேதாய், பொருள்வேண்டும் புன்கண்மை ஊண்டில்லை யாழ
மருளி மடநோக்கின் நின்தோழி என்னை
அருளீயல் வேண்டுவல் யான்;

அன்னையோ மண்டமரட்ட களிறன்னான் தன்னையொரு
பெண்டி ரருளக் கிடந்த தெவன்கொலோ
ஒண்டொடீ, நாணிலன் மன்ற விவன்;

ஆயின் ஏஎ;
பல்லார்நக் கெள்ளப் படுமடன் மாவேறி
மல்லலூ ராங்கட் படுமே நறுநுதல்
நல்காள்கண் மாறி விடினெனச் செல்வான்நாம்
எள்ளி நகினும் வரூஉம் இடைஇடைக்
கள்வர்போல் நோக்கினும் நோக்குங் குறித்தது

*கொள்ளாது போகாக் குணனுடையன் எந்தைதன்*
*உள்ளங் குறைபடா வாறு* (கலி. 61)

தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி அவனோடு உறழ்ந்து சொல்லி, அவனது நீக்கத்துக்கண் அவன் குறை மறாமைக்கு ஏற்பன சொல்லி தலைமகளை குறைநயப்பித்தது. 284

*நோக்குங்கால் நோக்கித் தொழூஉம் பிறர்காண்பார்*
*தூக்கிலி தூற்றும் பழியெனக் கைகவித்துப்*
*போக்குங்காற் போக்கும் நினைந்திருக்கும் மற்றுநாங்*
*காக்கு மிடமன் றினி;*

*எல்லா எவன்செய்வாம்;*
*பூக்குழாய் செல்லல் அவனுழைக் கூஉய்க்கூஉய்*
*விம்பியான் விட்டேனும் போல்வலென் றோண்மேற்*
*கரும்பெழுது தொய்யிற்குச் செல்வலீங் காக*
*இருந்தாயோ என்றாங் கிற;*
*அவனின் திருந்தடி மேல்வீழ்ந் திரக்குநோய் தீர்க்கும்*
*மருந்துநீ யாகுத லான்;*
*இன்னும் கடம்பூண் டொருகால்நீ வந்தை யுடம்பட்டாள்*
*என்னாமை யென்மெய் தொடு;*
*இஃதோ அடங்கக்கேள்;*
*நின்னொடு சூழுங்கால் நீயும் நிலங்கிளையா*
*என்னொடு நிற்றல் எளிதன்றோ மற்றவன்*
*தன்னொடு நின்று விடு* (கலி. 63)

தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி அவன் நிலைமை தலைமகட்குக் கூறி அவளுரைத்த மாற்றத்தால் அவள் குறிப்பறிந்து இவ்வகையான தலைவற்குக் கூறென அவளுடன் நகையாடி கூட்டமுண்மை தான் அறிந்தமை தோற்றுவித்தது. 285

*திருந்திழாய் கேளாய்நம் ஊர்க்கெல்லாஞ் சாலும்*
*பெருநகை யல்கல் நிகழ்ந்த தொருநிலையே*
*மன்பதை யெல்லாம் மடிந்த இருங்கங்குல்*
*அந்துகிற் போர்வை யணிபெறத் தைஇநம்*
*இன்சாயல் மார்பன் குறிநின்றேன் யானாகத்*
*தீரத் தறைந்த தலையுந்தன் கம்பலுங்*

*காரக் குறைந்து கறைப்பட்டு வந்துநஞ்*
*சேரியிற் போகா முடமுதிர் பார்ப்பானைத்*
*தோழிநீ போற்றுதி யென்றி அவனாங்கே*
*பாராக் குறழாப் பணியாப் பொழுதன்றி*
*யாரிவண் நின்றீ ரெனக்கூறிப் பையென*
*வைகாண் முதுபகட்டிற் பக்கத்திற் போகாது*
*தையால் தம்பலந் தின்றியோ என்றுதன்*
*பக்களித்துக் கொண்டீ யெனத்தரலும் யாதொன்றும்*
*வாய்வாளேன் நிற்பக் கடிதகன்று கைமாறிக்*
*கைப்படுக்கப் பட்டாய் சிறுமிநீ மற்றியான்*
*ஏனைப் பிசாசருள் என்னை நலிதரின்*
*இவ்வூர்ப் பலிநீ பெறாஅமற்கொள் வேனெனப்*
*பலவுந் தாங்காது வாய்பாடி நிற்ப*
*முதுபார்ப்பான் அஞ்சின னாதல் அறிந்தியான்*
*எஞ்சா தொருகை மணற்கொண்டு மேற்றூவக்*
*கண்டே கடிதரற்றிப் பூசல்தொடங் கினனாங்கே*
*ஒடுங்கா வயத்திற் கொடுங்கேழ்க் கடுங்கண்*
*இரும்புலி கொண்மார் நிறுத்த வலையுளோர்*
*ஏதில் குறுநரி பட்டற்றாற் காதலன்*
*காட்சி யழுங்க நம்மூர்க் கெலாஅம்*
*ஆகுல மாகி விளைந்ததை என்றுந்தன்*
*வாழ்க்கை யதுவாகக் கொண்ட முதுபார்ப்பான்*
*வீழ்க்கைப் பெருங்கருங் கூத்து* **(கலி. 65)**

'இரவுக்குறி அலராம்' என்று அஞ்சி, தலைவனை நீக்கிநிறுத்தக் கருதிய தோழி, 'அல்லகுறிப்படுதலும் அவள்வயின் உரித்தே, அவன் குறி மயங்கிய அமைவொடு வரினே' என்னும் சூத்திரத்தான் அல்லகுறிப்படுதல் தனக்கும் உரித்தாகலின் அவன் செய்த குறி அறிதற்குப் புறத்துச் சென்ற வழி,ஆண்டுப் பிறந்தது ஒரு செய்தியாக ஒரு பொய்யை, நாடக வழக்கும் உலகியல் வழக்குமாகப் புனைந்துரை வகையான் படைத்துக்கொண்டு பிற்றை ஞான்று, தலைவன் சிறைப்புறமாகத் தலைவிக்குக் கூறியது. இதனை, 'இறந்து குறையுற்ற கிழவனைத் தோழி நிரம்ப நீங்கி நிறுத்தல் அன்றியும் வாய்மைக் கூறலும் பொய் தலைப் பெய்தலும் நல்வகையுடைய நலத்தில் கூறியும் பல்வகையானும் படைக்கவும் பெறுமே' என்னும் பொருளியல் சூத்திரத்து, பொய் தலைப்பெய்தலும் படைக்கவும் பெறும் என வழு அமைத்தவாற்றால் கொள்க. 286

## நல்லந்துவனார்

விரிகதிர் மதியமொடு வியல்விசும்பு புணர்ப்ப
எரிசடை யெழில்வேழந் தலையெனக் கீழிருந்து
தெருவிடைப் படுத்தமூன் றொன்பதிற் றிருக்கையுள்
உருகெழு வெள்ளிவந் தேற்றியல் சேர
வருடையைப் படிமகன் வாய்ப்பப் பொருடெரி
புந்தி மிதுனம் பொருந்தப் புலர்விடியல்
அங்கி யுயர்நிற்ப வந்தணன் பங்குவின்
இல்லத் துணைக்குப்பால் எய்த இறையமன்
வில்லிற் கடைமகர மேவப்பாம் பொல்லை
மதிய மறைய வருநாளில் வாய்ந்த
பொதியின் முனிவன் புரைவரைக் கீறி
மிதுன மடைய விரிகதிர் வேனில்
எதிர்வரவு மாரி இயைதெனஇவ் வாற்றால்
புரைகெழு சையம் பொழிமழை தாழ
நெரிதரூஉம் வையைப் புனல்;
வரையன புன்னாகமும்
கரையன சுரபுன்னையும்
வண்டறைஇய சண்பகநிரை தண்பதம்
மனைமாமரம் வாள்வீரம்
சினைவளர் வேங்கை கணவிரி காந்தள்
தாய தோன்றி தீயென மலரா
ஊதை யவிழ்த்த வுடையிதழ் ஒண்ணீலம்
வேய்பயில் சோலை அருவி தூர்த்தரப்
பாய்திரை யுந்தித் தருதலான் ஆய்கோல்
வயவர் அரிமலர்த் துறையென்கோ
அரிமலர் மீப்போர்வை ஆரந்தாழ் மார்பிற்
றிரைநுரை மென்பொகுட்டுத் தேமணச் சாந்தின்
அரிவை யதுதானை என்கோகள் ஞண்ணூஉப்
பருகு படிமிட றென்கோ பெரிய
திருமருத நீர்ப்பூந் துறை;
ஆநா ணிறைமதி அலர்தரு பக்கம்போல்
நாளி னாளி னளிவரைச் சிலம்புதொட்டு

நிலவுப்பரந் தாங்கு நீர்நிலம் பரப்பி
உலகுபயம் பகர வோம்புபெரும் பக்கம்
வழியது பக்கத் தமர ருண்டி
மதிநிறை வழிவதின் வரவு சுருங்க
எண்மதி நிறையுவா இருண்மதி போல
நாள்குறை படுதல் காணுநர் யாரே
சேணிகந்து கல்லூர்ந்த மாணிழை வையை
வயத்தணிந் தேகுநின் யாணரீறு நாள்பெற
மாமயி லன்னார் மறையிற் புணர்மைந்தர்
காமங் களவிட்டுக் கைகொள்கற் புற்றென
மல்லற் புனல்வையை மாமலை விட்டிருத்தல்
இல்லத்து நீதனிச் சேறல் இளிவரல்
எனவாங்கு,
கடையழிய நீண்டகன்ற கண்ணாளைக் காளை
படையொடுங் கொண்டு பெயர்வானைச் சுற்றம்
இடைநெறித் தாக்குற்ற தேய்ப்ப அடன்மதுரை
ஆடற்கு நீரமைந்த தியாறு;
ஆற்றணி, வெள்வாள் விதிர்ப்போர் மிளிர்குந்த மேத்துவோர்
கொள்வார்கொல் கொள்ளக் கொடித்திண்டேர் ஏறுவோர்
புள்ளேர் புரவி பொலம்படைக் கைம்மாவை
வெள்ளநீர் நீத்தத்து ளூர்பூர் புழக்குநரும்
கண்ணாருஞ் சாயற் கழித்துரப் போரை
வண்ணநீர் கரந்த வட்டுவிட் டெறிவாரும்
மணம்வரு மாலையின் வட்டிப் போரைத்
துணிபிணர் மருப்பி னீரெக்கு வோரும்
தெரிகோதை நல்லார்தங் கேளிர்த் திளைக்கும்
உருகெழு தோற்ற முரைக்குங்கா ணாளும்
பொருகளம் போலுந் தகைத்தே பரிகவரும்
பாய்தேரான் வையை யகம்;
நீரணி வெறிசெறி மலருறு கமழ்தண்
தார்வரை யகலத்தவ் வேரணி நேரிழை
ஒளிதிகழ்தகை வகைசெறிபொறி
புனைவினைப்பொலம் கோதையவரொடு

பாக ரிறைவழை மதுநுகர்பு களிபரந்து
நாகரினல் வளவினை வயவேற நளிபுணர்மார்
காரிகைமது ஒருவரினொருவர் கண்ணிற் கவர்புறச்
சீரமை பாடற் பயத்தாற் கிளர்செவிதெவி
உம்ப ருறையு மொளிகிளர்வா னூர்பாடும்
அம்பி கரவா வழக்கிற்றே யாங்கதை
காரொவ்வா வேனில் கலங்கித் தெளிவரல்
நீரொவ்வா வையை நினக்கு
கனைக்கு மதிர்குரல் கார்வானம் நீங்கப்
பனிப்படு பைதல் விடுதலைப் பருவத்து
ஞாயிறு காயா நளிமாரிப் பிற்குளத்து
மாயிருந் திங்கள் மறுநிறை ஆதிரை
விரிநூல் அந்தணர் விழவு தொடங்கப்
புரிநூல் அந்தணர் பொலங்கல மேற்ப
வெம்பா தாக வியனில வரைப்பென
அம்பா வாடலின் ஆய்தொடிக் கன்னியர்
முனித்துறை முதல்வியர் முறைமை காட்டப்
பனிப்புலர் பாடிப் பருமண லருவியின்
ஊதை யூர்தர வுறைசிறை வேதியர்
நெறிநிமிர் நுடங்கழல் பேணிய சிறப்பிற்
றையன் மகளிர் ஈரணி புலர்த்தர
வையை நினக்கு மடைவாய்த் தன்று
மையாடல் ஆடன் மழபுலவர் மாறெழுந்து
பொய்யாட லாடும் புணர்ப்பி னவரவர்
தீயெரிப் பாலுஞ் செறிதவமுன் பற்றியோ
தாயருகா நின்று தவத்தைந்நீர் ஆடுதல்
நீயுரைத்தி வையை நதி;
ஆயிடை, மாயிதழ் கொண்டோர் மடமாதர் நோக்கினாள்
வேயெழில் வென்று வெறுத்ததோ ணோக்கிச்
சாயிழை பிண்டித் தளிர்காதிற் றையினாள்
பாய்குழை நீலம் பகலாகத் தையினாள்
குவளை குழைக்காதின் கோலச் செவியின்
இவள்செரீஇ நான்கு விழிவடைத் தாளென்று

நெற்றி விழியா நிறைத்திலக மிட்டாளே
கொற்றவைகோ லங்கொண்டோர் பெண்;
பவள வளைசெறித்தாட் கண்டணிந்தாள் பச்சைக்
குவளைப் பசுந்தண்டு கொண்டு
கல்லகா ரப்பூவாற் கண்ணி தொடுத்தாளை
நில்லிகா வென்பாள்போ னெய்தற் றொடுத்தாளே
மல்லிகா மாலை வளாய்;
தண்டு தழுவாத் தாவுநீர் வையையுள்
கண்ட பொழுதிற் கடும்புனல் கைவாங்க
நெஞ்ச மவள்வாங்க நீடு புணைவாங்க
நேரிழை நின்றுழிக் கண்ணிற்ப நீரவன்
தாழ்வுழி யுய்யாது தான்வேண்டு மாறுய்ப்ப
ஆயத்துட னில்லாள் ஆங்கவன் பின்றொடரூஉத்
தாயத் திறமறியாள் தாங்கித் தனிச்சேறல்
ஆயத்திற் கூடென் றரற்றெடுப்பத் தாக்கிற்றே
சேயுற்ற கார்நீர் வரவு;
நீதக்காய் தைந்நீர் நிறந்தெளிந்தாய் என்மாரும்
கழுத்தமை கைவாங்காக் காதலர்ப் புல்ல
விழுத்தகை பெறுகென வேண்டுதும் என்மாரும்
பூவீழ் அரியிற் புலம்பப் போகா
தியாம்வீழ்வார் ஏமம் எய்துக என்மாரும்
கிழவர் கிழவியர் என்னாதேழ் காறும்
மழவீன்று மல்லற்கேண் மன்னுக என்மாரும்
கண்டார்க்குத் தாக்கணங்கிக் காரிகை காண்மின்
பண்டாரம் காமன் படையுவள் கண்காண்மின்
நீனெய்தாழ் கோதை யவர்விலக்க நில்லாது
பூவுது வண்டினம் யாழ்கொண்ட கொளைகேண்மின்
கொளைப்பொருள் தெரிதரக் கொளுத்தாமற் குரல்கொண்ட
கிளைக்குற்ற உழைச்சுரும்பின் கேழ்கெழுபாலை இசையோர்மின்
பண்கண்டு திறனெய்தாப் பண்டாளம் பெறப்பாடிக்
கொண்டவின் னிசைத்தாளம் கொளைச்சீர்க்கும் விரித்தாடும்
தண்டும்பி யினங்காண்மின் தான்வீழ்பு நெரித்தாளை
முனைகெழு சினநெஞ்சின் முன்னெறிந்து பின்னும்

கனைவர லொருதும்பி காய்சினத் தியல்காண்மின்;
எனவாங்கு,
இன்ன பண்பின் இன்றைந்நீ ராடல்
மின்னிழை நறுநுதன் மகண்மேம் பட்டல்
கன்னிமை கனியாக் கைக்கிளைக் காம
இன்னியன் மாண்டேர்ச்சி இசை பரிபாடல்
முன்முறை செய்தவத் திம்முறை இயைந்தேம்
மறுமுறை யமையத்து மியைக
நறுநீர் வையை நயத்தகு நிறையே (பரி. 11)

வரைவுமலிந்த தோழி கன்னிப்பருவத்துத் தைந்நீர் ஆடத் தவம் தலைப்பட்டேமென வையையை நோக்கித் தலைமகன் கேட்பச் சொல்லியது. 287

## நல்வழுதியார்

வளிபொரு மின்னொடு வானிருள் பரப்பி
விளிவின்று கிளையொடு மேன்மலை முற்றித்
தளிபொழி சாரற் றதர்மலர் தாஅய்
ஒளிதிக ழுத்தி உருகெழு நாகம்
அகரு வழைஞெமை ஆரம் இனையத்
தகரமு ஞாழலுந் தாரமுந் தாங்கி
நளிகடன் முன்னி யதுபோலும் தீநீர்
வளிவரல் வையை வரவு;
வந்து மதுரை மதில்பொரூஉம் வான்மலர்தாஅய்
அந்தண் புனல்வையை யாறெனக் கேட்டு
மின்னவி ரொளியிழை வேயு மோரும்
பொன்னடர்ப் பூம்புனை திருத்து வோரும்
அகில்கெழு சாந்த மாற்றி யாற்றப்
புகைகெழு சாந்தம் பூசு வோரும்
கார்கொள் கூந்தற் கதுப்பமைப் போரும்
வேர்பிணி பன்மலர் வேயு மோரும்
புட்டகம் பொருந்துவ புனைகு வோரும்
கட்டிய கயிலணி காழ்கொள் வோரும்
வாச நறுநெய் யாடி வான்றுகள்
மாசறக் கண்ணடி வயக்கி வண்ணமும்

தேசு மொலியுந் திகழ நோக்கி
வாச மணத்துவர் வாய்க்கொள் வோரும்
இடுபுணர் வளையொடு தொடுதோள் வளையர்
கட்டுவடக் கழலினர் மட்டு மாலையர்
ஓசனை கமழும் வாச மேனியர்
மடமா மிசையோர்
பிடிமே லன்னப் பெரும்பெடை யனையோர்
கடுமா கடவுவோருங் களிறுமேல் கொள்வோரும்
வடிமணி நெடுந்தேர் மாமுள் பாய்க்குநரும்
விரைபு விரைபு மிகைமிகை யீண்டி
ஆடறலைத்தலை சிறப்பக் கூடல்
உரைதர வந்தன்று வையைநீர் வையைக்
கரைதர வந்தன்று காண்பவ ரீட்டம்
நிவந்தது நீத்தங் கரைமேலா நீத்தம்
கவர்ந்தது போலும் காண்பவர் காதல்
முன்றுறை நிறையணி நின்றவர் மொழிமொழி
ஒன்றல பலபல வுடனெழுந் தன்றவை
எல்லாந் தெரியக் கேட்குநர் யாரவை
கில்லா கேள்வி கேட்டன சிலசில
ஒத்த குழலி னொலியெழ முழவிமிழ்
மத்தரி தடாரி தண்ணுமை மகுளி
ஒத்தளந்து சீர்தூக்கி யொருவர் பிற்படார்
நித்தந் திகழு நேரிறை முன்கையால்
அத்தக வரிவைய ரளத்தல் காண்மின்
நாணாள்கொ ரோழி நயனில் பரத்தையிற்
றோணல முண்டு துறந்தா னெனவொருத்தி
யாணர் மலிபுன னீத்தத் திரும்பிடி
சேண வெரிநிற் சிறந்தானோ டேறினாள்
நாணுக் குறைவில ணங்கைமற் றென்மரும்
கோட்டியுட் கொம்பர் குவிமுலை நோக்குவோன்
ஒட்டை மனவ னுரமிலி யென்மரும்
சொரிந்ததூஉஞ் சொற்றதூஉம் பற்றா ணிறந்திரிந்தாள்
நெஞ்சத்தை நீத்தா ணெறிசெல்வான் பின்னிறை

அஞ்சிக் கழியாமோ அன்புற்ற லென்மரும்
பூணார நோக்கிப் புணர்முலைபார்த் தானுவன்
நாணா ளவனையிந் நாரிகை யென்மரும்
அமிர்தன நோக்கத் தணங்கொருத்தி பார்ப்பக்
கமழ்கோதை கோலாப் புடைத்துத்தன் மார்பில்
இழையினைக் கையாத் திறுகிறுக்கி வாங்கிப்
பிழையினை என்னப் பிழையொன்றுங் காணான்
தொழுது பிழைகேட்குந் தூயவனைக் காண்மின்
பார்த்தா ளொருத்தி நினையெனப் பார்த்தவளைப்
பொய்ச்சூளா ளென்ப தறியேன்யா னென்றிரந்து
மெய்ச்சூ ளுறுவானை மெல்லியல் பொய்ச்சூளென்
றொல்லுவ சொல்லா துரைவழுவச் சொல்ல
உறைத்துஞ் செறுத்து முணர்த்து வானைப்
புல்லா தூடிப் புலந்து நின்றவள்
பூவெழில் வண்ணநீர் பூரித்த வட்டெறிய
வேலெழி லுண்க ணெறிநோக்கம் பட்டபுண்
பாய்குருதி சோரப் பகையின் றுளஞ்சோர
நில்லாது நீங்கி நிலஞ்சோர வல்லாந்து
மல்லா ரகலம் வடுவஞ்சி மம்மர்கூர்ந்
தெல்லாத் துனியு மிறப்பத்தன் காதலன்
நல்லே ரெழிலாகஞ் சேர்வித்த லெஞ்ஞான்றும்
வல்லதால் வையைப் புனல்;

எனவாங்கு,
மல்லிகை மௌவன் மணங்கமழ் சண்பகம்
அல்லி கழுநீ ரரவிந்த மாம்பல்
குல்லை வகுளம் குருக்கத்தி பாதிரி
நல்லிணர் நாக நறவஞ் சுரபுன்னை
எல்லாங் கமழு மிருசார் கரைகலிழத்
தேறித் தெளிந்து செறியிருள் மான்மலைப்
பாறைப் பரப்பிற் பரந்த சிறைநின்று
துறக்கத் தொழிலைத்தன் னீர்நிழற் காட்டும்

*காரடு காலைக் கலிழ்செங் குருதித்தே*
*போரடு தானையான் யாறு;*
*சுடுநீர் வினைக்குழையின் ஞாலச் சிவந்த*
*கடிமலர்ப் பிண்டிதன் காதிற் செரீஇ*
*விடுமலர்ப் பூங்கொடி போல நுடங்கி*
*அடிமே லடிமே லொதுங்கித் தொடிமுன்கைக்*
*காரிகை யாகத்தன் கண்ணி திருத்தினாள்*
*நேரிறை முன்கை நல்லவள்கேள் காண்மின்*
*துகில்சேர் மலர்போல் மணிநீர் நிறைந்தன்று*
*புனலென மூதூர் மலிந்தன் றவருரை*
*உரையி னுயர்ந்தன்று கவின்;*
*போரேற் றன்று நவின்று தகர*
*மார்பழி சாந்தின் மணலளறு பட்டன்று*
*துகில்பொசி புனலிற் கரைகா ரேற்றன்று*
*விசும்புகடி விட்டன்று விழவுப்புன லாங்க*
*இன்பமுங் கவினு மழுங்கன் மூதூர்*
*நன்பல நன்பல நன்பல வையை*
*நின்புகழ் கொள்ளாதிம் மலர்தலை யுலகே* (பரி. 12)

கார்ப்பருவத்து வையைநீர் விழவணியிற் பல்வேறு வகைப்பட்ட இன்பம் கூறி, இவ் வகைப்பட்ட இன்பத்தையுடைய நின்னையும் நினைத்திலரென வையையை நோக்கித் தலைமகன் கேட்பத் தோழி இயற்பழித்தது. 288

## கேசவனார்

*கார்மலி கதழ்பெய றலைஇ யேற்ற*
*நீர்மலி நிறைசுனை பூமலர்ந் தனவே*
*தண்ணறுங் கடம்பின் கமழ்தா தூதும்*
*வண்ணவண் டிமிர்குரல் பண்ணைபோன் றனவே*
*அடியுறை மகளி ராடுந் தோளே*
*நெடுவரை யடுக்கத்து வேய்போன் றனவே*
*வாகை யொண்பூப் புரையு முச்சிய*
*தோகை யார்குரன் மணந்து தணந்தோரை*

நீடன்மின், வாரு மென்பவர் சொற்போன் றனவே
நாண்மலர்க் கொன்றையும் பொலந்தார் போன்றன
மெல்லிணர் வேங்கை வியலறைத் தாயின
அழுகை மகளிர்க் குழுவை செப்ப
நீரயற் கலித்த நெரிமுகைக் காந்தள்
வார்குலை யவிழ்ந்த வள்ளிதழ் நிரைதொறும்
விடுகொடிப் பிறந்த மென்றகைத் தோன்றிப்
பவழத் தன்ன செம்பூத் தாஅய்க்
கார்மலிந் தன்றுநின் குன்று போர்மலிந்து
சூர்மருங் கறுத்த சுடர்ப்படை யோயே
கறையில் கார்மழை பொங்கி யன்ன
நறையி னறும்புகை நனியமர்ந் தோயே
அறுமுகத் தாறிரு தோளால் வென்றி
நறுமலர் வள்ளிப் பூநயந் தோயே
கெழீஇக் கேளிர் சுற்ற நின்னை
எழீஇப் பாடும் பாட்டமர்ந் தோயே
பிறந்த ஞான்றே நின்னை யுட்கிச்
சிறந்தோ ரஞ்சிய சீருடை யோயே
இருபிறப் பிருபெய ரீர நெஞ்சத்
தொருபெய ரந்தணர் அறனமர்ந் தோயே
அன்னை யாகலின் அமர்ந்தியா நின்னைத்
துன்னித் துன்னி வழிபடு வதன்பயம்
இன்னு மின்னுமவை யாகுக
தொன்முதிர் மரபினின் புகழினும் பலவே (பரி. 14)

பருவங்கண்டு அழிந்த தலைமகள் கேட்ப முருகவேளைப் பரவுவாளாய், இப் பருவத்தே தலைமகன் வருமென்பதுபடத் தோழி வற்புறுத்தியது. 289

# பாலைத் திணை

## பெருந்தலைச்சாத்தனார்

*தண்கடற் பிறந்த முத்தி னாரமு*
*முனைதிறை கொடுக்குந் துப்பிற் றன்மலைத்*
*தெறலரு மரபிற் கடவுட் பேணிக்*
*குறவர் தந்த சந்தி னாரமு*
*மிருபே ராரமு மெழில்பெற வணியுந்*
*திருவீழ் மார்பிற் றென்னவன் மறவன்*
*குழியிற் கொண்ட மராஅ யானை*
*மொழியி னுணர்த்துஞ் சிறுவரை யல்லது*
*வரைநிலை யின்றி யிரவலர்க் கீயும்*
*வள்வா யம்பிற் கோடைப் பொருநன்*
*பண்ணி தைஇய பயங்கெழு வேள்வியின்*
*விழுமிது நிகழ்வ தாயினுந் தெற்கேர்பு*
*கழிமழை பொழிந்த பொழுதுகொ ளமையத்துச்*
*சாய லின்றுணை யிவட்பிரீந் துறையி*
*னோயின் றாக செய்பொருள் வயிற்பட*
*மாசி றூமடி விரிந்த சேக்கைக்*
*கவவின் புறாமைக் கழிக வளவய*
*வழனுதி யன்ன தோகை யீன்ற*
*கழனி நெல்லின் கவைமுத லலங்க*
*னிரம்பகன் செறுவின் வரம்பணையாத் துயல்வரப்*
*புலம்பொடு வந்த பொழுதுகொள் வாடை*
*யிலங்குபூங் கரும்பி னேர்கழை யிருந்த*
*வெண்குருகு நரல வீசு*
*நுண்பஃ றுவலைய தண்பனி நாளே* **(அகம். 13)**

பொருள்வயிற் பிரியலுற்ற தலைமகனைத் தோழி செலவழுங்குவித்தது. 290

## ஒல்லையூர்தந்த பூதப்பாண்டியன்

*நெடுங்கரைக் கான்யாற்றுக் கடும்புனல் சாஅய்*
*அவிரறல் கொண்ட விரவுமண லகன்றுறைத்*
*தண்கய நண்ணிய பொழிற்றொறுங் காஞ்சிப்*
*பைந்தா தணிந்த போதுமலி யெக்கர்*
*வதுவை நாற்றம் புதுவது கஞல*
*மாநனை கொழுதிய மணிநிற விருங்குயில்*
*படுநா விளியா நடுநின் றல்கலு*
*முரைப்ப போல வூழ்கொள்பு கூவ*
*வினைச்சித ருகுத்த விலவத் தாங்கட்*
*சினைப்பூங் கோங்கி னுண்டாது பகர்நர்*
*பவளச் செப்பிற் பொன்சொரிந் தன்ன*
*விகழுந ரிகழா விளநா ளமையஞ்*
*செய்தோர் மன்ற குறியென நீநின்*
*பைத லுண்கண் பனிவார் புறைப்ப*
*வாரா மையிற் புலந்த நெஞ்சமொடு*
*நோவல் குறுமக ணோயியரென் னுயிரென*
*மெல்லிய வினிய கூறி வல்லே*
*வருவர் வாழி தோழி பொருநர்*
*செல்சமங் கடந்த வில்கெழு தடக்கைப்*
*பொதியிற் செல்வன் பொலந்தேர்த் திதிய*
*னின்னிசை யியத்திற் கறங்குங்*
*கன்மிசை யருவிய காடிறந் தோரே* **(அகம். 25)**

பருவங்கண்டழிந்த தலைமகளைத் தோழி வற்புறுத்தியது. 291

## மதுரைக் கணக்காயனார்

*கொடுவரி யிரும்புலி தயங்க நெடுவரை*
*யாடுகழை யிருவெதிர் கோடைக் கொல்குங்*
*கானம் கடிய வென்னார் நாமழ*
*நின்றதில் பொருட்பிணிச் சென்றிவட் டருமார்*
*செல்ப வென்ப வென்போய் நல்ல*

மடவை மன்ற நீயே வடவயின்
வேங்கடம் பயந்த வெண்கோட் டியானை
மறப்போர்ப் பாண்டிய ரறத்திற் காக்குங்
கொற்கையம் பெருந்துறை முத்தி னன்ன
நகைப் பொலிந் திலங்கு மெயிறுகெழு துவர்வாய்
தகைப்பத் தங்கல ராயினு மிகப்ப
யாங்ஙனம் விடுமோ மற்றே தேம்படத்
தெண்ணீர்க் கேற்ற திரள்காற் குவளைப்
பெருந்தகை சிதைத்து மமையாப் பருந்துபட
வேத்தமர்க் கடந்த வென்றி நல்வேல்
குருதியொடு துயல்வந் தன்னநின்
னரிவே யுண்க ணமர்த்த நோக்கே (அகம். 27)

செலவுணர்ந்து வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது. 292

## மதுரை மருதனிளநாகனார்

தண்கயத் தமன்ற வண்டுபடு துணைமலர்ப்
பெருந்தகை இழந்த கண்ணினை பெரிதும்
வருந்தினை வாழியர் நீயே வடாஅது
வண்புனல் தொழுநை வார்மணல் அகன்றுறை
அண்டர் மகளிர் தண்டழை உடீஇயர்
மரஞ்செல மிதித்த மாஅல் போலப்
புன்றலை மடப்பிடி உணீஇயர் அங்குழை
நெடுநிலை யாஅம் ஒற்றி நனைகவுள்
படிஞிமிறு கடியும் களிறே தோழி
சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேல்
சினமிகு முருகன் தண்பரங் குன்றத்து
அந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை
இன்றீம் பைஞ்சுனை ஈரணிப் பொலிந்த
தண்ணறுங் கழுநீர்ச் செண்ணியற் சிறுபுறம்
தாம்பா ராட்டிய காலையும் உள்ளார்
வீங்கிறைப் பணைத்தோள் நெகிழச் சேய்நாட்

டருஞ்செயற் பொருட்பிணி முன்னிநப்
பிரிந்துசேண் உறைநர் சென்ற ஆறே (அகம். 59)

தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட கிழத்திக்குத் தோழி சொல்லியது. 29:

## மாமூலனார்

நோற்றோர் மன்ற தாமே கூற்றம்
கோளுற விளியார்பிறர் கொளவிளிந் தோரெனத்
தாள்வலம் படுப்பச் சேட்புலம் படர்ந்தோர்
நாளிழை நெடுஞ்சுவர் நோக்கி நோயுழந்து
ஆழல் வாழி தோழி தாழாஅது
உருமெனச் சிலைக்கும் ஊக்கமொடு பைங்கால்
வரிமாண் நோன்ஞாண் வன்சிலைக் கொளீஇ
அருநிறத் தழுத்திய அம்பினர் பலருடன்
அண்ணல் யானை வெண்கோடு கொண்டு
நறவுநொடை நெல்லின் நாண்மகிழ் அயருங்
கழல்புனை திருந்தடிக் கள்வர் கோமான்
மழபுலம் வணக்கிய மாவண் புல்லி
விழவுடை விழுச்சீர் வேங்கடம் பெறினும்
பழகுவ ராதலோ அரிதே முனாஅது
முழவுறழ் திணிதோள் நெடுவே ளாவி
பொன்னுடை நெடுநகர்ப் பொதினி அன்னநின
ஒண்கேழ் வனமுலைப் பொலிந்த
நுண்பூண் ஆகம் பொருந்துதல் மறந்தே (அகம். 61)

தலைமகன் பொருள்வயிற்பிரிய வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.

294

## மாமூலனார்

உன்னங் கொள்கையொ டுளங்கரந் துறையும்
அன்னை சொல்லும் உய்கம் என்னதூஉம்
ஈரஞ் சேரா இயல்பின் பொய்ம்மொழிச்
சேரியம் பெண்டிர் கௌவையும் ஒழிகம்

*நாடுகண் அகற்றிய உதியஞ் சேரற்*
*பாடிச் சென்ற பரிசிலர் போல*
*உவவினி வாழி தோழி அவரே*
*பொம்மல் ஓதி நம்மோ டொராங்குச்*
*செலவயர்ந் தனரால் இன்றே மலைதொறும்*
*மால்கழை பிசைந்த கால்வாய் கூஎரி*
*மீன்கொள் பரதவர் கொடுந்திமில் நளிசுடர்*
*வான்தோய் புணரி மிசைக்கண் டாங்கு*
*மேவரத் தோன்றும் யாஅஉயர் நனந்தலை*
*உயவல் யானை வெரிநுச்சென் றன்ன*
*கல்லூர் பிழிதரும் புல்சாய் சிறுநெறிக்*
*காடுமீக் கூறுங் கோடேந் தொருத்தல்*
*ஆறுகடி கொள்ளும் அருஞ்சுரம் பணைத்தோள்*
*நாறைங் கூந்தற் கொம்மை வரிமுலை*
*நிரையிதழ் உண்கண் மகளிர்க்கு*
*அரிய வாலென அழுங்கிய செலவே* **(அகம். 65)**

வேறுபட்ட தலைமகட்குத் தலைமகன் உடன்போக்கு வலித்தமை தோழி சொல்லியது. 295

## உமட்டூர்கிழார் மகனார் பரங்கொற்றனார்

*ஆய்நலந் தொலைந்த மேனியும் மாமலர்த்*
*தகைவனப் பிழந்த கண்ணும் வகையில*
*வண்ணம் வாடிய வரியும் நோக்கி*
*ஆழல் ஆன்றிசின் நீயே உரிதினின்*
*ஈதல் இன்பம் வெஃகி மேவரச்*
*செய்பொருட் டிறவ ராகிப் புல்லிலைப்*
*பராரை நெல்லி அம்புளித் திரள்காய்*
*கான மடமரைக் கணநிரை கவரும்*
*வேனில் அத்தம் என்னா தேமுற்று*
*விண்பொரு நெடுவரை இயல்தேர் மோரியர்*
*பொன்புனை திகிரி திரிதரக் குறைத்த*

*அறையிறந் தகன்றனர் ஆயினும் எனையதூஉம்*
*நீடலர் வாழி தோழி ஆடியல்*
*மடமயில் ஒழித்த பீலி வார்ந்துதம்*
*சிலைமாண் வல்விற் சுற்றிப் பலமாண்*
*அம்புடைக் கையர் அரண்பல நூறி*
*நன்கலந் தரூஉம் வயவர் பெருமகன்*
*சுடர்மணிப் பெரும்பூண் ஆஅய் கானத்துத்*
*தலைநாள் அலரி நாறுநின்*
*அலர்முலை ஆகத் தின்றுயில் மறந்தே* **(அகம். 69)**

பொருள்வயிற் பிரிந்து நீட்டித்தான் தலைமகன் எனக் கவன்ற தலைமகட்கு வருவரென்பதுபடச் சொல்லித் தோழி ஆற்றுவித்தது. 296

## அந்தி இளங்கீரனார்

*நிறைந்தோர்த் தேரும் நெஞ்சமொடு குறைந்தோர்*
*பயனின் மையிற் பற்றுவிட் டொரூஉம்*
*நயனின் மாக்கள் போல வண்டினம்*
*சுனைப்பூ நீத்துச் சினைப்பூப் படர*
*மையின் மானினம் மருளப் பையென*
*வெந்தாறு பொன்னின் அந்தி பூப்ப*
*ஐயறி வகற்றுங் கையறு படரோ*
*டகலிரு வானம் அம்மஞ் சீனப்*
*பகலாற்றுப் படுத்த பழங்கண் மாலை*
*காதலர்ப் பிரிந்த புலம்பின் நோதக*
*ஆரஞர் உறுநர் அருநிறஞ் சுட்டிக்*
*கூரெஃ கெறிஞரின் அலைத்தல் ஆனாது*
*எள்ளற இயற்றிய நிழல்காண் மண்டிலத்*
*துள்ளூ தாவியிற் பைப்பய நுணுகி*
*மதுகை மாய்தல் வேண்டும் பெரிதழிந்*
*திதுகொல் வாழி தோழி என்னுயிர்*
*விலங்குவெங் கடுவளி எடுப்பத்*
*துளங்குமரப் புள்ளில் துறக்கும் பொழுதே* **(அகம். 71)**

பொருள்வயிற் பிரிந்தவிடத்து ஆற்றாளாய தலைமகட்குத் தோழி சொல்லியது. 297

## எருமை வெளியனார்

*பின்னொடு முடித்த மண்ணா முச்சி*
*நெய்கனி வீழ்குழல் அகப்படத் தைஇ*
*வெருகிருள் நோக்கி அன்ன கதிர்விடு*
*பொருகாழ் முத்தம் இடைமுலை விளங்க*
*அணங்குறு கற்பொடு மடங்கொளச் சாஅய்*
*நின்னோய்த் தலையையும் அல்லை தெறுவர*
*என்னா குவள்கொல் அளியள் தானென*
*என்னழி பிரங்கும் நின்னொடு யானும்*
*ஆறன் றென்னா வேறல் காட்சி*
*இருவேம் நம்படர் தீர வருவது*
*காணிய வம்மோ காதலந் தோழி*
*கொடிபிணங் கரில இருள்கொள் நாகம்*
*மடிபதம் பார்க்கும் வயமான் துப்பின்*
*ஏனலஞ் சிறுதினைச் சேணோன் கையதைப்*
*பிடிக்கை அமைந்த கனல்வாய்க் கொள்ளி*
*விடுபொறிச் சுடரின் மின்னிஅவர்*
*சென்ற தேஎத்து நின்றதால் மழையே* **(அகம். 73)**

தலைமகன் பொருள்வயிற் பிரிகின்றான், குறித்த பருவவரவு கண்டு அழிந்த தலைமகட்குத் தோழி சொல்லியது. 298

## மதுரைப் போத்தனார்

*அருள்அன் றாக ஆள்வினை ஆடவர்*
*பொருளென வலித்த பொருளல் காட்சியின்*
*மைந்துமலி உள்ளமொடு துஞ்சல் செல்லாது*
*எரிசினம் தவழ்ந்த இருங்கடல் தடைமுதல்*
*கரிகுதிர் மரத்த கான வாழ்க்கை*
*அடுபுலி முன்பின் தொடுகழல் மறவர்*
*தொன்றியல் சிறுகுடி மன்றுநிழல் படுக்கும்*
*அண்ணல் நெடுவரை ஆமறப் புலர்ந்த*
*கல்நெறிப் படர்குவ ராயின் நன்னுதல்*

செயிர்தீர் கொள்கைச் சின்மொழித் துவர்வாய்
அவிர்தொடி முன்கை ஆயிழை மகளிர்
ஆரந் தாங்கிய அலர்முலை ஆகத்து
ஆராக் காதலொடு தாரிடைக் குழையாது
சென்றுபடு விறல்கவின் உள்ளி என்றும்
இரங்குநர் அல்லது பெயர்தந்து யாவரும்
தருநரும் உளரோ இவ்வுலகத் தானென
மாரி ஈங்கை மாத்தளிர் அன்ன
அம்மா மேனி ஐதமை நுசுப்பின்
பல்காசு நிரைத்த கோடேந்து அல்குல்
மெல்லியல் குறுமகள் புலந்துபல கூறி
ஆனா நோயை ஆக யானே
பிரியச் சூழ்தலும் உண்டோ
அரிதுபெறு சிறப்பின் நின்வயி னானே (அகம். 75)

பொருள்வயின் பிரிவர்என வேறுபட்ட தலைமகட்குப் பிரியாரெனத் தோழி சொல்லியது. 299

## ஆலம்பேரி சாத்தனார்

நாளுலா எழுந்த கோள்வல் உளியம்
ஓங்குசினை இருப்பைத் தீம்பழம் முனையின்
புல்லளைப் புற்றின் பல்கிளைச் சிதலை
ஒருங்குமுயன் றெடுத்த நனைவாய் நெடுங்கோ
டிரும்பூது குருகின் இடந்திரை தேடும்
மண்பக வறந்த ஆங்கட் கண்பொரக்
கதிர்தெறக் கவிழ்ந்த உலறுதலை நோன்சினை
நெறியயல் மராஅம் ஏறிப் புலம்புகொள
எறிபருந் துயவும் என்றூழ் நீளிடை
வெம்முனை அருஞ்சுரம் நீந்திச் சிறந்த
செம்மல் உள்ளம் துரத்தலின் கறுத்தோர்
ஒளிறுவேல் அழுவம் களிறுபடக் கடக்கும்
மாவண் கடலன் விளங்கில் அன்னஎம்

*மையெழில் உண்கண் கலுழ*
*ஐய சேறிரோ அகன்றுசெய் பொருட்கே* **(அகம். 81)**

பிரிவுணர்த்திய தலைமகற்குத் தலைமகள் குறிப்பறிந்துவந்து தோழி சொல்லியது. 300

## காட்டூர்கிழார் மகனார் கண்ணனார்

*நன்னுதல் பசப்பவும் பெருந்தோள் நெகிழவும்*
*உண்ணா உயக்கமோ டுயிர்செலச் சாஅய்*
*இன்னம் ஆகவும் இங்குநத் துறந்தோர்*
*அறவர் அல்லர் அவரெனப் பலபுலந்து*
*ஆழல் வாழி தோழி சாரல்*
*ஈன்றுநாள் உலந்த மென்னடை மடப்பிடி*
*கன்றுபசி களைஇய பைங்கண் யானை*
*முற்றா மூங்கில் முளைதரு பூட்டும்*
*வென்வேல் திரையன் வேங்கட நெடுவரை*
*நன்னாட் பூத்த நாகிள வேங்கை*
*நறுவீ யாடிய பொறிவரி மஞ்ஞை*
*நனைப்பசுங் குருந்தின் நாறுசினை யிருந்து*
*துணைப்பயிர்ந் தகவுந் துனைதரு தண்கார்*
*வருதும் யாமெனத் தேற்றிய*
*பருவங் காணது பாயின்றால் மழையே* **(அகம். 85)**

தலைமகன் பிரிய வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது. 301

## மாமூலனார்

*விளங்குபகல் உதவிய பல்கதிர் ஞாயிறு*
*வளங்கெழு மாமலை பயங்கெடத் தெறுதலின்*
*அருவி யான்ற பெருவரை மருங்கில்*
*சூர்ச்சுனை துழைஇ நீர்ப்பயங் காணாது*
*பாசி தின்ற பைங்கண் யானை*
*ஓய்பசிப் பிடியொ டொருதிறன் ஒடுங்க*
*வேய்கண் ணுடைந்த வெயிலவிர் நனந்தலை*
*அரும்பொருள் வேட்கையின் அகன்றன ராயினும்*

பெரும்பே ரன்பினர் தோழி இருங்கேழ்
இரலை சேக்கும் பரலுயர் பதுக்கைக்
கடுங்கண் மழவர் களவுழ வெழுந்த
நெடுங்கால் ஆசினி ஒடுங்காட் டும்பர்
விசிபிணி முழவின் குட்டுவன் காப்பப்
பசியென வறியாப் பணைபயில் இருக்கைத்
தடமருப் பெருமை தாமரை முனையின்
முடமுதிர் பலவின் கொழுநிழல் வதியும்
குடநாடு பெறினும் தவிரலர்
மடமான் நோக்கிநின் மாணலம் மறந்தே (அகம். 91)

பிரிவிடை மெலிந்த தலைமகளைத் தோழி வற்புறுத்தியது. 302

## காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார்

நீசெல வயரக் கேட்டொறும் பலநினைந்
தன்பின் நெஞ்சத் தயாஅப்பொறை மெலிந்த
என்னகத் திடும்பை களைமார் நின்னொடு
கருங்கல் வியலறைக் கிடப்பி வயிறுதின்
றிரும்புலி துறந்த ஏற்றுமான் உணங்கல்
நெறிசெல் வம்பலர் உவந்தனர் ஆங்கண்
ஒலிகழை நெல்லின் அரிசியோ டோராங்
கானிலைப் பள்ளி அளைபெய் தட்ட
வானிணம் உருக்கிய வாஅல் வெண்சோறு
புகரரைத் தேக்கின் அகலிலை மாந்தும்
கல்லா நீண்மொழிக் கதநாய் வடுகர்
வல்லாண் அருமுனை நீந்தி அல்லாந்து
உகுமணூ றஞ்சும் ஒருகாற் பட்டத்
தின்னா ஏற்றத் திழுக்கி முடங்கூர்ந்
தொருதனித் தொழிந்த உரனுடை நோன்பக
டங்குழை இருப்பை அறைவாய் வான்புழல்
புல்லுளைச் சிறாஅர் வில்லின் நீக்கி
மரைகடிந் தூட்டும் வரையகச் சீறூர்
மாலை இன்றுணை யாகிக் காலைப்

*பசுநனை நறுவீப் பரூஉப்பர லுறைப்ப*
*மணமனை கமழும் கானம்*
*துணையீ ரோதியென் தோழியும் வருமே* **(அகம். 107)**

தோழி தலைமகள் குறிப்பறிந்து வந்து தலைமகற்குச் சொல்லியது. 303

## பாலைபாடிய பெருங்கடுங்கோ

*உள்ளாங் குவத்தல் செல்லார் கறுத்தோர்*
*எள்ளல் நெஞ்சத் தேஎச்சொல் நாணி*
*வருவர் வாழி தோழி யரச*
*யானை கொண்ட துகிற்கொடி போல*
*அலந்தலை ஞெமையத்து வலந்த சிலம்பி*
*ஓடைக் குன்றத்துக் கோடையொடு துயல்வர*
*மழையென மருண்ட மம்மர் பலவுடன்*
*ஓய்களி றெடுத்த நோயுடை நெடுங்கை*
*தொகுசொற் கோடியர் தூம்பின் உயிர்க்கும்*
*அத்தக் கேழல் அட்ட நற்கோள்*
*செந்நாய் ஏற்றை கம்மென ஈர்ப்பக்*
*குருதி யாரும் எருவைச் செஞ்செவி*
*மண்டம ரழுவத் தெல்லிக் கொண்ட*
*புண்தேர் விளக்கின் தோன்றும்*
*விண்தோய் பிறங்கல் மலையிறந் தோரே* **(அகம். 111)**

தலைமகன் பிரிவின்கண் தோழி தலைமகளை ஆற்றுவித்தது. 304

## பரணர்

*அரம்போ ழவ்வளை தோணிலை நெகிழ*
*நிரம்பா வாழ்க்கை நேர்தல் வேண்டி*
*இரங்கா ழன்ன வரும்புமுதி ரீங்கை*
*ஆலி யன்ன வால்வீ தாஅய்*
*வைவா லோதி மையண லேய்ப்பத்*
*தாதுறு குவளைப் போதுபிணி யவிழப்*
*படாஅப் பைங்கண் பாவடிக் கயவாய்க்*

கடாஅ மாறிய யானை போலப்
பெய்துவறி தாகிய பொங்குசெலற் கொண்மூ
மைதோய் விசும்பின் மாதிரத் துழிதரப்
பனியடூஉ நின்ற பானாட் கங்குற்
றமியோர் மதுகை தூக்காய் தண்ணென
முனிய வலைத்தி முரணில் காலைக்
கைதொழு மரபிற் கடவுட் சான்ற
செய்வினை மருங்கிற் சென்றோர் வல்வரின்
விரியுளைப் பொலிந்த பரியுடை நன்மான்
வெருவரு தானையொடு வேண்டுபுலத் திறுத்த
பெருவளக் கரிகால் முன்னிலைச் செல்லார்
சூடா வாகைப் பறந்தலை யாடுபெற
வொன்பது குடையு நன்பக லொழித்த
பீடின் மன்னர் போல
வோடுவை மன்னால் வாடைநீ யெமக்கே (அகம். 125)

தலைமகன் வினைமுற்றி மீண்டமை உணர்ந்தபோது தோழி தலைமகட்குச் சொல்லியது. 305

## மாமூலனார்

இலங்குவளை நெகிழச் சாஅய் அல்கலும்
கலங்கஞ ருழந்து நாமிவ ணொழிய
வலம்படு முரசிற் சேர லாதன்
முந்நீ ரோட்டிக் கடம்பறுத் திமயத்து
முன்னோர் மருள வணங்குவிற் பொறித்து
நன்னகர் மாந்தை முற்றத் தொன்னார்
பணிதிறை தந்த படுசா னன்கலம்
பொன்செய் பாவை வயிரமொ டாம்ப
லொன்றுவாய் நிறையக் குவைஇ யன்றவ
ணிலந்தினத் துறந்த நிதியத் தன்ன
வொருநா ளொருபகற் பெறினும் வழிநாட்
டங்கலர் வாழி தோழி செங்கோற்

*கருங்கான் மராத்து வாஅன் மெல்லிணர்*
*சுரிந்துவணர் பித்தை பொலியச் சூடிக்*
*கல்லா மழவர் வில்லிடந் தழீஇ*
*வருநர்ப் பார்க்கும் வெருவரு கவலை*
*மொழிபெயர் தேஎத்த ராயினும்*
*பழிதீர் காதலர் சென்ற நாட்டே* (அகம். 127)

பிரிவிடை ஆற்றாளாகிய தலைமகளைத் தோழி வற்புறுத்தியது. 306

## குடவாயிற் கீரத்தனார்

*உள்ளல் வேண்டு மொழிந்த பின்னென*
*நள்ளென் கங்குல் நடுங்குதுணை யாயவர்*
*நின்மறந் துறைதல் யாவது புன்மறந்*
*தலங்கல் வான்கழை யுதிர்நென் னோக்கிக்*
*கலைபிணை விளிக்குங் கானத் தாங்கண்*
*கல்சேர் பிருந்த கதுவாய்க் குரம்பைத்*
*தாழிமுதற் கலித்த கோழிலைப் பருத்திப்*
*பொதிவயிற் றிளங்காய் பேடை யூட்டிப்*
*போகில் பிளந்திட்ட பொங்கல் வெண்காழ்*
*நல்கூர் பெண்டிர் யல்கற் கூட்டுங்*
*கலங்குமுனைச் சீறூர் கைதலை வைப்பக்*
*கொழுப்பா தின்ற கூர்ம்படை மறவர்*
*செருப்புடை யடியர் தெண்சுனை மண்டு*
*மருஞ்சுர மரிய வல்ல வார்கோல்*
*திருந்திழைப் பணைத்தோள் தேனாறு கதுப்பிற்*
*குவளை யுண்க ணிவளொடு செலற்கென*
*நெஞ்சுவா யவிழ்ந்னர் காதல*
*ரஞ்சி லோதி யாயிழை நமக்கே* (அகம். 129)

பிரிவிடை வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது. 307

## உறையூர் முதுகூத்தனார்

*ஆறுசெல் வம்பலர் சேறுகிளைத் துண்ட*
*சிறுபல் கேணிப் பிடியடி நசைஇக்*

களிறுதொடூஉக் கடக்குங் கான்யாற் றத்தஞ்
சென்றுசேர் பொல்லா ராயினு நினக்கே
வென்றெறி முரசின் விறற்போர்ச் சோழ
ரின்கடுங் கள்ளி னுறந்தை யாங்கண்
வருபுன னெரிதரு மிகுகரைப் பேரியாற்
றுருவ வெண்மணன் முருகுநாறு தண்பொழிற்
பங்குனி முயக்கங் கழிந்த வழிநாள்
வீயிலை யமன்ற மரம்பயி லிறும்பிற்
றீயி லடுப்பி னரங்கம் போலப்
பெரும்பாழ் கொண்டன்று நுதலே தோளுந்
தோளா முத்திற் றெண்கடற் பொருநன்
றிண்டேர்ச் செழியன் பொருப்பிற் கவாஅ
னல்லெழி னெடுவேய் புரையுந்
தொல்கவின் றொலைந்தன நோகோ யானே **(அகம். 137)**

தலைமகன் பிரியுமெனக் கருதி வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது. 308

## ஆலம்பேரி சாத்தனார்

செய்வினைப் பிரித லெண்ணிக் கைம்மிகக்
காடுகவி னொழியக் கடுங்கதிர் தெறுதலி
னீடுசினை வறிய வாக வொல்லென
வாடுபல் லகலிலை கோடைக் கொய்யுந்
தேக்கம லடுக்கத் தாங்கண் மேக்கெழுபு
முளியரிற் பிறந்த வளிவளர் கூரெரிச்
சுடர்நிமிர் நெடுங்கொடி விடர்முகை முழங்கும்
வெம்மலை யருஞ்சுர நீந்தி யைய
சேறு மென்ற சிறுசொற் கிவட்கே
வசையில் வெம்போர் வானவன் மறவ
னசையின் வாழ்நர்க்கு நன்கலஞ் சுரக்கும்
பொய்யா வாய்வாட் புனைகழற் பிட்டன்
மைதவ ழுயர்சிமைக் குதிரைக் கவாஅ
னகலறை நெடுஞ்சுனைத் துவலையின் மலர்ந்த

*தண்கமழ் நீலம் போலக்*
*கண்பனி கலுழ்ந்தன நோகோ யானே* **(அகம். 143)**

பொருள்வயிற் பிரியக்கருதிய தலைமகனைத் தோழி தலைமகளது ஆற்றாமை கண்டு செலவழுங்குவித்தது. 309

## ஆவூர்க்காவிதிகள் சாதேவனார்

*தெண்கழி விளைந்த வெண்க லுப்பின்*
*கொள்ளை சாற்றிய கொடுநுக வொழுகை*
*உரனுடைச் சுவல பகடுபல பரப்பி*
*உமணுயிர்த் திறந்த வொழிக லடுப்பின்*
*வடியுறு பகழிக் கொடுவி லாடவர்*
*அணங்குடை நோன்சிலை வணங்க வாங்கிப்*
*பல்லான் நெடுநிரை தழீஇக் கல்லென*
*வருமுனை யலைத்த பெரும்புகல் வலத்தர்*
*கனைகுரற் கடுந்துடிப் பாணி தூங்கி*
*உவலைக் கண்ணிய ருன்புழுக் கயரும்*
*கவலைக் காதல ரிறந்தன ரெனநனி*
*அவலங் கொள்ளன்மா காதலந் தோழி*
*விசும்பின் நல்லேறு சிலைக்குஞ் சேட்சிமை*
*நறும்பூஞ் சாரற் குறும்பொறைக் குணாஅது*
*வில்கெழு தடக்கை வெல்போர் வானவன்*
*மிஞிறுமூசு கவுள சிறுகண் யானைத்*
*தொடியுடைத் தடமருப் பொடிய நூறிக்*
*கொடுமுடி காக்குங் குரூஉக்க ணெடுமதிற்*
*சேண்விளங்கு சிறப்பி னாமூ ரெய்தினும்*
*ஆண்டமைந் துறையுந ரல்லர்நின்*
*பூண்தாங் காகம் பொருந்துதல் மறந்தே* **(அகம். 159)**

பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீஇயது. 310

## மதுரைப் புல்லங்கண்ணனார்

*வினைவயிற் பிரிதல் யாவது வணர்சுரி*
*வடியாப் பித்தை வண்க ணாடவர்*
*அடியமை பகழி யார வாங்கி*
*வம்பலர் செகுத்த வஞ்சுவரு கவலைப்*
*படுமுடை நசைஇய வாழ்க்கைச் செஞ்செவி*
*யெருவைச் சேவ லீண்டுகிளை பயிரும்*
*வெருவரு கான நீந்திப் பொருள்புரிந்*
*திறப்ப வெண்ணினி ரென்பது சிறப்பக்*
*கேட்டனள் கொல்லோ தானே தோட்டாழ்பு*
*சுரும்புண வொலிவரு மிரும்பல் கூந்தல்*
*அம்மா மேனி யாயிழைக் குறுமகள்*
*சுணங்குசூ ழாகத் தணங்கென வுருத்த*
*நல்வர விளமுலை நனையப்*
*பல்லித ழுண்கண் பரந்தன பனியே* **(அகம். 161)**

பிரிவுணர்த்திய தோழி தலைமகளது வேறுபாடுகண்டு முன்னமே உணர்ந்தாள் நம் பெருமாட்டியென்று தலைமகனைச் செலவு விலக்கியது. 311

## கல்லாடனார்

*நுதலு நுண்பசப் பிவருந் தோளும்*
*அகன்மலை யிறும்பி னாய்ந்துகொண் டறுத்த*
*பணையெழி லழிய வாடு நாளு*
*நினைவன் மாதவர் பண்பென் றோவா*
*தினையல் வாழி தோழி புணர்வர்*
*இலங்குகோ லாய்தொடி நெகிழப் பொருள்புரிந்*
*தலந்தலை ஞெமையத் ததரடைந் திருந்த*
*மால்வரைச் சீறூர் மருள்பன் மாக்கள்*
*கோள்வ லேற்றை யேர்சை யோர்மார்*
*திருத்திக் கொண்ட வம்பினர் நோன்சிலை*
*எருத்தத் திரீஇ யிடந்தொறும் படர்தலிற்*
*கீழ்ப்படு தார முண்ணா மேற்சினைப்*

பழம்போற் சேற்ற தீம்புழ லுணீஇய
கருகோட் டிருப்பை யூரும்
பெருங்கை யெண்கின் சுரனிறந் தோரே (அகம். 171)

தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீஇயது. 312

## முள்ளியூர்ப்பூதியார்

அறந்தலைப் பிரியா தொழுகலுஞ் சிறந்த
கேளிர் கேடுபல வூன்றலு நாளும்
வருந்தா வுள்ளமொ டிருந்தோர்க் கில்லெனச்
செய்வினை புரிந்த நெஞ்சினர் நறுநுதன்
மையீ ரோதி யரும்பட ருழத்தல்
சின்னாட் டாங்கல் வேண்டு மென்றுநின்
நன்மா ணெல்வளை திருத்தின ராயின்
வருவர் வாழி தோழி பலபுரி
வார்கயிற் றொழுகை நோன்சுவற் கொளீஇப்
பகடுதுறை யேற்றத் துமண்விளி வெரீஇ
உழைமா னம்பிணை யினனிரிந் தோடக்
காடுகவி னழிய வுரைஇக் கோடை
நின்றுதின விளிந்த வம்பணை நெடுவேய்க்
கண்விடத் தெறிக்கு மண்ணா முத்தங்
கழங்குறா தோன்றல பழங்குழித் தாஅம்
இன்களி நறவி னியறேர் நன்னன்
விண்பொரு நெடுவரைக் கவாஅற்
பொன்படு மருங்கின் மலையிறந் தோரே (அகம். 173)

தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது. 313

## செயலூர் இளம்பொன் சாத்தன் கொற்றனார்

தொன்னலஞ் சிதையச் சாஅ யல்கலும்
இன்னும் வாரா ரினியெவன் செய்கெனப்
பெரும்புலம் புறுத லோம்புமதி சிறுகண்
இரும்பிடித் தடக்கை மான நெய்யருந்து

ஒருங்குபிணித் தியன்ற வெறிகொ ளைம்பாற்
றேங்கமழ் வெறிமலர் பெய்ம்மார் காண்பின்
கழையமல் சிலம்பின் வழைதலை வாடக்
கதிர்கதங் கற்ற வேக னெறியிடைப்
பைங்கொடிப் பாகற் செங்கனி நசைஇக்
கான மஞ்ஞைக் கமஞ்சூன் மாப்பெடை
யயிரியாற் றடைகரை வயிரி னாலுங்
காடிறந் தகன்றோர் நீடின ராயினும்
வல்லே வருவர் போலும் வென்வேல்
இலைநிறம் பெயர வோச்சி மாற்றோர்
மலைமருள் யானை மண்டம ரொழித்த
கழற்காற் பண்ணன் காவிரி வடவயின்
நிழற்கயந் தழீஇய நெடுங்கால் மாவின்
தளிரே ராகந் தகைபெற முகைந்த
அணங்குடை வனமுலைத் தாஅயநின்
சுணங்கிடை வரித்தல் தொய்யிலை நினைந்தே **(அகம். 177)**

பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது. 314

## கொடிமங்கலத்து வாதுளி நற்சேந்தனார்

விண்டோய் சிமைய விறல்வரைக் கவாஅன்
வெண்டே ரோடுங் கடங்காய் மருங்கிற்
றுனையெரி பரந்த துன்னரும் வியன்காட்டுச்
சிறுகண் யானை நெடுங்கை நீட்டி
வான்வாய் திறந்தும் வண்புனல் பெறாஅது
கான்புலந் கழியுங் கண்ணகன் பரப்பின்
விடுவாய்ச் செங்கணைக் கொடுவி லாடவர்
நன்னிலை பொறித்த கன்னிலை யதர
அரம்புகொள் பூசல் களையுநர்க் காணாச்
சுரஞ்செல விரும்பினி ராயி னின்னகை
முருந்தெனத் திரண்ட முள்ளெயிற்றுத் துவர்வாய்க்
குவளை நாண்மலர் புரையு முண்கணிம்

மதியேர் வாணுதல் புலம்பப்
பதிபெயர்ந் துறைத லொல்லுமோ நுமக்கே (அகம். 179)

பிரிவுணர்த்திய தலைமகற்குத் தோழி செலவழுங்கச் சொல்லியது. 315

## மாமூலனார்

மாமலர் வண்ணம் இழந்த கண்ணும்
பூநெகிழ் அணையிற் சாஅய தோளும்
நன்னர் மாக்கள் விழைவனர் ஆய்ந்த
தொல்நலம் இழந்த துயரமொடு என்னதூஉம்
இனையல் வாழி தோழி முனையெழ
முன்னுவர் ஓட்டிய முரண்மிகு திருவின்
மறமிகு தானைக் கண்ணன் எழினி
தேமுது குன்றம் இறந்தன ராயினும்
நீடலர் யாழநின் நிரைவளை நெகிழத்
தோள்தாழ்பு இருளிய குவையிருங் கூந்தல்
மடவோள் தழீஇய விறலோன் மார்பில்
புன்தலைப் புதல்வன் ஊர்பிழிந் தாங்குக்
கடுஞ்சூல் மடப்பிடி தழீஇய வெண்கோட்டு
இனஞ்சால் வேழங் கன்றூர்பு இழிதரப்
பள்ளி கொள்ளும் பனிச்சுரம் நீந்தி
ஒள்ளிணர்க் கொன்றை ஓங்குமலை அத்தம்
வினைவலி யுறூஉம் நெஞ்சமொடு
இனைய ராகிநப் பிரிந்திசி னோரே (அகம். 197)

பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீஇயது. 316

## மாமூலனார்

அம்ம வாழி தோழி பொன்னின்
அவிரெழில் நுடங்கும் அணிகிளர் ஓடை
வினைநவில் யானை விறல்போர்ப் பாண்டியன்
புகழ்மலி சிறப்பிற் கொற்கை முன்துறை
அவிர்கதிர் முத்தமொடு வலம்புரி சொரிந்து

தழையணிப் பொலிந்த கோடேந்து அல்குல்
பழையர் மகளிர் பனித்துறைப் பரவப்
பகலோன் மறைந்த அந்தி ஆரிடை
உருகெழு பெருங்கடல் உவவுக்கிளர்ந் தாங்கு
அலரும் மன்றுபட் டன்றே அன்னையும்
பொருந்தாக் கண்ணள் வெய்ய உயிர்க்குமென்று
எவன்கை அற்றனை இகுளை சோழர்
வெண்ணெல் வைப்பின் நல்நாடு பெறினும்
ஆண்டமைந்து உறைநர் அல்லர் முனாஅது
வான்புகு தலைய குன்றத்துக் கவாஅன்
பெருங்கை எண்கின் பேழ்வாய் ஏற்றை
இருள்துணிந் தன்ன குவவுமயிர்க் குருளை
தோன்முலைப் பிணவொடு திளைக்கும்
வேனில் நீடிய சுரன்இறந் தோரே (அகம். 201)

பிரிவிடை வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது. 317

## கல்லாடனார்

தோளும் தொல்கவின் தொலைந்தன நாளும்
அன்னையும் அருந்துய ருற்றனள் அலரே
பொன்னணி நெடுந்தேர்த் தென்னர் கோமான்
எழுவுறழ் திணிதோள் இயல்தேர்ச் செழியன்
நேரா எழுவ ரடிப்படக் கடந்த
ஆலங் கானத்து ஆர்ப்பினும் பெரிதென
ஆழல் வாழி தோழி அவரே
மாஅல் யானை மறப்போர்ப் புல்லி
காம்புடை நெடுவரை வேங்கடத் தும்பர்
அறையிறந்து அகன்றன ராயினும் நிறையிறந்து
உள்ளா ராதலோ அரிதே செவ்வேல்
முள்ளூர் மன்னன் கழல்தொடிக் காரி
செல்லா நல்லிசை நிறுத்த வல்வில்
ஓரிக் கொன்று சேரலர்க் கீத்த

செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லி
நிலைபெறு கடவு ளாக்கிய
பலர்புகழ் பாவை அன்னநின் நலனே (அகம். 209)

பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீஇயது. 318

## மாமூலனார்

கேளாய் எல்ல தோழி வாலிய
சுதைவிரிந் தன்ன பல்பூ மராஅம்
பறைகண் டன்ன பாவடி நோன்தாள்
திண்ணிலை மருப்பின் வயக்களிறு உரிஞுதொறும்
தண்மழை ஆலியில் தாஅய் உழவர்
வெண்ணெல் வித்தின் அறைமிசை உணங்கும்
பனிபடு சோலை வேங்கடத் தும்பர்
மொழிபெயர் தேஎத்த ராயினும் நல்குவர்
குழியிடைக் கொண்ட கன்றுடைப் பெருநிரை
பிடிபடு பூசலின் எய்தா தொழியக்
கடுஞ்சின வேந்தன் ஏவலின் எய்தி
நெடுஞ்சேண் நாட்டில் தலைத்தார்ப் பட்ட
கல்லா எழினி பல்லெறிந் தழுத்திய
வன்கண் கதவின் வெண்மணி வாயில்
மத்தி நாட்டிய கல்கெழு பனித்துறை
நீரொலித் தன்ன பேஎர்
அலர்நமக் கொழிய அழப்பிரிந் தோரே (அகம். 211)

பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளது வேறுபாடு கண்டு தோழி சொல்லியது. 319

## தாயங்கண்ணனார்

வினைநவில் யானை விறற்போர்த் தொண்டையர்
இனமழை தவழும் ஏற்றரு நெடுங்கோட்டு
ஓங்குவெள் ளருவி வேங்கடத்து உம்பர்க்
கொய்குழை அதிரல் வைகுபுல ரலரி
சுரியிரும் பித்தை சுரும்புபடச் சூடி

இகல்முனைத் தரீஇய ஏறுடைப் பெருநிரை
நனைமுதிர் நறவின் நாள்பலி கொடுக்கும்
வால்நிணப் புகவின் வடுகர் தேஎத்து
நிழற்கவின் இழந்த நீரில் நீளிடை
அழலவி ரருஞ்சுரம் நெடிய என்னாது
அகற லாய்ந்தன ராயினும் பகல்செலப்
பல்கதிர் வாங்கிய படுசுட ரமையத்துப்
பெருமரம் கொன்ற கால்புகு வியன்புனத்து
எரிமருள் கதிர திருமணி இமைக்கும்
வெல்போர் வானவன் கொல்லிக் குடவரை
வேயொழுக் கன்ன சாயிறைப் பணைத்தோட்
பெருங்கவின் சிதைய நீங்கி ஆன்றோர்
அரும்பெறல் உலகம் அமிழ்தொடு பெறினும்
சென்றுதாம் நீடலோ இலரே என்றும்
கலம்பெயக் கவிழ்ந்த கழல்தொடித் தடக்கை
வலம்படு வென்றி வாய்வாட் சோழர்
இலங்குநீர்க் காவிரி இழிபுனல் வரித்த
அறலென நெறிந்த கூந்தல்
உறலின் சாயலொடு ஒன்றுதல் மறந்தே (அகம். 213)

பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீஇயது. 320

## இறங்குகுடிக் குன்றநாடனார்

விலங்கிருஞ் சிமையக் குன்றத் தும்பர்
வேறுபன் மொழிய தேஎம் முன்னி
வினைநசைஇப் பரிக்கும் உரன்மிகு நெஞ்சமொடு
புனைமாண் எஃகம் வலவயின் ஏந்திச்
செலன்மாண்பு உற்ற நும்வயின் வல்லே
வலனாகு என்றலும் நன்றுமற் றில்ல
கடுத்தது பிழைக்குவ தாயின் தொடுத்த
கைவிரல் கவ்வுங் கல்லாக் காட்சிக்
கொடுமரம் பிடித்த கோடா வன்கண்

*வடிநவில் அம்பின் ஏவ லாடவர்*
*ஆளழித் துயர்த்த அஞ்சுவரு பதுக்கைக்*
*கூர்நுதிச் செவ்வாய் எருவைச் சேவல்*
*படுபிணப் பைந்தலை தொடுவன குழீஇ*
*மல்லன் மொசிவிரல் ஒற்றி மணிகொண்டு*
*வல்வாய்ப் பேடைக்குச் சொரியும் ஆங்கண்*
*கழிந்தோர்க்கு இரங்கு நெஞ்சமொடு*
*ஒழிந்திவண் உறைத லாற்று வோர்க்கே* **(அகம். 215)**

செலவுணர்த்திய தோழி தலைமகள் குறிப்பறிந்து தலைமகனைச் செலவழுங்குவித்தது.

321

## கயமனார்

*நனைவிளை நறவின் தேறல் மாந்திப்*
*புனைவினை நல்லில் தருமணற் குவைஇப்*
*பொம்மல் ஓதி எம்மகள் மணனென*
*வதுவை அயர்ந்தனர் நமரே அதனால்*
*புதுவது புனைந்த சேயிலை வெள்வேல்*
*மதியுடம் பட்ட மையணற் காளை*
*வாங்குசினை மலிந்த திரளரை மராஅத்துத்*
*தேம்பாய் மெல்லிணர் தளிரொடு கொண்டுநின்*
*தண்ணறும் முச்சி புனைய அவனொடு*
*கழைகவின் போகிய மழையுயர் நனந்தலைக்*
*களிற்றிரை பிழைத்தலிற் கயவாய் வேங்கை*
*காய்சினஞ் சிறந்து குழுமலின் வெரீஇ*
*இரும்பிடி யிரியுஞ் சோலை*
*அருஞ்சுரம் சேறல் அயர்ந்தனென் யானே* **(அகம். 221)**

தலைமகற்குப் போக்குடன்பட்ட தோழி தலைமகட்குப் போக்குடன்படச் சொல்லியது.

322

## பாலைபாடிய பெருங்கடுங்கோ

*பிரிதல் வல்லியர் இதுநத் துறந்தோர்*
*மறந்தும் அமைகுவர் கொல்லென் றெண்ணி*

ஆழல் வாழி தோழி கேழல்
வளைமருப் புறழு முளைநெடும் பெருங்காய்
நனைமுதிர் முருக்கின் சினைசேர் பெருங்கல்
காய்சினக் கடுவளி எடுத்தலின் வெங்காட்டு
அழல்பொழி யானையின் ஐயெனத் தோன்றும்
நிழலில் ஓமை நீரில் நீளிடை
இறந்தன ராயினுங் காதலர் நம்வயின்
மறந்துகண் படுதல் யாவது புறந்தாழ்பு
அம்பணை நெடுந்தோட் டங்கித் தும்பி
அரியினங் கடுக்குஞ் சுரிவணர் ஐம்பால்
நுண்கே ழடங்க வாரிப் பையுள்கெட
நன்முகை அதிரற் போதொடு குவளைத்
தண்ணறுங் கமழ்தொடை வேய்ந்தநின்
மண்ணார் கூந்தல் மரீஇய துயிலே (அகம். 223)

பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது. 323

## நக்கீரர்

நுதல்பசந் தன்றே தோள்சா யினவே
திதலை யல்குல் வரியும் வாடின
என்னா குவள்கொல் இவளெனப் பன்மாண்
நீர்மலி கண்ணொடு நெடிதுநினைந் தொற்றி
இனையல் வாழி தோழி நனைகவுட்
காய்சினஞ் சிறந்த வாய்புகு கடாத்தொடு
முன்னிலை பொறாஅது முரணிப் பொன்னிணர்ப்
புலிக்கேழ் வேங்கைப் பூஞ்சினை புலம்ப
முதல்பாய்ந் திட்ட முழுவலி யொருத்தல்
செந்நிலப் படுநீ றாடிச் செருமலைந்து
களங்கொள் மள்ளரின் முழங்கும் அத்தம்
பலவிறந் தகன்றன ராயினும் நிலைஇ
நோயில ராகநங் காதலர் வாய்வாட்
டமிழகப் படுத்த இமிழிசை முரசின்

*வருநர் வரையாப் பெருநா ளிருக்கை*
*தூங்கல் பாடிய ஓங்குபெரு நல்லிசைப்*
*பிடிமிதி வழுதுணைப் பெரும்பெயர்த் தழும்பன்*
*கடிமதில் வரைப்பின் ஊனூர் உம்பர்*
*விழுநிதி துஞ்சும் வீறுபெறு திருநகர்*
*இருங்கழிப் படப்பை மருங்கூர்ப் பட்டினத்து*
*எல்லுமிழ் ஆவணத் தன்ன*
*கல்லென் கம்பலை செய்தகன் றோரே* **(அகம். 227)**

தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது. 324

## மதுரை ஈழத்துப் பூதன்தேவனார்

*செறுவோர் செம்மல் வாட்டலுஞ் சேர்ந்தோர்க்கு*
*உறுமிடத் துய்க்கும் உதவி யாண்மையும்*
*இல்லிருந் தமைவோர்க் கில்லென் றெண்ணி*
*நல்லிசை வலித்த நாணுடை மனத்தர்*
*கொடுவிற் கானவர் கணையிடத் தொலைந்தோர்*
*படுகளத் துயர்த்த மயிர்த்தலைப் பதுக்கை*
*கள்ளியம் பறந்தலைக் களர்தொறுங் குழீஇ*
*யுள்ளுநர்ப் பனிக்கும் ஊக்கருங் கடத்திடை*
*வெஞ்சுரம் இறந்தனர் ஆயினும் நெஞ்சுருக*
*வருவர் வாழி தோழி பொருவர்*
*செல்சமங் கடந்த செல்லா நல்லிசை*
*விசும்பிவர் வெண்குடைப் பசும்பூட் பாண்டியன்*
*பாடுபெறு சிறப்பிற் கூடல் அன்னநின்*
*ஆடுவண் டரற்று முச்சித்*
*தோடார் கூந்தன் மரீஇ யோரே* **(அகம். 231)**

தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது. 325

## மாமூலனார்

*அலமரல் மழைக்கண் மல்குபனி வாரநின்*
*அலர்முலை நனைய அழாஅல் தோழி*

எரிகவர் புண்ட கரிபுறப் பெருநிலம்
பீடுகெழு மருங்கின் ஓடுமழை துறந்தென
ஊனில் யானை உயங்கும் வேனில்
மறப்படைக் குதிரை மாறா மைந்தின்
துறக்கம் எய்திய தொய்யா நல்லிசை
முதியர்ப் பேணிய உதியஞ் சேரல்
பெருஞ்சோறு கொடுத்த ஞான்றை இரும்பல்
கூளிச் சுற்றங் குழீஇயிருந் தாங்குக்
குறியவும் நெடியவுங் குன்றுதலை மணந்த
சுரனிறந் தகன்றன ராயினும் மிகநனி
மடங்கா உள்ளமொடு மதிமயக் குறாஅப்
பொருள்வயின் நீடலோ இலர்நின்
இருளைங் கூந்தல் இன்றுயின் மறந்தே (அகம். 233)

பிரிவின்கண் வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது. 326

## தாயங்கண்ணனார்

புன்காற் பாதிரி அரிநிறத் திரள்வீ
நுண்கொடி யதிரலோடு நுணங்கறல் வரிப்ப
அரவெயிற் றன்ன அரும்புமுதிர் குரவின்
தேனிமிர் நறுஞ்சினைத் தென்றல் போழக்
குயில்குரல் கற்ற வேனிலுந் துயில்துறந்து
இன்னா கழியுங் கங்கு லென்றுநின்
நன்மா மேனி யணிநலம் புலம்ப
இனைதல் ஆன்றிசின் ஆயிழை கனைதிறற்
செந்தீ அணங்கிய செழுநிணக் கொழுங்குறை
மென்றினைப் புன்கம் உதிர்த்த மண்டையொடு
இருங்கதிர் அலமருங் கழனிக் கரும்பின்
விளைகழை பிழிந்த அந்தீஞ் சேற்றொடு
பால்பெய் செந்நெற் பாசவற் பகுக்கும்
புனல்பொரு புதவின் உறந்தை யெய்தினும்
வினைபொரு ளாகத் தவிர்விலர் கடைசிவந்து

*ஐய அமர்த்த உண்கணின்*
*வையேர் வாலெயி றூறிய நீரே* (அகம். 237)

தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீஇயது. 327

## மாமூலனார்

*தூதும் சென்றன தோளுஞ் செற்றும்*
*ஓதி யொண்ணுதற் பசலையும் மாயும்*
*வீங்கிழை நெகிழச் சாஅய்ச் செல்லலொடு*
*நாம்படர் கூரும் அருந்துயர் கேட்பின்*
*நந்தன் வெறுக்கை யெய்தினும் மற்றவண்*
*தங்கலர் வாழி தோழி வெல்கொடித்*
*துனைகா லன்ன புனைதேர்க் கோசர்*
*தொன்மூ தாலத் தரும்பணைப் பொதியில்*
*இன்னிசை முரசங் கடிப்பிகுத் திரங்கத்*
*தெம்முனை சிதைந்த ஞான்றை மோகூர்*
*பணியா மையிற் பகைதலை வந்த*
*மாகெழு தானை வம்ப மோரியர்*
*புனைதேர் நேமி யுருளிய குறைத்த*
*இலங்குவெள் ளருவிய அறைவா யும்பர்*
*மாசில் வெண்கோட் டண்ணல் யானை*
*வாயுட் டப்பிய அருங்கேழ் வயப்புலி*
*மாநிலம் நெளியக் குத்திப் புகலொடு*
*காப்பில வைகுந் தேக்கமல் சோலை*
*நிரம்பா நீளிடைப் போகி*
*அரம்போழ் அவ்வளை நிலைநெகிழ்த் தோரே* (அகம். 251)

தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளது வேறுபாடுகண்டு தோழி சொல்லியது.
328

## நக்கீரர்

*வைகல் தோறும் பசலை பாயவென்*
*மெய்யும் பெரும்பிறி தாகின் றொய்யென*

அன்னையும் அமரா முகத்தினள் அலரே
வாடாப் பூவிற் கொங்க ரோட்டி
நாடுபல தந்த பசும்பூட் பாண்டியன்
பொன்மலி நெடுநகர்க் கூட லாடிய
இன்னிசை யார்ப்பினும் பெரிதே ஈங்கியான்
சிலநாள் உய்யலென் போன்மெனப் பலநினைந்து
ஆழல் வாழி தோழி வடாஅது
ஆரிருள் நடுநாள் ஏரா ஓய்யப்
பகைமுனை யறுத்துப் பல்லினஞ் சாஅய்க்
கணஞ்சால் கோவலர் நெடுவிளிப் பயிரறிந்து
இனந்தலைத் தரூஉந் துளங்கிமில் நல்லேற்றுத்
தழூஉப்பிணர் எருத்தந் தாழப் பூட்டிய
அந்தூம் பகலமைக் கமஞ்செலப் பெய்த
துறுகாழ் வல்சியர் தொழுவறை வௌவிக்
கன்றுடைப் பெருநிரை மன்றுநிறை தரூஉம்
நேரா வன்றோள் வடுகர் பெருமகன்
பேரிசை எருமை நன்னாட் டுள்ளதை
அயிரியா றிறந்தன ராயினு மயரிறந்து
உள்ளுப தில்ல தாமே பணைத்தோட்
குரும்பை மென்முலை அரும்பிய சுணங்கின்
நுசுப்பழித் தொலிவருந் தாழிருங் கூந்தல்
மாக விசும்பில் திலகமொடு பதித்த
திங்கள் அன்னநின் திருமுகத்து
ஒண்சூட் டவிர்குழை மலைந்த நோக்கே (அகம். 253)

தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது. 329

## கயமனார்

வேலும் விளங்கின வினைஞரு மியன்றனர்
தாருந் தையின தழையுந் தொடுத்தன
நிலநீ ரற்ற வெம்மை நீங்கப்
பெயனீர் தலைஇ உலவையிலை நீத்துக்
குறுமுறி யீன்றன மரனே நறுமலர்

*வேய்ந்தன போலத் தோன்றிப் பலவுடன்*
*தேம்படப் பொதுளின பொழிலே கானமும்*
*நனிநன் றாகிய பனீநீங்கு வழிநாட்*
*பாலெனப் பரத்தரு நிலவின் மாலைப்*
*போதுவந் தன்று தூதே நீயும்*
*கலங்கா மனத்தை யாகி யென்சொல்*
*நயந்தனை கொண்மோ நெஞ்சமர் தகுவி*
*தெற்றி யுலறினும் வயலை வாடினும்*
*நொச்சி மென்சினை வணர்குரல் சாயினும்*
*நின்னினும் மடவள் நனிநின் னயந்த*
*அன்னை யல்லல் தாங்கிநின் னையர்*
*புலிமருள் செம்மல் நோக்கி*
*வலியாய் இன்னுந் தோய்கநின் முலையே* **(அகம். 259)**

உடன்போக்கு நேர்ந்த தோழி தலைமகட்குச் சொல்லியது. 330

## மதுரை மருதனிளநாகனார்

*தொடிதோள் இவர்க எவ்வமுந் தீர்க*
*நெறியிருங் கதுப்பிற் கோதையும் புனைக*
*ஏறுடை யினநிரை பெயரப் பெயராது*
*செறிசுரை வெள்வேல் மழவர்த் தாங்கிய*
*தறுக ணாளர் நல்லிசை நிறுமார்*
*பிடிமடிந் தன்ன குறும்பொறை மருங்கின்*
*நட்ட போலும் நடாஅ நெடுங்கல்*
*அகலிடங் குயின்ற பல்பெயர் மண்ணி*
*நறுவிரை மஞ்சள் ஈர்ம்புறம் பொலிய*
*அம்புகொண் டறுத்த ஆர்நார் உரிவையிற்*
*செம்பூங் கரந்தை புனைந்த கண்ணி*
*வரிவண் டார்ப்பச் சூட்டிக் கழற்கால்*
*இளையர்பதிப் பெயரும் அருஞ்சுரம் இறந்தோர்*
*தைஇ நின்ற தண்பெயற் கடைநாள்*
*பொலங்காசு நிரைத்த கோடேந் தல்குல்*
*நலங்கேழ் மாக்குரல் குழையொடு துயல்வரப்*

*பாடூர் பெழுதரும் பகுவாய் மண்டிலத்து*
*வயிரிடைப் பட்ட தெள்விளி யியம்ப*
*வண்டற் பாவை உண்டுறைத் தரீஇத்*
*திருநுதன் மகளிர் குரவை அயரும்*
*பெருநீர்க் கானல் தழீஇய இருக்கை*
*வாணன் சிறுகுடி வணங்குகதிர் நெல்லின்*
*யாணர்த் தண்பணைப் போதுவா யவிழ்ந்த*
*ஒண்செங் கழுநீ ரன்னநின்*
*கண்பனி துடைமார் வந்தனர் விரைந்தே* **(அகம். 269)**

பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது. 331

## காவிரிப்பூம்பட்டினத்துச் செங்கண்ணனார்

*பொறிவரிப் புறவின் செங்காற் சேவல்*
*சிறுபுன் பெடையொடு சேட்புலம் போகி*
*அரிமண லியவிற் பரறேர்ந் துண்டு*
*வரிமரல் வாடிய வானீங்கு நனந்தலைக்*
*குறும்பொறை மருங்கிற் கோட்சுரம் நீந்தி*
*நெடுஞ்சேண் வந்த நீர்நசை வம்பலர்*
*செல்லுயிர் நிறுத்த சுவைக்காய் நெல்லிப்*
*பல்காய் அஞ்சினை யகவும் அத்தம்*
*சென்றுநீ ரவணி ராகி நின்றுதரும்*
*நிலையரும் பொருட்பிணி நினைந்தனி ரெனினே*
*வல்வ தாகநுஞ் செய்வினை யிவட்கே*
*களிமலி கள்ளில் நற்றே ரவியன்*
*ஆடியல் இளமழை சூடித் தோன்றும்*
*பழந்தூங்கு விடரகத் தெழுந்த காம்பின்*
*கண்ணிடை புரையும் நெடுமென் பணைத்தோள்*
*திருந்துகோ லாய்தொடி ஞெகிழின்*
*மருந்து முண்டோ பிரிந்துறை நாட்டே* **(அகம். 271)**

செலவுணர்த்திய தோழி தலைமகளது குறிப்பறிந்து தலைமகனைச் செலவழுங்கச் சொல்லியது. 332

## மதுரை மருதனிளநாகனார்

*நன்னெடுங் கதுப்பொடு பெருந்தோள் நீவிய*
*நின்னிவண் ஒழிதல் அஞ்சிய என்னினுஞ்*
*செலவுதலைக் கொண்ட பெருவிதுப் புறுவி*
*பல்கவர் மருப்பின் முதுமான் போக்கிச்*
*சில்லுணாத் தந்த சீறூர்ப் பெண்டிர்*
*திரிவயிற் றெவிட்டுஞ் சேட்புலக் குடிஞைப்*
*பைதல் மென்குரல் ஐதுவந் திசைத்தொறும்*
*போகுநர் புலம்பு மாறே ஏகுதற்கு*
*அரிய வாகுமென் னாமைக் கரிமரங்*
*கண்ணகை யிளங்குழை கான்முதற் கவினி*
*விசும்புடன் இருண்டு வெம்மை நீங்கப்*
*பசுங்கண் வானம் பாய்தளி பொழிந்தெனப்*
*புன்னுகும் பெடுத்த நன்னெடுங் கானத்து*
*ஊட்டுறு பஞ்சிப் பிசிர்பரந் தன்ன*
*வண்ண மூதாய் தண்ணிலம் வரிப்ப*
*இனிய வாகுக தணிந்தே*
*இன்னா நீப்பின் நின்னோடு செலற்கே* **(அகம். 283)**

உடன்போக்கு வலித்த தோழி தலைமகற்குச் சொல்லியது. 333

## காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார்

*ஒழியச் சென்மார் செல்ப வென்றுநாம்*
*அழிபட ருழக்கும் அவல நெஞ்சத்து*
*எவ்வம் இகந்துசேண் அகல வையெயிற்று*
*ஊனசைப் பிணவி னுறுபசி களைஇயர்*
*காடுதேர் மடப்பிணை யலறக் கலையி*
*னோடுகுறங் கறுத்த செந்நா யேற்றை*
*வெயில்புலந் திளைக்கும் வெம்மைய பயில்வரி*
*இரும்புலி வேங்கைக் கருந்தோ லன்ன*
*கல்லெடுத் தெறிந்த பல்கிழி யுடுக்கை*
*உலறுகுடை வம்பல ருயர்மர மேறி*

*ஏறுவேட் டெழுந்த இனந்தீ ரெருவை*
*ஆடுசெவி நோக்கும் அத்தம் பணைத்தோட்*
*குவளை யுண்க ணிவளும் நம்மொடு*
*வரூஉ மென்றனரே காதலர்*
*வாராய் தோழி முயங்குகம் பலவே* **(அகம். 285)**

உடன்போக்குடன்படுவித்த தோழி தலைமகட்குச் சொல்லியது. 334

## மாமூலனார்

*நிலம்நீ ரற்று நீள்சுனை வறப்பக்*
*குன்றுகோடு அகையக் கடுங்கதிர் தெறுதலின்*
*என்றூழ் நீடிய வேய்படு நனந்தலை*
*நிலவுநிற மருப்பின் பெருங்கை சேர்த்தி*
*வேங்கை வென்ற வெருவரு பணைத்தோள்*
*ஓங்கல் யானை உயங்கிமதம் தேம்பிப்*
*பன்மரம் ஒருசிறைப் பிடியொடு வதியும்*
*கல்லுடை அதர கானம் நீந்திக்*
*கடல்நீ ருப்பின் கணஞ்சால் உமணர்*
*உயங்குபகடு உயிர்ப்ப அசைஇ முரம்புஇடித்து*
*அகலிடம் குழித்த அகல்வாய்க் கூவல்*
*ஆறுசெல் வம்பலர் அசைவிட ஊறும்*
*புடையலம் கழல்கால் புல்லி குன்றத்து*
*நடையருங் கானம் விலங்கி நோன்சிலைத்*
*தொடையமை பகழித் துவன்றநிலை வடுகர்*
*பிழியார் மகிழர் கலிசிறந் தார்க்கும்*
*மொழிபெயர் தேஎம் இறந்தன ராயினும்*
*பழிதீர் மாணலந் தருகுவர் மாதோ*
*மாரிப் பித்திகத்து ஈரிதழ் புரையும்*
*அங்கலுழ் கொண்ட செங்கடை மழைக்கண்*
*மணங்கமழ் ஐம்பால் மடந்தைநின்*
*அணங்குநிலை பெற்ற தடமென் தோளே* **(அகம். 295)**

பிரிவிடை வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது. 335

## மதுரை ஈழத்துப் பூதன்தேவனார்

*சிறுநுதல் பசந்து பெருந்தோள் சாஅய்*
*அகலெழில் அல்குல் அவ்வரி வாடப்*
*பகலுங் கங்குலும் மயங்கிப் பையெனப்*
*பெயலுறு மலரிற் கண்பனி வார*
*ஈங்கிவள் உழக்கும் என்னாது வினைநயந்து*
*நீங்கல் ஒல்லுமோ ஐய வேங்கை*
*அடுமுரண் தொலைத்த நெடுநல் யானை*
*மையலங் கடாஅஞ் செருக்கி மதஞ்சிறந்து*
*இயங்குநர்ச் செகுக்கும் எய்படு நனந்தலைப்*
*பெருங்கை எண்கினம் குரும்பி தேரும்*
*புற்றுடைச் சுவர புதலிவர் பொதியிற்*
*கடவுள் போகிய கருந்தாட் கந்தத்து*
*உடனுறை பழைமையிற் றுறத்தல் செல்லாது*
*இரும்புறாப் பெடையொடு பயிரும்*
*பெருங்கல் வைப்பின் மலைமுத லாறே* **(அகம். 307)**

பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைமகனைச் செலவு விலக்கியது. 336

## மாமூலனார்

*இரும்பிடிப் பரிசிலர் போலக் கடைநின்று*
*அருங்கடிக் காப்பின் அகனகர் ஒருசிறை*
*எழுதி யன்ன திண்ணிலைக் கதவம்*
*கழுதுவழங் கரைநாள் காவலர் மடிந்தெனத்*
*திறந்துநப் புணர்ந்து நும்மிற் சிறந்தோர்*
*இம்மை யுலகத் தில்லெனப் பன்னாள்*
*பொம்மல் ஓதி நீவிய காதலொடு*
*பயந்தலை பெயர்ந்து மாதிரம் வெம்ப*
*வருவழி வம்பலர்ப் பேணிக் கோவலர்*
*மழவிடைப் பூட்டிய குழாஅய்த் தீம்புளி*
*செவியடை தீரத் தேக்கிலைப் பகுக்கும்*
*புல்லி நன்னாட் டும்பர்ச் செல்லருஞ்*

சுரமிறந் தேகினும் நீடலர்
அருண்மொழித் தேற்றிநம் அகன்றிசி னோரே (அகம். 311)

பிரிவின்கண் வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது. 337

## பாலைபாடிய பெருங்கடுங்கோ

இனிப்பிறி துண்டோ அஞ்சல் ஓம்பென
அணிக்கவின் வளர முயங்கி நெஞ்சம்
பிணித்தோர் சென்ற ஆறுநினைந் தல்கலுங்
குளித்துப்பொரு கயலிற் கண்பனி மல்க
ஐய வாக வெய்ய வுயிரா
இரவும் எல்லையும் படரட வருந்தி
அரவுநுங்கு மதியின் நுதலொளி கரப்பத்
தம்மல தில்லா நம்மிவண் ஒழியப்
பொருள்புரிந் தகன்றன ராயினும் அருள்புரிந்து
வருவர் வாழி தோழி பெரிய
நிதியஞ் சொரிந்த நீவி போலப்
பாம்பூன் தேம்பும் வறங்கூர் கடத்திடை
நீங்கா வம்பலர் கணையிடத் தொலைந்தோர்
வசிபடு புண்ணின் குருதி மாந்தி
ஒற்றுச்செல் மாக்களின் ஒடுங்கிய குரல
இல்வழிப் படூஉங் காக்கைக்
கல்லுயர் பிறங்கல் மலையிறந் தோரே (அகம். 313)

பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது. 338

## வடமோதங்கிழார்

மாக விசும்பின் மழைதொழில் உலந்தெனப்
பாஅய் அன்ன பகலிருள் பரப்பிப்
புகைநிற உருவின் அற்சிரம் நீங்கக்
குவிமுகை முருக்கின் கூர்நுனை வையெயிற்று
நகைமுக மகளிர் ஊட்டுகிர் கடுக்கும்
முதிராப் பல்லிதழ் உதிரப் பாய்ந்துடன்

மலருண் வேட்கையின் சிதர்சிதர்ந் துகுப்பப்
பொன்செய் கன்னம் பொலிய வெள்ளி
நுண்கோல் அறைகுறைந் துதிர்வன போல
அரவ வண்டினம் ஊதுதொறுங் குரவத்து
ஓங்குசினை நறுவீ கோங்கலர் உறைப்பத்
துவைத்தெழு தும்பித் தவிரிசை விளரி
உதைத்துவிடு நரம்பின் இம்மென இமிரும்
மானே முற்ற காமர் வேனில்
வெயிலவிர் புரையும் வீததை மராஅத்துக்
குயிலிடு பூசல் எம்மொடு கேட்ப
வருவே மென்ற பருவம் ஆண்டை
இல்லை கொல்லென மெல்ல நோக்கி
நினைந்தன மிருந்தன மாகநயந் தாங்கு
உள்ளிய மருங்கின் உள்ளம் போல
வந்துநின் றனரே காதலர் நந்துறந்து
என்னுழி யதுகொல் தானே பன்னாள்
அன்னையும் அறிவுற அணங்கி
நன்னுதற் பாஅய பசலை நோயே **(அகம். 317)**

தலைமகன் வரவுணர்ந்த தோழி தலைமகட்குச் சொல்லியது. 339

## எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார்

மணிவாய்க் காக்கை மாநிறப் பெருங்கிளை
பிணிவீழ் ஆலத் தலங்குசினை யேறிக்
கொடுவில் எயினர் குறும்பிற் கூக்குங்
கடுவினை மறவர் வில்லிடத் தொலைந்தோர்
படுபிணங் கவரும் பாழ்படு நனந்தலை
அணங்கென உருத்த நோக்கின் ஐயென
நுணங்கிய நுசுப்பின் நுண்கேழ் மாமைப்
பொன்வீ வேங்கைப் புதுமலர் புரைய
நன்னிறத் தெழுந்த சுணங்கணி வனமுலைச்
சுரும்பார் கூந்தற் பெருந்தோள் இவள்வயிற்

*பிரிந்தனிர் அகறல் சூழின் அரும்பொருள்*
*எய்துக மாதோ நுமக்கே கொய்தழைத்*
*தளிரேர் அன்ன தாங்கரும் மதுகையள்*
*மெல்லியள் இளையள் நனிபேர் அன்பினள்*
*செல்வேம் என்னும் நும்மெதிர்*
*ஒழிவேம் என்னும் ஒண்மையோ இலளே* **(அகம். 319)**

செலவுணர்த்திய தலைமகற்குத் தோழி செலவழுங்கச் சொல்லியது. 340

## பறநாட்டுப் பெருங்கொற்றனார்

*இம்மென் பேரலர் இவ்வூர் நம்வயிற்*
*செய்வோர் ஏச்சொல் வாடக் காதலர்*
*வருவர் என்பது வாய்வ தாக*
*ஐய செய்ய மதனில சிறியநின்*
*அடிநிலன் உறுதல் அஞ்சிப் பையத்*
*தடவரல் ஒதுக்கந் தகைகொள இயலிக்*
*காணிய வம்மோ கற்புமேம் படுவி*
*பலவுப்பல தடைஇய வேய்பயி லடுக்கத்து*
*யானைச் செல்லினம் கடுப்ப வானத்து*
*வயங்குகதிர் மழுங்கப் பாஅய்ப் பாம்பின்*
*பைபட இடிக்குங் கடுங்குரல் ஏற்றொடு*
*ஆலி யழிதுளி தலைஇக்*
*கால்வீழ்த் தன்றுநின் கதுப்புறழ் புயலே* **(அகம். 323)**

பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது. 341

## எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார்

*கொடுமுள் ஈங்கைச் சூரலொடு மிடைந்த*
*வான்முகை இறும்பின் வயவொடு வதிந்த*
*உண்ணாப் பிணவின் உயக்கம் தீரிய*
*தடமருப் பியானை வலம்படத் தொலைச்சி*
*வியலறை சிவப்ப வாங்கி முணங்குநிமிர்ந்து*
*புலவுப்புலி புரண்ட புல்சாய் சிறுநெறி*

*பயிலிருங் கானத்து வழங்கல் செல்லாது*
*பெருங்களிற் றினநிரை கைதொடூஉப் பெயரும்*
*தீஞ்சுளைப் பலவின் றொழுதி உம்பற்*
*பெருங்கா டிறந்தன ராயினும் யாழநின்*
*திருந்திழைப் பணைத்தோள் வருந்த நீடி*
*உள்ளா தமைதலோ இலரே நல்குவரை*
*மிகுபெயல் நிலைஇய தீநீர்ப் பொய்கை*
*அடையிறந் தவிழ்ந்த தண்கமழ் நீலம்*
*காலொடு துயல்வந் தன்னநின்*
*ஆயிதழ் மழைக்கண் அமர்த்த நோக்கே* **(அகம். 357)**

பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது. 342

## மாமூலனார்

*பனிவார் உண்கணும் பசந்த தோளும்*
*நனிபிறர் அறியச் சாஅய் நாளுங்*
*கரந்தனம் உறையும் நம்பண் பறியார்*
*நீடினர் மன்னோ காதலர் எனநீ*
*எவன்கை யற்றனை இகுளை அவரே*
*வான வரம்பன் வெளியத் தன்னநம்*
*மாணலந் தம்மொடு கொண்டனர் முனாஅது*
*அருஞ்சுரக் கவலை யசைஇய கோடியர்*
*பெருங்கல் மீமிசை இயமெழுந் தாங்கு*
*வீழ்பிடி கெடுத்த நெடுந்தாள் யானை*
*சூர்புகல் அடுக்கத்து மழைமாறு முழங்கும்*
*பொய்யா நல்லிசை மாவண் புல்லி*
*கவைக்கதிர் வரகின் யாணர்ப் பைந்தாள்*
*முதைச்சுவல் மூழ்கிய கான்சுடு குரூஉப்புகை*
*அருவித் துவலையொடு மயங்கும்*
*பெருவரை அத்தம் இயங்கி யோரே* **(அகம். 359)**

பிரிவிடை வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது. 343

## மதுரைப் பொன்செய் கொல்லன் வெண்ணாகனார்

நிரைசெலல் இவுளி விரைவுடன் கடைஇ
அகலிரு விசும்பிற் பகல்செலச் சென்று
மழுகுசுடர் மண்டிலம் மாமலை மறைய
பொழுதுகழி மலரிற் புனையிழை சாஅய்
அணையணைந் தினையை யாகல் கணையரைப்
புல்லிலை நெல்லிப் புகரில் பசுங்காய்
கல்லதர் மருங்கிற் கடுவளி யுதிர்ப்பப்
பொலஞ்செய் காசிற் பொற்பத் தாஅம்
அத்தம் நண்ணி அதர்பார்த் திருந்த
கொலைவெங் கொள்கைக் கொடுந்தொழின் மறவர்
ஆறுசென் மாக்கள் அருநிறத் தெறிந்த
எஃகுறு விழுப்புண் கூர்ந்தோர் எய்திய
வளைவாய்ப் பருந்தின் வள்ளுகிர்ச் சேவல்
கிளைதரு தெள்விளி கெழுமுடைப் பயிரும்
இன்னா வெஞ்சுரம் இறந்தோர் முன்னிய
செய்வினை வலத்த ராகி இவணயந்து
எய்தவந் தனரே தோழி மையெழில்
துணையேர் எதிர்மலர் உண்கண்
பிணையேர் நோக்கம் பெருங்கவின் கொளவே (அகம். 363)

பிரிவிடை வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது. 344

## மதுரை மருதனிளநாகனார்

திருந்திழை நெகிழ்ந்து பெருந்தோள் சாஅய்
அரிமதர் மழைக்கண் கலுழச் செல்வீர்
வருவீர் ஆகுதல் உரைமின் மன்னோ
பூக்கண் பறைந்த புன்தலைச் சிறாஅரொடு
அவ்வரி கொன்ற கறைசேர் வள்ளுகிர்ப்
பசைவிரல் புலைத்தி நெடிதுபிசைந் தூட்டிய
பூந்துகில் இமைக்கும் பொலன்காழ் அல்குல்
அவ்வரி சிதைய நோக்கி வெவ்வினைப்

பயிலரில் கிடந்த வேட்டுவிளி வெரீஇ
வரிப்புற இதலின் மணிக்கண் பேடை
நுண்பொறி அணிந்த எருத்தின் கூர்முள்
செங்கால் சேவல் பயிரு மாங்கண்
வில்லீண்டு அருஞ்சமம் ததைய நூறி
நல்லிசை நிறுத்த நாணுடை மறவர்
நிரைநிலை நடுகல் பொருந்தி இமையாது
இரைநசைஇக் கிடந்த முதுவாய்ப் பல்லி
சிறியது எற்றுவது ஆயின் பெரிய
ஓடை யானை உயர்ந்தோர் ஆயினும்
நின்றாங்குப் பெயரும் கானம்
சென்றோர் மன்என இருக்கிற் போர்க்கே **(அகம். 387)**

தலைமகளது குறிப்பறிந்து தோழி தலைமகனைச் செலவழுங்கச் சொல்லியது. 345

## மாமூலனார்

கோடுயர் பிறங்கற் குன்றுபல நீந்தி
வேறுபுலம் படர்ந்த வினைதரல் உள்ளத்து
ஆறுசெல் வம்பலர் காய்பசி தீரிய
இதைச்சுவற் கலித்த ஈரிலை நெடுந்தோட்டுக்
கவைக்கதிர் வரகின் கால்தொகு பொங்கழி
கவட்டடிப் பொருத பல்சினை உதிர்வை
அகன்கட் பாறைச் செவ்வயிற் றெறீஇ
வரியணி பணைத்தோள் வார்செவித் தன்னையர்
பண்ணை வெண்பழத் தரிசி ஏய்ப்பச்
சுழல்மரஞ் சொலித்த சுளகலை வெண்காழ்
தொடிமாண் உலக்கை ஊழிற் போக்கி
உரல்முகங் காட்டிய சுரைநிறை கொள்ளை
ஆங்கண் இருஞ்சுனை நீரொடு முகவாக்
களிபடு குழிசிக் கல்லடுப் பேற்றி
இணர்ததை கடுக்கை ஒண்டிய தாதிற்
குடவர் புழுக்கிய பொங்கவிழ்ப் புன்கம்
மதர்வை நல்லான் பாலொடு பகுக்கும்

*நிரைபல குழீஇய நெடுமொழிப் புல்லி*
*தேன்றூங்கு உயர்வரை நன்னாட் டும்பர்*
*வேங்கடம் இறந்தன ராயினும் ஆண்டவர்*
*நீடலர் வாழி தோழி தோடுகொள்*
*உருகெழு மஞ்ஞை ஒலிசீர் ஏய்ப்பத்*
*தகரம் மண்ணிய தண்ணறு முச்சிப்*
*புகரில் குவளைப் போதொடு தெரியிதழ்*
*வேனில் அதிரல் வேய்ந்தநின்*
*ஏமுறு புணர்ச்சி இன்துயில் மறந்தே* **(அகம். 393)**

பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது. 346

## எயினந்தை மகனார் இளங்கீரனார்

*சிமையக் குரல சாந்தருந்தி இருளி*
*இமையக் கானம் நாறுங் கூந்தல்*
*நன்னுதல் அரிவை இன்னுறல் ஆகம்*
*பருகு வன்ன காதல் உள்ளமொடு*
*திருகுபு முயங்கல் இன்றியவண் நீடார்*
*கடற்றடை மருங்கின் கணிச்சியிற் குழித்த*
*உடைக்கண் நீடமை ஊறல் உண்ட*
*பாடின் தெண்மணிப் பயங்கெழு பெருநிரை*
*வாடுபுலம் புக்கெனக் கோடுதுவைத் தகற்றி*
*ஒல்குநிலைக் கடுக்கை அல்குநிழல் அசைஇப்*
*பல்லான் கோவலர் கல்லாது ஊதும்*
*சிறுவெதிர்ந் தீங்குழற் புலம்புகொள் தெள்விளி*
*மையில் பளிங்கின் அன்ன தோற்றப்*
*பல்கோள் நெல்லிப் பைங்காய் அருந்தி*
*மெல்கிடு மடமரை ஓர்க்கும் அத்தம்*
*காய்கதிர் கடுகிய கவினழி பிறங்கல்*
*வேய்கண் உடைந்த சிமைய*
*வாய்படு மருங்கின் மலையிறந் தோரே* **(அகம். 399)**

தலைமகன் பிரிவின்கண் தலைமகளைத் தோழி வற்புறுத்தியது. 347

## ஓதலாந்தையார்

*மால்வெள் ளோத்திரத்து மையில் வாலிணர்*
*அருஞ்சுரஞ் செல்வோர் சென்னிக் கூட்டும்*
*அவ்வரை யிறக்குவை யாயின்*
*மைவரை நாட வருந்துவள் பெரிதே* (ஐங். 301)

பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைமகற்குச் சொல்லியது. 348

*அரும்பொருள் செய்வினை தப்பற்கு முரித்தே*
*பெருந்தோ ளரிவை தகைத்தற்கு முரியள்*
*செல்லா யாயினோ நன்றே*
*மெல்லம் புலம்ப விவளழப் பிரிந்தே* (ஐங். 302)

பொருள்வயிற் பிரியும் தலைமகன் பிரிவுடம்படுத்த வேண்டுமென்றானாக அவற்குத் தோழி சொல்லியது. 349

*புதுக்கலத் தன்ன கனிய வாலம்*
*போகினினைத் தடுக்கும் வேனி லருஞ்சுரம்*
*தண்ணிய வினிய வாக*
*எம்மொடுஞ் சென்மோ விடலை நீயே* (ஐங். 303)

சுரத்தருமைகூறி உடன்செலவு மறுக்கும் தலைமகற்குத் தோழி சொல்லியது. 350

*கல்லாக் கோவலர் கோலிற் றோண்டிய*
*ஆனீர்ப் பத்தல் யானை வெளவும்*
*கல்லதர்க் கவலை செல்லின் மெல்லியல்*
*புயனெடுங் கூந்தல் புலம்பும்*
*வயமான் றோன்றல் வல்லா தீமே* (ஐங். 304)

பொருள்வயிற் பிரியலுற்ற தலைமகற்குத் தோழி சொல்லியது. 351

*களிறு பிடிதழீஇப் பிறர்புலம் படராது*
*பசிதின வருந்தும் பைதறு குன்றத்துச்*
*சுடர்த்தொடிக் குறுமக ளினைய*
*எனைப்பயஞ் செய்யுமோ விடலைநின் செலவே* (ஐங். 305)

உடன்போக்கு ஒழித்துத் தனித்துச் செல்வலென்ற தலைமகற்குத் தோழி கூறியது. 352

*வெல்போர்க் குருசினீ வியன்சுர னிறப்பின்*
*பல்கா ழல்கு லவ்வரி வாடக்*
*குழலினு மினைகுவள் பெரிதே*
*விழவொலி கூந்தன் மாஅ யோளே* (ஐங். 306)

பிரியும் தலைமகற்குத் தோழி தலைமகள் பிரிவாற்றாமை கூறியது. 353

*ஞெலிகழை முழங்கழல் வயமா வெரூஉம்*
*குன்றுடை யருஞ்சுரஞ் செலவயர்ந் தனையே*
*நன்றில கொண்கநின் பொருளே*
*பாவை யன்னநின் றுணைப்பிரிந்து வருமே* (ஐங். 307)

பொருள்வயிற் பிரியக்கருதிய தலைமகன் அதன் சிறப்புக் கூறியவழித் தோழி அதனை இழித்துக் கூறியது. 354

*பல்லிருங் கூந்தன் மெல்லிய லோள்வயின்*
*பிரியா யாயினு நன்றே விரியிணர்க்*
*காலெறு ழொள்வீ தாஅய*
*முருகமர் மாமலை பிரிந்தெனப் பிரிமே* (ஐங். 308)

'பிரிவல்' என்ற தலைமகற்குத் தோழி, 'பிரியாதொழியப்பெறின் நன்று; பிரிவையாயின் இப்பருவத்து இம் மாமலை எங்களை விட்டுப்பிரிந்தால் பிரி' எனச் சொல்லியது. 355

*வேனிற் றிங்கள் வெஞ்சுர மிறந்து*
*செலவயர்ந் தனையா னீயே நன்று*
*நின்னயந் துறைவி கடுஞ்சூற் சிறுவன்*
*முறுவல் காண்டலி னினிதோ*
*இறுவரை நாடநீ யிறந்துசெய் பொருளே* (ஐங். 309)

'பொருள்வயிற் பிரிவல்' என்ற தலைமகற்குத் தோழி சொல்லியது. 356

*பொலம்பசும் பாண்டிற் காசுநிரை யல்குல்*
*இலங்குவளை மென்றோ ளிழைநிலை நெகிழப்*
*பிரிதல் வல்லுவை யாயின்*
*அரிதே விடலையிவ ளாய்நுதற் கவினே* (ஐங். 310)

பிரிகின்ற தலைமகற்குத் தோழி 'நீ நினைக்கின்ற கருமம் முடித்தாயாயினும் இவள் நலம் மீட்டற்கு அரிது' எனச் சொல்லிச் செலவழுங்குவித்தது. 357

*பாயல் கொண்ட பனிமலர் நெடுங்கட்*
*பூசல் கேளார் சேய ரென்ப*
*இழைநெகிழ் செல்ல லுறீஇக்*
*கழைமுதிர் சோலைக் காடிறந் தோரே* (ஐங். 315)

சொல்லாது தலைமகன் பிரிந்துழித் தலைமகள் வேறுபாடு கண்ட தோழி இரங்கிச் சொல்லியது. 358

*பொன்செய் பாண்டிற் பொலங்கல நந்தத்*
*தேரக லல்கு லவ்வரி வாட*
*இறந்தோர் மன்ற தாமே பிறங்குமலைப்*
*புல்லரை யோமை நீடிய*
*புலிவழங் கதர கானத் தானே* (ஐங். 316)

தலைமகள் மெலிவிற்கு நொந்து தலைமகன் பிரிவின்கண் தோழி கூறியது. 359

*அம்ம வாழி தோழி யவிழிணர்க்*
*கருங்கான் மராஅத்து வைகுசினை வான்பூ*
*அருஞ்சுரஞ் செல்லுந ரொழிந்தோ ருள்ள*
*இனிய கமழும் வெற்பின்*
*இன்னா தென்ப வவர்சென்ற வாறே* (ஐங். 331)

தலைமகன் பிரிந்துழி, 'செல்லும் வழியிடத்து மலையின் உளதாகிய நாற்றத்தால் நம்மை நினைத்து முடியச் செல்லார், மீள்வரோ?' எனக் கேட்ட தலைவிக்கு, 'அவர் முடியச் சென்றார்' என்பதறிந்து இரங்கி தோழி கூறியது. 360

*அத்தப் பலவின் வெயிறின் சிறுகாய்*
*அருஞ்சுரஞ் செல்வோ ரருந்தினர் கழியும்*
*காடுபின் னொழிய வந்தனர் தீர்கினிப்*
*பல்லித ழுண்கண் மடந்தைநின்*
*நல்லெழி லல்குல் வாடிய நிலையே* (ஐங். 351)

பிரிந்த தலைமகன் வரவு உணர்ந்த தோழி தலைமகட்குச் சொல்லியது. 361

*விழுத்தொடை மறவர் வில்லிடத் தொலைந்தோர்*
*எழுத்துடை நடுக லன்ன விழுப்பிணர்ப்*

*பெருங்கை யானை யிருஞ்சின முறைக்கும்*
*வெஞ்சுர மரிய வென்னார்*
*வந்தனர் தோழிநங் காத லோரே* (ஐங். 352)

இதுவுமது. 362

*எரிக்கொடிக் கவைஇய செவ்வரை போலச்*
*சுடர்ப்பூண் விளங்கு மேந்தெழி லகலம்*
*நீயினிது முயங்க வந்தனர்*
*மாயிருஞ் சோலை மலையிறந் தோரே* (ஐங். 353)

இதுவுமது. 363

*ஈர்ம்பிணவு புணர்ந்த செந்நா யேற்றை*
*மறியுடை மான்பிணை கொள்ளாது கழியும்*
*அரிய சுரன்வந் தனரே*
*தெரியிழை யரிவைநின் பண்புதர விரைந்தே* (ஐங். 354)

இதுவுமது. 364

*குரவ மலர மரவம் பூப்பச்*
*சுரனணி கொண்ட கானங் காணூஉ*
*அழுங்குக செய்பொருட் செலவென விரும்பிநின்*
*அங்கலிழ் மாமை கவின*
*வந்தனர் தோழிநங் காத லோரே* (ஐங். 357)

பொருள்வயிற் பிரிந்து ஆண்டு உறைகின்ற தலைமகன் குறித்த வரவுகண்டு கடிதின் மீண்டுவந்தமை தோழி தலைமகட்குச் சொல்லியது. 365

*கோடுயர் பன்மலை யிறந்தன ராயினும்*
*நீட விடுமோ மற்றே நீடுநினைந்து*
*துடைத்தொறுந் துடைத்தொறுங் கலங்கி*
*உடைத்தெழு வெள்ள மாகிய கண்ணே* (ஐங். 358)

தலைமகள் ஆற்றாமை கண்டு பிரிந்த தலைமகன் வந்தனனாகத் தோழி சொல்லியது.
366

*பதுக்கைத் தாய வொதுக்கருங் கவலைச்*
*சிறுகண் யானை யுறுபுகை நினையா*
*தியாங்குவந் தனையோ பூந்தார் மார்ப*
*அருள்புரி நெஞ்ச முய்த்தர*
*இருள்பொர நின்ற விரவி னானே* (ஐங். 362)

சேணிடைப் பிரிந்த தலைமகன் இடைநிலத்துத் தங்காது இரவின்கண் வந்துழித் தோழி சொல்லியது. 367

*முளவுமா வல்சி யெயினர் தங்கை*
*இளமா வெயிற்றிக்கு மிந்நிலை யறியச்*
*சொல்லினெ னிரக்கு மளவை*
*வெள்வேல் விடலை விரையா தீமே* (ஐங். 364)

உடன்போக்கு நயந்த தலைமகன் அதனைத் தோழிக்கு உணர்த்த அவள் முடிப்பாளாய்ச் சொல்லியது. 368

*அன்னாய் வாழிவேண் டன்னையென் றோழி*
*பசந்தனள் பெரிதெனச் சிவந்த கண்ணை*
*கொன்னே கடவுதி யாயி னென்னதூஉம்*
*அறிய வாகுமோ மற்றே*
*முறியிணர்க் கோங்கம் பயந்த மாறே* (ஐங். 366)

தலைமகனை நோக்கி, 'இவ் வேறுபாடு எற்றினானாயிற்று?' என்று வினவிய செவிலிக்குத் தோழி அறத்தொடு நின்றது. 369

*பொரியரைக் கோங்கின் பொன்மருள் பசுவீ*
*விரியிணர் வேங்கையொடு வேறுபட மிலைச்சி*
*விரவுமல ரணிந்த வேனிற் கான்யாற்றுத்*
*தேரொடு குறுக வந்தோன்*
*பேரொடு புணர்ந்தன் றன்னையிவ ளுயிரே* (ஐங். 367)

நொதுமலர் வரைவின்கண் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது. 370

*எரிப்பூ விலவத் தூழ்கழி பன்மலர்*
*பொரிப்பூம் புன்கின் புகர்நிழல் வரிக்கும்*

*தண்பத வேனி லின்ப நுகர்ச்சி*
*எம்மொடு கொண்மோ பெருமநின்*
*அம்மெ லோதி யழிவில ளெனினே* (ஐங். 368)

'வேனிற் காலத்து நும்மொடு விளையாட்டு நுகர வருவல்' என்று பருவம் குறித்துப் பிரியலுற்ற தலைமகற்குத் தோழி கூறியது. 371

*புள்ளு மறியாப் பல்பழம் பழுனி*
*மடமா னறியாத் தடநீர் நிலைஇச்*
*சுரநனி யினிய வாகுக வென்று*
*நினைத்தொறுங் கலிழு மென்னினும்*
*மிகப்பெரிது புலம்பின்று தோழிநம் மூரே* (ஐங். 398)

தலைமகள் மீண்டுவந்துழி அவட்குத் தோழி கூறியது. 372

## பாலைபாடிய பெருங்கடுங்கோ

*உள்ளார் கொல்லோ தோழி கள்வர்தம்*
*பொன்புனை பகழி செப்பங் கொண்மார்*
*உகிர்நுதி புரட்டு மோசை போலச்*
*செங்காற் பல்லி தன்றுணை பயிரும்*
*அங்காற் கள்ளியங் காடிறந் தோரே* (குறுந். 16)

பொருள்வயிற் பிரிந்தவிடத்துத் தலைமகள் ஆற்றாமை கண்டு தோழி கூறியது. 373

## சேரமானெந்தை

*நீர்வார் கண்ணை நீயிவ ணொழிய*
*யாரோ பிரிகிற் பவரே சாரற்*
*சிலம்பணி கொண்ட வலஞ்சுரி மராஅத்து*
*வேனி லஞ்சினை கமழும்*
*தேமூ ரொண்ணுத னின்னொடுஞ் செலவே* (குறுந். 22)

செலவுக் குறிப்பறிந்து ஆற்றாளாகிய கிழத்தியைத் தோழி வற்புறுத்தியது. 374

## பாலைபாடிய பெருங்கடுங்கோ

*நசைபெரி துடையர் நல்கலு நல்குவர்*
*பிடிபசி களைஇய பெருங்கை வேழம்*
*மென்சினை யாஅம் பொளிக்கும்*
*அன்பின தோழியவர் சென்ற வாறே* (குறுந். 37)

தோழி, கடிதுவருவாரென்று ஆற்றுவித்தது. 375

## பூங்கணுத்திரையார்

*தாதில் செய்த தண்பனிப் பாவை*
*காலை வருந்தும் கையாறு ஓம்பென*
*ஓரை ஆயம் கூறக் கேட்டும்*
*இன்ன பண்பின் இனைபெரிது உழக்கும்*
*நன்னுதல் பசலைநீங்க அன்ன*
*நசையாகு பண்பின் ஒருசொல்*
*இசையாது கொல்லோ காதலர் தமக்கே* (குறுந். 48)

பகற்குறிக்கண் காணும்பொழுதினும் காணாப்பொழுது பெரிதாகலின் வேறுபட்ட கிழத்தியது வேறுபாடு கண்டு தோழி சொல்லியது. 376

## மோசிகீரனார்

*பதலைப் பாணிப் பரிசிலர் கோமான்*
*அரலைக் குன்றத் தகல்வாய்க் குண்டுசுனைக்*
*குவளையொடு பொதிந்த குளவி நாறுநின்*
*நறுநுதன் மறப்பரோ மற்றே முயலவும்*
*சுரம்பல விலங்கிய வரும்பொருள்*
*நிரம்பா வாகலி னீடலோ வின்றே* (குறுந். 59)

பிரிவிடையழிந்த கிழத்தியைத் தோழி வற்புறுத்தியது. 377

## பாலைபாடிய பெருங்கடுங்கோ

*உமணர் சேர்ந்து கழிந்த மருங்கி னகன்றலை*
*ஊர்பாழ்த் தன்ன வோமையம் பெருங்கா*

*டின்னா வென்றி ராயின்*
*இனியவோ பெரும தமியோர்க்கு மனையே* (குறுந். 124)

புணர்ந்துடன் போக்கினைத் தலைமகள் ஒழியப் போகலுற்ற தலைமகற்குத் தோழி சொல்லியது. 378

## வெள்ளிவீதியார்

*நிலந்தொட்டுப் புகாஅர் வானமேறார்*
*விலங்கிரு முந்நீர் காலிற் செல்லார்*
*நாட்டி னாட்டி னூரி னூரிற்*
*குடிமுறை குடிமுறை தேரிற்*
*கெடுநரு முளரோநங் காத லோரே* (குறுந். 130)

பிரிவிடை அழிந்த தலைமகளைத் தோழி வற்புறுத்தியது. 379

## பாலைபாடிய பெருங்கடுங்கோ

*வினையே யாடவர்க் குயிரே வாணுதல்*
*மனையுறை மகளிர்க் காடவ ருயிரென*
*நமக்குரைத் தோருந் தாமே*
*அழாஅ றோழி யழுங்குவர் செலவே* (குறுந். 135)

தலைமகன் பிரியுமென வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது. 380

## கச்சிப்பேட்டு நன்னாகையார்

*பழூஉப்பல் வன்ன பருவுகிர்ப் பாவடி*
*இருங்களிற் றினநிரை யேந்தல் வரின்மாய்ந்*
*தறைமடி கரும்பின் கண்ணிடை யன்ன*
*பைத வொருகழை நீடிய சுரனிறந்*
*தெய்தினர் கொல்லோ பொருளே யல்குல்*
*அவ்வரி வாடத் துறந்தோர்*
*வன்ப ராகத்தாஞ் சென்ற நாட்டே* (குறுந். 180)

பிரிவிடை வேறுபட்டாளைத் தோழி வற்புறுத்தியது. 381

## காவன்முல்லைப்பூதனார்

*அஞ்சி லோதி யாய்வளை நெகிழ*
*நொந்தும்நம் அருளார் நீத்தோர்க் கஞ்சல்*
*எஞ்சினம் வாழி தோழி யெஞ்சாது*
*தீய்ந்த மராஅத்து ஓங்கல் வெஞ்சினை*
*வேனி லோரிணர் தேனோ டூதி*
*ஆராது பெயருந் தும்பி*
*நீரில் வைப்பிற் சுரனிறந் தோரே* **(குறுந். 211)**

இடைச்சுரத்துக் கவலுவனகண்டு நம்மை ஆற்றாரென நினைந்து மீள்வர்கொல் எனக் கவன்ற கிழத்திக்குத் தோழி சொல்லியது. 382

## கச்சிப்பேட்டுக் காஞ்சிக்கொற்றனார்

*நசைநன் குடையர் தோழி ஞெரேரெனக்*
*கவைத்தலை முதுகலை காலின் ஒற்றிப்*
*பசிப்பிணிக்கு இறைஞ்சிய பரூஉப்பெருந் ததரல்*
*ஒழியின் உண்டு அழிவில் நெஞ்சின்*
*தெறித்துநடை மரபில்தன் மறிக்குநிழ லாகி*
*நின்றுவெயில் கழிக்கும் என்பநம்*
*இன்துயில் முனிநர் சென்ற வாறே* **(குறுந். 213)**

நம்பெருமான் நம்பொருட்டு இடைநின்று மீள்வான் எனக் கவன்ற தலைமகட்குத் தோழி உரைத்தது. 383

## மதுரை அளக்கர்ஞாழார் மகனார் மள்ளனார்

*படரும் பைபயப் பெயருஞ் சுடரும்*
*என்றூழ் மாமலை மறையு மின்றவர்*
*வருவர்கொல் வாழி தோழி நீரில்*
*வறுங்கயந் துழைஇய விலங்குமருப் பியானை*
*குறும்பொறை மருங்கி னமர்துணை தழீஇக்*
*கொடுவரி யிரும்புலி காக்கும்*
*நெடுவரை மருங்கிற் சுரனிறந் தோரே* **(குறுந். 215)**

பிரிவிடைத் தோழி வற்புறுத்தியது. 384

## தங்கால் முடக்கொற்றனார்

திணைகிளி கடிகெனிற் பகலு மொல்லும்
இரவுநீ வருதலி னூறு மஞ்சுவல்
யாங்குச்செய் வாமெம் மிடும்பை நோய்க்கென
ஆங்கியான் கூறிய வனைத்திற்குப் பிறிதுசெத்
தோங்குமலை நாட னுயிர்த்தோன் மன்ற
ஐதே காமம் யானே
கழிமுதுக் குறைமையும் பழியுமென் றிசினே (குறுந். 217)

உடன்போக்கு நயப்பத் தோழி தலைமகட்குக் கூறியது. 385

## ஊண்பித்தையார்

உள்ளார் கொல்லோ தோழி யுள்ளியும்
வாய்ப்புணர் வின்மையின் வாரார் கொல்லோ
மரற்புகா வருந்திய மாவெருத் திரலை
உரற்கால் யானை யொடித்துண் டெஞ்சிய
யாஅ வரிநிழற் றுஞ்சும்
மாயிருஞ் சோலை மலையிறந் தோரே (குறுந். 232)

பிரிவிடைத் தோழி வற்புறுத்தியது. 386

## பூங்கண்ணனார்

கேளா ராகுவர் தோழி கேட்பின்
விழுமிது கழிவ தாயினு நெகிழ்நூற்
பூச்சே ரணையிற் பெருங்கவின் றொலைந்தநின்
நாட்டுயர் கெடப்பி னீடலர் மாதோ
ஒலிகழை நிவந்த வோங்குமலைச் சாரற்
புலிபுகா வுறுத்த புலவுநாறு கல்லளை
ஆறுசென் மாக்கள் சேக்கும்
கோடுயர் பிறங்கன் மலையிறந் தோரே (குறுந். 253)

பிரிவிடைத் தோழி வற்புறுத்தது. 387

## கடுகு பெருந்தேவனார்

*பொத்தில் காழ வத்த யாஅத்துப்*
*பொரியரை முழுமுத லுருவக் குத்தி*
*மறங்கெழு தடக்கையின் வாங்கி யுயங்கு நடைச்*
*சிறுகட் பெருநிரை யுறுபசி தீர்க்கும்*
*தடமருப் பியானை கண்டனர் தோழி*
*தங்கட னிறீஇய ரெண்ணி யிடந்தொறும்*
*காமர் பொருட்பிணிப் போகிய*
*நாம்வெங் காதலர் சென்ற வாறே* **(குறுந். 255)**

இடைநின்று மீள்வரெனக் கவன்ற கிழத்தியைத் தோழி வற்புறுத்தியது. 388

## கல்லாடனார்

*குருகும் இருவிசும் பிவரும் புதலும்*
*வரிவண் டூத வாய்நெகிழ்ந் தனவே*
*சுரிவளைப் பொலிந்த தோளும் செற்றும்*
*வருவர்கொல் வாழி தோழி பொருவார்*
*மண்ணெடுத் துண்ணு மண்ணல் யானை*
*வண்டேர்த் தொண்டையர் வழையம லடுக்கத்துக்*
*கன்றி லோரா விலங்கிய*
*புன்றா ளோமைய சுரனிறந் தோரே* **(குறுந். 260)**

அவர் வரவிற்கு நிமித்தமாயின கண்டு, ஆற்றாளாகிய தலைமகட்குத் தோழி சொல்லியது. 389

## பாலைபாடிய பெருங்கடுங்கோ

*ஊஉ ரலரெழச் சேரி கல்லென*
*ஆனா தலைக்கு மறனி லன்னை*
*தானே யிருக்க தன்மனை யானே*
*நெல்லி தின்ற முள்ளெயிறு தயங்க*
*உணலாய்ந் திசினா லவரொடு சேய்நாட்டு*
*விண்டொட நிவந்த விலங்குமலைக் கவாஅற்*

*கரும்புநடு பாத்தி யன்ன*
*பெருங்களிற் றடிவழி நிலைஇய நீரே* (குறுந். 262)

உடன்போக்கு நேர்ந்த தோழி கிழத்திக்கு உடன்போக்கு உணர்த்தியது. 390

## சிறைக்குடி ஆந்தையார்

*அல்குறு பொழுதில் தாதுமுகை தயங்கப்*
*பெருங்கா டுளரும் அசைவளி போலத்*
*தண்ணிய கமழும் ஒண்ணுத லோயே*
*நொந்தனை யாயின் கண்டது மொழிவல்*
*பெருந்தேன் கண்படு வரையின் முதுமால்பு*
*அறியாது ஏறிய மடவோன் போல*
*ஏமாந் தன்றிவ் உலகம்*
*நாமுளேம் ஆகப் பிரியலேம் தெளிமே* (குறுந். 273)

பிரிவர் எனக் கவன்ற தலைமகளைத் தோழி வற்புறுத்தியது. 391

## ஓரிற் பிச்சையார்

*ஆசில் தெருவி னாயில் வியன்கடைச்*
*செந்நெ லமலை வெண்மை வெள்ளிழு*
*தோரிற் பிச்சை யார மாந்தி*
*அற்சிர வெய்ய வெப்பத் தண்ணீர்*
*சேமச் செப்பிற் பெறீஇயரோ நீயே*
*மின்னிடை நடுங்கும் கடைப்பெயல் வாடை*
*எக்கால் வருவ தென்றி*
*அக்கால் வருவரெங் காத லோரே* (குறுந். 277)

தலைமகன் பிரிந்தவழி, அவன் குறித்த பருவவரவு தோழி அறிவரைக் கண்டு வினாயது.
392

## நாகம் போத்தனார்

*செவ்விகொள் வரகின் செஞ்சுவற் கலித்த*
*கௌவை நாற்றின் காரிரு ளோரிலை*

*நவ்வி நாண்மறி கவ்விக் கடன்கழிக்கும்*
*காரெதிர் தண்புனங் காணிற் கைவளை*
*நீர்திகழ் சிலம்பி னோரராங் கவிழ்ந்த*
*வெண்கூ தாளத் தந்தூம்பு புதுமலர்*
*ஆர்கழல் வுகுவ போலச்*
*சோர்குவ வல்ல வென்பர்கொ னமரே* (குறுந். 282)

வினைவயிற் பிரிந்தவிடத்துத் தோழி கிழத்திக்கு உரைத்தது. 393

## வாடாப் பிரமந்தனார்

*நெடுங்கழை திரங்கிய நீரி லாரிடை*
*ஆறுசெல் வம்பலர் தொலைய மாறுநின்று*
*கொடுஞ்சிலை மறவர் கடறுகூட் டுண்ணும்*
*கடுங்கண் யானைக் கான நீந்தி*
*இறப்பர்கொல் வாழி தோழி நறுவடிப்*
*பைங்கான் மாஅத் தந்தளி ரன்ன*
*நன்மா மேனி பசப்ப*
*நம்மினுஞ் சிறந்த வரும்பொரு டரற்கே* (குறுந். 331)

செலவுக் குறிப்பறிந்து வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது. 394

## பெருங்குன்றூர்கிழார்

*திரிமருப் பிரலை யண்ண னல்லே*
*றரிமடப் பிணையோ டல்குநிழ லசைஇ*
*வீததை வியலரிற் றுஞ்சிப் பொழுதுசெலச்*
*செழும்பயறு கறிக்கும் புன்கண் மாலைப்*
*பின்பனிக் கடைநாட் டண்பனி யச்சிரம்*
*வந்தன்று பெருவிற றேரே பணைத்தோள்*
*விளங்குநக ரடங்கிய கற்பின்*
*நலங்கே ழரிவை புலம்பசா விடவே* (குறுந். 338)

பிரிவிடைத் தோழி வற்புறுத்தது. 395

## ஈழத்துப் பூதன்தேவனார்

*நினையாய் வாழி தோழி நனைகவுள்*
*அண்ணல் யானை அணிமுகம் பாய்ந்தென*
*மிகுவலி யிரும்புலிப் பகுவா யேற்றை*
*வெண்கோடு செம்மறுக் கொளீஇ விடர்முகைக்*
*கோடை யொற்றிய கருங்கால் வேங்கை*
*வாடுபூஞ் சினையிற் கிடக்கும்*
*உயர்வரை நாடனொடு பெயரு மாறே* **(குறுந். 343)**

தோழி, கிழத்தியை உடன்போக்கு நயப்பக் கூறியது. 396

## மாவளத்தனார்

*தாமே செல்ப வாயிற் கானத்துப்*
*புலந்தேர் யானைக் கோட்டிடை யொழிந்த*
*சிறுவீ முல்லைக் கொம்பிற் றாஅய்*
*இதழழிந் தூறுங் கண்பனி மதரெழிற்*
*பூணக வனமுலை நனைத்தலும்*
*காணார் கொல்லோ மாணிழை நமரே* **(குறுந். 348)**

செலவுக் குறிப்பறிந்து வேறுபட்ட கிழத்தியைத் தோழி வற்புறீஇயது. 397

## ஆலத்தூர்கிழார்

*அம்ம வாழி தோழி முன்னின்று*
*பனிக்கடுங் குரையஞ் செல்லா தீமெனச்*
*சொல்லின மாயின் செல்வர் கொல்லோ*
*ஆற்றய லிருந்த விருந்தோட் டஞ்சிறை*
*நெடுங்காற் கணந்து ளாளறி வுறீஇ*
*ஆறுசெல் வம்பலர் படைதலை பெயர்க்கும்*
*மலையுடைக் கான நீந்தி*
*நிலையாப் பொருட்பிணிப் பிரிந்திசி னோரே* **(குறுந். 350)**

பிரிவுநேர்ந்த தலைமகள், அவனது நீக்கத்துக்கண் வேறுபட்டாளைத் தோழி வற்புறீஇயது.

398

## செல்லூர்க் கொற்றனார்

*கண்ணி மருப்பி னண்ண னல்லேறு*
*செங்காற் பதவின் வார்குரல் கறிக்கும்*
*மடக்கண் வரையா நோக்கி வெய்துற்றுப்*
*புல்லரை யுகாஅய் வரிநிழல் வதியும்*
*இன்னா வருஞ்சுர மிறத்தல்*
*இனிதோ பெரும லின்றுணைப் பிரிந்தே* (குறுந். *363*)

பிரிவு உணர்த்தப்பட்ட தோழி கிழவற்குச் சொல்லியது. 399

## குடவாயிற்கீரத்தனார்

*அத்த வாகை யமலை வானெற்*
*றரியார் சிலம்பி னரிசி யார்ப்பக்*
*கோடை தூக்குங் கானம்*
*செல்வாந் தோழி நல்கினர் நமரே* (குறுந். *369*)

தோழி, கிழத்திக்கு உடன்போக்கு உணர்த்தியது. 400

## கருவூர்க் கதப்பிள்ளை

*விசும்புகண் புதையப் பாஅய் வேந்தர்*
*வென்றெறி முரசி னன்பல முழங்கிப்*
*பெயலா னாதே வானங் காதலர்*
*நனிசேய் நாட்டர் நம்முன் னலரே*
*யாங்குச்செய் வாங்கொ றோழி யீங்கைய*
*வண்ணத் துய்ம்மல ருதிர*
*முன்னர்த் தோன்றும் பனிக்கடு நாளே* (குறுந். *380*)

பனிப்பருவங் குறித்துப் பிரிந்தான் தலைமகன்; பிரிய, பருவவரவின்கண் வேறுபடுவாளாயினும் கதுமென ஆற்றுவிப்பது அரிதென்னும் கருத்தின ளாய்க் கூதிர்ப்பருவத்துத் தலைமகள் கேட்பத் தனது ஆற்றாமை விளங்கத் தோழி சொல்லியது. 401

## படுமரத்து மோசிகீரனார்

*நீயுடம் படுதலின் யான்றர வந்து*
*குறிநின் றனனே குன்ற நாடன்*
*இன்றை யளவை சென்றைக் கென்றி*
*கையுங் காலு மோய்வன வழுங்கத்*
*தீயுறு தளிரி னடுங்கி*
*யாவது மிலையான் செயற்குரி யதுவே*  (குறுந். 383)

உடன்போக்கு நேர்வித்துவந்த தோழி நாணால் வருந்துந் தலைமகளை நாணுக்கெடச் சொல்லியது. 402

## ஔவையார்

*நீர்கால் யாத்த நிரையிதழ்க் குவளை*
*கோடை யொற்றினும் வாடா தாகும்*
*கவணை யன்ன பூட்டுப்பொரு தசாஅ*
*உமணெருத் தொழுகைத் தோடுநிறைத் தன்ன*
*முளிசினை பிளக்கு முன்பின் மையின்*
*யானை கைமடித் துயவும்*
*கானமு மினியவா நும்மொடு வரினே*  (குறுந். 388)

தலைமகள் உடன்போக்கு நேர்ந்தமையுணர்ந்த தலைமகன், சுரத்து வெம்மையும் தலைமகள் மென்மையும் குறித்துச் செலவு அழுங்க லுறுவானைத் தோழி அழுங்காமற் கூறியது. 403

## நல்வெள்ளியார்

*சூருடை நனந்தலைச் சுனைநீர் மல்கப்*
*பெருவரை அடுக்கத் தருவி யார்ப்பக்*
*கல்லலைத் திழிதருங் கடுவரற் கான்யாற்றுக்*
*கழைமாய் நீத்தங் காடலை யார்ப்பத்*
*தழங்குகுர லேறொடு முழங்கி வானம்*
*இன்னே பெய்ய மின்னுமால் தோழி*
*வெண்ணெ லருந்திய வரிநுதல் யானை*

*தண்ணறுஞ் சிலம்பின் துஞ்சுஞ்*
*சிறியிலைச் சந்தின வாடுபெருங் காட்டே (நற். 7)*

பட்டபின்றை வரையாது கிழவோன், நெட்டிடை கழிந்து பொருள்வயிற்பிரிய ஆற்றாளாய தலைவிக்குத் தோழி சொல்லியது. 404

• • • • •

*அண்ணாந் தேந்திய வனமுலை தளரினும்*
*பொன்னேர் மேனி மணியிற் றாழ்ந்த*
*நன்னெடுங் கூந்தல் நரையொடு முடிப்பினும்*
*நீத்த லோம்புமதி பூக்கே ழூர*
*இன்கடுங் கள்ளி னிழையணி நெடுந்தேர்க்*
*கொற்றச் சோழர் கொங்கர்ப் பணீஇயர்*
*வெண்கோட் டியானைப் போர் கிழவோன்*
*பழையன் வேல்வாய்த் தன்னநின்*
*பிழையா நன்மொழி தேறிய இவட்கே (நற். 10)*

உடன்போக்குந் தோழி கையடுத்தது. 405

### கயமனார்

*விளம்பழுங் கமழுங் கமஞ்சூழ் குழிசிப்*
*பாசந் தின்ற தேய்கான் மத்த*
*நெய்தெரி யியக்கம் வெளில்முதன் முழங்கும்*
*வைகுபுலர் விடியல் மெய்கரந்து தன்கா*
*லரியமை சிலம்பு கழீஇப் பன்மாண்*
*வரிபுனை பந்தொடு வைஇய செல்வோள்*
*இவைகாண் தோறு நோவர் மாதோ*
*அளியரோ வளியரென் னாயத் தோரென*
*நும்மொடு வரவுதா னயரவுந்*
*தன்வரைத் தன்றியுங் கலுழ்ந்தன கண்ணே (நற். 12)*

தோழி உடன்போக்கு அஞ்சுவித்தது. 406

## பொய்கையார்

பருவரல் நெஞ்சமொடு பல்பட ரகல
வருவர் வாழி தோழி மூவன்
முழுவலி முள்ளெயி றழுத்திய கதவிற்
கானலந் தொண்டிப் பொருநன் வென்வேல்
தெறலருந் தானைப் பொறையன் பாசறை
நெஞ்ச நடுக்குறூஉந் துஞ்சா மறவர்
திரைதபு கடலின் இனிதுகண் படுப்பக்
கடாஅங் கழீஇய கதனடங் கியானைத்
தடவுநிலை யொருகோட் டன்ன
ஒன்றிலங் கருவிய குன்றிறந் தோரே (நற். 18)

பிரிவிடையாற்றாளாகிய தலைவியைத் தோழி வற்புறுத்தியது. 407

## சாத்தந்தையார்

நோகோ யானே நெகிழ்ந்தன வளையே
செவ்வி சேர்ந்த புள்ளி வெள்ளரை
விண்டுப் புரையும் புணர்நிலை நெடுங்கூட்டுப்
பிண்ட நெல்லின் தாய்மனை யொழியச்
சுடர்முழு தெறிப்பத் திரங்கிச் செழுங்காய்
முடமுதிர் பலவி னத்த நும்மொடு
கெடுதுணை யாகிய தவறோ வையெயிற்றுப்
பொன்பொதிந் தன்ன சுணங்கின்
இருஞ்சூ ழோதிப் பெருந்தோ ளாட்கே (நற். 26)

தலைவி பிரிவுணர்ந்து வேறுபட்டமை சொல்லித் தோழி செலவழுங்குவித்தது. 408

## முதுகூற்றனார்

என்கைக் கொண்டு தன்க ணொற்றியுந்
தன்கைக் கொண்டென் நன்னுதல் நீவியும்
அன்னை போல இனிய கூறியுங்
கள்வர் போலக் கொடியன் மாதோ

*மணியென இழிதரும் அருவிப் பொன்னென*
*வேங்கை தாய வோங்குமலை யடுக்கத்து*
*ஆடுகழை நிவந்த பைங்கண் மூங்கில்*
*ஓடுமழை கிழிக்குஞ் சென்னிக்*
*கோடுயர் பிறங்கல் மலைகிழ வோனே* (நற். 28)

பிரிவின்கண் ஆற்றாளாய தலைவிக்குத் தோழி சொல்லியது. 409

## இளவேட்டனார்

*படுசுட ரடைந்த பகுவாய் நெடுவரை*
*முரம்புசேர் சிறுகுடிப் பரந்த மாவைப்*
*புலம்புகூட் டுண்ணும் புல்லென் மன்றத்துக்*
*கல்லுடைப் படுவிற் கலுழி தந்து*
*நிறைபெய லறியாக் குறைக்கூ ணல்லில்*
*துவர்செய் யாடைச் செந்தொடை மறவர்*
*அதர்பார்த் தல்கும் அஞ்சுவரு நெறியிடை*
*இறப்ப எண்ணுவர் அவரெனின் மறுத்தல்*
*வல்லுவங் கொல்லோ மெல்லிய னாமென*
*விம்முறு கிளவிய ளென்முக நோக்கி*
*நல்லக வனமுலைக் கரைசேர்பு*
*மல்குபுனல் பரந்த மலரேர் கண்ணே* (நற். 33)

பிரிவுணர்த்தப்பட்ட தலைமகளது குறிப்பறிந்த தோழி தலைமகற்குச் சொல்லியது.
410

## பேரிசாத்தனார்

*பிணங்கரில் வாடிய பழவிறல் நனந்தலை*
*உணங்கூ ணாயத் தோரான் தெண்மணி*
*பைய விசைக்கும் அத்தம் வையெயிற்று*
*இவளொடுஞ் செலினோ நன்றே குவளை*
*நீர்சூழ் மாமல ரன்ன கண்ணழக்*
*கலையொழி பிணையிற் கலங்கி மாறி*
*அன்பிலிர் அகறி ராயி னென்பரம்*

*ஆகுவ தன்றிவள் அவலம் நாகத்து*
*அணங்குடை யருந்தலை உடலி வலனேர்பு*
*ஆர்கலி நல்லேறு திரிதருங்*
*கார்செய் மாலை வரூஉம் போழ்தே* (நற். 37)

வரைவிடை வைத்துப் பிரிவின்கண் தோழி சொல்லியது. 411

## இளந்தேவனார்

*பைங்கண் யானைப் பரூஉத்தா ளுதைத்த*
*வெண்புறக் களரி விடுநீ றாடிச்*
*சுரன்முதல் வருந்திய வருத்தம் பைபயப்*
*பாரம் மலிசிறு கூவலின் தணியும்*
*நெடுஞ்சேண் சென்று வருந்துவர் மாதோ*
*எல்லி வந்த நல்லிசை விருந்திற்குக்*
*கிளரிழை அரிவை நெய்துழந் தட்ட*
*விளரூன் அம்புகை எறிந்த நெற்றிச்*
*சிறுநுண் பல்வியர் பொறித்த*
*குறுநடைக் கூட்டம் வேண்டு வோரே* (நற். 41)

பிரிவுணர்த்தப்பட்டு ஆற்றாளாய தலைமகளைத் தோழி உலகியல் கூறி வற்புறுத்தியது. 412

## எயினந்தையார்

*துகில்விரித் தன்ன வெயிலவிர் உருப்பின்*
*என்றூழ் நீடிய குன்றத்துக் கவாஅன்*
*ஓய்பசிச் செந்நாய் உயங்குமரை தொலைச்சி*
*ஆர்ந்தன வொழிந்த மிச்சில் சேய்நாட்டு*
*அருஞ்சுரஞ் செல்வோர்க்கு வல்சி யாகும்*
*வெம்மை யாரிடை இறத்தல் நுமக்கே*
*மெய்ம்மலி யுவகை யாகின்று இவட்கே*
*அஞ்ச லென்ற இறைகை விட்டெனப்*
*பைங்கண் யானை வேந்துபுறத் திறுத்தலின்*
*களையுநர்க் காணாது கலங்கிய உடைமதில்*

*ஓரெயில் மன்னன் போல*
*அழிவுவந் தன்றால் ஒழிதல் கேட்டே* (நற். 43)

பிரிவுணர்த்தப்பட்ட தோழி, தலைவனைச் செலவழுங்குவித்தது. 413

• • • • •

*வைகல் தோறும் இன்பமும் இளமையும்*
*எய்கணை நிழலிற் கழியுமிவ் வுலகத்துக்*
*காணீர் என்றலோ அரிதே அதுநனி*
*பேணீர் ஆகுவிர் ஐயவென் தோழி*
*பூணணி யாகம் புலம்பப் பாணர்*
*அமிர்ப்புக்கொண் டன்ன கொன்றையந் தீங்கனி*
*பறையறை கடிப்பின் அறையறையாத் துயல்வர*
*வெவ்வளி வழங்கும் வேய்பயில் அழுவத்து*
*எவ்வ மிகூஉம் அருஞ்சுரம் இறந்து*
*நன்வாய் அல்லா வாழ்க்கை*
*மன்னாப் பொருட்பிணிப் பிரிதும்யா மெனவே* (நற். 46)

பிரிவுணர்த்திய தலைமகற்குத் தோழி சொல்லியது. 414

## பாலைபாடிய பெருங்கடுங்கோ

*அன்றை யனைய வாகி இன்றுமெம்*
*கண்ணுள போலச் சுழலும் மாதோ*
*புல்லிதழ்க் கோங்கின் மெல்லிதழ்க் குடைப்பூ*
*வைகுறு மீனின் நினையத் தோன்றிப்*
*புறவணி கொண்ட பூநாறு கடத்திடைக்*
*கிடினென இடிக்குங் கோற்றொடி மறவர்*
*வடிநவில் அம்பின் வினையர் அஞ்சாது*
*அமரிடை உறுதர நீக்கிநீர்*
*எமரிடை உறுதர ஒளித்த காடே* (நற். 48)

பிரிவுணர்த்திய தலைமகற்குத் தோழி சொல்லியது. 415

## வண்ணப்புறக் கந்தரத்தனார்

*மன்னாப் பொருட்பிணி முன்னி இன்னதை*
*வளையணி முன்கைநின் இகுளைக்கு உணர்த்தெனப்*
*பன்மாண் இரத்தி ராயிற் சென்மென*
*விடுநா ளாதலும் உரியன் விடினே*
*கண்ணும் நுதலும் நீவி முன்நின்று*
*பிரிதல் வல்லிரோ ஐய செல்வர்*
*வகையமர் நல்லில் அகவிறை உறையும்*
*வண்ணப் புறவின் செங்காற் சேவல்*
*வீழ்துணைப் பயிருங் கையறு முரல்குரல்*
*நும்மிலள் புலம்பக் கேட்டொறும்*
*பொம்மல் ஓதி பெருவிதுப் புறவே (நற். 71)*

தலைவனைத் தோழி செலவழுங்குவித்தது. 416

## நக்கீரர்

*அறவர் வாழி தோழி மறவர்*
*வேலென விரிந்த கதுப்பின் தோல*
*பாண்டில் ஒப்பின் பகன்றை மலருங்*
*கடும்பனி அற்சிரம் நடுங்கக் காண்தகக்*
*கைவல் வினைவன் தையுபு சொரிந்த*
*சுரிதக உருவின வாகிப் பெரிய*
*கோங்கங் குவிமுகை அவிழ ஈங்கை*
*நற்றளிர் நயவர நுடங்கும்*
*முற்றா வேனில் முன்னிவந் தோரே (நற். 86)*

குறித்த பருவத்தின் வினைமுடித்து வந்தமை கேட்ட தோழி தலைவிக்கு உரைத்தது. 417

• • • • •

*உள்ளார் கொல்லோ தோழி துணையொடு*
*வேனில் ஓதிப் பாடுநடை வழலை*
*வரிமரல் நுகும்பின் வாடி அவண*

வறன்பொருந்து குன்றத்து உச்சிக் கவாஅன்
வேட்டச் சீறூர் அகன்கண் கேணிப்
பயநிரைக்கு எடுத்த மணிநீர்ப் பத்தர்
புன்தலை மடப்பிடி கன்றோடு ஆர
வில்கடிந்து ஊட்டின பெயரும்
கொல்களிற்று ஒருத்தல் சுரன்இறந் தோரே (நற். 92)

பிரிவிடை வேறுபட்ட கிழத்திக்குத் தோழி சொல்லியது. 418

## கள்ளம்பாளனார்

வண்ணம் நோக்கியும் மென்மொழி கூறியும்
நீயவண் வருதல் ஆற்றாய் எனத்தாம்
தொடங்கி ஆள்வினைப் பிரிந்தோர் இன்றே
நெடுங்கயம் புரிந்த நீரில் நீளிடைச்
செங்கால் மராஅத்து அம்புடைப் பொருந்தி
வாங்குசிலை மறவர் வீங்குநிலை அஞ்சாது
கல்லளைச் செறிந்த வள்ளுகிர்ப் பிணவின்
இன்புனிற் றிடும்பை தீரச் சினஞ்சிறந்து
செங்கண் இரும்புலிக் கோள்வல் ஏற்றை
உயர்மருப்பு ஒருத்தல் புகர்முகம் பாயும்
அருஞ்சுரம் இறப்ப என்ப
வருந்தேன் தோழி வாய்க்கஅவர் செலவே (நற். 148)

பிரிவுணர்ந்து வேறுபட்ட தலைவியைத் தோழி வற்புறீஇயது. 419

• • • • •

உறைதுறந்து இருந்த புறவின் தனாது
செங்கதிர்ச் செல்வன் தெறுதலின் மண்பக
உலகுமிக வருந்தி அயாவுறு காலைச்
சென்றனர் ஆயினும் நன்றுசெய் தனரெனச்
சொல்லில் தெளிப்பவுந் தெளிதல் செல்லாய்
செங்கோல் வாளிக் கொடுவில் ஆடவர்
வம்ப மாக்கள் உயிர்த்திறம் பெயர்த்தென
வெங்கடற்று அடைமுதல் படுமுடை தழீஇ

*உறுபசிக் குறுநரி குறுகல் செல்லாது*
*மாறுபுறக் கொடுக்கும் அத்தம்*
*ஊறிலர் ஆகுதல் உள்ளா மாறே* (நற். 164)

பொருண்முடித்து வந்தானென்பது வாயில்கள்வாய்க் கேட்ட தோழி, தலைவிக்குரைத்தது. 420

• • • • •

*நீர்நசைக்கு ஊக்கிய உயவல் யானை*
*வேனிற் குன்றத்து வெவ்வரைக் கவாஅன்*
*நிலஞ்செலச் செல்லாக் கயந்தலைக் குழவி*
*சேரியம் பெண்டிர் நெஞ்சத்து எறிய*
*ஊரான் கன்றொடு புகுதும் நாடன்*
*பன்மலை அருஞ்சுரம் இறப்பின் நம்விட்டு*
*யாங்கு வல்லுந மற்றே ஞாங்கர்*
*வினைப்பூண் தெண்மணி வீழ்ந்தன நிகர்ப்பக்*
*கழுதுகால் கொள்ளும் பொழுதுகொள் பானாள்*
*ஆர்வ நெஞ்சமொடு அளைஇ*
*மார்புறப் படுத்தல் மரீஇய கண்ணே* (நற். 171)

பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைமகட்கு உரைத்தது. 421

• • • • ,

*தம்மலது இல்லா நம்நயந் தருளி*
*இன்னும் வாரா ராயினுஞ் சென்னியர்*
*தெறலருங் கடவுள் முன்னர்ச் சீறியாழ்*
*நரம்பிசைத் தன்ன இன்குரல் குருகின்*
*கங்கை வங்கம் போகுவர் கொல்லோ*
*எவ்வினை செய்வர்கொல் தாமே வெவ்வினைக்*
*கொலைவல் வேட்டுவன் வலைபரிந்து போகிய*
*கானப் பிறவின் சேவல் வாய்நூற்*
*சிலம்பி அஞ்சினை வெரூஉ*
*மலங்கல் உலவையங் காடிறந் தோரே* (நற். 189)

பிரிவிடை மெலிந்த தலைமகளைத் தோழி வற்புறுத்தியது. 422

## நக்கீரர்

*தோளே தொடிநெகிழ்ந் தனவே நுதலே*
*பீர்இவர் மலரிற் பசப்பூர்ந் தன்றே*
*கண்ணுந் தண்பனி வைகின அன்னோ*
*தெளிந்தன மன்ற தேயர்என் உயிரென*
*ஆழல் வாழி தோழி நீநின்*
*தாழ்ந்தொலி கதுப்பின் வீழ்ந்த காலொடு*
*வண்டுபடு புதுமலர் ஒண்துறைத் தரீஇய*
*பெருமட மகளிர் முன்கைச் சிறுகோல்*
*பொலந்தொடி போல மின்னிக் கணங்கொள்*
*இன்னிசை முரசின் இரங்கி மன்னர்*
*எயிலூர் பல்தோல் போலச்*
*செல்மறை தவழுமவர் நன்மலை நாட்டே* (நற். 197)

வரைவுநீட ஆற்றாளாகிய தலைமகளைத் தோழி ஆற்றுவித்தது. 423

## நொச்சி நியமங்கிழார்

*விறல்சாய் விளங்கிழை நெகிழ விம்மி*
*அறல்போல் தெள்மணி இடைமுலை நனைப்ப*
*விளிவிலா கலுழுங் கண்ணொடு பெரிதழிந்து*
*எவனினைபு வாடுதி சுடர்நுதற் குறுமகள்*
*செல்வர் அல்லர்நங் காதலர் செலினும்*
*நோன்மார் அல்லர் நோயே மற்றவர்*
*கொன்னு நம்பும் குரையர் தாமே*
*சிறந்த அன்பினர் சாயலும் உரியர்*
*பிரிந்த நம்மினும் இரங்கி அரும்பொருள்*
*முடியா தாயினும் வருவர் அதன்றலை*
*இன்றுணைப் பிரிந்தோர் நாடித்*
*தருவது போலுமிப் பெருமழைக் குரலே* (நற். 208)

செலவுற்றாரது குறிப்பறிந்து ஆற்றாளாய தலைமகள் உரைப்பத் தோழி சொல்லியது. 424

## குடவாயிற் கீரத்தனார்

பார்வை வேட்டுவன் படுவலை வெரீஇ
நெடுங்கால் கணந்துளம் புலம்புகொள் தெள்விளி
சுரஞ்செல் கோடியர் கதுமென இசைக்கும்
நரம்பொடு கொள்ளும் அத்தத்து ஆங்கண்
கடுங்குரல் பம்பைக் கதநாய் வடுகர்
நெடும்பெருங் குன்ற நீந்தி நம்வயின்
வந்தனர் வாழி தோழி கையதை
செம்பொற் கழல்தொடி நோக்கி மாமகன்
கவவுக்கொள் இன்குரல் கேட்டொறும்
அவவுக்கொள் மனத்தேம் ஆகிய நமக்கே (நற். 212)

பொருண்முடித்துத் தலைமகனோடு வந்த வாயில்கள்வாய் வரவுகேட்ட தோழி தலைமகட்குச் சொல்லியது. 425

• • • • •

சேறும் சேறும் என்றலின் பலபுலந்து
செல்மின் என்றல் யானஞ் சுவலே
செல்லா தீமெனச் செப்பிற் பல்லோர்
நிறத்தெறி புன்சொலின் திறத்தஞ் சுவலே
அதனாற், செல்மின் சென்றுவினை முடிமின் சென்றாங்கு
அவண்நீ டாதல் ஓம்புமின் யாமத்து
இழையணி ஆகம் வடுக்கொள முயங்கி
உழையீ ராகவும் பனிப்போள் தமியே
குழைவான் கண்ணிடத்து ஈண்டித் தண்ணென
வாடிய இளமழைப் பின்றை
வாடையுங் கண்டிரோ வந்துநின் றதுவே (நற். 229)

தலைமகனாற் பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைமகளை ஆற்றுவித்துச் செல்ல உடன்பட்டது. 426

## காரிக்கண்ணனார்

நனிமிகப் பசந்து தோளுஞ் சாஅய்ப்
பனிமல் கண்ணும் பண்டு போலா
இன்னுயிர் அன்ன பிரிவருங் காதலர்
நீத்து நீடினர் என்னும் புலவி
உட்கொண்டு ஊடின்றும் இலையோ மடந்தை
உவக்காண் தோன்றுவ ஓங்கி வியப்புடை
இரவலர் வரூஉம் அளவை அண்டிரன்
புரவெதிர்ந்து தொகுத்த யானை போல
உலக முவப்ப ஓதரும்
வேறுபல் உருவின் ஏர்தரு மழையே (நற். 237)

தோழி உரை மாறுபட்டது. 427

## காப்பியஞ் சேந்தனார்

இடூஉ ஊங்கண் இனிய படூஉம்
நெடுஞ்சுவர்ப் பல்லியும் பாங்கின் தேற்றும்
மனைமர நொச்சி மீமிசை மாச்சினை
வினைமாண் இருங்குயில் பயிற்றலும் பயிற்றும்
உரம்புரி உள்ளமொடு சுரம்பல நீந்திச்
செய்பொருட்கு அகன்றன ராயினும் பொய்யலர்
வருவர் வாழி தோழி புறவின்
பொன்வீக் கொன்றையொடு பிடவுத்தளை அவிழ
இன்னிசை வானம் இரங்குமவர்
வருதும் என்ற பருவமோ இதுவே (நற். 246)

பிரிவிடை மெலிந்த தலைமகளைத் தோழி வற்புறீஇயது. 428

## அம்மெய்யனாகனார்

உலவை ஓமை ஒல்குநிலை ஒடுங்கிச்
சின்வீடு கறங்குஞ் சேய்நாட்டு அத்தம்
திறம்புரி கொள்கையொடு இறந்துசெயின் அல்லது

*அரும்பொருள் கூட்டம் இருந்தோர்க்கு இல்லென*
*வலியா நெஞ்சம் வலிப்பச் சூழ்ந்த*
*வினையிடை விலங்கல போலும் புனைசுவர்ப்*
*பாவை யன்ன பழிதீர் காட்சி*
*ஐதேய்ந்து அகன்ற அல்குல் மைகூர்ந்து*
*மலர்பிணைத் தன்ன மாயிதழ் மழைக்கண்*
*முயல்வேட்டு எழுந்த முடுகுவிசைக் கதநாய்*
*நன்னாப் புரையுஞ் சீறடிப்*
*பொம்மல் ஓதிப் புனையிழை குணனே* (நற். 252)

பொருள்வயிற் பிரியுமெனக் கவன்ற தலைமகட்குத் தோழி சொல்லியது. 429

## எயினந்தை மகன் இளங்கீரனார்

*குரும்பை மணிப்பூண் பெருஞ்செங் கிண்கிணிப்*
*பாலார் துவர்வாய்ப் பைம்பூண் புதல்வன்*
*மாலைக் கட்டின் மார்பூர்பு இழிய*
*அவ்வெயிறு ஒழுகிய வெவ்வாய் மாண்நகைச்*
*செயிர்தீர் கொள்கைநம் உயிர்வெங் காதலி*
*திருமுகத்து அலமருங் கண்நினைந்து அல்கலும்*
*பெருமர வள்ளியிற் பிணிக்கும் என்னார்*
*சிறுபல் குன்றம் இறப்போர்*
*அறிவார் யாரவர் முன்னி யவ்வே* (நற். 269)

தோழி வாயின் மறுத்தது. 430

## காவன்முல்லைப் பூதனார்

*நெடுவான் மின்னிக் குறுந்துளி தலைஇப்*
*படுமழை பொழிந்த பகுவாய்க் குன்றத்து*
*உழைமான் அம்பிணை தீண்டலின் இழைமகள்*
*பொன்செய் காசின் ஒண்பழந் தாஅங்*
*குமிழ்தலை மயங்கிய குறும்பல் அத்தம்*
*எம்மொடு வருதியோ பொம்மல் ஓதியெனக்*

*கூறின்று முடையரோ மற்றே வேறுபட்டு*
*இரும்புலி வழங்குஞ் சோலைப்*
*பெருங்கல் வைப்பிற் சுரன்இறந் தோரே (நற். 274)*

தோழி பருவமாறுபட்ட தென்றது. 431

## துறைக்குறுமாவிற் பாலங்கொற்றனார்

*ஊசல் ஒண்குழை உடைவியத்து அன்ன*
*அத்தக் குமிழின் ஆயிதழ் அலரி*
*கல்லென வரிக்கும் புல்லென் குன்றம்*
*சென்றோர் மன்ற செலீஇயரென் உயிரெனப்*
*புனையிழை நெகிழ விம்மி நொந்துநொந்து*
*இனைதல் ஆன்றிசின் ஆயிழை நினையின்*
*நட்டோ ராக்கம் வேண்டியும் ஒட்டிய*
*நின்தோள் அணிபெற வரற்கும்*
*அன்றோ தோழியவர் சென்ற திறமே (நற். 286)*

பிரிவிடை மெலிந்த தலைமகளைத் தோழி வற்புறுத்தது. 432

## பாலைபாடிய பெருங்கடுங்கோ

*நினைத்தலும் நினைதிரோ ஐய அன்றுநாம்*
*பணைத்தாள் ஓமைப் படுசினை பயந்த*
*பொருந்தாப் புகர்நிழல் இருந்தன மாக*
*நடுக்கஞ் செய்யாது நண்ணுவழித் தோன்றி*
*ஒடித்துமிசை கொண்ட ஓங்குமருப்பு யானை*
*பொறிபடு தடக்கை சுருக்கிப் பிறிதோர்*
*ஆறிடை இட்ட அளவைக்கு வேறுணர்ந்து*
*என்றூழ் விடரகம் சிலம்பப்*
*புன்தலை மடப்பிடி புலம்பிய குரலே (நற். 318)*

பிரிவுணர்த்தப்பட்ட தலைமகனைத் தோழி சொல்லியது. 433

## மதுரைக் காருலவியங் கூத்தனார்

*கவிதலை எண்கின் பரூஉமயிர் ஏற்றை*
*இரைதேர் வேட்கையின் இரவிற் போகி*
*நீடுசெயற் சிதலைத் தோடுபுனைந்து எடுத்த*
*அரவாழ் புற்றம் ஒழிய ஒய்யென*
*மரவாய் வள்ளுகிர் இடப்ப வாங்கும்*
*ஊக்கருங் கவலை நீந்தி மற்றிவள்*
*பூப்போல் உண்கண் புதுநலஞ் சிதைய*
*வீங்குநீர் வாரக் கண்டும்*
*தகுமோ பெரும தவிர்கநும் செலவே* (நற். 325)

தோழி செலவழுங்குவித்தது. 434

## மதுரை மருதங்கிழார் மகனார் சொகுத்தனார்

*வரையா நயவினர் நிரையம் பேணார்*
*கொன்றாற்றுத் துறந்த மாக்களின் அடுபிணன்*
*இடுமுடை மருங்கில் தொடுமிடம் பெறாஅது*
*புனிற்றுநிரை கதித்த பொறிய முதுபாறு*
*இறகுபுடைத்து இற்ற பறைப்புன் தூவி*
*செங்கணைச் செறித்த வன்கண் ஆடவர்*
*ஆடுகொள் நெஞ்சமொடு அதர்பார்த்து அல்கும்*
*அத்தம் இறந்தன ராயினும் நம்துறந்து*
*அல்கலர் வாழி தோழி உதுக்காண்*
*இருவிசும்பு அதிர மின்னிக்*
*கருவி மாமழை கடன்முகந் தனவே* (நற். 329)

பிரிவிடை மெலிந்த தலைமகளைத் தோழி பருவங்காட்டி வற்புறுத்தது. 435

## கள்ளிக்குடிப் பூதம்புல்லனார்

*மழைதொழில் உலந்து மாவிசும்பு உகந்தெனக்*
*கழைகவின் அழிந்த கல்லதர்ச் சிறுநெறிப்*
*பரவல் ஊறற் சிறுநீர் மருங்கில்*

*பூநுதல் யானையொடு புலிபொருது உண்ணுஞ்*
*சுரன்இறந்து அரிய என்னார் உரனழிந்து*
*உண்மலி நெஞ்சமொடு வண்மை வேண்டி*
*அரும்பொருட்கு அகன்ற காதலர் முயக்கெதிர்ந்து*
*திருந்திழைப் பணைத்தோள் பெறுநர் போலும்*
*நீங்குக மாதோநின் அவலம் ஓங்குமிசை*
*உயர்புகழ் நல்லில் ஒண்சுவர்ப் பொருந்தி*
*நயவரு குரல பல்லி*
*நள்ளென் யாமத்து உள்ளுதொறும் படுமே (நற். 333)*

பொருள்வயிற் பிரிவின்கண் ஆற்றாளாகிய தலைமகளைத் தோழி வற்புறுத்தது. 436

## பாலைபாடிய பெருங்கடுங்கோ

*உலகம் படைத்த காலைத் தலைவ*
*மறந்தனர் கொல்லோ சிறந்திசி னோரே*
*முதிரா வேனில் எதிரிய அதிரல்*
*பராரைப் பாதிரிக் குறுமயிர் மாமலர்*
*நறுமோ ரோடமொடு உடனெறிந்து அடைச்சிய*
*செப்பிடந்து அன்ன நாற்றந் தொக்குடன்*
*அணிநிறங் கொண்ட மணிமருள் ஐம்பால்*
*தளர்நறுங் கதுப்பின் பையென முழங்கும்*
*அரும்பெறற் பெரும்பயங் கொள்ளாது*
*பிரிந்துறை மரபின் பொருள்படைத் தோரே (நற். 337)*

தோழி தலைமகன் பொருள்வயிற் பிரிதலுற்றானது குறிப்பறிந்து விலக்கியது. 437

## பொதும்பில்கிழார் மகனார்

*நெறியிருங் கதுப்பும் நீண்ட தோளும்*
*அம்ம நாளும் தொன்னலஞ் சிதையேல்*
*ஓராச் செந்தொடை ஓரீஇய கண்ணிக்*

*கல்லா மழவர் வில்லிடை விலங்கிய*
*துன்னரும் கவலை அருஞ்சுரம் இறந்தோர்*
*வருவர் வாழி தோழி செருவிறந்து*
*ஆலங் கானத்து அஞ்சுவர இறுத்த*
*வேல்கெழு தானைச் செழியன் பாசறை*
*உறைகழி வாளின் மின்னி உதுக்காண்*
*நெடும்பெருங் குன்றம் முற்றிக்*
*கடும்பெயல் பொழியுங் கலிகெழு வானே (நற். 387)*

பிரிவிடை மெலிந்த தலைமகளைத் தோழி பருவங்காட்டி வற்புறீஇயது. 438

## பாலைபாடிய பெருங்கடுங்கோ

*ஆழல் மடந்தை அழுங்குவர் செலவே*
*புலிப்பொறி அன்ன புள்ளியம் பொதும்பின்*
*பனிப்பவர் மேய்ந்த மாயிரு மருப்பின்*
*மலர்தலைக் காரான் அகற்றிய தண்ணடை*
*ஒண்தொடி மகளிர் இழையணிக் கூட்டும்*
*பொன்படு கொண்கான நன்னன் நன்னாட்டு*
*ஏழிற் குன்றம் பெறினும் பொருள்வயின்*
*யாரோ பிரிகிற் பவரே குவளை*
*நீர்வார் நிகர்மலர் அன்னநின்*
*பேரமர் மழைக்கண் தெண்பனி கொளவே (நற். 391)*

பிரிவுணர்த்தப்பட்டு ஆற்றாளாய தலைமகளைத் தோழி வற்புறுத்தியது. 439

## பாலைபாடிய பெருங்கடுங்கோ

*தொடங்கற்கட் றோன்றிய முதியவன் முதலாக*
*அடங்காதார் மிடல்சாய அமரர்வந் திரத்தலின்*
*மடங்கல்போற் சினைஇ மாயஞ்செ யவுணரைக்*
*கடந்தடு முன்பொடு முக்கண்ணான் மூவெயிலு*
*முடன்றக்கான் முகம்போல வொண்கதிர் தெறுதலிற்*
*சீறருங் கணிச்சியோன் சினவலி னவ்வெயி*

*வேறுபெற் றுதிர்வனபோல் வரைபிளந் தியங்குந*
*ராறுகெட விலங்கிய வழலவி ராரிடை*
*மறப்பருங் காத லிவளீண் டொழிய*
*இறப்பத் துணிந்தனிர் கேண்மின்மற் றைஇய;*

*தொலைவாகி யிரந்தோர்க்கொன் றீயாமை யிளிவென*
*மலையிறந்து செயல்சூழ்ந்த பொருள்பொரு ளாகுமோ*
*நிலைஇய கற்பினாள் நீநீப்பின் வாழாதாள்*
*முலையாகம் பிரியாமை பொருளாயி னல்லதை;*

*இல்லென விரந்தோர்க்கொன் றீயாமை யிளிவெனக்*
*கல்லிறந்து செயல்சூழ்ந்த பொருள்பொரு ளாகுமோ*
*தொல்லியல் வழாஅமைத் துணையெனப் புணர்ந்தவள்*
*புல்லாகம் பிரியாமை பொருளாயி னல்லதை;*

*இடனின்றி யிரந்தோர்க்கொன் றீயாமை யிளிவெனக்*
*கடனிறந்து செயல்சூழ்ந்த பொருள்பொரு ளாகுமோ*
*வடமீன்போல் தொழுதேத்த வயங்கிய கற்பினாள்*
*தடமென்றோள் பிரியாமை பொருளாயி னல்லதை;*

*எனவிவள்,*
*புன்கண்கொண் டினையவும் பொருள்வயி னகற*
*லன்பன் றென்றியான் கூற வன்புற்றுக்*
*காழ்வரை நில்லாக் கடுங்களிற் றொருத்தல்*
*யாழ்வரைத் தங்கி யாங்குத் தாழ்புநின்*
*தொல்கவின் தொலைத லஞ்சியென்*
*சொல்வரைத் தங்கினர் காத லோரே* (கலி. 2)

'ஒன்றாத் தமரினும்' என்னும் சூத்திரத்து, "நாளது சின்மையும் இளமையது அருமையும் தாளாண் பக்கமும் தகுதியது அமைதியும் இன்மையது இழிவும் உடைமையது உயர்ச்சியும் அன்பினது அகலமும் அகற்சியது அருமையும் ஒன்றாப் பொருள்வயின் ஊக்கிய பாலினும்" என்பதனான், இன்மையது இழிவு கூறி, 'இல்வாழ்க்கை நெறி ஆற்றுதற்கு பொருள்வயிற் பிரிவேன்' என்ற தலைமகற்கு தலைமகளது இயல்பு கூறி, 'இப்பெற்றியாளைப் பிரியாமையே பொருளாவது' எனச் சொல்லி செலவு அழுங்குவித்தமை தோழி தலைமகட்கு உவந்து சொல்லியது.

440

*அறனின்றி யயறூற்று மம்பலை நாணியும்*
*வறனீந்தி நீசெல்லு நீளிடை நினைப்பவும்*
*இறைநில்லா வளையோட இதழ்சோர்பு பனிமல்கப்*
*பொறைநில்லா நோயோடு புல்லென்ற நுதலிவள்*
*விறனல னிழப்பவும் வினைவேட்டாய் கேளினி;*

*உடையிவ ளுயிர்வாழாள் நீநீப்பி னெனப்பல*
*விடைகொண்டியா மிரப்பவு மெமகொள்ளா யாயினை*
*கடைஇய வாற்றிடை நீர்நீத்த வறுஞ்சுனை*
*யடையொடு வாடிய வணிமலர் தகைப்பன;*

*வல்லைநீ துறப்பாயேல் வகைவாடு மிவளென*
*வொல்லாங்கியா மிரப்பவு முணர்ந்தீயா யாயினை*
*செல்லுநீ ளாற்றிடைச் சேர்ந்தெழுந்த மரம்வாடப்*
*புல்லுவிட் டிறைஞ்சிய பூங்கொடி தகைப்பன;*

*பிணிபுநீ விடல்சூழிற் பிறழ்தரு மிவளெனப்*
*பணிபுவந் திரப்பவும் பலசூழ்வா யாயினை*
*துணிபுநீ செலக்கண்ட வாற்றிடை யம்மரத்*
*தணிசெல வாடிய வந்தளிர் தகைப்பன;*

*எனவாங்கு,*
*யாநிற் கூறவு மெமகொள்ளா யாயினை*
*யானா திவள்போ லருள்வந் தவைகாட்டி*
*மேனின்று மெய்கூறுங் கேளிர்போ னீசெல்லுங்*
*கானந் தகைப்ப செலவு* **(கலி. 3)**

தலைமகனால் பிரிவு உணர்த்தப்பட்ட தோழி தலைமகட்கு அஃது உரைத்து, அவளது ஆற்றாமையின் வகை தலைமகற்கு உணர்த்தவும், பின்னும் பிரிவின்மேல் சென்ற உள்ளத்தன் ஆயினானை, 'நீர்செல்லும் கானமே உம்மை இடிக்கும் கேளிர் போல விலக்கும்' என, அவன் செலவழுங்கும் வகை அவள் கூறியது. 441

*வலிமுன்பின் வல்லென்ற யாக்கைப் புலிநோக்கிற்*
*சுற்றமை வில்லர் சுரிவளர் பித்தைய*

*ஏற்றம்பார்த் தல்குங் கடுங்கண் மறவர்தாங்*
*கொள்ளும் பொருளில ராயினும் வம்பலர்*
*துள்ளுநர்க் காண்மார் தொடர்ந்துயிர் வௌவலிற்*
*புள்ளும் வழங்காப் புலம்புகொ ளாரிடை*
*வெள்வேல் வலத்திர் பொருடரல் வேட்கையின்*
*உள்ளினி ரென்ப தறிந்தன ளென்றோழி;*

*காழ்விரி கவையார மீவரு மிளமுலை*
*போழ்திடைப் படாஅமல் முயங்கியு மமையாரென்*
*தாழ்கதுப் பணிகுவர் காதலர் மற்றவர்*
*சூழ்வதை யெவன்கொ லறியே னென்னும்;*

*முள்ளுறழ் முளையெயிற் றமிழ்தூறுந் தீநீரைக்*
*கள்ளினு மகிழ்செயு மெனவுரைத்து மமையாரென்*
*னொள்ளிழை திருத்துவர் காதலர் மற்றவர்*
*உள்ளுவ தெவன்கொ லறியே னென்னும்;*

*நுண்ணெழின் மாமைச் சுணங்கணி யாகந்தங்*
*கண்ணொடு தொடுத்தென நோக்கியு மமையாரென்*
*ஒண்ணுதல் நீவுவர் காதலர் மற்றவர்*
*எண்ணுவ தெவன்கொ லறியே னென்னும்;*
*எனவாங்கு,*
*கழிபெரு நல்கலொன் றுடைத்தென என்றோழி*
*அழிவொடு கலங்கிய வெவ்வத்த ளொருநாள்நீர்*
*பொழுதிடைப் படநீப்பின் வாழ்வாளோ*
*ஒழிகினிப் பெருமநின் பொருட்பிணிச் செலவே* (**கலி.** 4)

'பொருள்வயிற் பிரிவேன்' என்ற தலைமகற்கு, தோழி, தலைவி செலவுக்குறிப்பு அறிந்தவாறும், அவளது ஆற்றாமையும் உணர்த்தி, 'செலவு ஒழிவாயாக' எனக் கூறியது.

442

*பாஅ வஞ்செவிப் பணைத்தாண் மாநிரை*
*மாஅல் யானையொடு மறவர் மயங்கித்*
*தூறதர் பட்ட வாறுமயங் கருஞ்சுரம்*

*இறந்துநீர் செய்யும் பொருளினும் யாமுமக்குச்*
*சிறந்தன மாத லறிந்தனி ராயின்*
*நீளிரு முந்நீர் வளிகலன் வெளவலின்*
*ஆள்வினைக் கழிந்தோர் போற லல்லதைக்*
*கேள்பெருந் தகையோ டெவன்பல மொழிகுவம்*
*நாளுங் கோண்மீன் தகைத்தலுந் தகைமே;*

*கல்லெனக் கவின்பெற்ற விழவாற்றுப் படுத்தபிற்*
*புல்லென்ற களம்போலப் புலம்புகொண் டமைவாளோ;*
*ஆள்பவர் கலக்குற அலைபெற்ற நாடுபோற்*
*பாழ்பட்ட முகத்தோடு பைதல்கொண் டமைவாளோ;*
*ஓரிரா வைகலுள் தாமரைப் பொய்கையுள்*
*நீர்நீத்த மலர்போல நீநீப்பின் வாழ்வாளோ;*

*எனவாங்கு,*
*பொய்ந்நல்கல் புரிந்தனை புறந்தரல் கைவிட்*
*டெந்நாளோ நெடுந்தகாய் நீசெல்வ*
*தந்நாள்கொண் டிறக்குமிவ ளரும்பெற லுயிரே* **(கலி. 5)**

தலைமகன் 'பொருள்வயிற் பிரிவல்' எனக் கேட்ட தோழி, தான் ஆற்றாளாய், 'நீர் செய்யும் பொருளினும் யாம் உமக்குச் சிறந்தேம் என்பது நும் உள்ளத்து உளது எனின், உம்மை நாளும் புள்ளும் விலக்கும்' எனவும், 'இவள் பிரிந்திருப்பார் இருக்குமாறு இருப்பாளல்லள்; பிரிந்த அன்றே இறந்துபடுவள்' எனவும், சொல்லிச் செலவழுங்குவித்தது.

443

*வேனி லுழந்த வறிதுயங் கோய்களிறு*
*வானீங்கு வைப்பின் வழங்காத்தேர் நீர்க்கவாஅங்*
*கானங் கடத்தி ரெனக்கேட்பின் யானொன்*
*றுசாவுகோ வைய சிறிது;*

*நீயே, செய்வினை மருங்கிற் செலவயர்ந் தியாழநின்*
*கைபுனை வல்வின் ஞாணுளர் தீயே*
*இவட்கே, செய்வுறு மண்டில மையாப் பதுபோன்*
*மையில் வாண்முகம் பசப்பூ ரும்மே;*

*நீயே, வினைமாண் காழகம் வீங்கக் கட்டிப்*
*புனைமாண் மரீஇய வம்பு தெரிதியே*

*இவட்கே, சுனைமா ணீலங் காரெதிர் பவைபோ*
*லினைநோக் குண்கண் ணீர்நில் லாவே;*

*நீயே புலம்பி னுள்ளமொடு பொருள்வயிற் செலீஇய*
*வலம்படு திகிரி வாய்நீ வுதியே*
*இவட்கே, அலங்கிதழ்க் கோடல் வீயுகு பவைபோ*
*லிலங்கே ரெல்வளை யிறையூ ரும்மே;*

*எனநின்*
*சென்னவை யரவத்து மினையவ ணீநீப்பின்*
*தன்னலங் கடைகொளப் படுதலின் மற்றிவள்*
*இன்னுயிர் தருதலு மாற்றுமோ*
*முன்னிய தேஎத்து முயன்றுசெய் பொருளே (கலி. 7)*

பிரிவு உணர்த்தப்பட்ட தோழி தலைமகற்கு, 'நீர் பிரிகின்றீர் என்று யான் கூறத் தலைவி கேட்பின், அவட்கு அக்காலத்து நிகழ்வனவற்றை நும்மோடு ஆராய்வதுடையேன்; நீர் செய்யும் பொருள் இவள் உயிரையும் தருகிற்குமோ?' எனச் செலவழுங்கக் கூறியது.

444

*நடுவிகந் தொரீஇ நயனில்லான் வினைவாங்கக்*
*கொடிதோர்த்த மன்னவன் கோல்போல ஞாயிறு*
*கடுகுபு கதிர்மூட்டிக் காய்சினந் தெறுதலி*
*னுறலூறு கமழ்கடாஅத் தொல்கிய எழில்வேழம்*
*வறனுழு நாஞ்சில்போன் மருப்பூன்றி நிலஞ்சேர*
*விறன்மலை வெம்பிய போக்கரு வெஞ்சுரஞ்*
*சொல்லா திறப்பத் துணிந்தனிர்க் கொருபொருள்*
*சொல்லுவ துடையேன் கேண்மின்மற் றைஇய;*

*வீழுநர்க் கிறைச்சியாய் விரல்கவர் பிசைக்குங்கோ*
*லேழுந்தம் பயன்கெட விடைநின்ற நரம்பறூஉம்*
*யாழினுந் நிலையிலாப் பொருளையு நச்சுபவோ;*

*மரீஇத்தாங் கொண்டாரைக் கொண்டக்காற் போலாது*
*பிரியுங்காற் பிறரெள்ளப் பீடின்றிப் புறமாறுந்*
*திருவினுந் நிலையிலாப் பொருளையு நச்சுபவோ;*

*புரைதவப் பயனோக்கார் தம்மாக்க முயல்வாரை*
*வரைவின்றிச் செறும்பொழுதிற் கண்ணோடா துயிர்வௌவு*
*மரைசினுந் நிலையிலாப் பொருளையு நச்சுபவோ;*

எனவாங்கு,
நச்சல் கூடாது பெரும விச்செல
வொழிதல் வேண்டுவல் சூழிற் பழியின்று
மன்னவன் புறந்தர வருவிருந் தோம்பித்
தன்னகர் விழையக் கூடின்
இன்னுறல் வியன்மார்ப அதுமனும் பொருளே (கலி. 8)

சொல்லாது பிரியலுற்ற தலைவன் குறிப்பறிந்து தோழி பொருளது நிலையாமை கூறி, 'அவளோடு கூடிச்செல்கின்ற இல்வாழ்க்கைச் செலவே பொருள்' என, அவன் செலவழுங்கக் கூறியது. 445

வறியவ னிளமைபோல் வாடிய சினையவாய்ச்
சிறியவன் செல்வம்போற் சேர்ந்தார்க்கு நிழலின்றி
யார்கண்ணு மிகந்துசெய் திசைகெட்டா னிறுதிபோல்
வேரொடு மரம்வெம்ப விரிகதிர் தெறுதலி
னலவுற்றுக் குடிகூவ வாறின்றிப் பொருள்வெஃகிக்
கொலையஞ்சா வினைவராற் கோல்கோடி யவனிழ
லுலகுபோ லுலறிய வுயர்மர வெஞ்சுரம்;

இடைகொண்டு பொருள்வயி னிறத்திநீ யெனக்கேட்பி
னுடைபுநெஞ் சுகவாங்கே யொளியோடற் பாண்மன்னோ
படையமை சேக்கையுட் பாயலி னறியாய்நீ
புடைபெயர்வா யாயினும் புலம்புகொண் டினைபவள்;

முனிவின்றி முயல்பொருட் கிறத்திநீ யெனக்கேட்பிற்
பனியகண் படலொல்லா படர்கூர்கிற் பாண்மன்னோ
நனிகொண்ட சாயலா ணயந்துநீ நகையாகத்
துனிசெய்து நீடினுந் துறப்பஞ்சிக் கலுழ்பவள்;

பொருணோக்கிப் பிரிந்துநீ போகுதி யெனக்கேட்பின்
மருணோக்க மடிந்தாங்கே மயல்கூர்கிற் பாண்மன்னோ
விருணோக்க மிடையின்றி யீரத்தி னியன்றநின்
னருணோக்க மழியினு மவலங்கொண் டழிபவள்;

எனவாங்கு,
வினைவெஃகி நீசெலின் விடுமிவ ளுயிரெனப்

*புனையிழாய் நின்னிலை யான்கூறப் பையென*
*நிலவுவே ணெடுந்தகை நீளிடைச்*
*செலவொழிந் தனனாற் செறிகநின் வளையே* **(கலி. 10)**

தலைமகனால் பிரிவு உணர்த்தப்பட்ட தோழி, 'இவ் வகைப்பட்ட சுரத்தைப் பொருள் காரணமாகப் பிரிகின்றீர் எனக் கேட்பின், இவ்வகை ஆகற்பாலள்' எனச் சொல்லி, செலவழுங்குவித்தமை தலைமகட்குச் சொல்லியது. 446

*இடுமு ணெடுவேலி போலக் கொலைவர்*
*கொடுமரந் தேய்த்தார் பதுக்கை நிரைத்த*
*கடுநவை யாராற் றறுசுனை முற்றி*
*யுடங்குநீர் வேட்ட வுடம்புயங் கியானை*
*கடுந்தாம் பதிபாங்குக் கைதெறப் பட்டு*
*வெறிநிரை வேறாகச் சாரச் சாரலோடி*
*நெறிமயக் குற்ற நிரம்பாநீ டத்தஞ்*
*சிறுநனி நீதுஞ்சி யேற்பினு மஞ்சு*
*நறுநுத னீத்துப் பொருள்வயிற் செல்வோ*
*யுரனுடை யுள்ளத்தை செய்பொருண் முற்றிய*
*வளமையா னாகும் பொருளிது வென்பா*
*யிளமையுங் காமமு நின்பாணி நில்லா*
*விடைமுலைக் கோதை குழைய முயங்கு*
*முறைநாள் கழித லுறாஅமைக் காண்டை*
*கடைநா ளிதுவென் றறிந்தாரு மில்லைப்*
*போற்றாய் பெருமநீ காமம் புகர்பட*
*வேற்றுமைக் கொண்டு பொருள்வயிற் போகுவாய்*
*கூற்றமு மூப்பு மறந்தாரோ டொராஅங்கு*
*மாற்றுமைக் கொண்ட வழி* **(கலி. 12)**

தலைமகனால் பிரிவு உணர்த்தப்பட்ட தோழி, காட்டது கடுமையும், தலைவியது மென்மையும், நாளது சின்மையும் இளமையது அருமையும் தாளாண் பக்கமும் தகுதியது அமைதியும் அன்பினது அகலமும் அகற்சியது அருமையும் கூறிச் செலவழுங்குவித்தது. 447

*செருமிகு சினவேந்தன் சிவந்திறுத்த புலம்போல*
*வெரிவெந்த கரிவறல் வாய்புகுவ காணாவாய்ப்*

*பொரிமலர்ந் தன்ன பொறிய மடமான்*
*திரிமருப் பேற்றொடு தேரறர்க் கோட*
*மரல்சாய மலைவெம்ப மந்தி யுயங்க*
*வுரல்போ லடிய வுடம்புயங் கியானை*
*யூறுநீ ரடங்கலி னுண்கயங் காணாது*
*சேறு சுவைத்துத்தஞ் செல்லுயிர் தாங்கும்*
*புயறுளி மாறிய போக்கரு வெஞ்சுரம்;*

*எல்வளை யெம்மொடு நீவரின் யாழநின்*
*மெல்லியன் மேவந்த சீறடித் தாமரை*
*யல்லிசே ராயித ழரக்குத்தோய்ந் தவைபோலக்*
*கல்லுறி னவ்வடி கறுக்குந வல்லவோ;*

*நலம்பெறு சுடர்நுதா லெம்மொடு நீவரி*
*னிலங்குமா ணவிர்தூவி யன்னமென் சேக்கையுட்*
*டுலங்குமான் மேலூர்தித் துயிலேற்பாய் மற்றாண்டை*
*விலங்குமான் குரல்கேட்பின் வெருவுவை யல்லையோ;*

*கிளிபுரை கிளவியா யெம்மொடு நீவரிற்*
*றளிபொழி தளிரன்ன வெழின்மேனி கவின்வாட*
*முளியரில் பொத்திய முழங்கழ லிடைபோழ்ந்த*
*வளியுறி னவ்வெழில் வாடுவை யல்லையோ;*
*எனவாங்கு,*
*அனையவை காதலர் கூறலின் வினைவயிற்*
*பிரிகுவ ரெனப்பெரி தழியாதி திரிபுறீஇக்*
*கடுங்குரை யருமைய காடெனி னல்லது*
*கொடுங்குழாய் துறக்குந ரல்லர்*
*நடுங்குதல் காண்மார் நகைகுறித் தனரே (கலி. 13)*

தலைமகனால் பிரிவு உணர்த்தப்பட்டு ஆற்றாளாய தலைமகள், 'யான் நும்மோடு போதுவள்' என்றாட்கு, தலைவன் அவளது மென்மையும் காட்டின் கடுமையும் கூறி உடன்படானாக, ஆற்றாளாய தலைவியைத் தோழி, 'அவர் நம்மோடு நகையாடிச் சொன்னார், பிரிவரல்லர்' என வற்புறுத்தியது. 448

*அணைமரு ளின்றுயி லம்பணைத் தடமென்றோட்*
*டுணைமல ரெழினீலத் தேந்தெழின் மலருண்கண்*

மணமௌவன் முகையன்ன மாவீழ்வா னிரைவெண்பன்
மணநாறு நறுநுதன் மாரிவீ ழிருங்கூந்த
லலர்முலை யாகத் தகன்ற வல்குற்
சிலநிரை வால்வளைச் செய்யா யோவெனப்
பலபல கட்டுரை பண்டையிற் பாராட்டி
யினிய சொல்லி யின்னாங்குப் பெயர்ப்ப
தினியறிந் தேனது துனியா குதலே;

பொருளல்லாற் பொருளுமுண் டோவென யாழநின்
மருளிகொண் மடநோக்க மயக்கப்பட் டயர்த்தாயோ;
காதலா ரெவன்செய்ப பொருளில்லா தார்க்கென
வேதிலார் கூறுஞ்சொற் பொருளாக மதித்தாயோ;
செம்மையி னிகந்தொரீஇப் பொருள்செய்வார்க் கப்பொரு
ளிம்மையு மறுமையும் பகையாவ தறியாயோ;

அதனால்,
எம்மையும் பொருளாக மதித்தீத்தை நம்முணாங்
கவவுக்கை விடப்பெறும் பொருட்டிறத்
தவவுக்கை விடுத வதுமனும் பொருளே (**கலி.** 14)

தலைமகனால் பிரிவு உணர்த்தப்பட்ட தோழி, தலைமகற்கு, 'முன்னையின் சிறப்ப எம்வயின் பாராட்டியதெல்லாம் எம்வயின் பிறந்த வெறுப்பு என்பது இப்பொழுது அறிந்தேன்; இவ்வகைப்பட்ட போக்கு நினக்கு எவ்வகையான் வந்தது?' என, அவன் செலவழுங்கச் சொல்லியது. 449

அரிமா னிடித்தன்ன அஞ்சிலை வல்விற்
புரிநாண் புடையிற் புறங்காண்ட லல்லால்
இணைப்படைத் தானை யரசோ டுறினுங்
கணைத்தொடை நாணுங் கடுந்துடி யார்ப்பின்
எருத்து வலிய எறுழ்நோக் கிரலை
மருப்பிற் றிரீந்து மறிந்துவீழ் தாடி
உருத்த கடுஞ்சினத் தோடா மறவர்
பொருள்கொண்டு புண்செயி னல்லதை யன்போ
டருள்புற மாறிய வாரிடை யத்தம்;

*புரிபுநீ புறமாறிப் போக்கெண்ணிப் புதிதீண்டிப்*
*பெருகிய செல்வத்தாற் பெயர்த்தர லொல்வதோ*
*செயலையந் தளிரேய்க்கு மெழினல மந்நலம்*
*பசலையா லுணப்பட்டுப் பண்டைநீ ரொழிந்தக்கால்;*
*பொய்யற்ற கேள்வியாற் புரையோரைப் படர்ந்துநீ*
*மையற்ற படிவத்தான் மறுத்தர லொல்வதோ*
*தீங்கதிர் மதியேய்க்குந் திருமுக மம்முகம்*
*பாம்புசேர் மதிபோலப் பசப்பூர்ந்து தொலைந்தக்கால்;*
*பின்னிய தொடர்நீவிப் பிறர்நாட்டுப் படர்ந்துநீ*
*மன்னிய புணர்ச்சியான் மறுத்தர லொல்வதோ*
*யரியவிழ் நறுநீலம் புரையுண்கண் கலுழ்பானாத்*
*திரியுமிழ் நெய்யேபோற் றெண்பனி யுறைக்குங்கால்;*
*எனவாங்கு,*
*அனையவை போற்றி நினைஇயன நாடிக்காண்*
*வளமையோ வைகலுஞ் செயலாகு மற்றிவண்*
*முளைநிரை முறுவலா ராயத்து ளெடுத்தாய்ந்த*
*இளமையுந் தருவதோ இறந்த பின்னே* **(கலி. 15)**

பிரிவுணர்த்திய தலைமகற்குத் தோழி தலைமகளது ஆற்றாமையும் இளமையது அருமையும் கூறி, 'நீர் பிரிந்துசெய்யக் கருதியவை எக்காலத்தும் செய்யலாம்; பொருளால் கழிந்த இளமை மீட்கலாமோ?' எனக் கூறியது. 450

*பாடின்றிப் பசந்தகண் பைதல பனிமல்க*
*வாடுபு வனப்போடி வணங்கிறை வளையூர*
*வாடெழி லழிவஞ்சா தகன்றவர் திறத்தினி*
*நாடுங்கா னினைப்பதொன் றுடையேன்மன் னதுவுந்தான்*
*தொன்னலந் தொலைபீங்கியாந் துயருழப்பத் துறந்துள்ளார்*
*துன்னிநங் காதலர் துறந்தேகு மாரிடைக்*
*கன்மிசை யுருப்பிறக் கனைதுளி சிதறென*
*இன்னிசை யெழிலியை இரப்பவு மியைவதோ;*
*புனையிழா யீங்குநாம் புலம்புறப் பொருள்வெஃகி*
*முனையென்னார் காதலர் முன்னிய வாற்றிடைச்*
*சினைவாடச் சிறக்குநின் சினந்தணிந் தீகெனக்*
*கனைகதிர்க் கனலியைக் காமுற லியைவதோ;*

*ஒளியிழா யீங்குநாந் துயர்கூரப் பொருள்வயின்*
*அளியொரீஇக் காதல ரகன்றேகு மாரிடை*
*முளிமுதன் மூழ்கிய வெம்மைதீர்ந் துறுகென*
*வளிதருஞ் செல்வனை வாழ்த்தவு மியைவதோ;*
*எனவாங்கு,*
*செய்பொருட் சிறப்பெண்ணிச் செல்வர்மாட் டனையன*
*தெய்வத்துத் திறனோக்கித் தெருமர றேமொழி*
*வறனோடின் வையகத்து வான்றருங் கற்பினாள்*
*நிறனோடிப் பசப்பூர்த லுண்டெனு*
*அறனோடி விலங்கின்றவ ராள்வினைத் திறத்தே* (**கலி.** 16)

தலைமகன் பொருள்வயிற் பிரிந்தவிடத்து, அவன் போகிய காட்டது கடுமை நினைந்து ஆற்றாளாகிய தலைமகள், 'அவர் பொருட்டாக நாம், இவ்வகைப்பட்ட தெய்வங்களைப் பரவுதல் நம் கற்புக்கு இயைவதோ?' எனக் கேட்ட தோழி, அவ்வாற்றானே மீண்டனர்; நீ கவலவேண்டா' எனக் கூறியது. 451

*படைபண்ணிப் புனையவும் பாமாண்ட பயிலணைப்*
*புடைபெயர்ந் தொடுங்கவும் புறஞ்சேர வுயிர்ப்பவும்*
*உடையதை யெவன்கொலென் றூறளந் தவர்வயி*
*னடைசெல்லா நனியேங்கி நடுங்கற்கா ணறுநுதால்;*
*தொல்லெழி றொலைபிவ டுயருழப்பத் துறந்துநீ*
*வல்வினை வயக்குதல் வலித்திமன் வலிப்பளவை*
*நீள்கதி ரவிர்மதி நிறைவுபோ னிலையாது*
*நாளினு நெகிழ்போடு நலனுட னிலையுமோ;*
*ஆற்றனோ யடவிவ ளணிவாட வகன்றுநீ*
*தோற்றஞ்சா றொகுபொருண் முயறிமன் முயல்வளவை*
*நாற்றஞ்சா னளிபொய்கை யடைமுதிர் முகையிற்குக்*
*கூற்றம்போற் குறைபடூஉம் வாழ்நாளு நிலையுமோ;*
*வகையெழில் வனப்பெஞ்ச வரைபோக வலித்துநீ*
*பகையறு பயவினை முயறிமன் முயல்வளவைத்*
*தகைவண்டு புதிதுண்ணத் தாதவிழ் தண்போதின்*
*முகைவாய்த்த தடம்போலு மிளமையு நிலையுமோ;*
*எனவாங்கு,*

*பொருந்தியான் றான்வேட்ட பொருள்வயி னினைந்தசொற்*
*றிருந்திய யாக்கையுண் மருத்துவ னூட்டிய*
*மருந்துபோன் மருந்தாகி மனனுவப்பப்*
*பெரும்பெயர் மீளி பெயர்ந்தனன் செலவே* **(கலி. 17)**

பகைவர் திறை தந்த நாடு காத்தற்குத் தலைவன் பிரிகின்றமை உணர்ந்து, தலைவி வேறுபட்டமை கண்டு தோழி அவனை எதிர்ப்பட்டு அவளது ஆற்றாமையும் இளமையது அருமையும் கூறிச் செலவு அழுங்குவித்தமை தலைமகற்குக் கூறியது. 452

*அரும்பொருள் வேட்கையி னுள்ளந் துரப்பப்*
*பிரிந்துறை சூழாதி யைய விரும்பிநீ*
*என்றோ ளெழுதிய தொய்யிலும் யாழநின்*
*மைந்துடை மார்பிற் சுணங்கு நினைத்துக்காண்*
*சென்றோர் முகப்பப் பொருளுங் கிடவா*
*தொழிந்தவ ரெல்லாரு முண்ணாதுஞ் செல்லார்*
*இளமையுங் காமமு மோராங்குப் பெற்றார்*
*வளமை விழைதக்க துண்டோ வுளநாள்*
*ஒரோஒகை தம்முட் டழீஇ யொரோஒகை*
*ஒன்றன்கூ றாடை யுடுப்பவரே யாயினும்*
*ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை யரிதரோ*
*சென்ற விளமை தரற்கு* **(கலி. 18)**

'ஒன்றாத் தமரினும்' என்னும் சூத்திரத்தில் "நாளது சின்மையும் இளமையது அருமையும் தாளாண் பக்கமும் தகுதியது அமைதியும் இன்மையது இழிவும் உடைமையது உயர்ச்சியும் அன்பினது அகலமும் அகற்சியது அருமையும்' எனக்கூறிய எட்டினையும் தலைவன் கூறக்கேட்ட தோழி, அவற்றை, 'நிகழ்ந்தது கூறி நிலையலும் திணையே' என்னும் விதியால் தலைவற்குக் கூறி செலவு அழுங்குவித்தது. 453

*செவ்விய தீவிய சொல்லி யவற்றொடு*
*பைய முயங்கிய வஞ்ஞான் றவையெல்லாம்*
*பொய்யாதல் யான்யாங் கறிகோமற் றைய*
*அகனகர் கொள்ளா அலர்தலைத் தந்து*
*பகன்முனி வெஞ்சுர முள்ள லறிந்தேன்*
*மகனல்லை மன்ற வினி*

*செல்லினிச் சென்றுநீ செய்யும் வினைமுற்றி*
*அன்பற மாறியா முள்ளத் துறந்தவள்*
*பண்பு மறிதிரோ வென்று வருவாரை*
*என்றிறம் யாதும் வினவல் வினவிற்*
*பகலின் விளங்குநின் செம்மல் சிதையத்*
*தவலருஞ் செய்வினை முற்றாம லாண்டோர்*
*அவலம் படுதலு முண்டு* **(கலி. 19)**

பிரிவு உணர்த்தப்பட்ட தோழி செலவு விலக்கவும், பிரிவின்மேல் சென்ற உள்ளத்தன் ஆயினானை, 'நீ பிரியின், இவள் இறந்துபடும்' எனச் சொல்லிய வாய்ப்பாட்டான் மறுத்தது. 454

*பான்மருண் மருப்பி னுரல்புரை பாவடி*
*யீர்நறுங் கமழ்கடாஅத் தினம்பிரி யொருத்த*
*லாறுகடி கொள்ளும் வேறுபுலம் படர்ந்து*
*பொருள்வயிற் பிரிதல் வேண்டு மென்னும்*
*அருளில் சொல்லு நீசொல் லினையே*
*நன்னர் நறுநுத னயந்தனை நீவி*
*நின்னிற் பிரியலெ னஞ்சலோம் பென்னும்*
*நன்னர் மொழியு நீமொழிந் தனையே*
*அவற்றுள் யாவோ வாயின மாஅன் மகனே*
*கிழவ ரின்னோ ரென்னாது பொருடான்*
*பழவினை மருங்கிற் பெயர்புபெயர் புறையு*
*மன்ன பொருள்வயிற் பிரிவோய் நின்னின்*
*றிமைப்புவரை வாழாண் மடவோள்*
*அமைக்கவின் கொண்ட தோளிணை மறந்தே* **(கலி. 21)**

தலைமகனால் பிரிவு உணர்த்தப்பட்ட தோழி, அவனை நெருங்கி, களவுக் காலத்து ஒழுக்கம் எடுத்துக்காட்டலால் தெளிவுபட மொழிந்ததூஉம், பொருளது நிலையின்மையும் அவளது ஆற்றாமையும் கூறிச் செலவு மறுத்தது. 455

*உண்கடன் வழிமொழிந் திரங்குங்கால் முகனுந்தாங்*
*கொண்டது கொடுக்குங்கால் முகனும்வே றாகுதல்*
*பண்டுமிவ் வுலகத் தியற்கை யஃதின்றும்*

புதுவ தன்றே புலனுடை மாந்திர்
தாயுயிர் பெய்த பாவை போல
நலனுடை யார்மொழிக்கண் தாவார்தாந் தந்நலந்
தாதுதேர் பறவையின் அருந்திறல் கொடுக்குங்கால்
ஏதிலார் கூறுவ தெவனோநின் பொருள்வேட்கை;
நறுமுல்லை நேர்முகை யொப்ப நிரைத்த
செறிமுறை பாராட்டி னாய்மற்றெம் பல்லின்
பறிமுறை பாராட் டினையோ ஐய;
நெய்யிடை நீவி மணியொளி விட்டன்ன
ஐவகை பாராட்டி னாய்மற்றெங் கூந்தற்
செய்வினை பாராட் டினையோ ஐய;
குளனணி தாமரைப் பாசரும் பேய்க்கும்
இளமுலை பாராட்டி னாய்மற்றெம் மார்பின்
தளர்முறை பாராட் டினையோ ஐய;
எனவாங்கு,
அடர்பொன் அவிரேய்க்கும் அவ்வரி வாடச்
சுடர்காய் சுரம்போகு நும்மையா மெங்கட்
படர்கூற நின்றது முண்டோ தொடர்கூரத்
துவ்வாமை வந்தக் கடை (**கலி. 22**)

பிரிவுணர்த்தப்பட்ட தோழி அதற்கு உடம்படாது தலைமகனை நெருங்கிக் களவு காலத்தொழுக்கம் எடுத்துக்காட்டிஆற்றுவித்து உடம்பட்ட வாய்பாட்டன் மறுத்தது. 456

வயக்குறு மண்டிலம் வடமொழிப் பெயர்பெற்ற
முகத்தவன் மக்களுள் முதியவன் புணர்ப்பினால்
ஐவரென் றுலகேத்தும் அரசர்கள் அகத்தராக்
கைபுனை யரக்கில்லைக் கதழெரி சூழ்ந்தாங்குக்
களிதிகழ் கடாஅத்த கடுங்களி றகத்தவா
முளிகழை யுயர்மலை முற்றிய முழங்கழல்
ஒள்ளுரு வரக்கில்லை வளிமகன் உடைத்துத்தன்
உள்ளத்துக் கிளைகளோ டுயப்போகு வான்போல
எழுவுறழ் தடக்கையின் இனங்காக்கு மெழில்வேழம்

அழுவஞ்சூழ் புகையழல் அதர்பட மிதித்துத்தங்
குழுவொடு புணர்ந்துபோங் குன்றழல் வெஞ்சுரம்
இறத்திரால் ஐயமற் றிவணிலைமை கேட்டீமின்;

மணக்குங்கான் மலரன்ன தகையவாய்ச் சிறிதுநீ
தணக்குங்காற் கலுழ்பானாக் கண்ணெனவு முளவன்றோ
சிறப்புச்செய் துழையராப் புகழ்பேற்றி மற்றவர்
புறக்கொடையே பழிதூற்றும் புல்லியார் தொடர்புபோல்;

ஈங்குநீர் அளிக்குங்கால் இறைசிறந் தொருநாணீர்
நீக்குங்கால் நெகிழ்போகும் வளையெனவும் உளவன்றோ
செல்வத்துட் சேர்ந்தவர் வளனுண்டு மற்றவர்
ஒல்கிடத் துலப்பிலா உணர்விலார் தொடர்புபோல்;

ஒருநாணீ ரளக்குங்கால் ஒளிசிறந் தொருநாணீர்
பாராட்டாக் காற்பசக்கு நுதலெனவு முளவன்றோ
பொருந்திய கேண்மையின் மறையுணர்ந் தம்மறை
பிரிந்தக்காற் பிறர்க்குரைக்கும் பீடிலார் தொடர்புபோல்;
எனவாங்கு,
யாநிற் கூறுவ தெவனுண் டெம்மினும்
நீநற் கறிந்தனை நெடுந்தகை வானந்
துளிமாறு பொழுதினிவ் வுலகம் போலுநின்
அளிமாறு பொழுதினிவ் வாயிழை கவினே (கலி. 25)

பிரிவு உணர்த்தப்பட்ட தோழி, 'நீ பிரிந்தால் பீடிலார் தொடர்புபோல, நும்மை அலர் தூற்றுவன இவ்வகைப்பட்டன சில உள' எனத் தலைவி ஆற்றாமை கூறி, செலவு அழுங்குவித்தது.

457

ஒருகுழை யொருவன்போ லிணர்சேர்ந்த மராஅமும்
பருதியஞ் செல்வன்போ னனையூழ்த்த செருந்தியு
மீனேற்றுக் கொடியோன்போல் எதிரியஇ லவமுமாங்கத்
தீதுதீர் சிறப்பின் ஐவர்கள் நிலைபோலப்
போதவிழ் மரத்தோடு பொருகரை கவின்பெற
நோதக வந்தன்றால் இளவேனில் மேதக;

பல்வரி யினவண்டு புதிதுண்ணும் பருவத்துத்
தொல்கவின் தொலைந்தவென் தடமென்றோள் உள்ளுவார்
ஒல்குபு நிழல்சேர்ந்தார்க் குலையாது காத்தோம்பி
வெல்புக ழுலகேத்த விருந்துநாட் டுறைபவர்;

திசைதிசை தேனார்க்குந் திருமருத முன்றுறை
வசைதீர்ந்த என்னலம் வாடுவ தருளுவார்
நசைகொண்டு தந்நிழல் சேர்ந்தாரைத் தாங்கித்தம்
இசைபரந் துலகேத்த ஏதில்நாட் டுறைபவர்;

அறல்சாஅய் பொழுதோடெம் அணிநுதல் வேறாகித்
திறல்சான்ற பெருவனப் பிழப்பதை யருளுவார்
ஊறஞ்சி நிழல்சேர்ந்தார்க் குலையாது காத்தோம்பி
ஆறின்றிப் பொருள்வெஃகி அகன்றநாட் டுறைபவர்;

என நீ,
தெருமரல் வாழி தோழிநங் காதலர்
பொருமுரண் யானையர் போர்மலைந் தெழுந்தவர்
செருமேம் பட்ட வென்றியர்
வருமென வந்தன்றவர் வாய்மொழித் தூதே (**கலி.** 26)

'மேவிய சிறப்பின் ஏனோர்' என்னும் சூத்திரத்தில் பகைமேற் சென்ற அரசன் திறைபெற்ற நாடு காத்து, அதன்கண் தன் நெறிமுறைமை அடிப்படுத்து வருதற்குப் பிரிவன் என்றலின், பிரிவின்கண் தலைவன், இளவேனிற்காலத்துப் பிரிய, அக்கால வரவின்கண் தலைவி ஆற்றாளாய், 'அவர் நமக்கு அருளும் காலையில் அருளார்காண்' என்றாட்குத் தோழி, 'அவர் வரவிற்கு இக்காலம் தூதாயன்றே வந்தது; நீ ஆற்றுவாயாக' என வற்புறுத்தியது.

458

ஈதலிற் குறைகாட்டா தறனறிந் தொழுகிய
தீதிலான் செல்வம்போல் தீங்கரை மரநந்தப்
பேதுறு மடமொழிப் பிணையெழின் மானோக்கின்
மாதரார் முறுவல்போல் மணமௌவல் முகையூழ்ப்பக்
காதலர்ப் புணர்ந்தவர் கதுப்புப்போற் கழல்குபு
தாதொடுந் தளிரொடுந் தண்ணறல் தகைபெறப்
பேதையோன் வினைவாங்கப் பீடிலா அரசனாட்
டேதிலான் படைபோல இறுத்தந்த இளவேனில்;

நிலம்பூத்த மரமிசை நிமிர்பாலுங் குயிலெள்ள
நலம்பூத்த நிறஞ்சாய நம்மையோ மறந்தைக்க
கலம்பூத்த அணியவர் காரிகை மகிழ்செய்யப்
புலம்பூத்துப் புகழ்பானாக் கூடலும் உள்ளார்கொல்;

கன்மிசை மயிலாலக் கறங்கியூர் அலர்தூற்றத்
தொன்னலம் நனிசாய நம்மையோ மறந்தைக்க
ஒன்னாதார்க் கடந்தடூஉம் உரவுநீர் மாகொன்ற
வென்வேலான் குன்றின்மேல் விளையாட்டும் விரும்பார்கொல்;

மையெழின் மலருண்கண் மருவூட்டி மகிழ்கொள்ளப்
பொய்யினாற் புரிவுண்ட நம்மையோ மறந்தைக்க
தைஇய மகளிர்தம் ஆயமோ டமர்ந்தாடும்
வையைவார் உயரெக்கர் நுகர்ச்சியும் உள்ளார்கொல்;

எனவாங்கு,
நோய்மலி நெஞ்சமோ டினையல் தோழி
நாமில்லாப் புலம்பாயின் நடுக்கஞ்செய் பொழுதாயின்
காமவேள் விழவாயின் கலங்குவள் பெரிதென
ஏமுறு கடுந்திண்டேர் கடவி
நாமமர் காதலர் துணைதந்தார் விரைந்தே (கலி. 27)

தலைவன் குறித்துப் பிரிந்த இளவேனில் வரவின்கண் எம்மையோ மறக்க, இக்காலத்து இவ்வூரின்கட் டாம் விளையாடும் விளையாட்டும் மறந்தாரோ வெனச்சொல்லி ஆற்றாளாய தலைவிக்குத் தோழி தலைவன் வரவுணர்ந்து கழியுவகையாற் கூறியது.

459

பாடல்சால் சிறப்பிற் சினையவுஞ் சுனையவும்
நாடினர் கொயல்வேண்டா நயந்துதாங் கொடுப்பபோல்
தோடவிழ் கமழ்கண்ணி தையுபு புனைவார்கண்
தோடுறத் தாழ்ந்து துறைதுறை கவின்பெறச்
செய்யவ ளணியகலத் தாரமொ டணிகொள்பு
தொய்யகந் தாழ்ந்த கதுப்புப்போல் துவர்மணல்
வையைவார் அவிரற லிடைபோழும் பொழுதினான்;

*விரிந்தானா மலராயின் விளித்தாலுங் குயிலாயின்*
*பிரிந்துள்ளா ரவராயின் பேதுறூஉம் பொழுதாயின்*
*அரும்படர் அவலநோய் ஆற்றுவ ளென்னாது*
*வருந்தநோய் மிகுமாயின் வணங்கிறை அளியென்னோ;*

*புதலவை மலராயின் பொங்கரின வண்டாயின்*
*அயலதை யலராயின் அகன்றுள்ளா ரவராயின்*
*மதலையில் நெஞ்சொடு மதனில ளென்னாது*
*நுதலூரும் பசப்பாயின் நுணங்கிறை யளியென்னோ;*

*தோயின அறலாயின் சுரும்பார்க்குஞ் சினையாயின்*
*மாவின தளிராயின் மறந்துள்ளா ரவராயின்*
*பூவெழி லிழந்தகண் புலம்புகொண் டமையாது*
*பாயனோய் மிகுமாயின் பைந்தொடி அளியென்னோ;*

*எனவாங்கு,*
*ஆயிழாய் ஆங்கன முரையாதி சேயார்க்கு*
*நாந்தூது மொழிந்தனம் விடல்வேண்டா நம்மினுந்*
*தாம்பிரிந் துறைதல் ஆற்றலர்*
*பரிந்தெவன் செய்தி வருகுவர் விரைந்தே* **(கலி. 28)**

இளவேனில் வரவின்கண் ஆற்றாத தலைவி தூதுவிடக் கருதத், தோழி அவர் பிரிந்திருத்தலை நம்மினுந் தாம் வல்லரல்லரெனச் சொல்லி வற்புறுத்தியது. 460

*தொல்லெழில் வரைத்தன்றி வயவுநோய் நலிதலின்*
*அல்லாந்தார் அலவுற ஈன்றவள் கிடக்கைபோற்*
*பல்பயம் உதவிய பசுமைதீர் அகன்ஞாலம்*
*புல்லிய புனிறொரீஇப் புதுநலம் ஏர்தர*
*வளையவர் வண்டல்போல் வார்மணல் வடுக்கொள*
*இளையவ ரைம்பால்போல் எக்கர்போழ்ந் தறல்வார*
*மாவீன்ற தளிர்மிசை மாயவள் திதலைபோல்*
*ஆயிதழ்ப் பன்மலர் ஐயகொங் குறைத்தர*
*மேதக இளவேனில் இறுத்தந்த பொழுதின்கண்;*

*சேயார்கட் சென்றவென் னெஞ்சினைச் சின்மொழி*
*நீகூறும் வரைத்தன்றி நிறுப்பென்மன் நிறைநீவி*

வாய்விரிபு பனியேற்ற விரவுப்பன் மலர்தீண்டி
நோய்சேர்ந்த வைகலான் வாடைவந் தலைத்தரூஉம்;

போழ்துள்ளார் துறந்தார்கட் புரிவாடுங் கொள்கையைச்
சூழ்பாங்கே சுடரிழாய் கரப்பென்மன் கைநீவி
வீழ்கதிர் விடுத்தபூ விருந்துண்ணும் இருந்தும்பி
யாழ்கொண்ட இமிழிசை இயன்மாலை அலைத்தரூஉம்;

தொடிநிலை நெகிழ்த்தார்கண் தோயுமென் னாருயிர்
வடுநீங்கு கிளவியாய் வலிப்பென்மன் வலிப்பவும்
நெடுநிலாத் திறந்துண்ண நிரையிதழ் வாய்விட்ட
கடிமலர் கமழ்நாற்றங் கங்குல்வந் தலைத்தரூஉம்;

எனவாங்கு,
வருந்தினை வதிந்தநின் வளைநீங்கச் சேய்நாட்டுப்
பிரிந்துசெய் பொருட்பிணி பின்னோக்கா தேகிநம்
அருந்துயர் களைஞர் வந்தனர்
திருந்தெயி றிலங்குநின் தேமொழி படர்ந்தே (கலி. 29)

பருவவரவின்கண் ஆற்றாத தலைவியைத் தோழி வற்புறுப்ப, வன்புறை எதிரழிந்தாட்குத் தோழி, அவன் வரவுணர்ந்து கழியுவகையாற் கூறியது. 461

கடும்புனல் கால்பட்டுக் கலுழ்தேறிக் கவின்பெற
நெடுங்கயத் தயலய வயிர்தோன்ற அம்மணல்
வடுத்தூர வரிப்பபோல் ஈங்கைவா டுதிர்புகப்
பிரிந்தவர் நுதல்போலப் பீர்வீயக் காதலர்ப்
புணர்ந்தவர் முகம்போலப் பொய்கைபூப் புதிதீன
மெய்கூர்ந்த பனியொடு மேனின்ற வாடையாற்
கையாறு கடைக்கூட்டக் கலக்குறூஉம் பொழுதுமற்
பொய்யேமென் றாழியாய் புணர்ந்தவ ருரைத்ததை;

மயங்கமர் மாறட்டு மண்வெளவி வருபவர்
தயங்கிய களிற்றின்மேல் தகைகாண விடுவதோ
பயங்கெழு பல்கதிர் பால்போலும் பொழுதொடு
வயங்கிழை தண்ணென வந்தவிவ் வசைவாடை;

தாள்வலம் படவென்று தகைநன்மா மேல்கொண்டு
வாள்வென்று வருபவர் வனப்பார விடுவதோ
நீள்கழை நிவந்தபூ நிறம்வாடத் தூற்றுபு
தோளதிர் பகஞ்சேரத் துவற்றுமிச் சின்மழை;

பகைவென்று திறைகொண்ட பாய்திண்டேர் மிசையவர்
வகைகொண்ட செம்மனாம் வனப்பார விடுவதோ
புகையெனப் புதல்சூழ்ந்து பூவங்கட் பொதிசெய்யா
முகைவெண்பல் நுதிபொர முற்றிய கடும்பனி;

எனவாங்கு,
வாளாதி வயங்கிழாய் வருந்துவ ளிவளென
நாள்வரை நிறுத்துத்தாஞ் சொல்லிய பொய்யன்றி
மீளிவேல் தானையர் புகுதந்தார்
நீளுயர் கூடல் நெடுங்கொடி யெழவே (கலி. 31)

இளவேனிற் காலத்து வருவல், அத்துணையும் ஆற்றியிருவென்று மண் நசையால் வேந்தன் சென்றவழி, முன்பனிக் காலமும் பின்பனிக்காலமும் வந்து வருத்தலின் ஆற்றாத தலைவியைத் தோழி வருவரென வற்புறுப்பவும், வன்புறை எதிரழிந்தவழித் தலைவன் யாங் குறித்த பருவம் வருந்துணையும் ஆற்றியிராளெனப் பின்பனிக் காலத்து வருகின்ற வரவுணர்ந்து தோழி கழியுவகையாற் கூறியது. 462

எஃகிடை தொட்டகார்க் கவின்பெற்ற ஐம்பால்போல்
மையற விளங்கிய துவர்மண லதுவது
ஐதாக நெறித்தன்ன அறலவிர் நீளைம்பால்
அணிநகை யிடையிட்ட ஈகையங் கண்ணிபோற்
பிணிநெகி ழலர்வேங்கை விரிந்தபூ நெறிகொளத்
துணிநீரால் தூய்மதி நாளால் அணிபெற
ஈன்றவள் திதலைபோல் ஈர்வெய்யுந் தளிரொடும்
ஆன்றவர் அடக்கம்போல் அலர்ச்செல்லாச் சினையோடும்
வல்லவர் யாழ்போல வண்டார்க்கும் புதலொடும்
நல்லவர் நுடக்கம்போல் நயம்வந்த கொம்பொடும்
உணர்ந்தவர் ஈகைபோல் இணரூழ்த்த மரத்தொடும்
புணர்ந்தவர் முயக்கம்போற் புரிவுற்ற கொடியொடும்

*நயந்தார்க்கோ நல்லைமன் இளவேனில் எம்போல;*
*பசந்தவர் பைதனோய் பகையெனத் தணித்துநம்*
*இன்னுயிர் செய்யு மருந்தாகிப் பின்னிய*
*காதலர் எயிறேய்க்குந் தண்ணருவி நறுமுல்லைப்*
*போதாரக் கொள்ளும் கமழ்குரற் கென்னுந்*
*தூதுவந் தன்றே தோழி*
*துயரறு கிளவியோ டயர்ந்தீகம் விருந்தே* (**கலி.** 32)

காலவரவு கண்டு ஆற்றாளாயினவிடத்துத் தோழி காலத்தை நோக்கி அழகிதாகச் செய்தாய் வந்தெனச் சொல்லித், தலைவிக்கு நங் காதலர் வருகின்றாரெனச் சொல்லி வந்த தூதுகாண் இது, நாம் விருந்தயர்கமெனச் சொல்லியது. 463

*வீறுசான் ஞாலத்து வியலணி காணிய*
*யாறுகண் விழித்தபோற் கயநந்திக் கவின்பெற*
*மணிபுரை வயங்கலுள் துப்பெறிந் தவைபோலப்*
*பிணிவிடு முருக்கிதழ் அணிகயத் துதிர்ந்துகத்*
*துணிகயம் நிழல்நோக்கித் துதைபுடன் வண்டார்ப்ப*
*மணிபோல அரும்பூழ்த்து மரமெல்லாம் அலர்வேயக்*
*காதலர்ப் புணர்ந்தவர் கவவுக்கை நெகிழாது*
*தாதவிழ் வேனிலோ வந்தன்று வாரார்நம்*
*போதெழில் உண்கண் புலம்ப நீத்தவர்;*

*எரியுரு உறழ இலவ மலரப்*
*பொரியுரு உறழப் புன்குபூ வுதிரப்*
*புதுமலர்க் கோங்கம் பொன்னெனத் தாதூழ்ப்பத்*
*தமியார்ப் புறத்தெறிந் தெள்ளி முனியவந்*
*தார்ப்பது போலும் பொழுதெண்ணி அந்நலம்*
*போர்ப்பது போலும் பசப்பு;*

*நொந்து நகுவனபோல் நந்தின கொம்பு நைந்துள்ளி*
*யுகுவது போலுமென் னெஞ்சு எள்ளித்*
*தொகுபுடன் ஆடுவ போலுமயில் கையில்*
*உகுவன போலும் வளை என்கண்போல்*
*இகுபறல் வாரும் பருவத்தும் வாரார்*
*மிகுவது போலுமிந் நோய்;*

நரம்பின் தீங்குரல் நிறுக்குங் குழல்போல்
இரங்கிசை மிஞிறொடு தும்பிதா தூதத்
தூதவர் விடுதரார் துறப்பார்கொல் நோதக
இருங்குயி லாலு மரோ;

எனவாங்கு,
புரிந்துநீ எள்ளுங் குயிலையும் அவரையும் புலவாதி
நீலித முண்கணாய் நெறிகூந்தல் பிணிவிட
நாள்வரை நிறுத்துத்தாஞ் சொல்லிய பொய்யன்றி
மாலைதாழ் வியன்மார்பர் துனைதந்தார்
காலுறழ் கடுந்திண்டேர் கடவினர் விரைந்தே (கலி. 33)

பருவவரவின்கண் வன்புறையெதிரழிந்து ஆற்றாளாயினாளைத் தோழி தலைவனது வரவுணர்ந்து கூறி ஆற்றுவித்தது. 464

மன்னுயிர் ஏமுற மலர்ஞாலம் புரவீன்று
பன்னீராற் கால்புனல் பரந்தூட்டி இறந்தபின்
சின்னீரான் அறல்வார அகல்யாறு கவின்பெற
முன்னொன்று தமக்காற்றி முயன்றவர் இறுதிக்கண்
பின்னொன்று பெயர்த்தாற்றும் பீடுடை யாளர்போற்
பன்மலர் சினையுகச் சுரும்பிமிர்ந்து வண்டார்ப்ப
இன்னமர் இளவேனில் இறுத்தந்த பொழுதினான்;

விரிகாஞ்சித் தாதாடி இருங்குயில் விளிப்பவும்
பிரிவஞ்சா தவர்தீமை மறைப்பென்மன் மறைப்பவும்
கரிபொய்த்தான் கீழிருந்த மரம்போலக் கவின்வாடி
எரிபொத்தி என்னெஞ்சஞ் சுடுமாயின் எவன்செய்கோ;
பொறைதளர் கொம்பின்மேற் சிதரினம் இறைகொள
நிறைதளரா தவர்தீமை மறைப்பென்மன் மறைப்பவும்
முறைதளர்ந்த மன்னவன் கீழ்ப்போல பனிவாருங் கண்ணாயின் எவன்செய்கோ;
தளையவிழ்பூஞ் சினைச்சுரும் பியாழ்போல இசைப்பவும்
கொலைதளரா தவர்தீமை மறைப்பென்மன் மறைப்பவும்
கிளையழிய வாழ்பவன் ஆக்கம்போற் புல்லென்று
வளையானா நெகிழ்போடுந் தோளாயின் எவன்செய்கோ;

எனவாங்கு,
நின்னுள்நோய் நீயுரைத் தலமரல் எல்லாநாம்
எண்ணிய நாள்வரை இறவாது காதலர்
பண்ணிய மாவினர் புகுதந்தார்
கண்ணுறு பூசல் கைகளைந் தாங்கே (கலி. 34)

பருவங்கண்டு வன்புறை யெதிரழிந்து ஆற்றாளாய தலைவிக்குத் தோழி அவன் வரவுணர்ந்து கழியுவகையாற் கூறியது. 465

மடியிலான் செல்வம்போல் மரன்நந்த அச்செல்வம்
படியுண்பார் நுகர்ச்சிபோற் பல்சினை மிஞிறார்ப்ப
மாயவள் மேனிபோல் தளிர்ஈன அம்மேனித்
தாய சுணங்குபோல் தளிர்மிசைத் தாதுக
மலர்தாய பொழில்நண்ணி மணிநீர்க் கயநிற்ப
அலர்தாய துறைநண்ணி அயிர்வரித் தறல்வார
நனியெள்ளுங் குயில்நோக்கி இனைபுகு நெஞ்சத்தால்
துறந்துள்ளா ரவரெனத் துனிகொள்ளல் எல்லாநீ;

வண்ணவண் டிமிர்ந்தானா வையைவா ருயரெக்கர்த்
தண்ணருவி நறுமுல்லைத் தாதுண்ணும் பொழுதன்றோ
கண்ணிலா நீர்மல்கக் கவரிநாம் விடுத்தக்கால்
ஒண்ணுதால் நமக்கவர் வருதுமென் றுரைத்ததை;
மல்கிய துருத்தியுள் மகிழ்துணைப் புணர்ந்தவர்
வில்லவன் விழவினுள் விளையாடும் பொழுதன்றோ
வலனாக வினையென்று வணங்கிநாம் விடுத்தக்கால்
ஒளியிழாய் நமக்கவர் வருதுமென் றுரைத்ததை;
நிலனாவில் திரிதரூஉம் நீண்மாடக் கூடலார்
புலனாவிற் பிறந்தசொற் புதிதுண்ணும் பொழுதன்றோ
பலநாடு நெஞ்சினேம் பரிந்துநாம் விடுத்தக்கால்
சுடரிழாய் நமக்கவர் வருதுமென் றுரைத்ததை;

எனவாங்கு,
உள்ளுதொ றுடையுநின் உயவுநோய்க் குயிர்ப்பாகி
யெள்ளறு காதலர் இயைதந்தார் புள்ளியற்

*காமர் கடுந்திண்டேர்ப் பொருப்பன்*
*வாய்மை யன்ன வைகலொடு புணர்ந்தே* **(கலி. 35)**

வற்புறுத்துந் தோழிக்குத் தலைவி இக்காலம் அல்லவோ அவர் வருதுமெனச் சொன்ன காலமென வன்புறை யெதிரழிந்தாளை, நீ துனிகொள்ளல். அவர் வந்தாரெனத் தலைவன் வரவுணர்ந்து தோழி ஆற்றுவித்தது. 466

*கொடுமிடல் நாஞ்சிலான் தார்போல் மராத்து*
*நெடுமிசைச் சூழு மயிலாலுஞ் சீர*
*வடிநரம் பிசைப்பபோல் வண்டொடு சுரும்பார்ப்பத்*
*தொடிமகள் முரற்சிபோல் தும்பிவந் திமிர்தர*
*இயனெழீஇ யவைபோல எவ்வாயும் இம்மெனக்*
*கயனணி பொதும்பருட் கடிமலர்த் தேனூத*
*மலராய்ந்து வயின்வயின் விளிப்பபோன் மரனூழ்ப்ப*
*இருங்குயி லாலப் பெருந்துறை கவின்பெறக்*
*குழவி வேனில் விழவெதிர் கொள்ளுஞ்*
*சீரார் செவ்வியும் வந்தன்று*
*வாரார் தோழிநங் காத லோரே;*
*பாஅய்ப் பாஅய்ப் பசந்தன்று நுதல்*
*சாஅய்ச் சாஅய் நெகிழ்ந்தன தோள்;*
*நனியறல் வாரும் பொழுதென வெய்ய*
*பனியறல் வாரும்என் கண்;*
*மலையிடைப் போயினர் வரல்நசைஇ நோயொடு*
*முலையிடைக் கனலுமென் னெஞ்சு;*
*காதலிற் பிரிந்தார் கொல்லோ வறிதோர்*
*தூதொடு மறந்தார் கொல்லோ நோதகக்*
*காதலர் கதலுங் காண்பாங் கொல்லோ*
*துறந்தவர் ஆண்டாண் டுறைகுவர் கொல்லோ யாவது*
*நீளிடைப் படுதலும் ஒல்லும் யாழநின்*
*வாளிடைப் படுத்த வயங்கீ ரோதி*
*நாளணி சிதைத்தலும் உண்டென நயவந்து*
*கேள்வி யந்தணர் கடவும்*
*வேள்வி யாவியின் உயிர்க்குமென் னெஞ்சே* **(கலி. 36)**

காலங்கண்டு ஆற்றாத தலைவியது நிலைமை கண்டு, ஆற்றாத தோழி, தான் ஆற்றாளாய் அவட்குக் கூறியது. 467

# முல்லைத் திணை

## குறுங்குடி மருதனார்

*முல்லை வைந்நுனை தோன்ற வில்லமொடு*
*பைங்காற் கொன்றை மென்பிணி யவிழ*
*விரும்புதிரித் தன்ன மாயிரு மருப்பிற்*
*பரலவ லடைய விரலை தெறிப்ப*
*மலர்ந்த ஞாலம் புலம்புபுறக் கொடுப்பக்*
*கருவி வானங் கதழுறை சிதறிக்*
*கார்செய் தன்றே கவின்பெறு கானங்*
*குரங்குளைப் பொலிந்த கொய்சுவற் புரவி*
*நரம்பார்த் தன்ன வாங்குவள் பரியப்*
*பூத்த பொங்கர்த் துணையொடு வதிந்த*
*தாதுண் பறவை பேதுற லஞ்சி*
*மணிநா வார்த்த மாண்வினைத் தேர*
*னுவக்காண் டோன்றுங் குறும்பொறை நாடன்*
*கறங்கிசை விழவி னுறந்தைக் குணாது*
*நெடும்பெருங் குன்றத் தமன்ற காந்தட்*
*போதவி ழலரி னாறு*
*மாய்தொடி யரிவைநின் மாணலம் படர்ந்தே* **(அகம். 4)**

தோழி தலைமகளைப் பருவங்காட்டி வற்புறுத்தியது. 468

## மதுரை மருதனிளநாகனார்

*வேந்துவினை முடித்த காலைத் தேம்பாய்ந்*
*தினவண் டார்க்குந் தண்ணறும் புறவின்*
*வென்வேல் இளையர் இன்புற வலவன்*
*வள்புவலித் தூரின் அல்லது முள்ளுறின்*
*முந்நீர் மண்டிலம் ஆதி ஆற்றா*
*நன்னால்கு பூண்ட கடும்பரி நெடுந்தேர்*

*வாங்குசினை பொலிய ஏறிப் புதல*
*பூங்கொடி அவரைப் பொய்யதள் அன்ன*
*உள்ளில் வயிற்ற வெள்ளை வெண்மறி*
*மாழ்கி யன்ன தாழ்பெருஞ் செவிய*
*புன்தலைச் சிறாரோ டுகளி மன்றுழைக்*
*கவையிலை ஆரின் அங்குழை கறிக்கும்*
*சீறூர் பலபிறக் கொழிய மாலை*
*இனிதுசெய் தனையால் எந்தை வாழிய*
*பனிவார் கண்ணள் பலபுலந் துறையும்*
*ஆய்தொடி யரிவை கூந்தல்*
*போதுகுரல் அணிய வேய்தந் தோயே* **(அகம். 104)**

வினைமுற்றி மீளுந் தலைமகற்குத் தோழி சொல்லியது. 469

## மதுரை மருதனிளநாகனார்

*கடவுட் கற்பொடு குடிக்குவிளக் காகிய*
*புதல்வற் பயந்த புகழ்மிகு சிறப்பின்*
*நன்ன ராட்டிக் கன்றியும் எனக்கும்*
*இனிதா கின்றால் சிறக்கநின் ஆயுள்*
*அருந்தொழில் முடித்த செம்மல் உள்ளமொடு*
*சுரும்பிமிர் மலர கானம் பிற்பட*
*வெண்பிடவு அவிழ்ந்த வீகமழ் புறவில்*
*குண்டைக் கோட்ட குறுமுள் கள்ளிப்*
*புன்தலை புதைத்த கொழுங்கொடி முல்லை*
*ஆர்கழல் புதுப்பூ உயிர்ப்பின் நீக்கித்*
*தெள்ளறல் பருகிய திரிமருப்பு எழிற்கலை*
*புள்ளியம் பிணையொடு வதியும் ஆங்கண்*
*கோடுடைக் கையர் துளர்எறி வினைஞர்*
*அரியல் ஆர்கையர் விளைமகிழ் தூங்கச்*
*செல்கதிர் மழுகிய உருவ ஞாயிற்றுச்*
*செக்கர் வானஞ் சென்ற பொழுதில்*
*கற்பால் அருவியின் ஒலிக்கும் நற்றேர்த்*

*தார்மணி பலவுடன் இயம்பச்*
*சீர்மிகு குரிசில்நீ வந்துநின் றதுவே* (அகம். 184)

தலைமகன் வினைவயிற் பிரிந்துவந்து எய்தியவிடத்துத் தோழி புல்லு மகிழ்வுரைத்தது. 470

## மதுரை அளக்கர்ஞாழார் மகனார் அம்மள்ளனார்

*நீலத் தன்ன நீர்பொதி கருவின்*
*மாவிசும் பதிர முழங்கி ஆலியின்*
*நிலந்தண் ணென்று கானங் குழைப்ப*
*இனந்தேர் உழவர் இன்குர லியம்ப*
*மறியுடை மடப்பிணை தழீஇப் புறவில்*
*திரிமருப் பிரலை பைம்பயிர் உகள*
*ஆர்பெயல் உதவிய கார்செய் காலை*
*நூனெறி நுணங்கிய கானவில் புரவிக்*
*கல்லெனக் கறங்குமணி யியம்ப வல்லோன்*
*வாய்ச்செல வணக்கிய தாப்பரி நெடுந்தேர்*
*ஈர்ம்புற இயங்குவழி யறுப்பத் தீந்தொடைப்*
*பையுள் நல்யாழ் செவ்வழி பிறப்ப*
*இந்நிலை வாரா ராயின் தந்நிலை*
*எவன்கொல் பாண உரைத்திசிற் சிறிதெனக்*
*கடவுட் கற்பின் மடவோள் கூறச்*
*செய்வினை யழிந்த மையல் நெஞ்சின்*
*துனிகொள் பருவரல் தீர வந்தோய்*
*இனிதுசெய் தனையால் வாழ்கநின் கண்ணி*
*வேலி சுற்றிய வால்வீ முல்லைப்*
*பெருந்தார் கமழும் விருந்தொலி கதுப்பின்*
*இன்னகை யிளையோள் கவவ*
*மன்னுக பெருமநின் மலர்ந்த மார்பே* (அகம். 314)

வினைமுற்றிப் புகுந்த தலைமகற்குத் தோழி சொல்லியது. 471

## நன்பலூர்ச் சிறுமேதாவியார்

*களவும் புளித்தன விளவும் பழுநின*
*சிறுதலைத் துருவின் பழுப்புறு விளைதயிர்*
*இதைப்புன வரகின் அவைப்புமாண் அரிசியொடு*
*கார்வாய்த் தொழிந்த ஈர்வாய்ப் புற்றத்து*
*ஈயல்பெய் தட்ட இன்புளி வெஞ்சோறு*
*சேதான் வெண்ணெய் வெம்புறத் துருக*
*இளையர் அருந்தப் பின்றை நீயும்*
*இடுமுள் வேலி முடக்காற் பந்தர்ப்*
*புதுக்கலத் தன்ன செவ்வாய்ச் சிற்றில்*
*புனையிருங் கதுப்பினின் மனையோ ளயரப்*
*பாலுடை அடிசில் தொடீஇய ஒருநாள்*
*மாவண் தோன்றல் வந்தனை சென்மோ*
*காடுறை இடையன் யாடுதலைப் பெயர்க்கும்*
*மடிவிடு வீளை வெரீஇக் குறுமுயல்*
*மன்ற இரும்புதல் ஒளிக்கும்*
*புன்புல வைப்பினெஞ் சிறுநல் லூரே* **(அகம். 394)**

தலைமகளை இரவுக்குறி இடத்துய்த்துவந்து தோழி தலைமகனை வரைவுகடாயது.

472

## பேயனார்

*மாமழை யிடியூஉத் தளிசொரிந் தன்றே*
*வாணுதல் பசப்பச் செலவயர்ந் தனையே*
*யாமே நிற்றுறந் தமையலம்*
*ஆய்மல ருண்கணு நீர்நிறைந் தனவே* **(ஐங். 423)**

கார்ப்பருவத்தே பிரியக்கருதிய தலைமகற்குத் தோழி தலைமகளது ஆற்றாமைகூறிச் செலவழுங்குவித்தது.

473

*புறவணி நாடன் காதன் மடமகள்*
*ஒண்ணுதல் பசப்ப நீசெலிற் றெண்ணீர்ப்*

*போதவிழ் தாமரை யன்னநின்*
*காதலம் புதல்வ னழுமினி முலைக்கே* (ஐங். 424)

இதுவுமது. 474

*நன்றே காதலர் சென்ற வாறே*
*அணிநிற விரும்பொறை மீமிசை*
*மணிநிற வுருவின தோகையு முடைத்தே* (ஐங். 431)

'பிரிவுடம்பட்டும் ஆற்றாயாகின்றது என்னை?' என்று வினவியவழி, 'அவர்போன சுரம் போகற்கரிதென்று ஆற்றேனாகின்றேன்' என்ற தலைமகட்கு 'வேனிற்காலம் கழிந்தது; கார்ப்பருவத் தோற்றத்திலே பிரிந்தாராகலான் அச்சுரம் நன்று' எனத் தோழி சொல்லி ஆற்றுவித்தது. 475

*நன்றே காதலர் சென்ற வாறே*
*சுடுபொ னன்ன கொன்றை சூடிக்*
*கடிபுகு வனர்போன் மள்ளரு முடைத்தே* (ஐங். 432)

இதுவுமது. 476

*நன்றே காதலர் சென்ற வாறே*
*நீர்ப்பட வெழிலி வீசும்*
*கார்ப்பெயற் கெதிரிய கானமு மு·டைத்தே* (ஐங். 433)

இதுவுமது. 477

*நன்றே காதலர் சென்ற வாறே*
*மறியுடை மான்பிணை யுகளத்*
*தண்பெயல் பொழிந்த வின்பமு முடைத்தே* (ஐங். 434)

இதுவுமது. 478

*நன்றே காதலர் சென்ற வாறே*
*நிலனணி நெய்தன் மலரப்*
*பொலனணி கொன்றையும் பிடவமு முடைத்தே* (ஐங். 435)

இதுவுமது. 479

நன்றே காதலர் சென்ற வாறே
நன்பொ னன்ன சுடரிணர்க்
கொன்றையொடு மலர்ந்த குருத்துமா ருடைத்தே (ஐங். 436)

இதுவுமது. 480

நன்றே காதலர் சென்ற வாறே
ஆலித் தண்மழை தலைஇய
வாலிய மலர்ந்த முல்லையு முடைத்தே (ஐங். 437)

இதுவுமது. 481

நன்றே காதலர் சென்ற வாறே
பைம்புதற் பல்பூ மலர
இன்புறத் தகுந பண்புமா ருடைத்தே (ஐங். 438)

இதுவுமது. 482

நன்றே காதலர் சென்ற வாறே
குருந்தங் கண்ணிக் கோவலர்
பெருந்தண் ணிலைய பாக்கமு முடைத்தே (ஐங். 439)

இதுவுமது. 483

நன்றே காதலர் சென்ற வாறே
தண்பெய லளித்த பொழுதின்
ஒண்சுடர்த் தோன்றியுந் தளவமு முடைத்தே (ஐங். 440)

இதுவுமது. 484

வான்பிசிர்க் கருவியிற் பிடவுமுகை தகையக்
கான்பிசிர் கற்பக் கார்தொடங் கின்றே
இனையல் வாழி தோழி யெனையதூஉம்
நிற்றுறந் தமைகுவ ரல்லர்
வெற்றி வேந்தன் பாசறை யோரே (ஐங். 461)

பிரிவிடை வேறுபட்ட கிழத்தியைத் தோழி வரவு கூறி, 'உரைத்த பருவம் வந்ததாகலான் அவர் வருவர்' என வற்புறீஇயது. 485

*ஏதில பெய்ம்மழை காரென மயங்கிய*
*பேதையங் கொன்றைக் கோதைநிலை நோக்கி*
*எவனினி மடந்தைநின் கலிழ்வே நின்வயின்*
*தகையெழில் வாட்டுந ரல்லர்*
*முகையவிழ் புறவி னாடிறந் தோரே* (ஐங். 462)

பருவங்கண்டு வேறுபட்ட கிழத்தியைத் தோழி, 'பருவமன்று' என வற்புறீஇயது.
486

*புதன்மிசை நறுமலர் கவின்பெறத் தொடரிநின்*
*நலமிகு கூந்த றகைகொளப் புனைய*
*வாரா தமையலோ விலரே நேரார்*
*நாடுபடு நன்கலந் தரீஇயர்*
*நீடினர் தோழிநங் காத லோரே* (ஐங். 463)

குறித்த பருவம் வரவும் தலைமகன் தாழ்த்துழித் தோழி காரணம் கூறி வற்புறீஇயது.
487

*கண்ணெனக் கருவிளை மலரப் பொன்னென*
*இவர்கொடிப் பீர மிரும்புதன் மலரும்*
*அற்சிர மறக்குந ரல்லர்நின்*
*நற்றோண் மருவரற் குலமரு வோரே* (ஐங். 464)

வரைந்த அணுமைக்கண்ணே பிரிந்த தலைமகன் குறித்த பருவம் வந்துழி, 'இதனை மறந்தார்' என்ற தலைமகட்குத் தோழி 'வரைவதற்கு முன்பு அவரன்புடைமை அதுவாகலான் மறத்தல் கூடாது' எனச் சொல்லி வற்புறீஇயது. 488

*நீரிகு வன்ன நிமிர்பரி நெடுந்தேர்*
*கார்செய் கானம் பின்படக் கடைஇ*
*மயங்குமல ரகல நீயினிது முயங்க*
*வருவர் வாழி தோழி*
*செருவெங் குருசி றணிந்தனன் பகையே* (ஐங். 465)

பருவங்கண்டு வேறுபட்ட தலைமகளை வேந்தன் வினை முடித்தானெனக் கேட்ட தோழி, 'வருவர்' என வற்புறீஇயது.
489

*வேந்துவிடு விழுத்தொழி லெய்தி யேந்துகோட்*
*டண்ணல் யானை யரசுவிடுத் தினியே*
*எண்ணிய நாளகம் வருதல் பெண்ணியல்*
*காமர் சுடர்நுதல் விளங்கும்*
*தேமொழி யரிவை தெளிந்திசின் யானே* **(ஐங். 466)**

பிரிவின்கண் ஆற்றாளாகிய தலைமகளை, 'அவர் போன காரியம் இடையூறின்றி முடித்துவருதல் பல்லாற்றானும் தெளிந்தேன்' எனத் தோழி சொல்லி ஆற்றுவித்தது.
490

*புனையிழை நெகிழச் சாஅய் நொந்துநொந்*
*தினையல் வாழியோ விகுளை வினைவயின்*
*சென்றோர் நீடினர் பெரிதெனத் தங்காது*
*நம்மினும் விரையு மென்ப*
*வெம்முரண் யானை விறற்போர் வேந்தே* **(ஐங். 467)**

தலைமகன் வினைவயிற் பிரிய ஆற்றாளாகிய தலைமகளைத் தோழி வற்புறீஇயது.
491

*வரிநுணல் கறங்கத் தேரை தெவிட்டக்*
*கார்தொடங் கின்றே காலை யினிநின்*
*நேரிறைப் பணைத்தோட் கார்விருந் தாக*
*வடிமணி நெடுந்தேர் கடைஇ*
*வருவ ரின்றுநங் காத லோரே* **(ஐங். 468)**

பிரிவுநீட ஆற்றாளாய தலைமகட்குத் தோழி பருவங்காட்டி 'இன்றே வருவர்' என வற்புறீஇயது.
492

*பைந்திணை யுணங்கல் செம்பூழ் கவரும்*
*வன்புல நாடற் றரீஇய வலனேர்*
*பங்க ணிருவிசும் பதிர வேறொடு*
*பெயறொடங் கின்றே வானம்*
*காண்குவம் வம்மோ பூங்க ணோயே* **(ஐங். 469)**

பிரிவுநீட ஆற்றாளாகிய தலைமகட்குத் தோழி, 'அவரை நமக்குத் தருதற்கு வந்ததுகாண் இப்பருவம்; எனக்காட்டி வற்புறீஇயது.
493

*இருநிலங் குளிர்ப்ப வீசி யல்கலும்*
*அரும்பனி யளைஇய வற்சிரக் காலை*
*உள்ளார் காதல ராயி னொள்ளிழை*
*சிறப்பொடு விளங்கிய காட்சி*
*மறக்க விடுமோநின் மாமைக் கவினே* (ஐங். 470)

பருவம் வந்ததுகண்டு தாம் குறித்த இதனை மறந்தாரென வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீஇயது. 494

*எல்வளை நெகிழ மேனி வாடப்*
*பல்லித ழுண்கண் பனியலைக் கலங்கத்*
*துறந்தோன் மன்ற மறங்கெழு குருசில்*
*அதுமற் றுணர்ந்தனை போலாய்*
*இன்னும் வருதி யென்னவர் தகவே* (ஐங். 471)

பருவவரவின்கண் தூதாகிவந்த பாணன் கூறியவழித் தோழி சொல்லியது. 495

*கைவல் சீறியாழ்ப் பாண நுமரே*
*செய்த பருவம் வந்துநின் றதுவே*
*எம்மி னுணரா ராயினுந் தம்வயின்*
*பொய்படு கிளவி நாணலும்*
*எய்யா ராகுத னோகோ யானே* (ஐங். 472)

குறித்த பருவம் வரவும் தலைமகன் வாரானாகியவழித் தூதாய் வந்த பாணற்குத் தோழி கூறியது. 496

*கொன்றைப் பூவிற் பசந்த வுண்கண்*
*குன்றக நெடுஞ்சுனைக் குவளை போலத்*
*தொல்கவின் பெற்றன விவட்கே வெல்போர்*
*வியனெடும் பாசறை நீடிய*
*வயமான் றோன்றனீ வந்த மாறே* (ஐங். 500)

வினைமுற்றிவந்த தலைமகற்குத் தோழி சொல்லியது. 497

## கோவர்த்தனார்

*மடவ மன்ற தடவுநிலைக் கொன்றை*
*கல்பிறங் கத்தஞ் சென்றோர் கூறிய*
*பருவம் வாரா வளவை நெரிதரக்*
*கொம்புசேர் கொடியிண ரூழ்த்த*
*வம்ப மாரியைக் காரென மதித்தே* **(குறுந். 66)**

பருவங்கண்டு அழிந்த தலைமகளைத் தோழி பருவமன்றென்று வற்புறீஇயது. 498

## காக்கைபாடினியார் நச்செள்ளையார்

*திண்டேர் நள்ளி கானத் தண்டர்*
*பல்லாப் பயந்த நெய்யிற் றொண்டி*
*முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெஞ்சோ*
*றெழுகலத் தேந்தினுஞ் சிறிதென் றோழி*
*பெருந்தோ ணெகிழ்த்த செல்லற்கு*
*விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே* **(குறுந். 210)**

பிரிந்துவந்த தலைமகன், நன்காற்றுவித்தாய் என்றாற்குத் தோழி உரைத்தது. 499

## இடைக்காடனார்

*மடவ வாழி மஞ்ஞை மாயினம்*
*கால மாரி பெய்தென வதனெதிர்*
*ஆலலு மாலின பிடவும் பூத்தன*
*காரன் றிகுளை தீர்கநின் படரே*
*கழிந்த மாரிக் கொழிந்த பழநீர்*
*புதுநீர் கொளீஇய வுகுத்தரும்*
*நொதுமல் வானத்து முழங்குகுரல் கேட்டே* **(குறுந். 251)**

பிரிவிடைத் தோழி, 'பருவமன்று; பட்டது வம்பு' என்று வற்புறுத்தியது. 500

## ஒக்கூர் மாசாத்தியார்

*முல்லை யூர்ந்த கல்லுய ரேறிக்*
*கண்டனம் வருகஞ் சென்மோ தோழி*

*எல்லூர்ச் சேர்தரு மேறுடை யினத்துப்*
*புல்லார் நல்லான் பூண்மணி கொல்லோ*
*செய்வினை முடித்த செம்ம லுள்ளமொடு*
*வல்வி லிளையர் பக்கம் போற்ற*
*ஈர்மணற் காட்டாறு வரூஉம்*
*தேர்மணி கொல்லாண் டியம்பிய வுளவே* **(குறுந். 275)**

பருவ வரவின்கண் வரவு நிமித்தந் தோன்றத் தோழி தலைமகட்கு உரைத்தது. 501

## கச்சிப்பேட்டு நன்னாகையார்

*அம்ம வாழி தோழி காதலர்*
*இன்னே கண்டுந் துறக்குவர் கொல்லோ*
*முந்நாற் றிங்க ணிறைபொறுத் தசைஇ*
*ஒதுங்கல் செல்லாப் பசும்புளி வேட்கைக்*
*கடுஞ்சூன் மகளிர் போல நீர்கொண்டு*
*விசும்பிவர் கல்லாது தாங்குபு புணரிச்*
*செழும்பல் குன்ற நோக்கிப்*
*பெருங்கலி வான மேர்தரும் பொழுதே* **(குறுந். 287)**

பிரிவிடை வேறுபட்ட தலைவி நம்மைத் துறந்து வாராரென்று கவன்றாட்குப் பருவங் காட்டித் தோழி வருவரெனச் சொல்லியது. 502

## கொற்றனார்

*வீங்கிழை நெகிழ விம்மி யீங்கே*
*எறிகட் பேதுற லாய்கோ டிட்டுச்*
*சுவர்வாய் பற்றுநின் படர்சே ணீங்க*
*வருவே மென்ற பருவ முதுக்காண்*
*தனியோ ரீரங்கும் பனிகூர் மாலைப்*
*பல்லான் கோவலர் கண்ணிச்*
*சொல்லுப அன்ன முல்லைவெண் முகையே* **(குறுந். 358)**

தலைமகன் பிரிவிடைக் கிழத்தியைத் தோழி வற்புறுத்தியது. 503

## குறுங்கீரனார்

தண்டுளிக் கேற்ற பைங்கொடி முல்லை
முகைதலை திறந்த நாற்றம் புதன்மிசைப்
பூமலி தளவமொடு தேங்கமழ்பு கஞல
வம்புப் பெய்யுமான் மழையே வம்பன்று
காரிது பருவ மாயின்
வாரா ரோநங் காத லோரே (குறுந். 382)

பருவவரவின்கண் வேறுபட்ட தலைமகளைத் தோழி பருவமன்று வம்பென்று வற்புறீஇயது.
504

## இளம்புல்லூர்க் காவிதியார்

கொண்டல் ஆற்றி விண்தலைச் செறீஇயர்
திரைப்பிதிர் கடுப்ப முகடுகந் தேறி
நிரைத்துநிறை கொண்ட கமஞ்சூன் மாமழை
அழிதுளி கழிப்பிய அழிபெயற் கடைநாள்
இரும்பனிப் பருவத்த மயிர்க்காய் உழுந்தின்
அகலிலை அகல வீசி அகலாது
அல்கலும் அலைக்கும் நல்கா வாடை
பரும யானை அயாவுயிர்த் தாஅங்கு
இன்னும் வருமே தோழி வாரா
வன்க ணாளரோடு இயைந்த
புன்கண் மாலையும் புலம்புமுந் துறுத்தே (நற். 89)

பொருண்முற்றி மறுத்தந்தானெனக் கேட்ட தோழி தலைவிக்கு உரைத்தது. 505

## இளந்திரையனார்

நீரற வறந்த நிரம்பா நீளிடைத்
துகில்விரித் தன்ன வெயிலவிர் உருப்பின்
அஞ்சுவரப் பனிக்கும் வெஞ்சுரம் இறந்தோர்
தாம்வரத் தெளித்த பருவங் காண்வர
இதுவோ என்றிசின் மடந்தை மதியின்று
மறந்துகடல் முகந்த கமஞ்சூல் மாமழை

*பொறுத்தல் செல்லாது இறுத்த வண்பெயல்*
*காரென்று அயர்ந்த உள்ளமொடு தேர்வில*
*பிடவுங் கொன்றையுங் கோடலும்*
*மடவ வாகலின் மலர்ந்தன பலவே* (நற். 99)

பருவங்கண்டாற்றாளாய தலைவியைத் தோழி பருவமன்றென்று வற்புறுத்தியது.
506

• • • • •

*மலர்ந்த பொய்கைப் பூக்குற்று அழுங்க*
*அயர்ந்த ஆயங் கண்ணினிது படீஇயர்*
*அன்னையுஞ் சிறிதுதணிந்து உயிரினள் இன்னீர்த்*
*தடங்கடல் வாயில் உண்டுசில் நீரென*
*மயிலடி இலைய மாக்குரல் நொச்சி*
*மனைநடு மௌவலொடு ஊழ்முகை அவிழக்*
*காரெதிர்ந் தன்றாற் காலை காதலர்*
*தவச்சேய் நாட்டர் ஆயினும் மிகப்பேர்*
*அன்பினர் வாழி தோழி நன்புகழ்*
*உலப்பின்று பெறினும் தவிரலர்*
*கேட்டிசின் அல்லனோ விசும்பின் றகவே* (நற். 115)

பிரிவிடையாற்றாளாய தலைமகளைத் தோழி பருவங்காட்டி வற்புறுத்தியது. 507

• • • • •

*உள்ளிறைக் குரீஇக் காரணல் சேவல்*
*பிறபுலத் துணையோடு உறைபுலத் தல்கி*
*வந்ததன் செவ்வி நோக்கிப் பேடை*
*நெறிகிளர் ஈங்கைப் பூவின் அன்ன*
*சிறுபல் பிள்ளையொடு குடம்பை கடிதலின்*
*துவலையின் நனைந்த புறத்த தயலது*
*கூர லிருக்கை அருளி நெடிதுநினைந்து*
*ஈர நெஞ்சின் தன்வயின் விளிப்பக்*
*கையற வந்த மையல் மாலை*

*இரீஇய வாகலின் இன்னொலி யிழந்த*
*தாரணி புரவி தண்பயிர் துமிப்ப*
*வந்தன்று பெருவிறல் தேரே*
*உய்ந்தன் றாகுமிவள் ஆய்நுதற் கவினே* (நற். 181)

வினைமுற்றிப் புகுந்தது கண்ட தோழி மகிழ்ந்து உரைத்தது. 508

## காசிபன்கீரனார்

*சிறுவீ முல்லைத் தேங்கமழ் பசுவீ*
*பொறிவரி நன்மான் புகர்முகங் கடுப்பத்*
*தண்புதல் அணிபெற மலர வண்பெயல்*
*கார்வரு பருவம் என்றனர் மன்இனிப்*
*பேரஞர் உள்ளம் நடுங்கல் காணியர்*
*அன்பின் மையிற் பண்பில பயிற்றும்*
*பொய்யிடி அதிர்குரல் வாய்செத்து ஆலும்*
*இனமயில் மடக்கணம் போல*
*நினைமருள் வேனோ வாழியர் மழையே* (நற். 248)

பருவங்கண்டு ஆற்றாளாகிய தலைமகளைத் தோழி மழைமேல் வைத்துப் பருவமறுத்தது.
509

## கச்சிப்பேட்டு இளந்தச்சனார்

*கொல்லைக் கோவலர் குறும்புனஞ் சேர்ந்த*
*குறுங்காற் குரவின் குவியிணர் வான்பூ*
*ஆடுடை இடைமகன் சூடப் பூக்கும்*
*அகலுள் ஆங்கண் சீறூ ரேமே*
*அதுவே சாலும் காமம் அன்றியும்*
*எம்விட்டு அகறிர் ஆயின் கொன்னொன்று*
*கூறுவல் வாழியர் ஐய வேறுபட்டு*
*இரீஇய காலை இரியின்*
*பெரிய அல்லவோ பெரியவர் நிலையே* (நற். 266)

தோழி தலைமகளைச் செலவுடன்பட்டது. 510

## இடைக்காடனார்

*மடவது அம்ம மணிநிற எழிலி*
*மலரின் மௌவல் நலம்வரக் காட்டிக்*
*கயலேர் உண்கண் கனங்குழை இவைநின்*
*எயிறேர் பொழுதின் எய்தரு வேமெனக்*
*கண்ணகன் விசும்பின் மதிமென உணர்ந்தநின்*
*நன்னுதல் நீவிச் சென்றோர் தம்நசை*
*வாய்த்துவரல் வாரா அளவை அத்தக்*
*கல்மிசை அடுக்கம் புதையக் கால்வீழ்த்துத்*
*தளிதரு தண்கார் தலைஇ*
*விளியிசைத் தன்றால் வியலிடத் தானே (நற். 316)*

பிரிவிடை மெலிந்த தலைமகளைத் தோழி வற்புறுத்தது. 511

## மதுரைப் பேராலவாயர்

*சிறுவீ முல்லைப் பெரிதுகமழ் அலரி*
*தானுஞ் சூடினன் இளைஞரும் மலைந்தனர்*
*விசும்புகடப் பன்ன பொலம்படைக் கலிமா*
*படுமழை பொழிந்த தண்ணறும் புறவின்*
*நெடுநா ஒண்மணி பாடுசிறந்து இசைப்ப*
*மாலை மான்ற மணன்மலி வியனகர்த்*
*தந்தன நெடுந்தகை தேரே என்றும்*
*அரும்படர் அகல நீக்கி*
*விருந்தயர் விருப்பினள் திருந்திழை யோளே (நற். 361)*

வாயில்களோடு தோழி உறழ்ந்து சொல்லியது. 512

## நக்கீரர்

*கொடுங்கண் காக்கைக் கூர்வாய்ப் பேடை*
*நடுங்குசிறைப் பிள்ளை தழீஇக் கிளைபயிர்ந்து*
*கருங்கண் கருனைச் செந்நெல்வெண் சோறு*
*சூருடைப் பலியொடு கவரிய குறுங்கால்*
*கூழுடை நன்மனைக் குழுவின இருக்கும்*
*மூதில் அருமன் பேரிசைச் சிறுகுடி*

மெல்லியல் அரிவைநின் பல்லிருங் கதுப்பிற்
குவளையொடு தொடுத்த நறுவீ முல்லைத்
தளையவிழ் அலரித் தண்நறுங் கோதை
இளையருஞ் சூடி வந்தனர் நமரும்
விரியுளை நன்மா கடைஇப்
பரியாது வருவர்இப் பனிபடு நாளே (நற். 367)

வரவுமலிந்தது. 513

## சோழன் நல்லுருத்திரன்

தளிபெறு தண்புலத்துத் தலைப்பெயற் கரும்பீன்று
முளிமுதற் பொதுளிய முட்புறப் பிடவமுங்
களிபட்டான் நிலையேபோல் தடவுபு துடுப்பீன்று
ஞெலிபுடன் நிரைத்த ஞெகிழிதழ்க் கோடலும்
மணிபுரை யுருவின காயாவும் பிறவும்
அணிகொள மலைந்த கண்ணியர் தொகுபுடன்
மாறெதிர் கொண்டதம் மைந்துடன் நிறுமார்
சீறரு முன்பினோன் கணிச்சிபோற் கோடுசீஇ
யேறுதொழூஉப் புகுத்தனர் இடைபுட னொருங்கு.
அவ்வழி, முழக்கென இடியென முன்சமத் தார்ப்ப
வழக்குமாறு கொண்டு வருபுவரு பீண்டி
நறையொடு துகளெழ நல்லவ ரணிநிற்பத்
துறையு மாலமுந் தொல்வலி மராஅமும்
முறையுளி பராஅய்ப் பாய்ந்தனர் தொழூஉ;
மேற்பாட் டுலண்டின் நிறனொக்கும் புன்குருக்கண்
நோக்கஞ்சான் பாய்ந்த பொதுவனைச் சாக்குத்திக்
கோட்டிடைக் கொண்டு குலைப்பதன் தோற்றங்காண்
அஞ்சீ ரசையியல் கூந்தற்கை நீட்டியான்
நெஞ்சம் பிளந்திட்டு நேரார் நடுவண்தன்
வஞ்சினம் வாய்த்தானும் போன்ம்;
சுடர்விரிந் தன்ன சுரிநெற்றிக் காரி
விடரியங் கண்ணிப் பொதுவனைச் சாடிக்
குடர்சொரியக் குத்திக் குலைப்பதன் தோற்றங்காண்
படரணி யந்திப் பசுங்கட் கடவுள்

*இடரிய ஏற்றெருமை நெஞ்சிடந் திட்டுக்*
*குடர்கூளிக் கார்த்துவான் போன்ம்;*
*செவிமறை நேர்மின்னு நுண்பொறி வெள்ளைக்*
*கதனஞ்சான் பாய்ந்த பொதுவனைச் சாடி*
*நுதிநுனைக் கோட்டாற் குலைப்பதன் தோற்றங்காண்*
*ஆரிரு ளென்னா னருங்கங்குல் வந்துதன்*
*தாளிற் கடந்தட்டுத் தந்தையைக் கொன்றானைத்*
*தோளிற் றிருகுவான் போன்ம்;*
*எனவாங்கு,*
*அணிமாலைக் கேள்வன் தரூஉமா ராயர்*
*மணிமாலை யூதுங் குழல்,*
*கடாஅக் களிற்றினுங் கண்ணஞ்சா ஏற்றை*
*விடாஅதுநீ கொள்குவை யாயிற் படாஅகை*
*யீன்றன ஆயமகள் தோள்;*
*பகலிடக் கண்ணியன் பைதற் குழலன்*
*சுவன்மிசைக் கோலசைத்த கையன் அயலது*
*கொல்லேறு சாட இருந்தார்க்கெம் பல்லிருங்*
*கூந்த லணைகொடுப்பேம் யாம்;*
*கோளாள ரென்னொப்பா ரில்லென்ன நம்மானுள்*
*தாளாண்மை கூறும் பொதுவன் நமக்கொருநாள்*
*கோளாள னாகாமை யில்லை அவற்கண்டு*
*வேளாண்மை செய்தன கண்;*
*ஆங்கு, ஏறும் வருந்தின ஆயரும் புண்கூர்ந்தார்*
*நாறிருங் கூந்தற் பொதுமகளி ரெல்லாரும்*
*முல்லையந் தண்பொழில் புக்கார் பொதுவரோ*
*டெல்லாம் புணர்குறிக் கொண்டு* **(கலி. 101)**

'ஆயர் வேட்டுவ ராடூஉத் திணைப்பெய, ராவயின் வரூஉங் கிழவரு முளரே' என்னும் சூத்திரத்தில், 'திணைநிலைப் பெயராகிய கிழவருங் கிழத்தியரும் உளர்' என்னும் விதியால்கொண்ட அத்தலைவிக்கு அவள் தோழி ஆயர் ஏறு தழுவுகின்றமை காட்டி, அவள் அது கண்டு வருந்தாமல், ஆண்டு பெற்ற நல் நிமித்தம் கூறித் தெளிவித்து, அதனை அவ்விதியால் கொண்ட தலைவிக்குங் கூறி, மீட்டும் அத்தலைவிக்குத் தம் சுற்றத்தார் கூறியிருக்கும் கூற்றினையும் கூறி, 'தலைவனும் இன்னும் ஒரு ஞான்று ஏறு தழுவி நம்மை வரைந்துகொள்வன்' என்று ஆற்றுவித்தது. 514

மெல்லிணர்க் கொன்றையும் மென்மலர்க் காயாவும்
புல்லிலை வெட்சியும் பிடவுந் தளவுங்
குல்லையுங் குருந்துங் கோடலும் பாங்கருங்
கல்லவுங் கடத்தவுங் கமழ்கண்ணி மலைந்தனர்
பல்லான் பொதுவர் கதழ்விடை கோட்காண்மார்
முல்லை முகையு முருந்து நிரைத்தன்ன
பல்லர் பெருமழைக் கண்ணர் மடஞ்சேர்ந்த
சொல்லர் சுடருங் கனங்குழைக் காதினர்
நல்லவர் கொண்டார் மிடை;
அவர்மிடை கொள,
மணிவரை மருங்கின் அருவி போல
அணிவரம் பறுத்த வெண்காற் காரியும்
மீன்பூத் தவிர்வரும் அந்திவான் விசும்புபோல்
வான்பொறி பரந்த புள்ளி வெள்ளையும்
கொலைவன் சூடிய குழவித் திங்கள்போல்
வளையுபு மலிந்த கோடணி சேயும்
பொருமுரண் முன்பிற் புகலேறு பலபெய்து
அரிமாவும் பரிமாவுங் களிறுங் கராமும்
பெருமலை விடரகத் தொருங்குடன் குழீஇப்
படுமழை யாடும் வரையகம் போலுங்
கொடிநறை சூழ்ந்த தொழூஉ;
தொழுவினுள், புரிபு புரிபு புக்க பொதுவரைத்
தெரிபு தெரிபு குத்தின ஏறு;
ஏற்றின், அரிபரி பறுப்பன சுற்றி
எரிதிகழ் கணிச்சியோன் சூடிய பிறைக்கண்
உரு்வ மாலை போலக்
குருதிக் கோட்டொடு குடர்வ வந்தன;
கோட்டொடு சுற்றிக் குடர்வலந்த ஏற்றின்முன்
ஆடிநின் றக்குடர் வாங்குவான் பீடுகாண்
செந்நூற் கழியொருவன் கைப்பற்ற அந்நூலை
முந்நூலாக் கொள்வானும் போன்ம்;
இகுளை இஃதொன்று கண்டை யிஃதொத்தன்

கோட்டினத் தாயர் மகனன்றே மீட்டொரான்
போர்புக லேற்றுப் பிணரெருத்தில் தத்துபு
தார்போல் தரீஇ யவன்;
இகுளை யிஃதொன்று கண்டை யிஃதொத்தன்
கோவினத் தாயர் மகனன்றே ஓவான்
மறையேற்றின் மேலிருந் தாடித் துறையம்பி
ஊர்வான்போல் தோன்று மவன்;
தொழீஇஇ, காற்றுப்போல் வந்த கதழ்விடைக் காரியை
ஊற்றுக் களத்தே யடங்கக்கொண் டட்டதன்
மேற்றோன்றி நின்ற பொதுவன் றகைகண்டை
யேற்றெருமை நெஞ்சம் வடிம்பி னிடந்திட்டுச்
சீற்றமோ டாருயிர் கொண்டஞான் றின்னன்கொல்
கூற்றென வுட்கின்றென் நெஞ்சு;
இகுளை யிஃதொன்று கண்டை யிஃதொத்தன்
புல்லினத் தாயர் மகனன்றே புள்ளி
வெறுத்த வயவெள்ளேற் றம்புடைத் திங்கள்
மறுப்போற் பொருந்தி யவன்;
ஓவா வேகமோ டுருத்துத்தன் மேற்சென்ற
சேஎச் செவிமுதற் கொண்டு பெயர்த்தொற்றுங்
காயாம்பூங் கண்ணிப் பொதுவன் றகைகண்டை
மேவார் விடுத்தந்த கூந்தற் குதிரையை
வாய்பகுத் திட்டுப் புடைத்தஞான் றின்னன்கொல்
மாயோனென் றுட்கிற்றென் நெஞ்சு;
ஆங்கு, இரும்புலித் தொழுதியும் பெருங்களிற் றினமும்
மாறுமா றுழக்கியாங் குழக்கிப் பொதுவரும்
ஏறுகொண் டொருங்குதொழூஉ விட்டனர் விட்டாங்கே
மயிலெருத் துறழணி மணிநிலத்துப் பிறழப்
பயிலிதழ் மலருண்கண்
மாதர் மகளிரும் மைந்தரு மைந்துற்றுத்
தாதெரு மன்றத் தயர்வர் தழூஉ;
கொல்லேற்றுக் கோடஞ்சு வானை மறுமையும்
புல்லாளே ஆய மகள்;

*அஞ்சார் கொலையேறு கொள்பவ ரல்லதை*
*நெஞ்சிலார் தோய்தற் கரிய வுயிர்துறந்து*
*நைவாரா ஆயமகள் தோள்;*
*வளியா அறியா உயிர்காவல் கொண்டு*
*நளிவாய் மருப்பஞ்சும் நெஞ்சினார் தோய்தற்*
*கெளியவோ ஆயமகள் தோள்;*
*விலைவேண்டா ரெம்மினத் தாயர் மகளிர்*
*கொலையேற்றுக் கோட்டிடைத் தாம்வீழ்வார் மார்பின்*
*முலையிடைப் போலப் புகின்;*
*ஆங்கு,*
*குரவை தழீஇயாம் மரபுளி பாடித்*
*தேயா விழுப்புகழ்த் தெய்வம் பரவுதும்*
*மாசில்வான் முந்நீர்ப் பரந்த தொன்னிலம்*
*ஆளுங் கிழமையொடு புணர்ந்த*
*எங்கோ வாழியரிம் மலர்தலை யுலகே* **(கலி. 103)**

ஆயர் ஏறுதழுவி நின்றமையைத் தோழி தலைவிக்குத் தனித்தனியே காட்டி, பின்னர், அவர் ஏறுதழுவி விட்டுக் குரவை ஆடுகின்றமையும் கூறி, 'ஆண்டுயாமும் சென்று, நின்னை ஏறு தழுவிக் கோடற்கு நிற்கின்ற தலைவன் கேட்டு, ஏறு தழுவிக் கொள்ளுமாறு, நமக்குச் சுற்றத்தார் கூறிக் கிடக்கின்ற முறைமையைப் பாட்டிலே பாடி, குரவையாடி, 'வழுதி வாழ்க!' என்று தெய்வம் பராவுதும்; நீயும் அங்ஙனம் பாடுதற்குப் போதுவாயாக!' எனக் கூறியது. 515

*மலிதிரை யூர்ந்துதன் மண்கடல் வௌவலின்*
*மெலிவின்றி மேற்சென்று மேவார்நா டிடம்படப்*
*புலியொடு வில்நீக்கிப் புகழ்பொறித்த கிளர்கெண்டை*
*வலியினான் வணக்கிய வாடாச்சீர்த் தென்னவன்*
*தொல்லிசை நட்ட குடியொடு தோன்றிய*
*நல்லினத் தாய ரொருங்குதொக் கெல்லாரும்*
*வானுற வோங்கிய வயங்கொளிர் பனைக்கொடிப்*
*பானிற வண்ணன்போற் பழிதீர்ந்த வெள்ளையும்*
*பொருமுரண் மேம்பட்ட பொலம்புனை புகழ்நேமித்*
*திருமறு மார்பன்போல் திறல்சான்ற காரியும்*

மிக்கொளிர் தாழ்சடை மேவரும் பிறைநுதல்
முக்கண்ணா னுருவேபோல் முரண்மிகு குராலும்
மாகடல் கலக்குற மாகொன்ற மடங்காப்போர்
வேல்வல்லான் நிறனேபோல் வெருவந்த சேயும் ஆங்கப்
பொருவரும் பண்பி னவ்வையும் பிறவும்
வப்பல் கொண்மூக் குழீஇயவை போலப்
புர் புரிபு புகுந்தனர் தொழூஉ;
அவ்வழி, முள்ளெயிற் றேஎ ரிவளைப் பெறுமிதோர்
வெள்ளேற் றெருத்தடங்கு வான்;
ஒள்ளிழை வாருறு கூந்தல் துயில்பெறும் வைமருப்பிற்
காரி கதனஞ்சான் கொள்பவ னீரரி
வெரூஉப்பிணை மானோக்கின் நல்லாட் பெறூஉமிக்
குரூஉக்கட் கொலையேறு கொள்வான் வரிக்குழை
வேயுறழ் மென்தோற் றுயில்பெறும் வெந்துப்பிற்
சேஎய் சினனஞ்சான் சார்பவ னென்றாங்
கறைவனர் நல்லாரை யாயர் முறையினால்
நாண்மீன்வாய் சூழ்ந்த மதிபோல் மிடைமிசைப்
பேணி நிறுத்தார் அணி;
அவ்வழிப், பறையெழுந் திசைப்பப் பல்லவ ரார்ப்பக்
குறையா மைந்தர் கோளெதி ரெடுத்த
நறைவலஞ் செயவிடா இறுத்தன ஏறு;
அவ்வேற்றின்,
மேனிலை மிகலிகலின் மிடைகழி பிழிவு மேற்சென்று
வேனுதி புரைவிறற் றிறனுதி மருப்பின் மாறஞ்சான்
பானிற வெள்ளை யெருத்தத்துப் பாய்ந்தானை
நோனாது குத்தும் இளங்காரித் தோற்றங்காண்
பான்மதி சேர்ந்த அரவினைக் கோள்விடுக்கும்
நீனிற வண்ணனும் போன்ம்;
இரிபெழு பதிர்பதிர் பிகந்துடன் பலர்நீங்க
வரிபரி பிறுபிறுபு குடர்சோரக் குத்தித்தன்
கோடழியக் கொண்டானை யாட்டித் திரிபுழக்கும்
வாடா வெகுளி யெழிலேறு கண்டை யிஃதொன்று

வெருவரு தூம மெடுப்ப வெகுண்டு
திரிதருங் கொல்களிறும் போன்ம்;
தாளெழு துணிபிணி விசைதவிர் பின்றித் தலைச்சென்று
தோள்வலி துணிபிணி துறந்திறந் தெய்தி மெய்சாய்ந்து
கோள்வழுக்கித் தன்முன்னர் வீழ்ந்தான்மேற் செல்லாது
மீளும் புகலேற்றுத் தோற்றங்காண் மண்டமருள்
வாளகப் பட்டானை யொவ்வா னெனப்பெயரும்
மீளி மறவனும் போன்ம்;
ஆங்க, செறுத்தறுத் துழக்கி யேற்றெதிர் நிற்ப
மறுத்து மறுத்து மைந்தர் சாரத்
தடிகுறை யிறுபுபிறுபு தாயின கிடப்ப
இடியுற ழிசையின் இயமெழுந் தார்ப்பப்
பாடேற்றுக் கொள்பவர் பாய்ந்துமே லூர்பவர்
கோடிடை நுழைபவர் கோட்சாற்று பவரொடு
புரிபுமேற் சென்ற நூற்றுவர் மடங்க
வரிபுனை வல்வி லைவ ரட்ட
பொருகளம் போலுந் தொழூஉ;
தொழுவினுள், கொண்டவே றெல்லாம் புலம்புகத் தண்டாச்சீர்
வாங்கெழில் நல்லாரும் மைந்தரும் மல்லலூர்
ஆங்க ணயர்வர் தழூஉ;
பாடுகம் வம்மின் பொதுவன் கொலையேற்றுக்
கோடு குறிசெய்த மார்பு;
நெற்றிச் சிவலை நிறையழித்தான் நீண்மார்பிற்
செற்றார்கண் சாயயான் சாரா தமைகல்லேன்
பெற்றத்தார் கவ்வை யெடுப்ப அதுபெரி
துற்றீயா ளாயர் மகள்;
தொழீஇஇ, ஒருக்குநா மாடுங் குரவையுள் நம்மை
அருக்கினான் போல்நோக்கி யல்லனோய் செய்தல்
குரூஉக்கட் கொலையேறு கொண்டேன்யா னென்னுந்
தருக்கன்றோ ஆயர் மகன்;
நேரிழாய், கோளரி தாக நிறுத்த கொலையேற்றுக்
காரி கதனஞ்சான் பாய்ந்த பொதுவற்கே
ஆர்வுற் றெமர்கொடை நேர்ந்தார் அலரெடுத்த

*ஊரானரை யுச்சி மிதித்து;*
*ஆங்குத்,*
*தொல்கதிர்த் திகிரியாற் பரவுதும் ஒல்கா*
*உருமுறழ் முரசிற் றென்னவற்*
*கொருமொழி கொள்கஇவ் வுலகுட னெனவே* (**கலி.** *104*)

'நாடக வழக்கினும் என்னும் சூத்திரத்து, 'பாடலுள் அமையாத என்றதனால், ஏறு தழுவியவாற்றைத் தோழி தலைவிக்குக் காட்டிக் கூறி, இக் குரவையுள் அவனைப் பாடுகம் வா என்றாட்கு, அவள் உடம்பாட்டினுள், தான் அலர் அச்சம் நீங்கினமையும் அவன் தன்னை வருத்தினமையும் கூறிப் பாடி, பின்னர்த் தோழி, 'நமர் அவர்க்கு நின்னைக் கொடை நேர்ந்தார்' எனக் கூறியது. 516

*அரைசுபடக் கடந்தட் டாற்றிற் றந்த*
*முரைசுகெழு முதுகுடி முரண்மிகு செல்வற்குச்*
*சீர்மிகு சிறப்பினோன் தொல்குடிக் குரித்தெனப்*
*பார்வளர் முத்தமொடு படுகடல் பயந்த*
*வார்கலி யுவகைய ரொருங்குடன் கூடித்*
*தீதின்று பொலிகெனத் தெய்வக் கடியயர்மார்*
*வீவில் குடிப்பி னிருங்குடி யாயருந்*
*தாவி லுள்ளமொடு துவன்றி யாய்புடன்*
*வள்ளுருள் நேமியான் வாய்வைத்த வளைபோலத்*
*தெள்ளிதின் விளங்குஞ் சுரிநெற்றிக் காரியும்*
*ஒருகுழை யவன்மார்பில் ஒண்தார்போ லொளிமிகப்*
*பொருவறப் பொருந்திய செம்மறு வெள்ளையும்*
*பெரும்பெயர்க் கணிச்சியோன் மணிமிடற் றணிபோல*
*இரும்பிண ரெருத்தி னேந்திமிற் குராலும்*
*அணங்குடை வச்சிரத்தோன் ஆயிரங் கண்ணேய்க்குங்*
*கணங்கொள் பல்பொறிக் கடுஞ்சினப் புகரும்*
*வேல்வலா னுடைத்தாழ்ந்த விளங்குவெண் துகிலேய்ப்ப*
*வாலிது கிளர்ந்த வெண்காற் சேயுங்*
*கால முன்பிற் பிறவுஞ் சால*
*மடங்கலுங் கணிச்சியுங் காலனுங் கூற்றுந்*
*தொடர்ந்துசெல் லமையத்துத் துவன்றுயி ருணீஇய*
*உடங்குகொட் பனபோற் புகுத்தனர் தொழூஉ;*

அவ்வழி,
காரெதிர் கலியொலி கடியிடி யுருமி னியங்கறங்க
ஊர்பெழு கிளர்புளர் புயன்மங்குலி னறைபொங்க
நேரிதழ் நிரைநிரை நெறிவெறிக் கோதைய ரணிநிற்பச்
சீர்கெழு சிலைநிலைச் செயிரிகன் மிகுதியிற் சினப்பொதுவர்
தூர்பெழு துதைபுதை துகள்விசும் புறவெய்த
வார்புடன் பாய்ந்தா ரகத்து;
மருப்பிற் கொண்டு மார்புறத் தழீஇயும்
எருத்திடை யடங்கியும் இமிலிறப் புல்லியுந்
தோளிடைப் புகுதந்துந் துதைந்துபா டேற்றும்
நிரைபுமேற் சென்றாரை நீண்மருப் புறச்சாடிக்
கொளவிடங் கொளவிடா நிறுத்தன ஏறு;
கொள்வாரைக் கொள்வாரைக் கோட்டுவாய்ச் சாக்குத்திக்
கொள்வார்ப் பெறாஅக் குரூஉச்செகில் காணிகா
செயிரிற் குறைநாளாற் பின்சென்று சாடி
உயிருண்ணுங் கூற்றமும் போன்ம்;
பாடேற் றவரைப் படக்குத்திச் செங்காரிக்
கோடெழுந் தாடுங் கணமணி காணிகா
நகைசா லவிழ்பத நோக்கி நறவின்
முகைசூழுந் தும்பியும் போன்ம்;
இடைப்பாய்ந் தெருத்தத்துக் கொண்டானோ டெய்தி
மிடைப்பாயும் வெள்ளேறு கண்டைகா
வாள்பொரு வானத் தரவின்வாய்க் கோட்பட்டுப்
போதரும் பான்மதியும் போன்ம்;
ஆங்க ஏறும் பொதுவரு மாறுற்று மாறா
இருபெரு வேந்தரும் இகலிக்கண் ணுற்ற
பொருகளம் போலுந் தொழூஉ;
வெல்புக முயர்நிலைத் தொல்லியற் றுதைபுதை துளங்கிமில்
நல்லேறு கொண்ட பொதுவன் முகநோக்கிப்
பாடில ஆயமகள் கண்;
நறுநுதால் என்கொலைங் கூந்தல் உளரச்
சிறுமுல்லை நாறிய தற்குக் குறுமறுகி
யொல்லா துடன்றெமர் செய்தா ரவன்கொண்ட

கொல்லேறு போலுங் கதம்;
நெட்டிருங் கூந்தலாய் கண்டை யிஃதோர்சொல்
கோட்டினத் தாயர் மகனொடுயாம் பட்டதற்
கெங்க ணெமரோ பொறுப்பர் பொறாதார்
தங்கண் பொடிவ தெவன்;
ஒண்ணுதால்,
இன்ன உவகை பிறிதியாதி யாயென்னைக்
கண்ணுடைக் கோலள் அலைத்தற் கென்னை
மலரணி கண்ணிப் பொதுவனோ டெண்ணி
அலர்செய்து விட்ட திவ்வூர்;
ஒன்றிப் புகரினத் தாயமகற் கொள்ளிழாய்
இன்றெவ னென்னை யெமர்கொடுப்ப தன்றவன்
மிக்குத்தன் மேற்சென்ற செங்காரிக் கோட்டிடைப்
புக்கக்காற் புக்கதென் நெஞ்சு;
என,
பாடிமிழ் பரப்பகத் தரவணை யசைஇய
ஆடுகொள் நேமியாற் பரவுதும் நாடுகொண்
டின்னிசை முரசிற் பொருப்பன் மன்னி
அமைவர லருவி யார்க்கும்
இமையத் தும்பரும் விளங்குக வெனவே (கலி. 105)

ஏறு தழுவியவாற்றைத் தோழி தலைவிக்குக் காட்டிக்கூறி, அவள் ஏறு தழுவிய தலைவனை விருப்புடன் நோக்கியவாற்றைத் தன்னுள்ளே கூறி, முன்னர்க் களவின்கண் தமர் கோபித்ததனையும் அயலார் பொறாதிருந்த தன்மையினையும் தலைவிக்குக் கூற அவளும் 'அவர் அலர் கூறியது நன்று' என்றுகூறி, 'அன்றே என் நெஞ்சு கலந்துவிட்டது; இனி அவர் கொடுப்பதாகக் கூறிய நாளில் செய்வது என்?' என மகிழ்ந்துகூற அது கேட்ட தோழி, 'யாம் அங்ஙனம் கூடி இனிது இருக்குமாறு காக்கின்ற பாண்டியன் நீடுவாழுமாறு தெய்வத்தைப் பரவுகம்வா' எனக் கூறியது. 517

எல்லா இஃதொன்று கூறு குறும்பிவர்
புல்லினத் தார்க்கும் குடஞ்சுட் டவர்க்குமெங்
கொல்லேறு கோடல் குறையெனக் கோவினத்தார்
பல்லேறு பெய்தார் தொழூஉ,
தொழுவத்து,

*சில்லைச் செவிமறைக் கொண்டவன் சென்னிக் குவிமுல்லைக்*
*கோட்டங்காழ் கோட்டின் எடுத்துக்கொண் டாட்டிய*
*ஏழை யிரும்புகர் பொங்கஅப் பூவந்தென்*
*கூழையுள் வீழ்ந்தன்று மன்;*
*அதனைக் கெடுத்தது பெற்றார்போற் கொண்டியான் முடித்தது*
*கேட்டன ளென்பவோ யாய்;*
*இஃதொன்று கூறு;*
*கேட்டா லெவன்செய்ய வேண்டுமோ மற்றிகா*
*அவன்கண்ணி யன்றோ அது;*
*பெய்போ தறியாத்தான் கூழையுள் ஏதிலான்*
*கைபுனை கண்ணி முடித்தாளென் றியாய்கேட்பின்*
*செய்வதி லாகுமோ மற்று;*
*எல்லாத் தவறும் அறும்;*
*ஓஒஅஃதறு மாறு;*
*ஆயர் மகனாயின் ஆயமகள் நீயாயின்*
*நின்வெய்ய னாயின் அவன்வெய்யை நீயாயின்*
*நின்னைநோ தக்கதோ இல்லைமன் நின்நெஞ்சம்*
*அன்னைநெஞ் சாகப் பெறின்;*
*அன்னையோ,*
*ஆயர் மகனையுங் காதலை கைம்மிக*
*ஞாயையும் அஞ்சுதி யாயின் அரிதரோ*
*நீயுற்ற நோய்க்கு மருந்து;*
*மருந்தின்றி யானுற்ற துயராயின் எல்லா*
*வருந்துவே னல்லனோ யான்;*
*வருந்தாதி;*
*மண்ணிமா சற்றநின் கூழையுள் ஏறவன்*
*கண்ணிதந் திட்ட தெனக்கேட்டுத் திண்ணிதாத்*
*தெய்வமால் காட்டிற் றிவட்கென நின்னையப்*
*பொய்யில் பொதுவற் கடைசூழ்ந்தார் தந்தையோ*
*டையன்மா ரெல்லா மொருங்கு (கலி. 107*

தலைவி தோழிக்கு அறத்தொடு நிற்ப, தமர் வரைவு உடன்பட்டமை அவட்கு அவள் சொல்லியது. 518

*தோழிநாங், காணாமை யுண்ட கடுங்கள்ளை மெய்கூர*
*நாணாது சென்று நடுங்க வுரைத்தாங்குக்*
*கரந்ததூஉம் கையொடு கோட்பட்டாங் கண்டாய்நம்*
*புல்லினத் தாயர் மகன்சூடி வந்ததோர்*
*முல்லையொரு காழுங் கண்ணியும் மெல்லியால்*
*கூந்தலுட் பெய்து முடித்தேன்மன் தோழியர்ய்*
*வெண்ணெய் உரைஇ விரித்த கதுப்போடே*
*அன்னையும் அத்தனும் இல்லரா யாய்நாண*
*அன்னைமுன் வீழ்ந்தன்றப் பூ;*
*அதனை, வினவலுஞ் செய்யாள் சினவலுஞ் செய்யாள்*
*நெருப்புக்கை தொட்டவர் போல விதிர்த்திட்டு*
*நீங்கிப் புறங்கடைப் போயினாள் யானுமென்*
*சாந்துளர் கூழை முடியா நிலந்தாழ்ந்த*
*பூங்கரை நீலந் தழீஇத் தளர்பொல்கிப்*
*பாங்கருங் கானத் தொளித்தேன் அதற்கெல்லா*
*ஈங்கெவன் அஞ்சு வது;*
*அஞ்சல், அவன்கண்ணி நீபுனைந்தா யாயின் நமரும்*
*அவன்கண் அடைசூழ்ந்தார் நின்னை அகன்கண்*
*வரைப்பின் மணல்தாழப் பெய்து திரைப்பில்*
*வதுவையும் ஈங்கே அயர்ப அதுவேயாம்*
*அல்கலுஞ் சூழ்ந்த வினை* (கலி. 115)

தலைவி களவு வெளிப்பட்டதென்று அஞ்சித் தோழிக்குச் சொல்ல நமர் நின்னை அவற்கே கொடுக்கச் சூழ்ந்தாரெனச் சொல்லி அச்சம் நீக்கியது. 519

# மருதத் திணை

## அள்ளூர் நன்முல்லையார்

*சேற்றுநிலை முனைஇய செங்கட் காரா*
*னூர்மடி கங்குலி னோன்றளை பரிந்து*
*கூர்முள் வேலி கோட்டி னீக்கி*
*நீர்முதிர் பழனத்து மீனுட னிரிய*
*வந்தூம்பு வள்ளை மயக்கித் தாமரை*
*வண்டூது பனிமல ராரு மூர*
*யாரை யோநிற் புலக்கேம் வாருற்*
*றுறையிறந் தொளிருந் தாழிருங் கூந்தற்*
*பிறரு மொருத்தியை எம்மனைத் தந்து*
*வதுவை யயர்ந்தனை யென்ப வஃதியாங்*
*கூறேம் வாழிய ரெந்தை செறுநர்*
*களிறுடை யருஞ்சமந் ததைய நூறு*
*மொளிறுவாட் டானைக் கொற்றச் செழியன்*
*பிண்ட நெல்லி னள்ளூ ரன்னவெ*ன்
*னொண்டொடி நெகிழினு நெகிழ்க*
*சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரோ* **(அகம். 46)**

வாயில் வேண்டிச் சென்ற தலைமகற்குத் தோழி வாயின் மறுத்தது. 520

## மருதம் பாடிய இளங்கடுங்கோ

*நறவுண் மண்டை நுடக்கலின் இறவுக்கலித்துப்*
*பூட்டறு வில்லில் கூட்டுமுதல் தெறிக்கும்*
*பழனப் பொய்கை அடைகரைப் பிரம்பின்*
*அரவாய் அன்ன அம்முள் நெடுங்கொடி*
*அருவி ஆம்பல் அகலடை துடக்கி*
*அசைவரல் வாடை தூக்கலின் ஊதுலை*
*விசைவாங்கு தோலின் வீங்குபு ஞெகிழுங்*
*கழனியம் படப்பைக் காஞ்சி யூர*
*ஒண்தொடி யாயத் துள்ளுநீ நயந்து*

*கொண்டனை யென்பவோர் குறுமகள் அதுவே*
*செம்பொற் சிலம்பின் செறிந்த குறங்கின்*
*அங்கலுழ் மாமை யஃதை தந்தை*
*அண்ணல் யானை அடுபோர்ச் சோழர்*
*வெண்ணெல் வைப்பிற் பருவூர்ப் பறந்தலை*
*இருபெரு வேந்தரும் பொருதுகளத் தொழிய*
*ஒளிறுவாள் நல்லமர்க் கடந்த ஞான்றைக்*
*களிறுகவர் கம்பலை போல*
*அலரா கின்றது பலர்வாய்ப் பட்டே* **(அகம். 96)**

தோழி வாயின் மறுத்தது. 521

**பரணர்**

*எரியகைந் தன்ன தாமரை யிடையிடை*
*அரிந்துகால் குவித்த செந்நெல் வினைஞர்*
*கட்கொண்டு மறுகுஞ் சாகா டளற்றுறின்*
*ஆய்கரும் படுக்கும் பாய்புனல் ஊர*
*பெரிய நாணிலை மன்ற பொரியெனப்*
*புன்கவிழ் அகன்றுறைப் பொலிய ஒண்ணுதல்*
*நறுமலர்க் காண்வருங் குறும்பல் கூந்தல்*
*மாழை நோக்கிற் காழியல் வனமுலை*
*எஃகுடை எழில்நலத் தொருத்தியொடு நெருநை*
*வைகுபுனல் அயர்ந்தனை யென்ப அதுவே*
*பொய்புறம் பொதிந்தியாம் கரப்பவும் கையிகந்து*
*அலரா கின்றால் தானே மலர்தார்*
*மையணி யானை மறப்போர்ச் செழியன்*
*பொய்யா விழவின் கூடற் பறந்தலை*
*உடனியைந் தெழுந்த இருபெரு வேந்தர்*
*கடல்மருள் பெரும்படை கலங்கத் தாக்கி*
*இரங்கிசை முரசம் ஒழியப் பரந்தவர்*
*ஓடுபுறம் கண்ட ஞான்றை*
*ஆடுகொள் வியன்களத் தார்ப்பினும் பெரிதே* **(அகம். 116)**

தோழி தலைமகனை வாயில் மறுத்தது. 522

## ஆவூர் மூலங்கிழார்

முரசுடைச் செல்வர் புரவிச் சூட்டு
மூட்டுறு கவரி தூக்கி யன்ன
செழுஞ்செய் நெல்லின் சேயரிப் புனிற்றாக்
கதிர்முத றின்ற வஞ்சிக் காவலர்
பாக லாய்கொடிப் பகன்றையொடு பரீஇக்
காஞ்சியி னகத்துக் கரும்பருத்தி யாக்குந்
தீம்புன லூர திறவ தாகக்
குவளை யுண்க ணிவளும் யானுங்
கழனி யாம்பன் முழுநெறிப் பைந்தழை
காயா ஞாயிற் றாகத் தலைப்பெயப்
பொய்த வாடிப் பொலிகென வந்து
நின்னகாப் பிழைத்த தவறோ பெரும
கள்ளுங் கண்ணியுங் கையுறை யாக
நிலைக்கோட்டு வெள்ளை நால்செவிக் கிடாஅய்
நிலைத்துறைக் கடவுட் குளப்பட வோச்சித்
தணிமருங் கறியாள் யாயழ
மணிமருண் மேனி பொன்னிறங் கொளவே (அகம். 156)

தலைமகளை இடத்துய்த்துவந்த தோழி தலைமகனை வரைவுகடாயது. 523

## மருதம் பாடிய இளங்கடுங்கோ

கடல்கண் டன்ன கண்ணகன் பரப்பின்
நிலம்பக வீழ்ந்த வேர்முதிர் கிழங்கின்
கழைகண் டன்ன தூம்புடைத் திரள்கால்
களிற்றுச்செவி யன்ன பாசடை மருங்கிற்
கழுநிவந் தன்ன கொழுமுகை யிடையிடை
முறுவல் முகத்திற் பன்மலர் தயங்கப்
பூத்த தாமரைப் புள்ளிமிழ் பழனத்து
வேப்புநனை யன்ன நெடுங்க ணீர்ஞெண்டு
இரைதேர் வெண்குரு கஞ்சி யயலது
ஒலித்த பகன்றை யிருஞ்சேற் றள்ளல்

திதலையின் வரிப்ப வோடி விரைந்துதன்
ஈர்மலி மண்ணளைச் செறியும் ஊர
மனைநகு வயலை மரனிவர் கொழுங்கொடி
யரிமல ராம்பலொ டார்தழை தைஇ
விழவாடு மகளிரொடு தழூஉவணிப் பொலிந்து
மலரே ருண்கண் மாணிழை முன்கைக்
குறுந்தொடி துடக்கிய நெடுந்தொடர் விடுத்த
துடன்றனள் போலுநின் காதலி யெம்போற்
புல்லுளைக் குடுமிப் புதல்வற் பயந்து
நெல்லுடை நெடுநகர் நின்னின் றுறைய
என்ன கடத்தளோ மற்றே தன்முகத்
தெழுதெழில் சிதைய வழுதன ளேங்கி
வடித்தென வுருத்த தித்திப் பல்லூழ்
நொடித்தெனச் சிவந்த மெல்விரற் றிருகுபு
கூர்நுனை மழுகிய எயிற்றள்
ஊர்முழுது நுவலுநிற் காணிய சென்மே **(அகம். 176)**

தோழி தலைமகனை வாயின் மறுத்தது. 524

## பரணர்

உணர்குவெ னல்லென் உரையல்நின் மாயம்
நாணிலை மன்ற யாண ரூர
அகலு ளாங்கண் அம்பகை மடிவைக்
குறுந்தொடி மகளிர் குரூஉப்புனன் முனையிற்
பழனப் பைஞ்சாய் கொழுதிக் கழனிக்
கரந்தையஞ் செறுவின் வெண்குரு கோப்பும்
வல்வி லெறுழ்த்தோட் பரதவர் கோமான்
பல்வேன் மத்தி கழாஅர் முன்றுறை
நெடுவெண் மருதொடு வஞ்சி சாஅய்
விடியல் வந்த பெருநீர்க் காவிரித்
தொடியணி முன்கை நீவெய் யோளொடு
முன்னா ளாடிய கவ்வை யிந்நாள்

*வலிமிகு முன்பிற் பாணனொடு மலிதார்த்*
*தித்தன் வெளிய னுறந்தை நாளவைப்*
*பாடின் றெண்கிணைப் பாடுகேட் டஞ்சிப்*
*போரடு தானைக் கட்டி*
*பொராஅ தோடிய ஆர்ப்பினும் பெரிதே* **(அகம். 226)**

தலைமகற்குத் தோழி வாயின் மறுத்தது. 525

## பரணர்

*பிணர்மோட்டு நந்தின் பேழ்வாய் ஏற்றை*
*கதிர்மூக் காரல் களவ னாக*
*நெடுநீர்ப் பொய்கைத் துணையொடு புணரும்*
*மலிநீ ரகல்வயல் யாணர் ஊர*
*போதார் கூந்தல் நீவெய் யோளொடு*
*தாதார் காஞ்சித் தண்பொழில் அகல்யாறு*
*ஆடினை யென்ப நெருநை அலரே*
*காய்சின மொய்ம்பிற் பெரும்பெயர்க் கரிகால்*
*ஆர்கலி நறவின் வெண்ணி வாயில்*
*சீர்கெழு மன்னர் மறலிய ஞாட்பின்*
*இமிழிசை முரசம் பொருகளத் தொழியப்*
*பதினொரு வேளிரொடு வேந்தர் சாய*
*மொய்வலி யறுத்த ஞான்றைத்*
*தொய்யா அழுந்தூர் ஆர்ப்பினும் பெரிதே* **(அகம். 246)**

தலைமகற்குத் தோழி வாயின் மறுத்தது. 526

## மதுரைத் தமிழ்க்கூத்தனா.ர் கடுவன்மள்ளனார்

*பிணங்கரில் வள்ளை நீடிலைப் பொதும்பின்*
*மடிதுயின் முனைஇய வள்ளுகிர் யாமை*
*நொடிவிடு கல்லிற் போகி அகன்றுறைப்*
*பகுவாய் நிறைய நுங்கிற் கள்ளின்*
*உகுவா ரருந்து மகிழ்பியங்கு நடையொடு*

*தீம்பெரும் பழன முழக்கி அயலது*
*ஆம்பன் மெல்லடை யொடுங்கு மூர*
*பொய்யா லறிவெனின் மாய மதுவே*
*கையகப் பட்டமை யறியாய் நெருநை*
*மையெழி லுண்கண் மடந்தையொடு வையை*
*ஏர்தரு புதுப்புன லுரிதினி னுகர்ந்து*
*பரத்தை யாயங் கரப்பவு மொல்லாது*
*கவ்வையா கின்றார் பெரிதே காண்டகத்*
*தொல்புகழ் நிறைந்த பல்பூங் கழனிக்*
*கரும்பமல் படப்பைப் பெரும்பெயர்க் கள்ளூர்த்*
*திருநுதற் குறுமக ளணிநலம் வவ்விய*
*அறனி லாள னறியே னென்ற*
*திறனில் வெஞ்சூ ளறிகரி கடாஅய்*
*முறியார் பெருங்கிளை செறியப் பற்றி*
*நீறுதலைப் பெய்த ஞான்றை*
*வீறுசா லவையத் தார்ப்பினும் பெரிதே* **(அகம். 256)**

தலைமகற்குத் தோழி வாயின் மறுத்தது. 527

## ஓரம்போகியார்

*வெள்ளி விழுத்தொடி மென்கருப் புலக்கை*
*வள்ளி நுண்ணிடை வயின்வயி னுடங்க*
*மீன்சினை யன்ன வெண்மணற் குவைஇக்*
*காஞ்சி நீழல் தமர்வளம் பாடி*
*ஊர்க்குறு மகளிர் குறுவழி விறந்த*
*இறாஅல் அருந்திய சிறுசிரல் மருதின்*
*தாழ்சினை யுறங்குந் தண்டுறை யூர*
*விழையா வுள்ளம் விழையு மாயினும்*
*என்றுங், கேட்டவை தோட்டி யாக மீட்டாங்*
*கறனும் பொருளும் வழாமை நாடித்*
*தற்றக வுடைமை நோக்கி மற்றதன்*
*பின்னா கும்மே முன்னியது முடித்தல்*
*அனைய பெரியோ ரொழுக்க மதனால்*

*அரிய பெரியோர்த் தெரியுங் காலை*
*நும்மோ ரன்னோர் மாட்டு மின்ன*
*பொய்யொடு மிடைந்தவை தோன்றின்*
*மெய்யாண் டுளதோவிவ் வுலகத் தானே* **(அகம். 286)**

வரைந்தெய்துவலென்று நீங்குந் தலைமகன் தலைமகளை ஆற்றுவித்துக் கொண்டிருத்தல் வேண்டுமென்று தோழியைக் கைப்பற்றினாற்குக் கைப் பற்றியது தன்னைத் தொட்டுச் சூளுறுவானாகக் கருதித் தோழி சொல்லியது. 528

## மதுரைப் பேராலவாயார்

*கோதை யிணர குறுங்காற் காஞ்சிப்*
*போதவிழ் நறுந்தா தணிந்த கூந்தல்*
*அரிமதர் மழைக்கண் மாஅ யோளொடு*
*நெருநையுங் கமழ்பொழிற் றுஞ்சி இன்றும்*
*பெருநீர் வையை அவளொ டாடிப்*
*புலரா மார்பினை வந்துநின் றெம்வயிற்*
*கரத்தல் கூடுமோ மற்றே பரப்பிற்*
*பன்மீன் கொள்பவர் முகந்த இப்பி*
*நாரரி நறவின் மகிழ்நொடைக் கூட்டும்*
*பேரிசைக் கொற்கைப் பொருநன் வென்வேற்*
*கடும்பகட் டியானை நெடுந்தேர்ச் செழியன்*
*மலைபுரை நெடுநகர்க் கூடல் ஆடிய*
*மலிதரு கம்பலை போல*
*அலரா கின்றது பலர்வாய்ப் பட்டே* **(அகம். 296)**

வாயில் வேண்டிச் சென்ற தலைமகற்கு வாயின் மறுக்குந் தோழி சொல்லியது. 529

## மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச்சாத்தனார்

*பெரும்பெயர் மகிழ்ந பேணா தகன்மோ*
*பரந்த பொய்கைப் பிரம்பொடு நீடிய*
*முட்கொம் பீங்கைத் துய்த்தலைப் புதுவீ*
*ஈன்ற மரத்தின் இளந்தளிர் வருட*
*ஆர்குரு குறங்கும் நீர்சூழ் வளவயற்*

*கழனிக் கரும்பின் சாய்ப்புறம் ஊர்ந்து*
*பழன யாமை பசுவெயிற் கொள்ளும்*
*நெல்லுடை மறுகின் நன்னர் ஊர*
*இதுவோ மற்றுநின் செம்மல் மாண்ட*
*மதியேர் ஒண்ணுதல் வயங்கிழை யொருத்தி*
*இகழ்ந்த சொல்லுஞ் சொல்லிச் சிவந்த*
*ஆயிதழ் மழைக்கண் நோயுற நோக்கித்*
*தண்ணறுங் கமழ்தார் பரீஇயினள் நும்மொடு*
*ஊடினள் சிறுதுனி செய்தெம்*
*மணன்மலி மறுகின் இறந்திசி னோளே* **(அகம். 306)**

தலைமகற்குத் தோழி வாயின் மறுத்தது. 530

## ஓரம்போகியார்

*துறைமீன் வழங்கும் பெருநீர்ப் பொய்கை*
*அரிமல ராம்பல் மேய்ந்த நெறிமருப்பு*
*ஈர்ந்த ணெருமைச் சுவல்படு முதுபோத்துத்*
*தூங்குசேற் றள்ளல் துஞ்சிப் பொழுதுபடப்*
*பைந்நிண வராஅல் குறையப் பெயர்தந்து*
*குரூஉக்கொடிப் பகன்றை சூடி மூதூர்ப்*
*போர்செறி மள்ளரிற் புகுதரு மூரன்*
*தேர்தர வந்த தெரியிழை நெகிழ்தோள்*
*ஊர்கொள் கல்லா மகளிர் தரத்தரப்*
*பரத்தைமை தாங்கலோ விலனென வறிதுநீ*
*புலத்தல் ஒல்லுமோ மனைகெழு மடந்தை*
*அதுபுலந் துறைதல் வல்லி யோரே*
*செய்யோள் நீங்கச் சில்பதங் கொழித்துத்*
*தாமட் டுண்டு தமிய ராகித்*
*தேமொழிப் புதல்வர் திரங்குமுலை சுவைப்ப*
*வைகுந ராகுதல் அறிந்தும்*
*அறியா ரம்மவஃ துடலு மோரே* **(அகம். 316)**

தலைமகற்கு வாயில்நேர்ந்த தோழி தலைமகளை நெருங்கிச்சொல்லியது. 531

## பரணர்

*ஊறல் அவ்வாய் உருத்த தித்திப்*
*பேரமர் மழைக்கட் பெருந்தோட் சிறுநுதல்*
*நல்லள் அம்ம குறுமகள் செல்வர்*
*கடுந்தேர் குழித்த ஞெள்ளல் ஆங்கண்*
*நெடுங்கொடி நுடங்கும் அட்ட வாயில்*
*இருங்கதிர்க் கழனிப் பெருங்கவின் அன்ன*
*நலம்பா ராட்டி நடையெழிற் பொலிந்து*
*விழவிற் செலீஇயர் வேண்டும் வென்வேல்*
*இழையணி யானைச் சோழன் மறவன்*
*கழையளந் தறியாக் காவிரிப் படப்பைப்*
*புனன்மலி புதவிற் போஓர் கிழவோன்*
*பழையன் ஓக்கிய வேல்போற்*
*பிழையல கண்ணவள் நோக்கியோர் திறத்தே* **(அகம். 326)**

தோழி தலைமகனை வாயின் மறுத்தது. 532

## நக்கீரர்

*நகைநன் றம்ம தானே இறைமிசை*
*மாரிச் சுதையின் ஈர்ம்புறத் தன்ன*
*கூரற் கொக்கின் குறும்பறைச் சேவல்*
*வெள்ளி வெண்டோ டன்ன கயல்குறித்துக்*
*கள்ளார் உவகைக் கலிமகிழ் உழவர்*
*காஞ்சியங் குறுந்தறி குத்தித் தீஞ்சுவை*
*மென்கழைக் கரும்பின் நன்பல மிடைந்து*
*பெருஞ்செய் நெல்லின் பாசவல் பொத்தி*
*வருந்திக் கொண்ட வல்வாய்க் கொடுஞ்சிறை*
*மீதழி கடுநீர் நோக்கிப் பைப்பயப்*
*பார்வல் இருக்கும் பயங்கேழ் ஊர*
*யாமது பேணின்றோ இலமே நீநின்*
*பண்ணமை நல்யாழ்ப் பாணனொடு விசிபிணி*
*மண்ணார் முழவின் கண்ணதிர்ந் தியம்ப*

மகிழ்துணைச் சுற்றமொடு மட்டு மாந்தி
எம்மனை வாரா யாகி முன்னாள்
நும்மனைச் சேர்ந்த ஞான்றை யம்மனைக்
குறுந்தொடி மடந்தை உவந்தனள் நெடுந்தேர்
இழையணி யானைப் பழையன் மாறன்
மாடமலி மறுகிற் கூடல் ஆங்கண்
வெள்ளத் தானையொடு வேறுபுலத் திறுத்த
கிள்ளி வளவன் நல்லமர்ச் சாஅய்க்
கடும்பரிப் புரவியொடு களிறுபல வவ்வி
ஏதின் மன்னர் ஊர்கொளக்
கோதை மார்பன் உவகையிற் பெரிதே (அகம். 346)

தலைமகற்குத் தோழி வாயின் மறுத்தது. 533

## பரணர்

மேற்றுறைக் கொளீஇய கழாலிற் கீழ்த்துறை
உகுவார் அருந்தப் பகுவாய் யாமை
கம்புள் இயவன் ஆக விசிபிணித்
தெண்கட் கிணையிற் பிறழும் ஊரன்
இடைநெடுந் தெருவிற் கதுமெனக் கண்டேன்
பொற்றொடி முன்கை பற்றினன் ஆக
அன்னாய் என்றனென் அவன்கைவிட் டனனே
தொன்னசை காவாமை நன்னன் பறம்பிற்
சிறுகா ரோடன் பயினொடு சேர்த்திய
கற்போல் நாவினேன் ஆகி மற்றது
செப்பலென் மன்னால் யாய்க்கே நற்றேர்க்
கடும்பகட் டியானைச் சோழர் மருகன்
நெடுங்கதிர் நெல்லின் வல்லம் கிழவோன்
நல்லடி யுள்ளா னாகவும் ஒன்னார்
கதுவ முயறலும் முயல்ப அதாஅன்று
ஒலிபல் கூந்தல் நம்வயின் அருளாது
கொன்றனன் ஆயினங் கொலைபழு தன்றே

*அருவி யாம்பல் கலித்த முன்றுறை*
*நன்னன் ஆய்பறம் பன்ன*
*மின்னீர் ஓதி என்னைநின் குறிப்பே* (அகம். 356)

பின்னின்ற தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி த்லைமகளைக் குறைநயப்பக் கூறியது.

534

## குடவாயிற் கீரத்தனார்

*தாழ்சினை மருதம் தகைபெறக் கவினிய*
*நீர்சூழ் வியன்களம் பொலியப் போர்பழித்துக்*
*கள்ளார் களமர் பகடுதளை மாற்றிக்*
*கடுங்காற் றெறியப் போகிய துரும்புடன்*
*காயற் சிறுதடி கண்கெடப் பாய்தலின்*
*இருநீர்ப் பரப்பிற் பனித்துறைப் பரதவர்*
*தீம்பொழி வெள்ளுப்புச் சிதைதலிற் சினைஇக்*
*கழனி உழவரொடு மாறெதிர்ந்து மயங்கி*
*இருஞ்சேற் றள்ளல் எறிசெருக் கண்டு*
*நரைமூ தாளர் கைபிணி விடுத்து*
*நனைமுதிர் தேறல் நுளையர்க் கீயும்*
*பொலம்பூண் எவ்வி நீழல் அன்ன*
*நலம்பெறு பணைத்தோள் நன்னுதல் அரிவையொடு*
*மணங்கமழ் தண்பொழில் அல்கி நெருநை*
*நீதற் பிழைத்தமை அறிந்து*
*கலுழ்ந்த கண்ணளெம் அணங்கன் னாளே* (அகம். 366)

பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகன் வாயில் வேண்டியவிடத்துத் தோழி சொல்லியது.

535

## பரணர்

*பொய்கை நீர்நாய்ப் புலவுநாறு இரும்போத்து*
*வாளை நாளிரை தேரும் ஊர*
*நாணினென் பெரும யானே பாணன்*
*மல்லடு மார்பின் வலியுற வருந்தி*
*எதிர்தலைக் கொண்ட ஆரியப் பொருநன்*

*நிறைத்திரண் முழவுத்தோள் கையகத் தொழிந்த*
*திறன்வேறு கிடக்கை நோக்கி நற்போர்க்*
*கணையன் நாணி யாங்கு மறையினள்*
*மெல்ல வந்து நல்ல கூறி*
*மையீர் ஓதி மடவோய் யானுநின்*
*சேரி யேனே அயலி லாட்டியேன்*
*நுங்கை யாகுவென் நினக்கெனத் தன்கைத்*
*தொடுமணி மெல்விரல் தண்ணெனத் தைவர*
*நுதலும் கூந்தலும் நீவிப்*
*பகல்வந்து பெயர்ந்த வாணுதற் கண்டே* **(அகம். 386)**

தோழி வாயின் மறுத்தது. 536

## ஓரம்போகியார்

*வாழி யாதன் வாழி யவினி*
*நெற்பல பொலிக பொன்பெரிது சிறக்க*
*எனவேட் டோளே யாயே யாமே*
*நனைய காஞ்சிச் சினைய சிறுமீன்*
*யாண ரூரன் வாழ்க*
*பாணனும் வாழ்க வெனவேட் டேமே* **(ஐங். 1)**

புறத்தொழுக்கத்திலே நெடுநாள் ஒழுகி, 'இது தகாது' எனத் தெளிந்த மனத்தனாய் மீண்டு தலைவியோடு கூடி ஒழுகாநின்ற தலைமகன் தோழியோடு சொல்லாடி, 'யான் அவ்வாறொழுக நீயிர் நினைத்த திறம் யாது?' என்றாற்கு அவள் சொல்லியது. 537

*வாழி யாதன் வாழி யவினி*
*விளைக வயலே வருக விரவலர்*
*எனவேட் டோளே யாயே யாமே*
*பல்லிதழ் நீலமொடு நெய்த னிகர்க்கும்*
*தண்டுறை யூரன் கேண்மை*
*வழிவழிச் சிறக்க வெனவேட் டேமே* **(ஐங். 2)**

இதுவுமது. 538

*வாழி யாதன் வாழி யவினி*
*பால்பல வூறுக பகடுபல சிறக்க*
*எனவேட் டோளே யாயே யாமே*
*வித்திய வுழவர் நெல்லொடு பெயரும்*
*பூக்கஞ லூரன் றன்மனை*
*வாழ்க்கை பொலிக வெனவேட் டேமே* (ஐங். 3)

இதுவுமது. 539

*வாழி யாதன் வாழி யவினி*
*பகைவர்புல் லார்க பார்ப்பா ரோதுக*
*எனவேட் டோளே யாயே யாமே*
*பூத்த கரும்பிற் காய்த்த நெல்லிற்*
*கழனி யூரன் மார்பு*
*பழன மாகற்க வெனவேட் டேமே* (ஐங். 4)

இதுவுமது. 540

*வாழி யாதன் வாழி யவினி*
*பசியில் லாகுக பிணிசே ணீங்குக*
*எனவேட் டோளே யாயே யாமே*
*முதலைப் போத்து முழுமீ னாரும்*
*தண்டுறை யூரன் றேஎரெம்*
*முன்கடை நிற்க வெனவேட் டேமே* (ஐங். 5)

இதுவுமது. 541

*வாழி யாதன் வாழி யவினி*
*வேந்துபகை தணிக யாண்டுபல நந்துக*
*எனவேட் டோளே யாயே யாமே*
*மலர்ந்த பொய்கை முகைந்த தாமரைத்*
*தண்டுறை யூரன் வரைக*
*எந்தையும் கொடுக்க வெனவேட் டேமே* (ஐங். 6)

களவினிற் பலநாள் ஒழுகிவந்து வரைந்துகொண்ட தலைமகன் தோழியோடு சொல்லாடி, 'யான் வரையாது ஒழுகுகின்ற நாள் நீயிர் இங்கு இழைத்திருந்த திறம் யாது?' என்றாற்கு அவள் சொல்லியது. 542

*வாழி யாதன் வாழி யவினி*
*அறநனி சிறக்க வல்லது கெடுக*
*எனவேட் டோளே யாயே யாமே*
*உளைப்பூ மருதத்துக் கிளைக்குரு கிருக்கும்*
*தண்டுறை யூரன் றன்னூர்க்*
*கொண்டனன் செல்க வெனவேட் டேமே* (ஐங். 7)

இதுவுமது. 543

*வாழி யாதன் வாழி யவினி*
*அரசுமுறை செய்க களவில் லாகுக*
*எனவேட் டோளே யாயே யாமே*
*அலங்குசினை மாஅத் தணிமயி லிருக்கும்*
*பூக்கஞு லூரன் சூளிவண்*
*வாய்ப்ப தாக வெனவேட் டேமே* (ஐங். 8)

இதுவுமது. 544

*வாழி யாதன் வாழி யவினி*
*நன்றுபெரிது சிறக்க தீதில் லாகுக*
*எனவேட் டோளே யாயே யாமே*
*கயலார் நாரை போர்விற் சேக்கும்*
*தண்டுறை யூரன் கேண்மை*
*அம்ப லாகற்க வெனவேட் டேமே* (ஐங். 9)

இதுவுமது. 545

*வாழி யாதன் வாழி யவினி*
*மாரி வாய்க்க வளநனி சிறக்க*
*எனவேட் டோளே யாயே யாமே*
*பூத்த மாஅத்துப் புலாலஞ் சிறுமீன்*
*தண்டுறை யூரன் றன்னொடு*
*கொண்டனன் செல்க வெனவேட் டேமே* (ஐங். 10)

இதுவுமது. 546

*ஓங்குபூ வேழத்துத் தூம்புடைத் திரள்காற்*
*சிறுதொழு மகளி ரஞ்சனம் பெய்யும்*
*பூக்கஞ லூரனை யுள்ளிப்*
*பூப்போ லுண்கண் பொன்போர்த் தனவே* **(ஐங். 16)**

வாயிலாய்ப் புகுந்தார்க்குத் தோழி, 'அவன் வரவையே நினைத்து இவள் கண்ணும் பசந்தன; இனி அவன் வந்து பெறுவது என்னை?' எனச் சொல்லி வாயில் மறுத்தது. 547

*முள்ளி நீடிய முதுநீ ரடைகரைப்*
*புள்ளிக் களவ னாம்ப லறுக்கும்*
*தண்டுறை யூரன் றெளிப்பவும்*
*உண்கண் பசப்ப தெவன்கொ லன்னாய்* **(ஐங். 21)**

'புறத்தொழுக்கம் எனக்கு இனி இல்லை' என்று தலைமகன் தெளிப்பவும், 'அஃது உளது' என்று வேறுபடும் தலைமகட்குத் தோழி சொல்லியது. 548

*தாய்சாப் பிறக்கும் புள்ளிக் களவனொடு*
*பிள்ளை தின்னு முதலைத் தவனூர்*
*எய்தின னாகின்று கொல்லோ மகிழ்நன்*
*பொலந்தொடி தெளிர்ப்ப முயங்கியவர்*
*நலங்கொண்டு துறப்ப தெவன்கொ லன்னாய்* **(ஐங். 24)**

பரத்தையருள்ளும் ஒருத்தியை விட்டு ஒருத்தியைப் பற்றி ஒழுகுகின்றான் என்பது கேட்ட தோழி வாயிலாய் வந்தார் கேட்ப, தலைமகட்குச் சொல்லியது. 549

*புயல்புறந் தந்த புனிற்றுவளர் பைங்காய்*
*வயலைச் செங்கொடி களவ னறுக்கும்*
*கழனி யூரன் மார்புபலர்க்*
*கிழைநெகிழ் செல்ல லாகு மன்னாய்* **(ஐங். 25)**

இதுவுமது. 550

*கரந்தையஞ் செறுவிற் றுணைதுறந்து களவன்*
*வள்ளை மென்கா லறுக்கு மூரன்*

*எம்மும் பிறரு மறியான்*
*இன்ன னாவ தெவன்கொ லன்னாய்* (ஐங். 26)

தலைமகற்கு வாயிலாகப் புகுந்தார், 'நின் முனிவிற்கு அவன் பொருந்தா நின்றான்' என்றவழி தலைமகட்குத் தோழி, 'அவன் பாடு அஃதில்லை' என்பதுபடச் சொல்லியது.
551

*செந்நெலஞ் செறுவிற் கதிர்கொண்டு களவன்*
*தண்ணக மண்ணளைச் செல்லு மூரற்*
*கெல்வளை நெகிழச் சாஅய்*
*அல்ல லுழப்ப தெவன்கொ லன்னாய்* (ஐங். 27)

தலைமகன் மனைக்கண் வருங்காலத்து வாராது தாழ்த்துழி, 'புறத்தொழுக்கம் உளதாயிற்று' எனக் கருதி வருந்தும் தலைமகட்குத் தோழி சொல்லியது. 552

*உண்டுறை யணங்கிவ ளுறைநோ யாயின்*
*தண்சேறு களவன் வரிக்கு மூரற்*
*கொண்டொடி நெகிழச் சாஅய்*
*மென்றோள் பசப்ப தெவன்கொ லன்னாய்* (ஐங். 28)

இற்செறித்தவிடத்துத் தலைமகட்கு எய்திய வேறுபாடு கண்டு, 'இது தெய்வத்தினான் ஆயிற்று' என்று தமர் வெறியெடுப்புழி, அதனை விலக்கக் கருதிய தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது. 553

*மாரி கடிகொளக் காவலர் கடுக*
*வித்திய வெண்முளை களவ னறுக்கும்*
*கழனி யூரன் மார்புற மரீஇத்*
*திதலை யல்கு னின்மகள்*
*பசலை கொள்வ தெவன்கொ லன்னாய்* (ஐங். 29)

வரைவெதிர் கொள்ளார் தமர் அவண் மறுப்புழித் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது. 554

*வேப்புநனை யன்ன நெடுங்கட் களவன்*
*தண்ணக மண்ணளை நிறைய நெல்லின்*

*இரும்பூ வுறைக்கு மூரற்கிவள்*
*பெருங்கவி னிழப்ப தெவன்கொ லன்னாய்* (ஐங். 30)

இதுவுமது. 555

*தீம்பெரும் பொய்கை யாமை யிளம்பார்ப்புத்*
*தாய்முக நோக்கி வளர்ந்திசி னாஅங்*
*கதுவே யையநின் மார்பே*
*அறிந்தனை யொழுகுமதி யறனுமா ரதுவே* (ஐங். 44)

பரத்தையர் மனைக்கண்ணே பன்னாள் தங்கித் தன் மனைக்கண்ணே வந்த தலைமகற்குத் தோழி கூறியது. 556

*கூதி ராயிற் றண்கலிழ் தந்து*
*வேனி லாயின் மணிநிறங் கொள்ளும்*
*யாறணிந் தன்றுநின் னூரே*
*பசப்பணிந் தனவான் மகிழ்நவென் கண்ணே* (ஐங். 45)

நெடுநாள் பரத்தையர் இடத்தனாய் ஒழுகிய தலைமகன் மனைவயிற் சென்றுழித் தோழி சொல்லியது. 557

*நினக்கே யன்றஃ தெமக்குமா ரினிதே*
*நின்மார்பு நயந்த நன்னுத லரிவை*
*வேண்டிய குறிப்பினை யாகி*
*ஈண்டுநீ யருளா தாண்டுறை தல்லே* (ஐங். 46)

மனைக்கண் வருதல் பரத்தை விலக்க, விலங்கிப் பின்பு உலகியல் பற்றி அவள் குறிப்பினோடும் வந்தமை அறிந்த தோழி தலைமகனைப் புலந்து சொல்லியது. 558

*துணையோர் செல்வமும் யாமும் வருந்துதும்*
*வஞ்சி யோங்கிய யாண ரூர*
*தஞ்ச மருளாய் நீயேநின்*
*நெஞ்சம் பெற்ற விவளுமா ரழுமே* (ஐங். 50)

மனையின் நீங்கிப் பரத்தையிடத்துப் பன்னாள் தங்கிவந்த தலைமகற்குத் தோழி சொல்லியது. 559

*நீருறை கோழி நீலச் சேவல்*
*கூருகிர்ப் பேடை வயாஅ மூர*
*புளிங்காய் வேட்கைத் தன்றுநின்*
*மலர்ந்த மார்பிவள் வயாஅ நோய்க்கே* (ஐங். 51)

வாயில் பெற்றுப் புகுந்துபோய்ப் புறத்தொழுக்கம் ஒழுகிப் பின்பும் வாயில் வேண்டும் தலைமகற்குத் தோழி மறுத்தது. 560

*வயலைச் செங்கொடிப் பிணைய றைஇச்*
*செவ்விரல் சிவந்த சேயரி மழைக்கண்*
*செவ்வாய்க் குறுமக ளினைய*
*வெவ்வாய் முன்னின்று மகிழ்நநின் றேரே* (ஐங். 52)

வாயில் பெற்றுக் கூடியிருந்த தலைமகற்குத் தோழி நகையாடிச் சொல்லியது. 561

*துறையெவ னணங்கும் யாமுற்ற நோயே*
*சிறையழி புதுப்புனல் பாய்ந்தெனக் கலங்கிக்*
*கழனித் தாமரை மலரும்*
*பழன வூரநீ யுற்ற சூளே* (ஐங். 53)

தலைவி தன்னுடன்போய்ப் புனலாடியவழி, 'இது பரத்தையருடனாடிய துறை' என நினைந்து பிறந்த மெலிவை மறைத்தமையை உணர்ந்த தலைமகன் மனைவயிற் புகுந்துழி, 'தெய்வங்கள் உறையும் துறைக்கண்ணே நாம் ஆடினவதனாற் பிறந்ததுகொல் நினக்கு இவ் வேறுபாடு' என்று வினாயினாற்குத் தோழி சொல்லியது. 562

*திண்டேர்த் தென்னவ னன்னாட் டுள்ளதை*
*வேனி லாயினுந் தண்புன லொழுகும்*
*தேனூ ரன்னவிவ டெரிவளை நெகிழ*
*ஊரி னூரனை நீதர வந்த*
*பஞ்சாய்க் கோதை மகளிர்க்*
*கஞ்சுவ லம்ம வம்முறை வரினே* (ஐங். 54)

வாயில் வேண்டிவந்த தலைமகற்குத் தலைமகள் குறிப்பறிந்த தோழி அவன் கொடுமை கூறி வாயில் மறுத்தது. 563

*கரும்பி னெந்திரங் களிற்றெதிர் பிளிற்றும்*
*தேர்வண் கோமான் றேனூ ரன்னவிவள்*
*நல்லணி நயந்துநீ துறத்தலிற்*
*பல்லோ ரறியப் பசந்தன்று நுதலே* (ஐங். 55)

வரைந்தணிமைக்கண்ணே புறத்தொழுக்கம் ஒழுகி வாயில்வேண்டி வந்து தன் மெலிவு கூறிய தலைமகனைத் தோழி நெருங்கிச் சொல்லியது. 564

*பகல்கொள் விளக்கோ டிராநா ளறியா*
*வெல்போர்ச் சோழ ராமூ ரன்னவிவள்*
*நலம்பெறு சுடர்நுத றேம்ப*
*எவன்பயஞ் செய்யுநீ தேற்றிய மொழியே* (ஐங். 56)

புறத்தொழுக்கம் உளதாகியதறிந்து தலைமகள் மெலிந்துழி, 'அஃதில்லை' என்று தேற்றும் தலைமகற்குத் தோழி சொல்லியது. 565

*பகலிற் றோன்றும் பல்கதிர்த் தீயின்*
*ஆம்பலஞ் செறுவிற் றேனூ ரன்ன*
*இவணலம் புலம்பப் பிரிய*
*அனைநல முடையளோ மகிழ்நநின் பெண்டே* (ஐங். 57)

தலைமகற்குப் புறத்தொழுக்கம் உளதாயிற்று என்பது கேட்ட தோழி அவனை வினாயது. 566

*விண்டு வன்ன வெண்ணெற் போர்விற்*
*கைவண் விராஅ னிருப்பை யன்ன*
*இவளணங் குற்றனை போறி*
*பிறர்க்கு மனையையால் வாழி நீயே* (ஐங். 58)

உணர்ப்புவயின்வாரா ஊடற்கண்புலந்த தலைமகற்குத் தோழி கூறியது. 567

*கேட்டிசின் வாழியோ மகிழ்ந வாற்றுற*
*மைய னெஞ்சிற் கெவ்வந் தீர*
*நினக்குமருந் தாகிய யானினி*
*இவட்குமருந் தன்மை நோமெ னெஞ்சே* (ஐங். 59)

தலைமகள் ஆற்றாளாம்வண்ணம் மனைக்கண் வரவுசுருங்கிய தலைமகற்குப் புறத்தொழுக்கம் உளதாகியவழி ஆற்றாளாகிய தோழி சொல்லியது. 568

*பழனக் கம்புள் பயிர்ப்பெடை யகவும்*
*கழனி யூரநின் மொழிவ லென்றும்*
*துஞ்சுமனை நெடுநகர் வருதி*
*அஞ்சா யோவிவ டந்தைகை வேலே* (ஐங். 60)

வரையாது ஒழுகும் தலைமகன் இரவுக்குறி வந்துழித் தோழி சொல்லியது.
569

*பலரிவ ணொவ்வாய் மகிழ்ந வதனால்*
*அலர்தொடங் கின்றா லூரே மலர*
*தொன்னிலை மருதத்துப் பெருந்துறை*
*நின்னோ டாடின டண்புன லதுவே* (ஐங். 75)

பரத்தையோடு புனலாடிவந்த தலைமகன் அதனை மறைத்துக் கூறியவழி தோழி கூறியது.
570

*பைஞ்சாய்க் கூந்தற் பசுமலர்ச் சுணங்கிற்*
*றண்புன லாடித்தன் னலமேம் பட்டனள்*
*ஒண்டொடி மடவர னின்னோ*
*டந்தர மகளிர்க்குத் தெய்வமும் போன்றே* (ஐங். 76)

இதுவுமது.
571

*செவியிற் கேட்பினுஞ் சொல்லிறந்து வெகுள்வோள்*
*கண்ணிற் காணி னென்னா குவள்கொல்*
*நறுவீ யைம்பான் மகளி ராடும்*
*தைஇத் தண்கயம் போலப்*
*பலர்படிந் துண்ணுநின் பரத்தை மார்பே* (ஐங். 84)

பரத்தையர் மனைக்கண் தங்கிப் புணர்ச்சிக்குறியோடு வாயில் வேண்டிவந்த தலைமகற்குத் தோழி சொல்லியது.
572

*நெறிமருப் பெருமை நீல விரும்போத்து*
*வெறிமலர்ப் பொய்கை யாம்பன் மயக்கும்*
*கழனி யூரன் மகளிவள்*
*பழன வெதிரின் கொடிப்பிணை யலளே* (ஐங். 91)

குறைவேண்டிப் பின்னின்று வந்த தலைமகற்குத் தோழி, 'இவள் இளையள், விளைவிலள்' எனச் சேட்படுத்தது.
573

*எருமைநல் லேற்றின மேய லருந்தெனப்*
*பசுமோ ரோடமோ டாம்ப லொல்லா*
*செய்த வினைய மன்ற பல்பொழில்*
*தாதுண் வெறுக்கைய வாகியிவள்*
*போதவிழ் முச்சி யூதும் வண்டே* (ஐங். 93)

முயக்கம் பெற்றவழிப் பிறந்த வெறிநாற்றத்தால் பண்டையளவின்றி வண்டுகள் மொய்த்தனவாக, 'இதற்குக் காரணமென்?' என்று வினாவிய செவிலித்தாய்க்குக் கூறுவாள் போன்று தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி சொல்லியது. 574

*தண்புன லாடுந் தடங்கோட் டெருமை*
*திண்பிணி யம்பியிற் றோன்று மூர*
*ஒண்டொடி மடமக ளிவளினும்*
*நுந்தையும் ஞாயுங் கடியரோ நின்னே* (ஐங். 98)

புறத்தொழுக்கம் உளதாகிய துணையானே புலந்து வாயில்நேராத தலைமகள் கொடுமை தலைமகன் கூறக்கேட்ட தோழி அவற்குச் சொல்லியது. 575

*புனலாடு மகளி ரிட்ட வொள்ளிழை*
*மணலாடு சிமையத் தெருமை கிளைக்கும்*
*யாண ரூரன் மகளிவள்*
*பாணர் நரம்பினு மின்கிள வியளே* (ஐங். 100)

வாயில் நேர்தற் பொருட்டு முகம்புகுவான் வேண்டி இயற்பழித்து, தலைமகள் இயற்பட மொழிந்த திறம் தலைமகற்குத் தோழி சொல்லியது. 576

## ஓரம்போகியார்

*யாயா கியளே விழவுமுத லாட்டி*
*பயறுபோ லிணர பைந்தாது படீஇயர்*
*உழவர் வாங்கிய கமழ்பூ மென்சினைக்*
*காஞ்சி யூரன் கொடுமை*
*கரந்தன ளாகலி னாணிய வருமே* (குறுந். 10)

தலைமகற்குத் தோழி வாயில் நேர்ந்தது. 577

## கொல்லிக் கண்ணனார்

*ஒறுப்ப வோவலர் மறுப்பத் தேறலர்*
*தமிய ருறங்குங் கௌவை யின்றாய்*
*இனியது கேட்டின் புறுகவிவ் வூரே*
*முனாஅ, தியானையங் குருகின் கானலம் பெருந்தோ*
*டட்ட மள்ள ரார்ப்பிசை வெரூஉம்*
*குட்டுவன் மாந்தை யன்னவெம்*
*குழல்விளங் காய்நுதற் கிழவனு மவனே* (குறுந். 34)

வரைவுமலிந்தமை ஊர்மேல்வைத்துத் தோழி கிழத்திக்குச் சொல்லியது. 578

## ஆலங்குடி வங்கனார்

*காலை யெழுந்து கடுந்தேர் பண்ணி*
*வாலிழை மகளிர்த் தழீஇய சென்ற*
*மல்ல லூர னெல்லினன் பெரிதென*
*மறுவருஞ் சிறுவன் றாயே*
*தெறுவ தம்மவித் திணைப்பிறத் தல்லே* (குறுந். 45)

தலைமகற்குப் பாங்காயினார் வாயில் வேண்டியவழித் தோழி வாயில் நேர்ந்தது.
579

## கோப்பெருஞ்சோழன்

*எம்மணங் கினவே மகிழ்ந முன்றில்*
*நனைமுதிர் புன்கின் பூத்தாழ் வெண்மணல்*
*வேலன் புனைந்த வெறியயர் களந்தொறும்*
*செந்நெல் வான்பொரி சிதறி யன்ன*
*எக்கர் நண்ணிய வெம்மூர் வியன்றுறை*
*நேரிறை முன்கை பற்றிச்*
*சூரர மகளிரொ டுற்ற சூளே* (குறுந். 53)

வரைவு நீட்டித்தவழித் தோழி தலைமகற்கு உரைத்தது. 580

## தும்பிசேர்கீரனார்

*தச்சன் செய்த சிறுமா வையம்*
*ஊர்ந்தின் புறாஅ ராயினுங் கையின்*
*ஈர்ந்தின் புறூஉ மிளையோர் போல*
*உற்றின் புறேஎ மாயினு நற்றேர்ப்*
*பொய்கை யூரன் கேண்மை*
*செய்தின் புற்றனெஞ் செறிந்தன வளையே* (குறுந். 61)

தோழி தலைமகன் வாயில்கட்கு உரைத்தது. 581

## வடமவண்ணக்கன் தாமோதரனார்

*யாரினு மினியன் பேரன் பினனே*
*உள்ளூர்க் குரீஇத் துள்ளுநடைச் சேவல்*
*சூன்முதிர் பேடைக் கீனி லிழைஇயர்*
*தேம்பொதிக் கொண்ட தீங்கழைக் கரும்பின்*
*நாறா வெண்பூக் கொழுதும்*
*யாண ரூரன் பாணன் வாயே* (குறுந். 85)

வாயில் வேண்டிச்சென்ற பாணற்குத் தோழி சொல்லி வாயின் மறுத்தது. 582

## பரணர்

*பாவடி யுரல பகுவாய் வள்ளை*
*ஏதின் மாக்க ணுவறலு நுவல்ப*
*அழிவ தெவன்கொலிப் பேதை யூர்க்கே*
*பெரும்பூட் பொறையன் பேஎமுதிர் கொல்லிக்*
*கருங்கட் டெய்வங் குடவரை யெழுதிய*
*நல்லியற் பாவை யன்னவிம்*
*மெல்லியற் குறுமகள் பாடினள் குறினே* (குறுந். 89)

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தன்னுள்ளே சொல்லுவாளாய்ச் சொல்லியது. 583

## மாதிரத்தனார்

*ஊர்க்கும் அணித்தே பொய்கை பொய்கைக்குச்*
*சேய்த்து மன்றே சிறுகான் யாறே*
*இரைதேர் வெண்குரு கல்ல தியாவதும்*
*துன்னல்போ கின்றாற் பொழிலே யாமெம்*
*கூழைக் கெருமண் கொணர்கஞ் சேறும்*
*ஆண்டும் வருகுவள் பெரும்பே தையே* (குறுந். 113)

பகற்குறி நேர்ந்த தலைமகற்குக் குறிப்பினாற் குறியிடம் பெயர்த்துச் சொல்லியது.
584

## ஓரம்போகியார்

*குருகுகொளக் குளித்த கெண்டை யயல*
*துருகெழு தாமரை வான்முகை வெரூஉம்*
*கழனியம் படப்பைக் காஞ்சி யூர*
*ஒருநின் பாணன் பொய்ய னாக*
*உள்ள பாண ரெல்லாம்*
*கள்வர் போல்வர்நீ யகன்றிசி னோர்க்கே* (குறுந். 127)

பாணன் வாயிலாகப் புக்கவழித் தலைமகற்குத் தோழி சொல்லியது. 585

## ஓக்கூர் மாசாத்தியார்

*மனையுறை கோழிக் குறுங்காற் பேடை*
*வேலி வெருகின மாலை யுற்றெனப்*
*புகுமிட னறியாது தொகுபுடன் குழீஇய*
*பைதற் பிள்ளைக் கிளைபயிர்ந் தாஅங்*
*கின்னா திசைக்கு மம்பலொடு*
*வாரல் வாழிய ரையவெந் தெருவே* (குறுந். 139)

வாயில் வேண்டிப் புக்க தலைமகற்குத் தோழி வாயில் மறுத்தது. 586

## வெள்ளிவீதியார்

*சுரஞ்செல் யானைக் கல்லுறு கோட்டின்*
*தெற்றென இறீஇயரோ ஐயமற்று யாம்*

*நும்மொடு நக்க வால்வெள் எயிறே*
*பாணர் பசுமீன் சொரிந்த மண்டைபோல*
*எமக்கும் பெரும்புல வாகி*
*நும்மும் பெறேஎம் இறீஇயர்எம் உயிரே* (குறுந். 169)

தோழி வரைவுநீட்டித்தவழி வரைவுகடாயது. 587

## நெடும்பல்லியத்தை

*அயிரை பரந்த வந்தண் பழனத்*
*தேந்தெழின் மலர தூம்புடைத் திரள்கால்*
*ஆம்பல் குறுநர் நீர்வேட் டாங்கிவள்*
*இடைமுலைக் கிடந்து நடுங்க லானீர்*
*தொழுதுகாண் பிறையிற் றோன்றி யாநுமக்*
*கரிய மாகிய காலைப்*
*பெரிய நோன்றனிர் நோகோ யானே* (குறுந். 178)

கடிநகர்புக்க தோழி தலைமகன் புணர்ச்சி விதும்பல் கண்டு, முன்னர்க் களவுக் காலத்து ஒழுகலாற்றை நினைந்து அழிந்து கூறியது. 588

## மிளைக்கந்தனார்

*வேம்பின் பைங்காயென் றோழி தரினே*
*தேம்பூங் கட்டி யென்றனி ரினியே*
*பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீர்*
*தைஇத் திங்கட் டண்ணிய தரினும்*
*வெய்ய வுவர்க்கு மென்றனிர்*
*ஐய வற்றா லன்பின் பாலே* (குறுந். 196)

வாயில் வேண்டிப் புக்க கிழவற்குத் தோழி கூறியது. 589

## குன்றியனார்

*பாசவ லிடித்த கருங்கா முலக்கை*
*ஆய்கதிர் நெல்லின் வரம்பணைத் துயிற்றி*
*ஒண்டொடி மகளிர் வண்ட லயரும்*

*தொண்டி யன்னவென் னலந்தந்து*
*கொண்டனை சென்மோ மகிழ்நநின் சூளே* (குறுந். 238)

தலைவன் பரத்தையின் மறுத்தந்து வாயில்வேண்டித் தோழியிடைச் சென்று தெளிப்பான் புக்காற்குத் தோழி சொல்லியது. 590

## பரணர்

*வாரலெஞ் சேரி தாரனின் றாரே*
*அலரா கின்றாற் பெரும காவிரிப்*
*பலராடு பெருந்துறை மருதொடு பிணித்த*
*ஏந்துகோட் டியானைச் சேந்தன் றந்தை*
*அரியலம் புகவி னந்தோட்டு வேட்டை*
*நிரைய வொள்வா ளிளையர் பெருமகன்*
*அழிசி யார்க்கா டன்னவிவள்*
*பழிதீர் மாணலந் தொலைதல் கண்டே* (குறுந். 258)

தோழி தலைமகற்கு வாயில் மறுத்தது. 591

## தூங்கலோரியார்

*உடுத்துந் தொடுத்தும் பூண்டுஞ் செரீஇயும்*
*தழையணிப் பொலிந்த யாயமொடு துவன்றி*
*விழவொடு வருதி நீயே யிஃதோ*
*ஓரான் வல்சிச் சீரில் வாழ்க்கை*
*பெருநலக் குறுமகள் வந்தென*
*இனிவிழ வாயிற் றென்னுமிவ் வூரே* (குறுந். 295)

வாயில் வேண்டிச்சென்ற கிழவற்குத் தோழி உரைத்தது. 592

## உறையூர்ச் சல்லியன் குமாரனார்

*கைவினை மாக்கடஞ் செய்வினை முடிமார்*
*சுரும்புண மலர்ந்த வாசங் கீழ்ப்பட*
*நீடின வரம்பின் வாடிய விடினும்*
*கொடியரோ நிலம்பெயர்ந் துறைவே மென்னாது*

*பெயர்த்துங் கடிந்த செறுவிற் பூக்கும்*
*நின்னூர் நெய்த லனையேம் பெரும*
*நீயெமக், கின்னா தனபல செய்யினும்*
*நின்னின் றமைதல் வல்லா மாறே* (குறுந். 309)

பரத்தையிற் பிரிந்துவந்த கிழவற்குத் தோழி வாயில் நேர்ந்தது. 593

## கயத்தூர்கிழார்

*நீர்நீ டாடிற் கண்ணுஞ் சிவக்கும்*
*ஆர்ந்தோர் வாயிற் றேனும் புளிக்கும்*
*தணந்தனை யாயினெம் மில்லுய்த்துக் கொடுமோ*
*அந்தண் பொய்கை யெந்தை யெம்மூர்க்*
*கடும்பாம்பு வழங்குந் தெருவில்*

*நடுங்களு ரெவ்வங் களைந்த வெம்மே* (குறுந். 354)

பரத்தையிற் பிரிந்து வாயில்வேண்டிச் சென்ற தலைமகற்குத் தோழி வாயில் மறுத்தது. 594

## பேயனார்

*கண்டிசிற் பாண பண்புடைத் தம்ம*
*மாலை விரிந்த பசுவெண் ணிலவிற்*
*குறுங்காற் கட்டி னறும்பூஞ் சேக்கைப்*
*பள்ளி யானையி னுயிர்த்தன னசையிற்*
*புதல்வற் றழீஇயனன் விறலவன்*
*புதல்வன் றாயவன் புறங்கவைஇ யினளே* (குறுந். 359)

பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகன் வாயில் வேண்டிப்பெறாது தானேபுக்குக் கூடியது கண்டு தோழி பாணற்குச் சொல்லியது. 595

## மதுரை மருதனிளநாகனார்

*கொடியோர் நல்கா ராயினும் யாழநின்*
*தொடிவிளங் கிறைய தோள்கவின் பெறீஇயர்*
*உவக்காண் டோழி யவ்வந் திசினே*

*தொய்யன் மாமழை தொடங்கலி னவர்நாட்டுப்*
*பூசலாயம் புகன்றிழி யருவியின்*
*மண்ணுறு மணியிற் றோன்றும்*
*தண்ணறுந் துறுக லோங்கிய மலையே* (குறுந். 367)

வரைவுணர்த்திய தோழி தலைமகட்குக் கழியுவகை மீதூராமை உணர்த்தியது.

596

## ஓரம்போகியார்

*உழுந்துடைக் கழுந்திற் கரும்புடைப் பணைத்தோள்*
*நெடும்பல் கூந்தற் குறுந்தொடி மகளிர்*
*நலனுண்டு துறத்தி யாயின்*
*மிகநன் றம்ம மகிழ்நநின் சூளே* (குறுந். 384)

'நின் பரத்தையர்க்கு நீ உற்ற சூளுறவு நன்றாயிருந்தது' என்று நகையாடித் தோழி வாயில் மறுத்தது.

597

## பரணர்

*மயங்குமலர்க் கோதை குழைய மகிழ்நன்*
*முழங்கிய நாடவச் சிலவே யலரே*
*கூகைக் கோழி வாகைப் பறந்தலைப்*
*பசும்பூட் பாண்டியன் வினைவ லதிகன்*
*களிறொடு பட்ட ஞான்றை*
*ஒளிறுவாட் கொங்க ரார்ப்பினும் பெரிதே* (குறுந். 393)

தலைமகன் சிறைப்புறமாகத் தோழி அலர்மலிவுரைத்து வரைவுகடாயது.

598

## கொற்றனார்

*கண்டனென் மகிழ்ந கண்டெவன் செய்கோ*
*பாணன் கையது பண்புடைச் சீறியாழ்*
*யாணர் வண்டின் இம்மென இமிரும்*
*ஏர்தரு தெருவின் எதிர்ச்சி நோக்கிநின்*
*மார்புதலைக் கொண்ட மாணிழை மகளிர்*

*கவலே முற்ற வெய்துவீ ழரிப்பனி*
*காலே முற்ற பைதரு காலைக்*
*கடன்மரங் கவிழ்ந்தெனக் கலங்கி யுடன்வீழ்பு*
*பலர்கொள் பலகை போல*
*வாங்க வாங்கநின் றூங்கஞர் நிலையே (நற். 30)*

பரத்தையிற் பிரிந்துவந்த தலைவன் யாரையும் அறியேனென்றாற்குத் தோழி சொல்லியது. 599

## மருதம் பாடிய இளங்கடுங்கோ

*அறியா மையின் அன்னை யஞ்சிக்*
*குழையன் கோதையன் குறும்பைந் தொடியன்*
*விழவயர் துணங்கை தழூஉகஞ் செல்ல*
*நெடுநிமிர் தெருவிற் கைபுகு கொடுமிடை*
*நொதும லாளன் கதுமெனத் தாக்கலின்*
*கேட்போர் உளர்கொல் இல்லைகொல் போற்றென*
*யாணது பசலை யென்றனன் அதனெதிர்*
*நாணிலை எலுவ என்றுவந் திசினே*
*செறுநரும் விழையுஞ் செம்ம லோனென*
*நறுநுத லரிவை போற்றேன்*
*சிறுமை பெருமையிற் காணாது துணிந்தே (நற். 50)*

தோழி பாணர்க்கு வாயின் மறுத்தது. 600

## தூங்கலோரியார்

*மலைகண் டன்ன நிலைபுணர் நிவப்பின்*
*பெருநெற் பல்கூட் டெருமை உழவ*
*கண்படை பெறாது தண்புலர் விடியல்*
*கருங்கண் வராஅல் பெருந்தடி மிளிர்வையொடு*
*புகர்வை அரிசிப் பொம்மல் பெருஞ்சோறு*
*கவர்படு கையை கழும மாந்தி*
*நீருறு செறுவில் நாறுமுடி யழுத்தநின்*
*நடுந ரோடுநீ சேறி யாயின்வண்*
*சாயும் நெய்தலும் ஓம்புமதி எம்மின்*

*மாயிருங் கூந்தல் மடந்தை*
*ஆய்வளைக் கூட்டும் அணியுமார் அவையே (நற். 60)*

சிறைப்புறமாக உழவற்குச் சொல்லுவாளாய்த் தோழி செறிப்பறிவுறீஇயது.

601

## அஞ்சிலஞ்சியார்

*ஆடியல் விழவின் அழுங்கண் மூதூர்*
*உடையோர் பான்மையின் பெருங்கை தூவா*
*வறனில் புலைத்தி எல்லித் தோய்த்த*
*புகாப்புகர் கொண்ட புன்பூங் கலிங்கமொடு*
*வாடா மாலை துயல்வர ஓடிப்*
*பெருங்கயிறு நாலும் இரும்பனம் பிணையல்*
*பூங்கண் ஆயம் ஊக்க வூங்காள்*
*அழுதனள் பெயரும் அஞ்சில் ஓதி*
*நல்கூர் பெண்டின் சில்வளைக் குறுமகள்*
*ஊசல் உறுதொழிற் பூசல் கூட்டா*
*நயனின் மாக்களொடு குழீஇப்*
*பயனின்று அம்மவிவ் வேந்துடை அவையே (நற். 90)*

தோழி தலைமகளுக்குரைப்பாளாய்ப் பாணனை நெருங்கி வாயின் மறுத்தது.

602

• • • • •

*மடக்கண் தகரக் கூந்தல் பணைத்தோள்*
*வார்ந்தவால் எயிற்றுச் சேர்ந்துசெறி குறங்கின்*
*பிணையல் அம்தழைத் தைஇத் துணையிலள்*
*விழவுக்களம் பொலிய வந்துநின் றனளே*
*எழுமினோ எழுமின்எங் கொழுநற் காக்கம்*
*ஆரியர் துவன்றிய பேரிசை முள்ளூர்ப்*
*பலருடன் கழித்த ஒள்வாள் மலையனது*
*ஒருவேற்கு ஓடி யாங்குநம்*
*பன்மையது எவனோஇவள் வன்மைதலைப் படினே (நற். 170)*

தோழி விறலிக்கு வாயின் மறுத்தது.

603

*பழனப் பாகல் முயிறுமூசு குடம்பை*
*கழனி நாரை உரைத்தலிற் செந்நெல்*
*விரவுவெள் ளரிசியின் தாஅம் ஊரன்*
*பலர்ப்பெறல் நசைஇநம் இல்வா ரலனே*
*மாயோள், நலத்தை நம்பி விடலொல் லாளே*
*அன்னியும் பெரியன் அவனும் விழுமிய*
*இருபெரு வேந்தர் பொருகளத் தொழித்த*
*புன்னை விழுமம் போல*
*என்னொடு கழியுமிவ் விருவரது இகலே* (நற். 180)

தலைமகற்கு வாயினேர்ந்த தோழி, தலைமகளிடத்துப் பொறாமை கண்டு சொல்லியது.

604

## கூடலூர்ப் பல்கண்ணனார்

*கண்ணி கட்டிய கதிர அன்ன*
*ஒண்குரல் நொச்சித் தெரியல் சூடி*
*யாறுகிடந் தன்ன அகனெடுங் தெருவில்*
*சாறென நுவலும் முதுவாய்க் குயவ*
*இதுவும் ஆங்கண் நுவன்றிசின் மாதோ*
*ஆம்பல் அமன்ற தீம்பெரும் பழனத்துப்*
*பொய்கை ஊர்க்குப் போவோய் ஆகிக்*
*கைகவர் நரம்பிற் பனுவற் பாணன்*
*செய்த அல்லல் பல்குவ வையெயிற்று*
*ஐதகல் அல்குல் மகளிர்இவன்*
*பொய்பொதி கொடுஞ்சொல் ஓம்புமின் எனவே* (நற். 200)

தோழி தலைமகளது குறிப்பறிந்து வாயிலாகப் புக்க பாணன் கேட்பக் குயவனைக் கூவி இங்ஙனஞ் சொல்லாயோ என்று குயவர்க்குச் சொல்லியது.

605

## மிளைகிழான் நல்வேட்டனார்

*அரிகால் மாறிய அங்கண் அகல்வயல்*
*மறுகால் உழுத ஈரச் செறுவின்*
*வித்தொடு சென்ற வட்டி பற்பல*

*மீனொடு பெயரும் யாணர் ஊர*
*நெடிய மொழிதலுங் கடிய ஊர்தலும்*
*செல்வம் அன்றுதன் செய்வினைப் பயனே*
*சான்றோர் செல்வம் என்பது சேர்ந்தோர்*
*புன்கண் அஞ்சும் பண்பின்*
*மென்கண் செல்வஞ் செல்வமென் பதுவே (நற். 210)*

தோழி தலைமகனை நெருங்கிச் சொல்லுவாளாய் வாயில் நேர்ந்தது. 606

## ஆலங்குடி வங்கனார்

*முயப்பிடிச் செவியின் அன்ன பாசடைக்*
*கயக்கணக் கொக்கின் கூம்புமுகை அன்ன*
*கணைக்கால் ஆம்பல் அமிழ்துநாறு தண்போது*
*குணக்குத் தோன்று வெள்ளியின் இருட்கெடவிரியும்*
*கயற்கணங் கலித்த பொய்கை ஊர*
*முனிவில் பரத்தையை எற்றுறந்து அருளாய்*
*நனிபுலம்பு அலைத்த வெல்லை நீங்கப்*
*புதுவறங் கூர்ந்த செறுவின் தண்ணென*
*மலிபுனல் பரத்தந் தாஅங்கு*
*இனிதே தெய்யநின் காணுங் காலே (நற். 230)*

தோழி வாயின் மறுத்தது. 607

## பரணர்

*சுடர்த்தொடிக் கோமகள் சினந்தென அதனெதிர்*
*மடத்தகை ஆயம் கைதொழு தாஅங்கு*
*உறுகால் ஒற்ற ஒல்கி ஆம்பல்*
*தாமரைக்கு இறைஞ்சும் தண்டுறை யூரன்*
*சிறுவளை விலையெனப் பெருந்தேர் பண்ணிஎம்*
*முன்கடை நிறீஇச் சென்றிசி னோனே*
*நீயும், தேரொடு வந்து பேர்தல் செல்லாது*
*நெய்வார்ந் தன்ன துய்யடங்கு நரம்பின்*

*இரும்பாண் ஒக்கல் தலைவன் பெரும்புண்*
*ஏஎர் தழும்பன் ஊணூர் ஆங்கண்*
*பிச்சைசூழ் பெருங்களிறு போலஎம்*
*அட்டில் ஓலை தொட்டனை நின்மே* (நற். 300)

வாயின் மறுத்தது. 608

## பரணர்

*விளக்கின் அன்ன சுடர்விடு தாமரைக்*
*களிற்றுச்செவி அன்ன பாசடை தயங்க*
*உண்துறை மகளிர் இரியக் குண்டுநீர்*
*வாளை பிறழும் ஊரற்கு நாளை*
*மகட்கொடை யெதிர்ந்த மடங்கெழு பெண்டே*
*தொலைந்த நாவின் உலைந்த குறுமொழி*
*உடன்பட் டோராத் தாயரோ டொழிபுடன்*
*சொல்லலை கொல்லோ நீயே வல்லைக்*
*களிறுபெறு வல்சிப் பாணன் கையதை*
*வள்ளுயிர்த் தண்ணுமை போல*
*உள்யாதும் இல்லதோர் போர்வையஞ் சொல்லே* (நற். 310)

வாயிலாகப் புக்க விறலியைத் தோழி சொல்லியது. 609

## ஆலங்குடி வங்கனார்

*தடமருப்பு எருமைப் பிணர்ச்சுவல் இரும்போத்து*
*மடநடை நாரைப் பல்இனம் இரிய*
*நெடுநீர்த் தண்கயந் துடுமெனப் பாய்ந்து*
*நாள்தொழில் வருத்தம் வீடச் சேட்சினை*
*இருள்புனை மருதின் இன்னிழல் வதியும்*
*யாணர் ஊரநின் மாணிழை மகளிரை*
*எம்மனைத் தந்துநீ தழீஇயினும் அவர்தம்*
*புன்மனத்து உண்மையோ அரிதே அவரும்*
*பைந்தொடி மகளிரொடு சிறுவர்ப் பயந்து*

*நன்றி சான்ற கற்போடு*
*எம்பா டாதல் அதனினும் அரிதே* (நற். 330)

தோழி தலைமகனை வாயின் மறுத்தது. 610

## ஓரம்போகியார்

*முழவுமுகம் புலர்ந்து முறையின் ஆடிய*
*விழவொழி களத்த பாவை போல*
*நெருநைப் புணர்ந்தோர் புதுநலம் வௌவி*
*இன்றுதரு மகளிர் மென்தோள் பெறீஇயர்*
*சென்றீ பெரும சிறக்கநின் பரத்தை*
*பல்லோர் பழித்தல் நாணி வல்லே*
*காழிற் குத்திக் கசிந்தவர் அலைப்பக்*
*கையிடை வைத்து மெய்யிடைத் திமிரும்*
*முனையுடைக் கவளம் போல நனிபெரிது*
*உற்றநின் விழுமம் உவப்பேன்*
*மற்றுங் கூடும் மனைமடி துயிலே* (நற். 360)

பரத்தையிற்பிரிந்த தலைமகனைத் தோழி தலைமகள் குறிப்பறிந்து வாயில் மறுத்தது. 611

## கூடலூர்ப் பல்கண்ணனார்

*நெய்யுங் குய்யும் ஆடி மையொடு*
*மாசுபட் டன்றே கலிங்கமும் தோளும்*
*திதலை மென்முலைத் தீம்பால் பிலிற்றப்*
*புதல்வற் புல்லிப் புனிறுநா றும்மே*
*வாலிழை மகளிர் சேரித் தோன்றுந்*
*தேரோற்கு ஒத்தனெம் அல்லேம் அதனால்*
*பொன்புரை நரம்பின் இன்குரல் சீறியாழ்*
*எழாஅல் வல்லை ஆயினுந் தொழாஅல்*
*கொண்டுசெல் பாணநின் தண்துறை யூரனைப்*
*பாடுமனைப் பாடல் கூடாது நீடுநிலைப்*
*புரவியும் பூணிலை முனிகுவ*

*விரகில மொழியல்யாம் வேட்டதில் வழியே (நற். 380)*

பாணற்குத் தோழி வாயில் மறுத்தது. 612

## மதுரை மருதனிளநாகனார்

*மணிநிற மலர்ப்பொய்கை மகிழ்ந்தாடும் அன்னந்தன்*
*அணிமிகு சேவலை அகலடை மறைத்தெனக்*
*கதுமெனக் காணாது கலங்கியம் மடப்பெடை*
*மதிநிழல் நீருட்கண் டதுவென உவந்தோடித்*
*துன்னத்தன் எதிர்வரூஉந் துணைகண்டு மிகநாணிப்*
*பன்மல ரிடைப்புகூஉம் பழனஞ்சேர் ஊரகேள்;*
*நலம்நீப்பத் துறந்தெம்மை நல்காய்நீ விடுதலிற்*
*பலநாளும் படாதகண் பாயல்கொண் டியைபவால்*
*துணைமலர்க் கோதையார் வைகலும் பாராட்ட*
*மணமனைத் ததும்புநின் மணமுழவந் தெடுப்புமே;*
*அகலநீ துறத்தலின் அழுதோவா உண்கணெம்*
*புதல்வனை மெய்தீண்டப் பொருந்துதல் இயைபவால்*
*நினக்கொத்த நல்லாரை நெடுநகர்த் தந்துநின்*
*தமர்பாடுந் துணங்கையுள் அரவம்வந் தெடுப்புமே;*
*வாராய்நீ துறத்தலின் வருந்திய எமக்காங்கே*
*நீரிதழ் புலராக்கண் இமைகூம்ப இயைபவால்*
*நேரிழை நல்லாரை நெடுநகர்த் தந்துநின்*
*தேர்பூண்ட நெடுநன்மான் தெண்மணிவந் தெடுப்புமே;*
*எனவாங்கு,*
*மெல்லியான் செவிமுதல் மேல்வந்தான் காலைபோல்*
*எல்லாந் துயிலோ எடுப்புக நின்பெண்டிர்*
*இல்லின் எழீஇய யாழ்தழீஇக் கல்லாவாய்ப்*
*பாணன் புகுதராக் கால் (கலி. 70)*

பரத்தையிற் பிரிந்துவந்த தலைவன் தோழியை வாயில் வேண்ட அவள் வாயினேர்வாள் நெருங்கிக் கூறியது. 613

## மையோடக்கோவனார்

திரையிரும் பனிப்பௌவம் செவ்விதா வறமுகந்
துரவுரு முடன்றார்ப்ப ஊர்பொறை கொள்ளாது
கரையுடை குளமெனக் கழன்றுவான் வயிறழிபு
வரைவரை தொடுத்த வயங்குவெள் ளருவி
இரவிருள் பகலாக இடமரிது செலவென்னாது
வலனிரங்கு முரசிற் றென்னவ ருள்ளிய
நிலனுற நிமிர்தானை நெடுநிரை நிவப்பன்ன
பெயலாற் பொலிந்து பெரும்புனல் பலநந்த
நலனந்த நாடணி நந்தப் புலனந்த
வந்தன்று வையைப் புனல்;
நளியிருஞ் சோலை நரந்தந் தாஅய்
ஒளிர்சினை வேங்கை விரிந்தவிண ருதிரலொடு
துளியி னுழந்த தோய்வருஞ் சிமைதொறும்
வளிவாங்கு சினைய மாமரம் வேர்கீண்டு
உயர்ந்துழி யுள்ளன பயம்பிடைப் பரப்பி
உழவர் களிதூங்க முழவு பணைமுரல
ஆட லறியா அரிவை போலவும்
ஊட லறியா உவகையள் போலவும்
வேண்டுவழி நடந்து தாங்குதடை பொருது
விதியாற்றான் ஆக்கிய மெய்க்கலவை போல
பொதுநாற்ற முள்ளுட் கரந்து புதுநாற்றம்
செய்யின்றே செம்பூம் புனல்;
கவிழ்ந்த புனலிற் கயந்தண் கழுநீர்
அவிழ்ந்த மலர்மீ துற்றென வொருசார்
மாதர் மடநல்லார் மணலி னெழுதிய
பாவை சிதைத்த தெனவழ வொருசார்
அகவய லிளநெல் அரிகாற் சூடு
தொகுபுனல் பரந்தெனத் துடிபட வொருசார்
ஓதஞ் சுற்றிய தூரென வொருசார்
கார்தூம் பற்றது வானென வொருசார்

பாடுவார் பாக்கங் கொண்டென
ஆடுவார் சேரியடைந்தெனக்
கழனிவந்து கால்கோத்தெனப்
பழனவாளை பாளையுண்டென
வித்திடுபுல மேடாயிற்றென
உணர்த்த வுணரா ஒள்ளிழை மாதரைப்
புணர்த்திய விச்சத்துப் பெருக்கத்திற் றுனைந்து
சினைவளர் வாளையிற் கிளையொடு கெழீஇப்
பழன வுழவர் பாய்புனற் பரத்தந்
திருவரை புரையுமா றிருகரை யேமத்து
வரைபுரை யுருவி னுரைபல சுமந்து
பூவேய்ந்து பொழில்பரந்து
துனைந்தாடுவா ராய்கோதையர்
அலர்தண்டா ரவர்காதிற்
றளிர் செரீஇக் கண்ணி பறித்துக்
கைவளை யாழி தொய்யகம் புனைதுகில்
மேகலை காஞ்சி வாகு வலயம்
எல்லாங் கவரு மியல்பிற்றாய்த் தென்னவன்
ஒன்னா ருடைபுலம் புக்கற்றான் மாறட்ட
தானையான் வையை வனப்பு;
புரிந்த தகையினான் யாறாடு வாருள்
துரந்து புனல்தூவத் தூமலர்க் கண்கள்
அமைந்தன வாங்க ணவரு ளொருத்தி
கைபுதைஇ யவளை
ஏக்கழுத்து நாணாற் கரும்பி னணைமென்றோள்
போக்கிச் சிறைபிடித்தா ளோர்பொன்னங் கொம்பு
பரிந்தவளைக் கைப்பிணை நீக்குவான் பாய்வாள்
இரும்பீர் வடியொத்து மைவிளங்குங் கண்ணொளியாற்
செம்மைப் புதுப்புனல் சென்றிரு ளாயிற்றே
வையைப் பெருக்கு வடிவு;
விரும்பிய வீரணி மெய்யீரந் தீரச்
சுரும்பார்க்குஞ் சூர்நறா வேந்தினாள் கண்ணெய்தல்

பேர்மகிழ் செய்யும் பெருநறாப் பேணியவே
கூர்நறா வார்ந்தவள் கண்;
கண்ணியல் கண்டேத்திக் காரிகைநீர் நோக்கினைப்
பாணா தரித்துப் பலபாட வப்பாட்டுப்
பேணா தொருத்தி பேதுற வாயிடை
என்னை வருவ தெனக்கென் றினையா
நன்னெமர் மார்ப னடுக்குற நண்ணிச்
சிகைகிடந்த வூடலிற் செங்கண்சேப் பூர
வகைதொடர்ந்த வாடலு ணல்லவர் தம்முட்
பகைதொடர்ந்து கோதை பரியூஉ நனிவெகுண்
டியாறாடு மேனி யணிகண்ட தன்னன்பன்
சேறாடுமேனி திருநிலத் துய்ப்பச் சிரமிதித்துத்
தீர்வில தாகச் செருவுற்றாள் செம்புனல்
ஊருட னாடுங் கடை;
புரிநரம் பின்கொளைப் புகல்பாலை யேழும்
எழூஉப்புணர் யாழு மிசையுங் கூடக்
குழலளந்து நிற்ப முழவெழுந் தார்ப்ப
மன்மகளிர் சென்னிய ராடல் தொடங்கப்
பொருதிழி வார்புனற் பொற்பஃ
துருமிடி சேர்ந்த முழக்கம் புரையும்
திருமருத முன்றுறை சேர்புனற்கண் டுய்ப்பார்
தாமந் தலைபுனை பேஎ நீர்வையை
நிற்பயம் பாடி விடிவுற் றேமாக்க
நிற்படிந்து நீங்காமை யின்றுபுணர்ந் தெனவே (பரி. 7)

தலைமகன் தலைமகளோடு புனலாடினானெனக்கேட்டு இன்புற்ற செவிலித்தாய் தோழியை நீங்களாடிய புனலணியின்பங் கூறுகென்றாட்கு அப் புனலணியின்பமும் பல்வேறு வகைப்பட்ட இன்பமும் தலைமகன் காதன்மையும் கூறி, என்றும் இந்த நீரணியின்பம் பெறுக யாமென்றது. 614

## நல்லழிசியார்

கரையே, கைவண் தோன்றல் ஈகை போன்மென
மைபடு சிலம்பிற் கறியொடுஞ் சாந்தொடும்

நெய்குடை தயிரி னுரையொடும் பிறவொடும்
எவ்வயி னானு மீதுமீ தழியும்;
துறையே, முத்துநேர்பு புணர்காழ் மத்தக நித்திலம்
பொலம்புனை யவிரிழை கலங்கலம் புனன்மணி
வலஞ்சுழி யுந்திய திணைபிரி புதல்வர்
கயந்தலை முச்சிய முஞ்சமொடு தழீஇத்
தத்தந் துணையோ டொருங்குட னாடும்
தத்தரிக் கண்ணார் தலைத்தலை வருமே;
செறுவே, விடுமலர் சுமந்து பூநீர் நிறைதலிற்
படுகண் இமிழ்கொளை பயின்றனர் ஆடும்
களிநாள் அரங்கின் அணிநலம் புரையும்;
காவே, சுரும்பிமிர் தாதொடு தலைத்தலை மிசூஉ
நரந்த நறுமலர் நன்களிக் கும்மே
கரைபொழுகு தீம்புனற் கெதிர்விருந் தயர்வபோற்
கானலங் காவும் கயமுந் துருத்தியுந்தேன்
தேனுண்டு பாடத் திசைதிசைப் பூநலம்
பூத்தன்று வையை வரவு;
சுருங்கையின் ஆயத்தார் சுற்று மெறிந்து
குரும்பை முலைப்பட்ட பூநீர் துடையாள்
பெருந்தகை மீளி வருவானைக் கண்டே
இருந்துகிற் றானையி னொற்றிப் பொருந்தலை
பூத்தன ணீங்கெனப் பொய்யாற்றால் தோழியர்
தோற்றமோர் ஒத்த மலர்கமழ் தண்சாந்தின்
நாற்றத்திற் போற்றி நகையொடும் போத்தந்
திருங்கடற் கூங்கிவரும் யாறெனத் தங்கான்
மகிழக் களிப்பட்ட தேன்றேறன் மாற்றிக்
குருதி துடையாக் குறுகி மருவினியர்
பூத்தன ணங்கை பொலிகென நாணுதல்
வாய்த்தன்றால் வையை வரவு;
மலையின் இழியருவி மல்கிணர்ச் சார்ச்சார்க்
கரைமரஞ் சேர்ந்து கவினி மடவார்

நனைசேர் கதுப்பினுள் தண்போது மைந்தர்
மலர்மார்பிற் சோர்ந்த மலரிதழ் தாஅய்
மீனாரம் பூத்த வியன்கங்கை நந்திய
வானம் பெயர்ந்த மருங்கொத்தல் எஞ்ஞான்றும்
தேனிமிர் வையைக் கியல்பு;
கள்ளே புனலே புலவியிம் மூன்றினும்
ஒள்ளொளி சேய்தா ஒளிகிளருண் கட்கெண்டை
பல்வரி வண்டினம் வாய்சூழ் கவினொடும்
சென்னீர் வீவயற் றேன்சோரப் பன்னீர்
அடுத்தடுத் தாடுவார் புல்லக் குழைந்து
வடுப்படு மான்மதச் சாந்தார் அகலத்தான்
எடுத்தவேய் எக்கி நூக்குயர்பு தாக்கத்
தொடுத்ததேன் சோரும் வரைபோலுந் தோற்றம்
கொடித்தேரான் வையைக் கியல்பு;
வரையார்க்கும் புயல்கரை
திரையார்க்குமித் தீம்புனல்
கண்ணியர் தாரர் கமழ்நறுங் கோதையர்
பண்ணிய வீகைப் பயன்கொள்வா னாடலால்
நாணா ளுறையு நறுஞ்சாந்துங் கோதையும்
பூத்த புகையும் அவியும் புலராமை
மறாஅற்க வான மலிதந்து நீத்தம்
அறாஅற்க வையை நினக்கு (பரி. 16)

காதற்பரத்தையுடன் புனலாடிய தலைமகன் தோழியை வாயில்வேண்ட அவள் புனலாடியவாறு கூறி வாயில் மறுத்தது. 615

# நெய்தல் திணை

## அம்மூவனார்

*வான்கடற் பரப்பில் தூவற் கெதிரிய*
*மீன்கண் டன்ன மெல்லரும் பூழ்த்த*
*முடவுமுதிர் புன்னைத் தடவுநிலை மாச்சினைப்*
*புள்ளிறை கூரும் மெல்லம் புலம்ப*
*நெய்த லுண்கண் பைதல கலுழப்*
*பிரித லெண்ணினை யாயி னன்று*
*மரிதுதுற் றனையாற் பெரும வுரிதினிற்*
*கொண்டாங்குப் பெயர்தல் வேண்டுங் கொண்டலொடு*
*குரூஉத்திரைப் புணரி யுடைதரு மெக்கர்ப்*
*பழந்திமில் கொன்ற புதுவலைப் பரதவர்*
*மோட்டுமண லடைகரைக் கோட்டுமீன் கொண்டி*
*மணங்கமழ் பாக்கத்துப் பகுக்கும்*
*வளங்கெழு தொண்டி யன்னவிவ ணலனே* **(அகம். 10)**

இரவுக்குறி வந்து தலைமகளைக் கண்ணுற்று நீங்குந் தலைமகனை எதிர்ப்பட்டுநின்று தோழி சொல்லியது. 616

## உலோச்சனார்

*பெருநீ ரழுவத் தெந்தை தந்த*
*கொழுமீ னுணங்கற் படுபுள் ளோப்பி*
*யெக்கர்ப் புன்னை யின்னிழ லசைஇச்*
*செக்கர் ஞெண்டின் குண்டளை கெண்டி*
*ஞாழ லோங்குசினைத் தொடுத்த கொடுங்கழித்*
*தாழை வீழ்கயிற் றூச றூங்கிக்*
*கொண்ட லிடுமணற் குரவை முனையின்*
*வெண்டலைப் புணரி யாயமொ டாடி*
*மணிப்பூம் பைந்தழை தைஇ யணித்தகப்*
*பல்பூங் கான லல்கினம் வருதல்*

*கல்வை நல்லணங் குற்ற விவ்வூர்க்*
*கொடிதறி பெண்டிர் சொற்கொண் டன்னை*
*கடிகொண் டனளே தோழி பெருந்துறை*
*எல்லையு மிரவு மென்னாது கல்லென*
*வலவ னாய்ந்த வண்பரி*
*நிலவுமணற் கொட்குமோர் தேருண் டெனவே* (**அகம்.** *20*)

பகற்குறி வந்த தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தலைமகன் கேட்பச் சொல்லியது. 617

## முடங்கிக்கிடந்த நெடுஞ்சேரலாதன்

*நெடுங்கயிறு வலந்த குறுங்க ணவ்வலைக்*
*கடல்பா டவிய வினமீன் முகந்து*
*துணைபுண ருவகையர் பரத மாக்க*
*ளிளையரு முதியருங் கிளையுடன் துவன்றி*
*யுப்பொ யுமண ரருந்துறை போக்கு*
*மொழுகை நோன்பக டொப்பக் குழீஇ*
*யயிர்திணி யடைகரை யொலிப்ப வாங்கிப்*
*பெருங்களந் தொகுத்த வுழவர் போல*
*விரந்தோர் வருங்கல மல்க வீசிப்*
*பாடுபல வமைத்துக் கொள்ளை சாற்றிக்*
*கோடுயர் திணிமணற் றுஞ்சுந் துறைவ*
*பெருமை யென்பது கெடுமோ வொருநாண்*
*மண்ணா முத்த மரும்பிய புன்னைத்*
*தண்ணருங் கானல் வந்துநும்*
*வண்ண மெவனோ வென்றனிர் செலினே* (**அகம்.** *30*)

பகற்குறிவந்த தலைமகற்குத் தோழி சொல்லியது. 618

## கருவூர்ப் பூதஞ்சாத்தனார்

*கடல்பா டவிந்து தோணி நீங்கி*
*நெடுநீ ரிருங்கழிக் கடுமீன் கலிப்பினும்*

வெவ்வாய்ப் பெண்டிர் கௌவை தூற்றினு
மாணிழை நெடுந்தேர் பாணி நிற்பப்
பகலு நம்வயி னகலா னாகிப்
பயின்றுவரு மன்னே பனிநீர்ச் சேர்ப்ப
னினியே மணப்பருங் காமந் தணப்பநீந்தி
வாரா தோர்நமக் கியாஅ ரென்னாது
மல்லன் மூதூர் மறையினை சென்று
சொல்லி னெவனோ பாண வெல்லி
மனைசேர் பெண்ணை மடிவா யன்றி
றுணையொன்று பிரியினுந் துஞ்சா காணெனக்
கண்ணிறை நீர்கொடு கரக்கு
மொண்ணுத லரிவையா னென்செய்கோ வெனவே (அகம். 50)

தோழி பாணனுக்குச் சொல்லியது. 619

## குடவாயிற் கீரத்தனார்

பெருங்கடற் பரப்பில் சேயிறால் நடுங்கக்
கொடுந்தொழில் முகந்த செங்கோல் அவ்வலை
நெடுந்திமில் தொழிலொடு வைகிய தந்தைக்கு
உப்புநொடை நெல்லின் மூரல் வெண்சோறு
அயிலை துழந்த அம்புளிச் சொரிந்து
கொழுமீன் தடியொடு குறுமகள் கொடுக்கும்
திண்டேர்ப் பொறையன் தொண்டி அன்னஎம்
ஒண்டொடி ஞெமுக்கா தீமோ தெய்ய
ஊதை ஈட்டிய உயர்மணல் அடைகரைக்
கோதை ஆயமொடு வண்டல் தைஇ
ஓரை ஆடினும் உயங்குநின் ஒளியெனக்
கொன்னுஞ் சிவப்போள் காணின் வென்வேல்
கொற்றச் சோழர் குடந்தை வைத்த
நாடுதரு நிதியினுஞ் செறிய
அருங்கடிப் படுக்குவள் அறனில் யாயே (அகம். 60)

தலைமகற்குத் தோழி செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது. 620

## மதுரைத் தமிழ்க் கூத்தனார் கடுவன்மள்ளனார்

*கொடுந்திமிற் பரதவர் வேட்டம் வாய்த்தென*
*இரும்புலாக் கமழும் சிறுகுடிப் பாக்கத்துக்*
*குறுங்கண் அவ்வலைப் பயம்பா ராட்டிக்*
*கொழுங்கண் அயிலை பகுக்குந் துறைவன்*
*நம்மொடு புணர்ந்த கேண்மை முன்னே*
*அலர்வாய்ப் பெண்டிர் அம்பல் தூற்றப்*
*பலருமாங் கறிந்தனர் மன்னே இனியே*
*வதுவை கூடிய பின்றைப் புதுவது*
*பொன்வீ ஞாழலொடு புன்னை வரிக்கும்*
*கானலம் பெருந்துறைக் கழனி மாநீர்ப்*
*பாசடைக் கலித்த கணைக்கால் நெய்தல்*
*விழவணி மகளிர் தழையணிக் கூட்டும்*
*வென்வேற் கவுரியர் தொன்முது கோடி*
*முழங்கிரும் பௌவம் இரங்கும் முன்றுறை*
*வெல்போர் இராமன் அருமறைக் கவித்த*
*பல்வீழ் ஆலம் போல*
*ஒலியவிந் தன்றிவ் அழுங்கல் ஊரே* (அகம். 70)

தலைமகன் வரைவு மலிந்தமை தோழி தலைமகட்குச் சொல்லியது. 621

## மருங்கூர்கிழார் பெருங்கண்ணனார்

*கொடுந்தாள் முதலையொடு கோட்டுமீன் வழங்கும்*
*இருங்கழி யிட்டுச் சுரம்நீந்தி யிரவின்*
*வந்தோய் மன்ற தண்கடற் சேர்ப்ப*
*நினக்கெவன் அரியமோ யாமே எந்தை*
*புணர்திரைப் பரப்பகம் துழைஇத் தந்த*
*பன்மீன் உணங்கற் படுபுள் ஓப்புதும்*
*முண்டகம் கலித்த முதுநீர் அடைகரை*

*ஓண்பல் மலர கவட்டிலை அடும்பின்*
*செங்கேழ் மென்கொடி ஆழி அறுப்ப*
*இனமணிப் புரவி நெடுந்தேர் கடைஇ*
*மின்னிலைப் பொலிந்த விளங்கிணர் அவிழ்பொன்*
*தண்நறும் பைந்தா துறைக்கும்*
*புன்னையங் கானல் பகல்வந் தீமே* **(அகம். 80)**

இரவுக் குறிவந்த தலைமகற்குத் தோழி சொல்லியது. 622

## மதுரை மருதனிளநாகனார்

*மூத்தோ ரன்ன வெண்டலைப் புணரி*
*இளையோ ராடும் வரிமனை சிதைக்கும்*
*தளையவிழ் தாழைக் கானலம் பெருந்துறைச்*
*சில்செவித் தாகிய புணர்ச்சி அலரெழ*
*இல்வயின் செறித்தமை அறியாய் பன்னாள்*
*வருமுலை வருத்தா அம்பகட்டு மார்பில்*
*தெருமரல் உள்ளமொடு வருந்தும் நின்வயின்*
*நீங்கு கென்றியான் யாங்ஙனம் மொழிகோ*
*அருந்திறற் கடவுள் செல்லூர்க் குணாஅது*
*பெருங்கடல் முழக்கிற் றாகி யாணர்*
*இரும்பிடம் படுத்த வடுவுடை முகத்தர்*
*கடுங்கண் கோசர் நியமம் ஆயினும்*
*உறுமெனக் கொள்ளுநர் அல்லர்*
*நறுநுதல் அரிவை பாசிழை விலையே* **(அகம். 90)**

பகற்குறி வந்து கண்ணுற்று நீங்கும் தலைமகனைத் தோழி எதிர்ப்பட்டுநின்று இற்செறிப்பு அறிவுறீஇயது. 623

## உலோச்சனார்

*அரையுற் றமைந்த ஆரம் நீவிப்*
*புரையப் பூண்ட கோதை மார்பினை*
*நல்லகம் வடுக்கொள முயங்கி நீவந்*
*தெல்லினிற் பெயர்தல் எனக்குமா ரினிதே*
*பெருந்திரை முழக்கமொ டியக்கவிந் திருந்த*

*கொண்டல் இரவின் இருங்கடல் மடுத்த*
*கொழுமீன் கொள்பவர் இருள்நீங் கொண்சுடர்*
*ஓடாப் பூட்கை வேந்தன் பாசறை*
*ஆடியல் யானை அணிமுகத் தசைத்த*
*ஓடை ஒண்சுடர் ஒப்பத் தோன்றும்*
*பாடுநர்த் தொடுத்த கைவண் கோமான்*
*பரியுடை நற்றேர்ப் பெரியன் விரியிணர்ப்*
*புன்னையங் கானற் புறந்தை முன்றுறை*
*வம்ப நாரை யினனொலித் தன்ன*
*அம்பல் வாய்த்த தெய்ய தண்புலர்*
*வைகுறு விடியல் போகிய எருமை*
*நெய்தலம் புதுமலர் மாந்தும்*
*கைதையம் படப்பைஎம் மழுங்க லூரே* **(அகம். 100)**

தோழி வரைவுகடாயது. 624

## போந்தைப் பசலையார்

*அன்னை அறியினும் அறிக அலர்வாய்*
*அம்மென் சேரி கேட்பினுங் கேட்க*
*பிறிதொன் றின்மை அறியக் கூறிக்*
*கொடுஞ்சுழிப் புகார்அத் தெய்வம் நோக்கிக்*
*கடுஞ்சூள் தருகுவல் நினக்கே கானல்*
*தொடலை யாயமொடு கடலுடன் ஆடியுஞ்*
*சிற்றில் இழைத்தும் சிறுசோறு குவைஇயும்*
*வருந்திய வருத்தம் தீர யாஞ்சிறி*
*திருந்தன மாக எய்த வந்து*
*தடமென் பணைத்தோள் மடநல் லீரே*
*எல்லும் எல்லின் றசைவுமிக உடையேன்*
*மெல்லிலைப் பரப்பின் விருந்துண் டியானுமிக்*
*கல்லென் சிறுகுடித் தங்கின்மற் றெவனோ*
*எனமொழிந் தனனே ஒருவன் அவற்கண்*
*டிறைஞ்சிய முகத்தெம் புறஞ்சேர்பு பொருந்தி*
*இவைநுமக் குரிய வல்ல இழிந்த*

*கொழுமீன் வல்சி என்றனம் இழுமென*
*நெடுங்கொடி நுடங்கும் நாவாய் தோன்றுவ*
*காணா மோவெனக் காலிற் சிதையா*
*நில்லாது பெயர்ந்த பல்லோ ருள்ளும்*
*என்னே குறித்த நோக்கமொடு நன்னுதால்*
*ஒழிகோ யானென அழிதகக் கூறி*
*யான்பெயர் கென்ன நோக்கித் தான்தன்*
*நெடுந்தேர்க் கொடிஞ்சி பற்றி*
*நின்றோன் போலும் இன்றுமென் மகட்கே* **(அகம். 110)**

தோழி செவிலித்தாய்க்கு அறத்தொடு நின்றது. 625

## நக்கீரனார்

*நெடுவேள் மார்பின் ஆரம் போலச்*
*செவ்வாய் வானந் தீண்டிமீன் அருந்தும்*
*பைங்காற் கொக்கின் நிரைபறை யுகப்ப*
*எல்லை பைப்பயக் கழிப்பிக் குடவயின்*
*கல்சேர்ந் தன்றே பல்கதிர் ஞாயிறு*
*மதரெழில் மழைக்கண் கலுழ இவளே*
*பெருநாண் அணிந்த சிறுமென் சாயல்*
*மாணலம் சிதைய ஏங்கி யானாது*
*அழல்தொடங் கினளே பெரும அதனால்*
*கழிச்சுறா எறிந்த புட்டாள் அத்திரி*
*நெடுநீர் இருங்கழிப் பரிமெலிந் தசைஇ*
*வல்வில் இளையரொ டெல்லிச் செல்லாது*
*சேர்ந்தனை செலினே சிதைகுவ துண்டோ*
*பெண்ணை ஓங்கிய வெண்மணற் படப்பை*
*அன்றில் அகவும் ஆங்கண்*
*சிறுகுரல் நெய்தலெம் பெருங்கழி நாட்டே* **(அகம். 120)**

தோழி பகற்குறிக்கண் தலைமகளை இடத்துய்த்துவந்து தலைமகனை எதிர்ப்பட்டுநின்று சொல்லியது.
626

## குறுவழுதியார்

*பின்னுவிட நெறித்த கூந்தலும் பொன்னென*
*வாகத் தரும்பிய சுணங்கும் வம்புவிடக்*
*கண்ணுருத் தெழுதரு முலையு நோக்கி*
*யெல்லினை பெரிதெனப் பன்மாண் கூறிப்*
*பெருந்தோ ளடைய முயங்கி நீடுநினைந்*
*தருங்கடிப் படுத்தனள் யாயே கடுஞ்செலல்*
*வாட்சுறா வழங்கும் வளைமேய் பெருந்துறைக்*
*கனைத்த நெய்தற் கண்போன் மாமலர்*
*நனைத்த செருந்திப் போதுவா யவிழ*
*மாலை மணியிதழ் கூம்பக் காலைக்*
*கண்ணாறு காவியொடு கண்ணென மலருங்*
*கழியுங் கானலுங் காண்டொறும் பலபுலந்து*
*வாரார் கொல்லெனப் பருவருந்*
*தாரார் மார்பநீ தணந்த ஞான்றே* **(அகம். 150)**

பகற்குறிவந்து கண்ணுற்று நீங்குந் தலைமகனைத் தோழி தலைமகளை இடத்துய்த்துவந்து செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது. 627

## குமுழி ஞாழலார் நப்பசலையார்

*ஒடுங்கீ ரோதி நினக்கு மற்றோ*
*நடுங்கின் றளித்தெ னிறையி னெஞ்சம்*
*அடும்புகொடி சிதைய வாங்கிக் கொடுங்கழிக்*
*குப்பை வெண்மணற் பக்கஞ் சேர்த்தி*
*நிறைச்சூல் யாமை மறைத்தீன்று புதைத்த*
*கோட்டுவட் டுருவின் புலவுநாறு முட்டைப்*
*பார்ப்பிட னாகு மளவைப் பகுவாய்க்*
*கணவ னோம்புங் கானலஞ் சேர்ப்பன்*
*முள்ளுறிற் சிறத்த லஞ்சி மெல்ல*
*வாவுடை மையின் வன்பிற் காட்டி*
*யேத்தொழி னவின்ற வெழினடைப் புரவி*
*செழுநீர்த் தண்கழி நீந்தலி னாழி*
*நுதிமுகங் குறைந்த பொதிமுகிழ் நெய்தல்*

*பாம்புயர் தலையிற் சாம்புவன நிவப்ப*
*விரவந் தன்றாற் றிண்டேர் கரவா*
*தொல்லென வொலிக்கு மிளையரோடு வல்வா*
*யரவச் சீறூர் காணப்*
*பகல்வந் தன்றாற் பாய்பரி சிறந்தே* **(அகம். 160)**

தோழி வரைவு மலிந்து சொல்லியது. 628

## கருவூர்க் கண்ணம்பாளனார்

*நகைநனி யுடைத்தாற் றோழி தகைமிகக்*
*கோதை யாயமொடு குவவுமண லேறி*
*வீததை கானல் வண்ட லயரக்*
*கதழ்பரித் திண்டேர் கடைஇ வந்து*
*தண்கயத் தமன்ற வொண்பூங் குவளை*
*யரும்பலைத் தியற்றிய சுரும்பார் கண்ணி*
*பின்னுப்புறந் தாழக் கொன்னே சூட்டி*
*நல்வர விளமுலை நோக்கி நெடிதுநினைந்து*
*நில்லாது பெயர்ந்தன னொருவ னதற்கே*
*புலவுநா றிருங்கழி துழைஇப் பலவுடன்*
*புள்ளிறை கொண்ட முள்ளுடை நெடுந்தோட்டுத்*
*தாழை மணந்து ஞாழலொடு கெழீஇப்*
*படப்பை நின்ற முடத்தாட் புன்னைப்*
*பொன்னேர் நுண்டாது நோக்கி*
*யென்னும் நோக்குமிவ் வழுங்க லூரே* **(அகம். 180)**

இரந்து பின்னின்ற தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி தலைமகளைக் குறைநயப்பக் கூறியது. 629

## உலோச்சனார்

*திரையுழந் தசைஇய நிரைவளை ஆயமொடு*
*உப்பின் குப்பை ஏறி எற்பட*
*வருதிமில் எண்ணும் துறைவனொடு ஊரே*
*ஒருதன் கொடுமையின் அலர்பா டும்மே*
*அலமரல் மழைக்கண் அமர்ந்து நோக்காள்*

*அலையல் வாழிவேண் டன்னை உயர்சிமைப்*
*பொதும்பில் புன்னைச் சினைசேர்பு இருந்த*
*வம்ப நாரை இரிய ஒருநாள்*
*பொங்குவரல் ஊதையொடு புணரி அலைப்பவும்*
*உழைக்கடல் வழங்கலும் உரியன் அதன்தலை*
*இருங்கழிப் புகாஅர் பொருந்தத் தாக்கி*
*வயச்சுறா எறிந்தென வலவன் அழிப்ப*
*எழில்பயங் குன்றிய சிறையழி தொழில*
*நிரைமணிப் புரவி விரைநடை தவிர*
*இழுமென் கானல் விழுமணல் அசைஇ*
*ஆய்ந்த பரியன் வந்திவண்*
*மான்ற மாலைச் சேர்ந்தன்றோ இலனே* **(அகம். 190)**

தோழி செவிலித்தாய்க்கு அறத்தொடு நின்றது. 630

## உலோச்சனார்

*நிலாவின் இலங்கு மணல்மலி மறுகின்*
*புலாவஞ் சேரிப் புல்வேய் குரம்பை*
*ஊரென வுணராச் சிறுமையொடு நீருடுத்து*
*இன்னா உறையுட்டு ஆயினும் இன்பம்*
*ஒருநாள் உறைந்திசி னோர்க்கும் வழிநாள்*
*தம்பதி மறக்கும் பண்பின் எம்பதி*
*வந்தனை சென்மோ வளைமேய் பரப்ப*
*பொம்மற் படுதிரை கம்மென உடைதரும்*
*மரனோங்கு ஒருசிறைப் பலபா ராட்டி*
*எல்லை எம்மொடு கழிப்பி எல்லுற*
*நல்தேர் பூட்டலும் உரியீர் அற்றன்று*
*சேர்ந்தனிர் செல்குவி ராயின் யாமும்*
*எம்வரை அளவையிற் பெட்குவம்*
*நும்ஓப் பதுவோ உரைத்திசின் எமக்கே* **(அகம். 200)**

தலைமகள் குறிப்பறிந்த தோழி தலைமகற்குக் குறைநயப்பக் கூறியது. 631

## உலோச்சனார்

குறியிறைக் குரம்பைக் கொலைவெம் பரதவர்
எறியுளி பொருத ஏமுறு பெருமீன்
புண்ணுமிழ் குருதி புலவுக்கடல் மறுப்பட
விசும்பணி வில்லிற் போகிப் பசும்பிசிர்த்
திரைபயில் அழுவம் உழக்கி உரனழிந்து
நிரைதிமில் மருங்கில் படர்தருந் துறைவன்
பானாள் இரவில்நம் பணைத்தோள் உள்ளித்
தானிவண் வந்த காலை நம்மூர்க்
கானலம் பெருந்துறைக் கவின்பா ரராட்டி
ஆனாது புகழ்ந்திசி னோனே இனித்தன்
சாயல் மார்பிற் பாயல் மாற்றிக்
கைதையம் படுசினை கடுந்தேர் விலங்கச்
செலவரி தென்னும் என்பது
பலகேட் டனமால் தோழி நாமே (அகம். 210)

தோழி தலைமகன் சிறைப்புறமாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.

632

## மதுரை மருதனிளநாகனார்

ஊருஞ் சேரியும் உடனியைந் தலரெழத்
தேரொடு மறுகியும் பணிமொழி பயிற்றியும்
கெடாஅத் தீயின் உருகெழு செல்லூர்க்
கடாஅ யானைக் குழூஉச்சமந் ததைய
மன்மருங்கு அறுத்த மழுவாள் நெடியோன்
முன்முயன் றரிதினின் முடித்த வேள்விக்
கயிறரை யாத்த காண்டகு வனப்பின்
அருங்கடி நெடுந்தூண் போல யாவருங்
காண லாகா மாணெழி லாகம்
உள்ளுதொறும் பனிக்கும் நெஞ்சினை நீயே
நெடும்புற நிலையினை வருந்தனை யாயின்
முழங்குகட லோதங் காலைக் கொட்கும்

*பழம்பல் நெல்லின் ஊணூ ராங்கண்*
*நோலா இரும்புள் போல நெஞ்சமர்ந்து*
*காதன் மாறாக் காமர் புணர்ச்சியின்*
*இருங்கழி முகந்த செங்கோல் அவ்வலை*
*முடங்குபுற இறவோ டினமீன் செறிக்கும்*
*நெடுங்கதிர்க் கழனித் தண்சாய்க் கானத்து*
*யாணர்த் தண்பணை யுறுமெனக் கானல்*
*ஆய மாய்ந்த சாயிறைப் பணைத்தோள்*
*நல்லெழில் சிதையா வேமஞ்*
*சொல்லினித் தெய்யயாந் தெளியு மாறே* **(அகம். 220)**

இரவுக்குறிவந்து நீங்குந் தலைமகனை எதிர்பட்டுத் தோழி சொல்லியது. 633

## எழூஉப்பன்றி நாகன் குமரனார்

*செவ்வீ ஞாழற் கருங்கோட் டிருஞ்சினைத்*
*தனிப்பார்ப் புள்ளிய தண்பறை நாரை*
*மணிப்பூ நெய்தல் மாக்கழி நிவப்ப*
*இனிப்புலம் பின்றே கானலும் நளிகடற்*
*றிரைச்சுரம் உழந்த திண்டிமில் விளக்கிற்*
*பன்மீன் கூட்டம் என்னையர்க் காட்டிய*
*எந்தையுஞ் செல்லுமார் இரவே அந்தில்*
*அணங்குடைப் பனித்துறை கைதொழு தேத்தி*
*யாயும் ஆயமோ டயரும் நீயுந்*
*தேம்பாய் ஓதி திருநுதல் நீவிக்*
*கோங்கு முகைத்தன்ன குவிமுலை யாகத்து*
*இன்றுயில் அமர்ந்தனை யாயின் வண்டுபட*
*விரிந்த செருந்தி வெண்மணன் முடுக்கர்ப்*
*பூவேய் புன்னையந் தண்பொழில்*
*வாவே தெய்ய மணந்தனை செலற்கே* **(அகம். 240)**

தோழி இரவுக்குறி வந்த தலைமகற்குப் பகற்குறி நேர்ந்தது. 634

## சாகலாசனார்

*இருங்கழி மலர்ந்த வள்ளிதழ் நீலம்*
*புலாஅன் மறுகிற் சிறுகுடிப் பாக்கத்து*
*இனமீன் வேட்டுவர் ஞாழலொடு மிலையும்*
*மெல்லம் புலம்ப நெகிழ்ந்தன தோளே*
*சேயிறாத் துழந்த நுரைபிதிர்ப் படுதிரை*
*பராஅரைப் புன்னை வாங்குசினைத் தோயுங்*
*கானலம் பெருந்துறை நோக்கி யிவளே*
*கொய்சுவற் புரவிக் கைவண் கோமான்*
*நற்றேர்க் குட்டுவன் கழுமலத் தன்ன*
*அம்மா மேனித் தொன்னலந் தொலையத்*
*துஞ்சாக் கண்ணள் அலமரும் நீயே*
*கடவுள் மரத்த முண்மிடை குடம்பைச்*
*சேவலொடு புணராச் சிறுகரும் பேடை*
*இன்னா துயங்குங் கங்குலும்*
*நும்மூர் உள்ளுவை நோகோ யானே* (அகம். 270)

பகற்குறிக்கண் வந்து நீங்குந் தலைமகனைத் தோழி வரைவுகடாயது. 635

## உலோச்சனார்

*நாள்வலை முகந்த கோள்வல் பரதவர்*
*நுணங்குமணல் ஆங்கண் உணங்கப் பெய்ம்மார்*
*பறிகொள் கொள்ளையர் மறுக உக்க*
*மீனார் குருகின் கானலம் பெருந்துறை*
*எல்லை தண்பொழில் சென்றெனச் செலீஇயர்*
*தேர்பூட்டு அயர ஏஎய் வார்கோல்*
*செறிதொடி திருத்திப் பாறுமயிர் நீவிச்*
*செல்லினி மடந்தைநின் தோழியொடு மனையெனச்*
*சொல்லிய அளவை தான்பெரிது கலுழ்ந்து*
*தீங்கா யினளிவ ளாயின் தாங்காது*
*நொதுமலர் போலப் பிரியிற் கதுமெனப்*
*பிறிதொன் றாகலும் அஞ்சுவல் அதனாற்*
*சேணின் வருநர் போலப் பேணாய்*

இருங்கலி யாணரெஞ் சிறுகுடித் தோன்றின்
வல்லெதிர் கொண்டு மெல்லிதின் வினைஇத்
துறையும் மான்றின்று பொழுதே சுறவும்
ஓதம் மல்கலின் மாறா யினவே
எல்லின்று தோன்றல் செல்லா தீமென
எமர்குறை கூறத் தங்கி ஏமுற
இளையரும் புரவியும் இன்புற நீயும்
இல்லுறை நல்விருந் தயர்தல்
ஒல்லுதல் பெருமநீ நல்குதல் பெறினே (அகம். 300)

பகற்குறி வந்து நீங்குந் தலைமகற்குத் தோழி சொல்லியது. 636

## நக்கீரனார்

கடுந்தே ரிளையரொடு நீக்கி நின்ற
நெடுந்தகை நீர்மையை யன்றி நீயும்
தொழுதகு மெய்யை அழிவுமுந் துறுத்துப்
பன்னாள் வந்து பணிமொழி பயிற்றலின்
குவளை யுண்கண் கலுழ நின்மாட்டு
இவளும் பெரும்பே துற்றன ளோருந்
தாயிடை நெடுநகர்த் தமர்பா ராட்டக்
காதலின் வளர்ந்த மாத ராகலின்
பெருமட முடையரோ சிறிதே யதனாற்
குன்றிற் றோன்றுங் குவவுமணற் சேர்ப்ப
இன்றிவண் விரும்பா தீமோ சென்றப்
பூவிரி புன்னை மீதுதோன்று பெண்ணைக்
கூஉங்க ணஃதே தெய்ய ஆங்கண்
உப்பொய் உமணர் ஒழுகையொடு வந்த
இளைப்படு பேடை யிரியக் குரைத்தெழுந்து
உருமிசைப் புணரி யுடைதரும்
பெருநீர் வேலியெஞ் சிறுநல் லூரே (அகம். 310)

தலைமகற்குக் குறை நேர்ந்த தோழி சொல்லியது. 637

## மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச்சாத்தனார்

*ஓங்குதிரைப் பரப்பின் வாங்குவிசைக் கொளீஇத்*
*திமிலோன் தந்த கடுங்கண் வயமீன்*
*தழையணி யல்குற் செல்வத் தங்கையர்*
*விழவயர் மறுகின் விலையெனப் பகரும்*
*கானலஞ் சிறுகுடிப் பெருநீர்ச் சேர்ப்ப*
*மலரேர் உண்கணெந் தோழி எவ்வம்*
*அலர்வாய் நீங்கநீ அருளாய் பொய்ப்பினும்*
*நெடுங்கழி துழைஇய குறுங்கால் அன்னம்*
*அடும்பமர் எக்கர் அஞ்சிறை உளரும்*
*தடவுநிலைப் புன்னைத் தாதணி பெருந்துறை நடுங்கயிர்*
*போழ்ந்த கொடிஞ்சி நெடுந்தேர்*
*வண்டற் பாவை சிதைய வந்துநீ*
*தோள்புதி துண்ட ஞான்றைச்*
*சூளும் பொய்யோ கடலறி கரியே* **(அகம். 320)**

பகற்குறிக்கண் வந்த தலைமகனைத் தோழி வரைவுகடாயது. 638

## உலோச்சனார்

*கழிப்பூக் குற்றுங் கானல் அல்கியும்*
*வண்டற் பாவை வரிமணல் அயர்ந்தும்*
*இன்புறப் புணர்ந்தும் இளிவரப் பணிந்தும்*
*தன்றுயர் வெளிப்படத் தவறில் நந்துயர்*
*அறியா மையின் அயர்ந்த நெஞ்சமொடு*
*செல்லும் அன்னோ மெல்லம் புலம்பன்*
*செல்வோன் பெயர்புறத் திரங்கி முன்னின்று*
*தகைஇய சென்றவென் நிறையில் நெஞ்சம்*
*எய்தின்று கொல்லோ தானே எய்தியும்*
*காமஞ் செப்ப நாணின்று கொல்லோ*
*உதுவ காணவர் ஊர்ந்த தேரே*
*குப்பை வெண்மணற் குவவுமிசை யானும்*
*எக்கர்த் தாழை மடல்வயி னானும்*

*ஆய்கொடிப் பாசடும்பு அரிய ஊர்பிழ்பு*
*சிறுகுடிப் பரதவர் பெருங்கடன் மடுத்த*
*கடுஞ்செலற் கொடுந்திமில் போல*
*நிவந்துபடு தோற்றமொ டிகந்துமா யும்மே* **(அகம். 330)**

தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி தலைமகட்குக் குறைநயப்பக் கூறியது.
639

## நக்கீரர்

*பன்னாள் எவ்வந் தீரப் பகல்வந்து*
*புன்னையம் பொதும்பின் இன்னிழற் கழிப்பி*
*மாலை மால்கொள நோக்கிப் பண்ணாய்ந்து*
*வவவன் வண்டேர் இயக்க நீயும்*
*செலவுவிருப் புறுதல் ஒழிகதில் அம்ம*
*செல்லா நல்லிசைப் பொலம்பூட் டிரையன்*
*பல்பூங் கானற் பவத்திரி அனவிவள்*
*நல்லெழில் இளநலம் தொலைய ஒல்லெனக்*
*கழியே ஓதம் மல்கின்று வழியே*
*வள்ளெயிற் றரவொடு வயமீன் கொட்கும்*
*சென்றோர் மன்ற மான்றின்று பொழுதென*
*நின்றிறத் தவலம் வீட இன்றிவண்*
*சேப்பின் எவனோ பூக்கேழ் புலம்ப*
*பசுமீன் நொடுத்த வெண்ணெல்மாத் தயிர்மிதி*
*மிதவை மாவார் குநவே நினக்கே*
*வடவர் தந்த வான்கேழ் வட்டம்*
*குடபுல உறுப்பிற் கூட்டுபு நிகழ்த்திய*
*வண்டிமிர் நறுஞ்சாந் தணிகுவம் திண்டிமில்*
*எல்லுத்தொழின் மடுத்த வல்வினைப் பரதவர்*
*கூர்வளிக் கடுவிசை மண்டலிற் பாய்ந்துடன்*
*கோட்சுறாக் கிழித்த கொடுமுடி நெடுவலை*
*தண்கடல் அசைவளி எறிதொறும் வினைவிட்டு*
*முன்றிற் றாழைத் தூங்கும்*
*தெண்கடற் பரப்பினெம் உறைவின் ஊர்க்கே* **(அகம். 340)**

பகற்குறிக்கண் தோழி தலைமகற்குச் சொல்லியது.
640

## சேந்தன் கண்ணனார்

கழியே, சிறுகுர னெய்தலொடு காவி கூம்ப
எறிதிரை யோதந் தரலா னாதே
துறையே, மருங்கிற் போகிய மாக்கவை மருப்பின்
இருஞ்சேற் றீரளை அலவன் றிவப்ப
வழங்குநர் இன்மையிற் பாடான் றன்றே
கொடுநுகம் நுழைந்த கணைக்கால் அத்திரி
வடிமணி நெடுந்தேர் பூண ஏவாது
ஏந்தெழின் மழைக்கண் இவள்குறை யாகச்
சேர்ந்தனை சென்மோ பெருநீர்ச் சேர்ப்ப
இலங்கிரும் பரப்பின் எறிசுறா நீக்கி
வலம்புரி மூழ்கிய வான்றிமிற் பரதவர்
ஒலிதலைப் பணிலம் ஆர்ப்பக் கல்லெனக்
கலிகெழு கொற்கை எதிர்கொள இழிதரும்
குவவுமணல் நெடுங்கோட் டாங்கண்
உவக்காண் தோன்றுமெஞ் சிறுநல் லூரே **(அகம். 350)**

பகற்குறி வந்து நீங்குந் தலைமகற்குத் தோழி சொல்லியது. 641

## மதுரைக் கண்ணத்தனார்

பல்பூந் தண்பொழிற் பகலுடன் கழிப்பி
ஒருகால் ஊர்திப் பருதியஞ் செல்வன்
குடவயின் மாமலை மறையக் கொடுங்கழித்
தண்சேற் றடைஇய கணைக்கால் நெய்தல்
நுண்டா துண்டு வண்டினம் துறப்ப
வெருவரு கடுந்திறல் இருபெருந் தெய்வத்து
உருவுடன் இயைந்த தோற்றம் போல
அந்தி வானமொடு கடலணி கொளாஅ
வந்த மாலை பெயரின் மற்றிவள்
பெரும்புலம் பினளே தெய்ய அதனால்
பாணி பிழையா மாண்வினைக் கலிமா
துஞ்சூர் யாமத்துத் தெவிட்டல் ஓம்பி

*நெடுந்தேர் அகல நீக்கிப் பையெனக்*
*குன்றிழி களிற்றிற் குவவுமணல் நீந்தி*
*இரவின் வம்மோ உரவுநீர்ச் சேர்ப்ப*
*இனமீன் அருந்தும் நாரையொடு பனைமிசை*
*அன்றில் சேக்கும் முன்றிற் பொன்னென*
*நன்மலர் நறுவீ தாஅம்*
*புன்னை நறும்பொழிற் செய்தநங் குறியே* **(அகம்.** *360*)

பகற்குறி வந்த தலைமகற்குத் தோழி பகற்குறி மறுத்து இரவுக்குறி நேர்ந்தது.
642

## அம்மூவனார்

*வளைவாய்க் கோதையர் வண்டல் தைஇ*
*இளையோர் செல்ப எல்லும் எல்லின்று*
*அகலிலைப் புன்னைப் புகரில் நீழற்*
*பகலே எம்மொ டாடி இரவே*
*காயல் வேய்ந்த தேயா நல்லில்*
*நோயொடு வைகுதி யாயின் நுந்தை*
*அருங்கடிப் படுவலும் என்றி மற்றுநீ*
*செல்லல் என்றலும் ஆற்றாய் செலினே*
*வாழலென் என்றி யாயின் ஞாழல்*
*வண்டுபடத் ததைந்த கண்ணி நெய்தல்*
*தண்ணரும் பைந்தார் துயல்வர அந்திக்*
*கடல்கெழு செல்வி கரைநின் றாங்கு*
*நீயே கானல் ஒழிய யானே*
*வெறிகொள் பாவையிற் பொலிந்தவென் அணிதுறந்து*
*ஆடுமகள் போலப் பெயர்தல்*
*ஆற்றேன் தெய்ய அலர்கவிவ் வூரே* **(அகம்.** *370*)

பகலே சிறைப்புறமாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தோழி சொல்லியது.
643

## மதுரை மருதனிளநாகனார்

*தேர்சேண் நீக்கித் தமியன் வந்துநும்*
*ஊர்யா தென்ன நணிநணி ஒதுங்கி*
*முன்னாட் போகிய துறைவன் நெருநை*
*அகலிலை நாவல் உண்டுறை உதிர்ந்த*
*கனிகவின் சிதைய வாங்கிக் கொண்டுதன்*
*தாழை வேரளை வீழ்துணைக் கிடூஉம்*
*அலவற் காட்டி நற்பாற் றிதுவென*
*நினைந்த நெஞ்சமொடு நெடிதுபெயர்ந் தோனே*
*உதுக்காண் தோன்றும் தேரே இன்றும்*
*நாமெதிர் கொள்ளா மாயின் தானது*
*துணிகுவன் போலாம் நாணுமிக வுடையன்*
*வெண்மணல் நெடுங்கோட்டு மறைகோ*
*அம்ம தோழி கூறுமதி நீயே* **(அகம். *380*)**

பின்னின்ற தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி தலைமகட்குக் குறைநயப்பக் கூறியது. 644

## உலோச்சனார்

*நகைநன் றம்ம தானே அவனொடு*
*மனையிறந் தல்கினும் அலரென நயந்து*
*கானல் அல்கிய நங்கள வகலப்*
*பல்புரிந் தியறல் உற்ற நல்வினை*
*நூலமை பிறப்பின் நீல உத்திக்*
*கொய்மயிர் எருத்தம் பிணர்படப் பெருகி*
*நெய்ம்மிதி முனைஇய கொழுஞ்சோற் றார்கை*
*நிரலியைந் தொன்றிய செலவிற் செந்தினைக்*
*குரல்வார்ந் தன்ன குலவுத்தலை நன்னான்கு*
*வீங்குசுவல் மொசியத் தாங்குநுகம் தழீஇப்*
*பூம்பொறிப் பல்படை ஒலிப்பப் பூட்டி*
*மதியுடை வலவன் ஏவலின் இகுதுறைப்*

*புனல்பாய்ந் தன்ன வாமான் திண்டேர்க்*
*கணைகழிந் தன்ன நோன்கால் வண்பரி*
*பால்கண் டன்ன ஊதை வெண்மணல்*
*கால்கண் டன்ன வழிபடப் போகி*
*அயிர்ச்சேற் றள்ளல் அழுவத் தாங்கண்*
*இருணீர் இட்டுச்சுரம் நீந்தித் துறைகெழு*
*மெல்லம் புலம்பன் வந்த ஞான்றைப்*
*பூமலி இருங்கழித் துயல்வரும் அடையொடு*
*நேமி தந்த நெடுநீர் நெய்தல்*
*விளையா இளங்கள் நாறப் பலவுடன்*
*பொதியவிழ் தண்மலர் கண்டு நன்றும்*
*புதுவ தாகின் றம்ம பழவிறற்*
*பாடெழுந் திரங்கும் முந்நீர்*
*நீடிரும் பெண்ணைநம் அழுங்கல் ஊரே* (அகம். 400)

தலைமகன் வரைந்தெய்திய பின்றைத் தோழி தலைமகட்குச் சொல்லியது.
645

## அம்மூவனார்

*அன்னை வாழிவேண் டன்னை யுதுக்காண்*
*ஏர்கொடிப் பாசடும்பு பரியவூர் பிழிபு*
*நெய்தன் மயக்கி வந்தன்று நின்மகள்*
*பூப்போ லுண்கண் மரீஇய*
*நோய்க்குமருந் தாகிய கொண்கன் றேரே* (ஐங். 101)

அறத்தொடு நின்றபின்னர் வரைதற்பொருட்டுப் பிரிந்த தலைமகன் வரைவோடு புகுந்தவழித் தோழி செவிலிக்குக் காட்டிச் சொல்லியது. 646

*அன்னை வாழிவேண் டன்னை நம்மூர்*
*நீனிறப் பெருங்கடற் புள்ளி னானாது*
*துன்புறு துயர நீங்க*
*இன்புற விசைக்குமவர் தேர்மணிக் குரலே* (ஐங். 102)

இதுவுமது.
647

*அன்னை வாழிவேண் டன்னை புன்னையொடு*
*ஞாழல் பூக்குந் தண்ணந் துறைவன்*
*இவட்கமைந் தனனாற் றானே*
*தனக்கமைந் தன்றிவண் மாமைக் கவினே (ஐங். 103)*

அறத்தொடு நின்ற தோழி வதுவைநிகழா நின்றுழித் தாய்க்குக் காட்டி உவந்து சொல்லியது. 648

*அன்னை வாழிவேண் டன்னை நம்மூர்ப்*
*பலர்மடி பொழுதி னலமிகச் சாஅய்*
*நள்ளென வந்த வியறேர்ச்*
*செல்வக் கொண்கன் செல்வனஃ தூரே (ஐங். 104)*

புதல்வர் பெற்றுழித் தலைமகன் மனைக்கட்சென்ற செவிலிக்கு முன்பு அறத்தொடுநின்று வதுவைகூட்டிய தோழி அவனூர் நன்மை காட்டிச் சொல்லியது. 649

*அன்னை வாழிவேண் டன்னை முழங்குகடல்*
*திரைதரு முத்தம் வெண்மண லிமைக்கும்*
*தண்ணந் துறைவன் வந்தெனப்*
*பொன்னினுஞ் சிவந்தன்று கண்டிசி னுதலே (ஐங். 105)*

அறத்தொடு நின்றபின் வேண்டுவன தருதற்குப்பிரிந்த தலைமகன் வரைவொடுவந்துழி தலைமகள் நுதற்கண் முன்புள்ள பசப்புநீங்கும் வண்ணம் தோன்றிய கதிர்ப்புக்காட்டிச் செவிலிக்குத் தோழி சொல்லியது. 650

*அன்னை வாழிவேண் டன்னை யவர்நாட்டுத்*
*துதிக்கா லன்னந் துணைசெத்து மிதிக்கும்*
*தண்கடல் வளையினு மிலங்குமிவள்*
*அங்கலி ழாகங் கண்டிசி னினைந்தே (ஐங். 106)*

அறத்தொடு நின்ற தோழி அது வற்புறுப்பான் வேண்டி செவிலிக்குச் சொல்லியது. 651

*அன்னை வாழிவேண் டன்னையென் றோழி*
*சுடர்நுதல் பசப்பச் சாஅய்ப் படர்மெலிந்து*

*தண்கடற் படுதிரை கேட்டொறும்*
*துஞ்சா ளாகுத னோகோ யானே* (ஐங். 107)

தோழி செவிலிக்கு அறத்தொடுநிலை குறித்துக் கூறியது. 652

*அன்னை வாழிவேண் டன்னை கழிய*
*முண்டக மலருந் தண்கடற் சேர்ப்பன்*
*எந்தோ டுறந்தன னாயின்*
*எவன்கொன் மற்றவ னயந்த தோளே* (ஐங். 108)

அறத்தொடுநிலை பிறந்தபின்னும் வரைவு நீடிற்றாக, மற்றொரு குலமகளை வரையுங்கொல் என்று ஐயுற்ற செவிலி குறிப்பறிந்த தோழி அவட்குச் சொல்லியது. 653

*அன்னை வாழிவேண் டன்னை நெய்தல்*
*நீர்ப்படர் தூம்பின் பூக்கெழு துறைவன்*
*எந்தோ டுறந்த காலை யெவன்கொல்*
*பன்னாள் வருமவ னளித்த பொழுதே* (ஐங். 109)

அறத்தொடுநின்ற பின்பு வரைவான் பிரிந்த தலைமகன் கடிதின் வராதவழி ஐயுற்ற செவிலி, ‘அவன் நம்மைத் துறந்தான்போலும்; நுங்கட்கு அவன் கூறிய திறம் யாது?’ என்றாட்குத் தோழி சொல்லியது. 654

*அன்னை வாழிவேண் டன்னை புன்னை*
*பொன்னிறம் விரியும் பூக்கெழு துறைவனை*
*என்னை யென்றும் யாமே யிவ்வூர்*
*பிறிதொன் றாகக் கூறும்*
*ஆங்கு மாக்குமோ வாழிய பாலே* (ஐங். 110)

நொதுமலர் வரைவின்கண் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது. 655

*கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே*
*முண்டகக் கோதை நனையத்*
*தெண்டிரைப் பௌவம் பாய்ந்துநின் றோளே* (ஐங். 121)

பெதும்பைப் பருவத்தாள் ஒரு பரத்தையொடு கூடி மறைந்து ஒழுகாநின்றான் என்பதறிந்து தலைவி புலந்தொழி, ‘இத்தவறு என் மாட்டிலை; நீ இப் புலவியை நீக்க வேண்டும்’ என்று தோழிக்குத் தலைமகன் கூறிய புலவியை நீக்கக் கருதிய தோழி அவள் இளமை கூறி நகையாடிச் சொல்லியது. 656

*கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே*
*ஒள்ளிழை யுயர்மணல் வீழ்ந்தென*
*வெள்ளாங் குருகை வினவு வோளே* (ஐங். 122)

இதுவுமது. 657

*கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே*
*ஒண்ணுத லாய மார்ப்பத்*
*தண்ணென் பெருங்கடற் றிரைபாய் வோளே* (ஐங். 123)

இதுவுமது. 658

*கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே*
*வண்டற் பாவை வெளவலின்*
*நுண்பொடி யளைஇக் கடறூர்ப் போளே* (ஐங். 124)

இதுவுமது. 659

*கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே*
*தெண்டிரை பாவை வெளவ*
*உண்கண் சிவப்ப வழுதுநின் றோளே* (ஐங். 125)

இதுவுமது. 660

*கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே*
*உண்கண் வண்டின மொய்ப்பத்*
*தெண்கடற் பெருந்திரை மூழ்கு வோளே* (ஐங். 126)

இதுவுமது. 661

*கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே*
*தும்பை மாலை யிளமுலை*
*நுண்பூ ணாக மிலங்கு வோளே* (ஐங். 127)

இதுவுமது. 662

*கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே*
*உறாஅ வறுமுலை மடாஅ*
*உண்ணாப் பாவையை யூட்டு வோளே* (ஐங். 128)

இதுவுமது. 663

*கண்டி.கு மல்லமோ கொண்கநின் கேளே*
. . . (ஐங். 129)

இதுவுமது. 664

*கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே*
. . . (ஐங். 130)

இதுவுமது. 665

*எக்கர் ஞாழற் புள்ளிமி ழகன்றுறை*
*இனிய செய்த நின்றுபின்*
*முனிவு செய்தவிவ டடமென் றோளே* (ஐங். 143)

புறத்துத் தங்கிவந்த தலைமகற்குத் தோழி சொல்லியது. 666

*எக்கர் ஞாழற் சிறியிலைப் பெருஞ்சினை*
*ஓதம் வாங்குந் துறைவன்*
*மாயோள் பசலை நீக்கின னினியே* (ஐங். 145)

வரைவுகடாவவும் தமர் உடம்படுமாற்றாற் சான்றோரைத் தலைமகன் விடுத்தது அறிந்த தோழி தலைமகள் கேட்குமாற்றாற் சொல்லியது. 667

*எக்கர் ஞாழன் மலரின் மகளிர்*
*ஒண்டழை யயருந் துறைவன்*
*தண்டழை விலையென நல்கின னாடே* (ஐங். 147)

சுற்றத்தார் வேண்டிய கொடுத்துத் தலைமகள் வரைவு மாட்சிமைப்படுத்தமை யறிந்த தோழி உவந்த உள்ளத்தாளாய்த் தலைமகட்குச் சொல்லியது. 668

*எக்கர் ஞாழ லிகந்துபடு பெருஞ்சினை*
*வீயினிது கமழுந் துறைவனை*
*நீயினிது முயங்குமதி காத லோயே* **(ஐங். 148)**

களவொழுக்கத்தின் விளைவறியாது அஞ்சாது வருத்தம்நீங்க வதுவை கரணவகையான் முடித்தபின்பு தலைமகளைப் பள்ளியிடத்து உய்க்குந் தோழி சொல்லியது. 669

*எக்கர் ஞாழற் பூவி னன்ன*
*சுணங்குவள ரிளமுலை மடந்தைக்*
*கணங்குவளர்த் தகறல் வல்லா தீமே* **(ஐங். 149)**

லரைந்தெய்திய தலைமகள் தலைவியோடு பள்ளியிடத்திருந்துழித் தோழி வாழ்த்தியது. 670

*வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்*
*காணிய சென்ற மடநடை நாரை*
*உளர வொழிந்த தூவி குவவுமணற்*
*போர்விற் பெறூஉந் துறைவன் கேண்மை*
*நன்னெடுங் கூந்த னாடுமோ மற்றே* **(ஐங். 153)**

பரத்தையிற் பிரிந்து வாயில் வேண்டிய தலைமகன் கேட்குமாற்றால் வாயிலாகப் புகுந்தார்க்குத் தோழி கூறியது. 671

*வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்*
*காணிய சென்ற மடநடை நாரை*
*பதைப்ப வொழிந்த செம்மறுத் தூவி*
*தெண்கழிப் பரக்குந் துறைவன்*
*எனக்கோ காதல னனைக்கோ வேறே* **(ஐங். 156)**

பரத்தையிடத்து வாயில்விட்டு ஒழுகுகின்ற தலைமகனது வாயிலாய் வந்தார்க்குத் தோழி வாயின்மறுத்தது. 672

*வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்*
*காணிய சென்ற மடநடை நாரை*
*கானலம் பெருந்துறைத் துணையொடு கொட்கும்*

*தண்ணந் துறைவன் கண்டிகும்*
*அம்மா மேனியெந் தோழியது துயரே* (ஐங். 158)

பரத்தை புலந்துழிப் புலவிநீக்குவானாய் அஃது இடமாக வந்தமையறிந்த தோழி தலைமகற்கு வாயில் மறுத்தது. 673

*வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்*
*காணிய சென்ற மடநடை நாரை*
*பசிதின வல்கும் பனிநீர்ச் சேர்ப்ப*
*நின்னொன் றிரக்குவெ னல்லேன்*
*தந்தனை சென்மோ கொண்டவிவ ணலனே* (ஐங். 159)

மறாமற்பொருட்டு உண்டிக்காலத்து வாயில்வேண்டிவந்த தலைமகற்குத் தோழி கூறியது. 674

*பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை*
*வரிவெண் டாலி வலைசெத்து வெரூஉம்*
*மெல்லம் புலம்பற் றேறி*
*நல்ல வாயின நல்லோள் கண்ணே* (ஐங். 166)

வரையாது வந்தொழுகும் தலைமகன் சிறைப்புறத்தானாக, தலைமகள் பசப்பிற்கு வருந்திய தோழி அவனை இயற்பழித்துக் கூறியது. 675

*பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை*
*துறைபடி யம்பி யகமணை யீனும்*
*தண்ணந் துறைவ னல்கின்*
*ஒண்ணுத லரிவை பாலா ரும்மே* (ஐங். 168)

நொதுமலர் வரைவுவேண்டி விடுத்தமையறிந்த தலைமகள் ஆற்றாளாய்ப் பசியட நிற்புழி, 'இதற்குக் காரணமென்' என்று செவிலி வினவத் தோழி அறத்தொடு நின்றது. 676

*தவறில ராயினும் பனிப்ப மன்ற*
*இவறுதிரை திளைக்கு மிடுமணை னெடுங்கோட்டு*

*முண்டக நறுமலர் கமழும்*
*தொண்டி யன்னோ டோளுற் றோரே* (ஐங். 177)

தலைமகளும் தோழியும் ஒருங்குநின்றுழி, 'இவள் என்னை வருத்துதற்குச் செய்த தவறு என்' என்று வினாய தலைமகற்குத் தோழி நகையாடிச் சொல்லியது. 677

*நல்குமதி வாழியோ நளிநீர்ச் சேர்ப்ப*
*அலவன் றாக்கத் துறையிறாப் பிறழும்*
*இன்னொலித் தொண்டி யற்றே*
*நின்னல தில்லா விவள்சிறு நுதலே* (ஐங். 179)

குறியிடத்துவந்து புணர்ந்துநீங்கும் தலைமகனைத் தோழி எதிர்ப்பட்டு வரைவுகடாயது. 678

*சிறுநனி வரைந்தனை கொண்மோ பெருநீர்*
*வலைவர் தந்த கொழுமீன் வல்சிப்*
*பறைதபு முதுகுரு கிருக்கும்*
*துறைகெழு தொண்டி யன்னவிவ ணலனே* (ஐங். 180)

தாழ்த்து வரையக் கருதிய தலைமகனைத் தோழி நெருங்கிக் கடிதின் வரையவேண்டுமெனச் சொல்லியது. 679

*நெய்த னறுமலர் செருந்தியொடு விரைஇப்*
*பைபுனை நறுந்தார் கமழு மார்பன்*
*அருந்திறற் கடவு ளல்லன்*
*பெருந்துறைக் கண்டிவ ளணங்கி யோனே* (ஐங். 182)

தலைமகள் மெலிவுகண்டு தெய்வத்தாலாயிற்றெனத் தமர் நினைந்துழித் தோழி அறத்தொடு நின்றது. 680

*நாரை நல்லினங் கடுப்ப மகளிர்*
*நீர்வார் கூந்த லுளருந் துறைவ*
*பொங்குகழி நெய்த லுறைப்ப வித்துறைப்*
*பல்கால் வரூஉந் தேரெனச்*
*செல்லா தீமோ வென்றனள் யாயே* (ஐங். 186)

பகற்குறிக்கண் வந்துநீங்குத் தலைமகனைத் தோழி செறிப்பறிவுறீஇ வரைவு கடாயது. 681

*நொதும லாளர் கொள்ளா ரிவையே*
*எம்மொடு வந்து கடலாடு மகளிரும்*

*நெய்தலம் பகைத்தழைப் பாவை புனையார்*
*உடலகங் கொள்வோ ரின்மையின்*
*தொடலைக் குற்ற சிலபூ வினரே* (ஐங். 187)

தோழி கையுறை மறுத்தது. 682

*புன்னை நுண்டா துறைத்தரு நெய்தல்*
*பொன்படு மணியிற் பொற்பத் தோன்றும்*
*மெல்லம் புலம்பன் வந்தென*
*நல்ல வாயின தோழியென் கண்ணே* (ஐங். 189)

வரைவிடை வைத்துப் பிரிந்த தலைமகன் வரைவான் வந்துழிக்கண்டு உவகையோடு வந்த தோழி, 'நின் கண் மலர்ச்சிக்குக் காரணம் என்?' என்று வினாவிய தலைவிக்குச் சொல்லியது. 683

*தண்ணறு நெய்தற் றளையவிழ் வான்பூ*
*வெண்ணெ லரிநர் மாற்றின ஏறுக்கும்*
*மெல்லம் புலம்பன் மன்றவெம்*
*பல்லித ழுண்கண் பனிசெய் தோனே* (ஐங். 190)

தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது. 684

*வலம்புரி யுழுத வார்மண லடைகரை*
*இலங்குகதிர் முத்த மிருள்கெட விமைக்கும்*
*துறைகெழு கொண்கநீ தந்த*
*அறைபுனல் வால்வளை நல்லவோ தாமே* (ஐங். 193)

வரையாது வந்தொழுகுந் தலைமகன் தலைமகட்கு வளை கொண்டுவந்து கொடுத்துழி, 'பண்டை வளை போலாவாய் மெலிந்துழி நீங்கா நலனுடையவோ இவை' எனத் தலைமகள் மெலிவு சொல்லித் தோழி வரைவுகடாயது. 685

*கடற்கோ டறுத்த வரம்போ ழவ்வளை*
*ஒண்டொடி மடவரற் கண்டிகுங் கொண்க*
*நன்னுத லின்றுமால் செய்தெனக்*
*கொன்னொன்று கடுத்தன என்னையது நிலையே* (ஐங். 194)

பகற்குறிக்கண் வந்து நீங்கும் தலைமகனைத் தோழி எதிர்ப்பட்டு மனைக்கண் நிகழ்ந்தது கூறிச் செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது. 686

*கோடீ ரெல்வளைக் கொழும்பல் கூந்தல்*
*ஆய்தொடி மடவரல் வேண்டுதி யாயின்*

*தெண்கழிச் சேயிறாப் படூஉம்*
*தண்கடற் சேர்ப்ப வரைந்தனை கொண்மோ (ஐங். 196)*

குறைமறுக்கப்பட்ட தலைமகன் பின்னும் குறைவேண்டியவழித் தோழி சொல்லியது.
687

*வளையணி முன்கை வாலெயிற் றமர்நகை*
*இளைய ராடுந் தளையவிழ் கானற்*
*குறுந்துறை வினவி நின்ற*
*நெடுந்தோ ளண்ணற் கண்டிகும் யாமே (ஐங். 198)*

பரத்தையர் மனைக்கட் பன்னாள் தங்கிப் பின்பு ஆற்றாமையே வாயிலாக வந்த தலைமகனை எதிர்ப்பட்ட தோழி தலைமகட்குச் சொல்லியது. 688

*கானலம் பெருந்துறைக் கலிதிரை திளைக்கும்*
*வானுயர் நெடுமண லேறி யானாது*
*காண்கம் வம்மோ தோழி*
*செறிவளை நெகிழ்த்தோ னெறிகட லாடே (ஐங். 199)*

தலைமகன் ஒருவழித் தணந்துழி ஆற்றாளாகிய தலைமகளை ஆற்றுவிக்குந் தோழி சொல்லியது. 689

*இலங்குவீங் கெல்வளை யாய்நுதல் கவினப்*
*பொலந்தேர்க் கொண்கன் வந்தன னினியே*
*விலங்கரி நெடுங்கண் ஞெகிழ்மதி*
*நலங்கவர் பசலையை நகுக நாமே (ஐங். 200)*

உடன்போக்குத் துணிந்தவழி அதற்கு இரவின்கண் தலைமகன் வந்ததறிந்த தோழி தலைமகனைப் பாயலுணர்த்திடச் சொல்லியது. 690

## கயமனார்

*யாயா கியளே மாஅ யோளே*
*மடைமாண் செப்பில் தமிய வைகிய*
*பெய்யாப் பூவின் மெய்சா யினளே*
*பாசடை நிவந்த கணைக்கால் நெய்தல்*
*இனமீ னிருங்கழி யோத மல்குதொறும்*
*கயமூழ்கு மகளிர் கண்ணின் மானும்*
*தண்ணந் துறைவன் கொடுமை*
*நம்மு னாணிக் கரப்பா டும்மே (குறுந். 9)*

தலைமகற்குத் தோழி வாயில் நேர்ந்தது. 691

## குன்றியனார்

*கூன்முண் முண்டகக் கூர்ம்பனி மாமலர்*
*நூலறு முத்திற் காலொடு பாறித்*
*துறைதொறும் பாக்குந் தூமணற் சேர்ப்பனை*
*யானும் காதலென் யாயுநனி வெய்யள்*
*எந்தையுங் கொடீஇயர் வேண்டும்*
*அம்ப லூரும் அவனொடு மொழிமே* (குறுந். 51)

வரைவு நீட்டித்தவிடத்து ஆற்றாளாகிய தலைமகட்குத் தோழி வரைவுமலிவு கூறியது. 692

## நெய்தற் கார்க்கியர்

*மாக்கழி மணிப்பூக் கூம்பத் தூத்திரைப்*
*பொங்குபிதிர்த் துவலையொடு மங்குல் தைஇக்*
*கையற வந்த தைவரல் ஊதையொடு*
*இன்னா உறையுட் டாகும்*
*சின்னாட் டம்மவிச் சிறுநல் லூரே* (குறுந். 55)

வரைவொடு புகுதானேல் இவள் இறந்துபடும் எனத் தோழி தலைமகன் சிறைப்புறத்தானாகச் சொல்லியது. 693

## நம்பி குட்டுவனார்

*முட்கால் இறவின் முடங்குபுறப் பெருங்கிளை*
*புணரி இகுதிரை தரூஉந் துறைவன்*
*புணரிய இருந்த ஞான்றும்*
*இன்னாது மன்னோ நன்னுதற் கவினே* (குறுந். 109)

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைவி வேறுபாடு கண்ட புறத்தார் அலர் கூறுகின்றமை தோன்றத் தோழி தலைமகட்குக் கூறுவாளாய்க் கூறியது. 694

## பொன்னாகனார்

*நெய்தற் பரப்பிற் பாவை கிடப்பி*
*நின்குறி வந்தனென் இயல்தேர்க் கொண்க*
*செல்கம் செலவியங் கொண்மோ அல்கலும்*
*ஆரல் அருந்த வயிற்ற*
*நாரை மிதிக்கும் என்மகள் நுதலே* (குறுந். 114)

இடத்துய்த்து நீங்குந் தோழி தலைமகற்குக் கூறியது. 695

## குன்றியனார்

*மாரி ஆம்ப லன்ன கொக்கின்*
*பார்வல் அஞ்சிய பருவரல் ஈர்ஞெண்டு*
*கண்டல் வேரளைச் செலீஇயர் அண்டர்*

*கயிறரி யெருத்திற் கதழுந் துறைவன்*
*வாரா தமையினும் அமைக*
*சிறியவும் உளவீண்டு விலைஞர்கை வளையே* **(குறுந். 117)**

வரைவு நீட்டித்தவிடத்துத் தலைமகட்குத் தோழி சொல்லியது. 696

## ஐயூர் முடவனார்

*இருள்திணிந் தன்ன ஈர்ந்தண் கொழுநிழல்*
*நிலவுக்குவித் தன்ன வெண்மணல் ஒருசிறைக்*
*கருங்கோட்டுப் புன்னைப் பூம்பொழில் புலம்ப*
*இன்னும் வாரார் வரூஉம்*
*பன்மீன் வேட்டத் தென்னையர் திமிலே* **(குறுந். 123)**

பகற்குறியிடத்து வந்த தலைமகனைத் காணாத தோழி, அவன் சிறைப்புறத்தானாதலறிந்து தலைமகட்குச் சொல்லியது. 697

## கூடலூர்கிழார்

*தண்கடற் படுதிரை பெயர்த்தலின் வெண்பறை*
*நாரை நிரைபெயர்ந் தயிரை யாரும்*
*ஊரே நன்றுமன் மாந்தை*
*ஒருதனி வைகிற் புலம்பா கின்றே* **(குறுந். 166)**

காப்பு மிகுதிக்கண் தோழி தலைமகட்கு உரைத்தது. 698

## உலோச்சனார்

*கடல்பா டவிந்து கானல் மயங்கித்*
*துறைநீர் இருங்கழி புல்லென் றன்றே*
*மன்றலம் பெண்ணை மடல்சேர் வாழ்க்கை*
*அன்றிலும் பையென நரலும் இன்றவர்*
*வருவர்கொல் வாழி தோழி நாநகப்*

*புலப்பினும் பிரிவாங் கஞ்சித்*
*தணப்பருங் காமம் தண்டி யோரே* (குறுந். 177)

கிழவன் வரவுணர்ந்து தோழி கிழத்திக்கு உரைத்தது. 699

## நெய்தற் கார்க்கியனார்

*கொண்க னூர்ந்த கொடிஞ்சி நெடுந்தேர்*
*தெண்கட லடைகரைத் தெளிர்மணி யொலிப்பக்*
*காண வந்து நாணப் பெயரும்*
*அளிதோ தானே காமம்*
*விளிவது மன்ற நோகோ யானே* (குறுந். 212)

குறைநேர்ந்த தோழி குறைநயப்பக் கூறியது. 700

## ஓதஞானியார்

*பூண்வளைந் தன்ன பொலஞ்சூட்டு நேமி*
*வாண்முகந் துமிப்ப வள்ளிதழ் குறைந்த*
*கூழை நெய்தலு முடைத்திவண்*
*தேரோன் போகிய கான லானே* (குறுந். 227)

சிறைப்புறம். 701

## பாண்டியன் அறிவுடைநம்பி

*அம்ம வாழி தோழி கொண்கன்*
*தானது துணிகுவ னல்லன் யானென்*
*பேதை மையாற் பெருந்தகை கெழுமி*
*நோதகச் செய்ததொன் றுடையேன் கொல்லோ*
*வயச்சுறா வழங்குநீர் அத்தம்*
*சின்னாள் அன்ன வரவறி யானே* (குறுந். 230)

தோழி வலிதாகக் கூறிக் குறை நயப்பித்தது. 702

## நரிவெரூஉத் தலையார்

*விட்டென விடுக்குநாள் வருக அதுநீ*
*நேர்ந்தனை யாயின் தந்தனை சென்மோ*
*குன்றத் தன்ன குவவுமணல் அடைகரை*

*நின்ற புன்னை நிலந்தோய் படுசினை*
*வம்ப நாரை சேக்கும்*
*தண்கடற் சேர்ப்பநீ உண்டவென் னலனே* (குறுந். 236)

வரைவிடை வைத்துப் பிரிவான், 'இவள் வேறுபடாமை ஆற்றுவி' என்றாற்குத் தோழி நகையாடி உரைத்தது. 703

## கபிலர்

*பெருங்கடற் றிரையது சிறுவெண் காக்கை*
*களிற்றுச் செவியன்ன பாசடை மயக்கிப்*
*பனிக்கழி துழவும் பானாள் தனித்தோர்*
*தேர்வந்து பெயர்ந்த தென்ப அதற்கொண்டு*
*ஒரு மலைக்கு மன்னை பிறரும்*
*பின்னுவிடு கதுப்பின் மின்னிழை மகளிர்*
*இளையரு மடவரு முளரே*
*அலையாத் தாயரொடு நற்பா லோரே* (குறுந். 246)

சிறைப்புறம். 704

## உலோச்சனார்

*அதுவர லன்மையோ அரிதே அவன்மார்*
*புறுக வென்ற நாளே குறுகி*
*ஈங்கா கின்றே தோழி கானல்*
*ஆடரை புதையக் கோடை யிட்ட*
*அடும்பிவர் மணற்கோ டூர நெடும்பனைக்*
*குறிய வாகுந் துறைவனைப்*
*பெரிய கூறி யாயறிந் தனளே* (குறுந். 248)

வரைவு நீட்டித்தவழி ஆற்றாளாகிய கிழத்தியைத் தோழி ஆற்றுவித்தது. 705

## அஞ்சிலாந்தையார்

*கடலுட னாடியும் கான லல்கியும்*
*தொடலை யாயமொடு தழுவணி யயர்ந்தும்*
*நொதுமலர் போலக் கதுமென வந்து*
*முயங்கினன் செலினே யலர்ந்தன்று மன்னே*
*தித்தி பரந்த பைத்தக லல்குல்*

*திருந்திழை துயல்வுக்கோட் டசைத்த பசுங்குழைத்*
*தழையினும் உழையிற் போகான்*
*தான்தந் தனன்யாய் காத்தோம் பல்லே* **(குறுந். 294)**

பகற்குறிக்கண் தலைமகன் வந்தவிடத்துத் தோழி செறிப்பறிவுறீஇயது. 706

## அம்மூவனார்

*கழிதேர்ந் தசைஇய கருங்கால் வெண்குரு*
*கடைகரைத் தாழைக் குழீஇப் பெருங்கடல்*
*உடைதிரை ஒலியில் துஞ்சுந் துறைவ*
*தொன்னிலை நெகிழ்ந்த வளைய ளீங்குப்*
*பசந்தனள் மன்னென் தோழி யென்னொடும்*
*இன்னிணர்ப் புன்னையம் புகர்நிழற்*
*பொன்வரி அலவன் ஆட்டிய ஞான்றே* **(குறுந். 303)**

செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது. 707

## கவைமகனார்

*கொடுங்கால் முதலைக் கோள்வ லேற்றை*
*வழிவழக் கறுக்குங் கானலம் பெருந்துறை*
*இனமீன் இருங்கழி நீந்தி நீநின்*
*நயனுடை மையின் வருதி யிவடன்*
*மடனுடை மையின் உயங்கும் யானது*
*கவைமக நஞ்சுண் டாஅங்*
*கஞ்சுவல் பெருமவென் னெஞ்சத் தானே* **(குறுந். 324)**

செறிப்பறிவுறுக்கப்பட்டு 'இரா வாரா வரைவல்' என்றாற்குத் தோழி அது மறுத்து வரைவுகடாயது. 708

## பரணர்

*சிறுவீ ஞாழல் வேரளைப் பள்ளி*
*அலவன் சிறுமனை சிதையப் புணரி*
*குணில்வாய் முரசின் இயங்குந் துறைவன்*
*நல்கிய நாள்தவச் சிலவே அலரே*
*வில்கெழு தானை விச்சியர் பெருமகன்*
*வேந்தரொடு பொருத ஞான்றைப் பாணர்*

*புலிநோக் குறழ்நிலை கண்ட*
*கலிகெழு குறும்பூர் ஆர்ப்பினும் பெரிதே* (குறுந். 328)

வரைவிடை வேறுபடும் கிழத்தியை அவர் வரையும் நாள் அணித்தெனவும் அலரஞ்சலெனவும் கூறியது. 709

## அண்டர்மகன் குறுவழுதியார்

*இழையணிந் தியல்வருங் கொடுஞ்சி நெடுந்தேர்*
*வரைமருள் நெடுமணல் தவிர்த்துநின் றசைஇத்*
*தங்கினி ராயின் தவறோ தெய்ய*
*தழைதாழ் அல்குல் இவள்புலம் பகலத்*
*தாழை தைஇய தயங்குதிரைக் கொடுங்கழி*
*இழுமென ஒலிக்கும் ஆங்கண்*
*பெருநீர் வேலியெம் சிறுநல் லூரே* (குறுந். 345)

பகல்வந்து ஒழுகுவானைத் தோழி இரா வரவென்றது. 710

## அம்மூவனார்

*வளையோய் உவந்திசின் விரைவுறு கொடுந்தாள்*
*அளைவாழ் அலவன் கூருகிர் வரித்த*
*ஈர்மணல் மலிர்நெறி சிதைய இழுமென*
*உருமிசைப் புணரி உடைதரும் துறைவர்க்கு*
*உரிமை செப்பினர் நமரே விரியலர்ப்*
*புன்னை ஓங்கிய புலாலஞ் சேரி*
*இன்னகை ஆயத் தாரோடு*
*இன்னும் அற்றோஇவ் வழுங்க லூரே* (குறுந். 351)

தலைமகன் தமர் வரைவொடு வந்தவழி, 'நமர் அவர்க்கு வரைவு நேரார் கொல்லோ?' என்று அஞ்சிய தலைமகட்குத் தோழி வரைவு மலிந்தது. 711

• • • • •

*தொல்கவின் தொலைந்து தோணலஞ் சாஅய்*
*அல்லல் நெஞ்சமோ டல்கலும் துஞ்சாது*
*பசலை யாகி விளிவது கொல்லோ*
*வெண்குருகு நரலுந் தண்கமழ் கானற்*
*பூமலி பொதும்பர் நாண்மலர் மயக்கி*

*விலங்குதிரை உடைதருந் துறைவனொ*
*டிலங்கெயிறு தோன்ற நக்கதன் பயனே* (குறுந். 381)

வரைவிடை ஆற்றாளாகிய தலைமகளை ஆற்றுவித்தலுறும் தோழி தலைமகனை இயற்பழித்தது. 712

## அம்மூவனார்

*நனைமுதிர் ஞாழற் சினைமருள் திரள்வீ*
*நெய்தல் மாமலர்ப் பெய்த போல*
*ஊதை தூற்றும் உரவுநீர்ச் சேர்ப்ப*
*தாயுடன் றலைக்கும் காலையும் வாய்விட்*
*டன்னா யென்னுங் குழவி போல*
*இன்னா செயினும் இனிதுதலை யளிப்பினும்*
*நின்வரைப் பினளென் தோழி*
*தன்னுறு விழுமங் களைஞரோ இலளே* (குறுந். 397)

வரைவிடை வைத்து நீங்குந் தலைமகற்குத் தோழி உரைத்தது. 713

## அம்மூவனார்

*கானலஞ் சிறுகுடிக் கடல்மேம் பரதவர்*
*நீனிறப் புன்னைக் கொழுநிழ லசைஇத்*
*தண்பெரும் பரப்பின் ஒண்பதம் நோக்கி*
*யங்கண் அரில்வலை உணக்குந் துறைவனொ*
*டலரே, அன்னை யறியின் இவண்உறை வாழ்க்கை*
*அரிய வாகும் நமக்கெனக் கூறிற்*
*கொண்டுஞ் செல்வர்கொல் தோழி உமணர்*
*வெண்கல் உப்பின் கொள்ளை சாற்றிக்*
*கணநிரை கிளர்க்கும் நெடுநெறிச் சகடம்*
*மணல்மடுத் துரறும் ஓசை கழனிக்*
*கருங்கால் வெண்குருகு வெரூஉம்*
*இருங்கழிச் சேர்ப்பிற்றம் உறைவின் ஊர்க்கே* (நற். 4)

தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழி அலர் அச்சந்தோன்றச் சொல்லி வரைவுகடாயது. 714

## உலோச்சனார்

*பெய்யாது வைகிய கோதை போல*
*மெய்சா யினையவர் செய்குறி பிழைப்ப*

*உள்ளி நொதும லேர்புரை தெள்ளிதின்*
*வாரா ரென்னும் புலவி யுட்கொளல்*
*ஒழிக மாஎநின் நெஞ்சத் தானே*
*புணரி பொருத பூமணை லடைகரை*
*யாழி மருங்கின் அலவன் ஓம்பி*
*வலவன் வள்பாய்ந் தூர*
*நிலவுவிரிந் தன்றாற் கான லானே* (நற். 11)

காப்பு மிகுதிக்கண் இடையீடுபட்டு ஆற்றாளாய தலைமகட்குத் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி சொல்லியது. 715

## பாண்டியன் அறிவுடைநம்பி

*முழங்குதிரை கொழீஇயர் மூரி யெக்கர்*
*நுணங்குதுகில் நுடக்கம் போலக் கணங்கொள*
*ஊதை தூற்றும் உரவுநீர்ச் சேர்ப்ப*
*பூவின் அன்ன நலம்புதி துண்டு*
*நீபுணர்ந் தனையே அன்மையின் யாமே*
*நேர்புடை நெஞ்சந் தாங்கத் தாங்கி*
*மாசில் கற்பின் மடவோள் குழவி*
*ஓய்ய வாங்கக் கைவிட் டாங்குச்*
*சேணும் எம்மொடு வந்த*
*நாணும் விட்டேம் அலர்கவிவ் வூரே* (நற். 15)

வரைவு நீட்டித்தவழித் தோழி தலைமகற்குச் சொல்லி வரைவுகடாயது. 716

## நக்கண்ணையார்

*இறவுப்புறத் தன்ன பிணர்படு தடவுமுதற்*
*சுறவுக்கோட் டன்ன முள்ளிலைத் தாழை*
*பெருங்களிற்று மருப்பின் அன்ன வரும்புமுதிர்பு*
*நன்மா னுழையின் வேறுபடத் தோன்றி*
*விழவுக்களங் கமழும் உரவுநீர்ச் சேர்ப்ப*
*இனமணி நெடுந்தேர் பாக னியக்கச்*
*செலீஇய சேறி யாயின் இவளே*
*வருவை யாகிய சின்னாள்*
*வாழா ளாதல்நற் கறிந்தனை சென்மே* (நற். 19)

புணர்ந்துநீங்கிய தலைவனைத் தோழி வரைவுகடாயது. 717

## குடவாயிற்கீரத்தனார்

*நீயும் யானுந் நெருநற் பூவின்*
*நுண்தா துறைக்கும் வண்டினம் ஓப்பி*
*ஓழிதிரை வரித்த வெண்மண லடைகரைக்*
*கழிசூழ் கான லாடிய தன்றிக்*
*கரந்துநாஞ் செய்ததொன் றில்லை யுண்டெனிற்*
*பரந்துபிற ரறிந்தன்று மிலரே நன்றும்*
*எவன்குறித் தனள்கொ லன்னை கயந்தோ*
*றிறவா ரினக்குரு கொலிப்பச் சுறவங்*
*கழிசேர் மருங்கிற் கணைக்கால் நீடிக்*
*கண்போற் பூத்தமை கண்டு நுண்பல*
*சிறுபா சடைய நெய்தல்*
*குறுமோ சென்றெனக் கூறா தோளே* (நற். 27)

சிறைப்புறமாகத் தோழி செறிப்பறிவுறீயது. 718

## அம்மூவனார்

*பொங்குதிரை பொருத வார்மண லடைகரைப்*
*புன்கால் நாவற் பொதிப்புற இருங்கனி*
*கிளைசெத்து மொய்த்த தும்பி பழஞ்செத்துப்*
*பல்கா லலவன் கொண்டகோட் கூர்ந்து*
*கொள்ளா நரம்பின் இமிரும் பூசல்*
*இரைதேர் நாரை யெய்தி விடுக்குந்*
*துறைகெழு மாந்தை யன்ன இவள்நலம்*
*பண்டும் இற்றே கண்டிசின் தெய்ய*
*உழையிற் போகா தளிப்பினுஞ் சிறிய*
*ஞெகிழ்ந்த கவினலங் கொல்லோ மகிழ்ந்தோர்*
*கட்கழி செருக்கத் தன்ன*
*காமங் கொல்லிவள் கண்பசந் ததுவே* (நற். 35)

மணமனைப் பிற்றைஞான்று புக்க தோழி நன்காற்றுவித்தாயென்ற தலைமகற்குச் சொல்லியது. 719

• • • • •

*இவளே, கானல் நண்ணிய காமர் சிறுகுடி*
*நீல்நிறப் பெருங்கடல் கலங்க உள்புக்கு*
*மீனெறி பரதவர் மகளே நீயே,*

நெடுங்கொடி நுடங்கும் நியம மூதூர்க்
கடுந்தேர்ச் செல்வன் காதல் மகனே
நிணச்சுறா அறுத்த உணக்கல் வேண்டி
இனப்புள் ஓப்பும் எமக்குநலன் எவனோ
புலவு நாறுதும் செலநின் றீமோ
பெருநீர் விளையுளெஞ் சிறுநல் வாழ்க்கை
நும்மொடு புரைவதோ அன்றே
எம்ம னோரின் செம்மலு முடைத்தே (நற். 45)

குறைவேண்டிய தலைவனைத் தோழி சேட்படுத்தது. 720

## நெய்தற்றத்தனார்

படுதிரை கொழீஇய பால்நிற எக்கர்த்
தொடியோர் மடிந்தெனத் துறைபுலம் பின்றே
முடிவலை முகந்த முடங்கிறாப் பரவைப்
படுபுள் ஓப்பலிற் பகன்மாய்ந் தன்றே
கோட்டுமீன் எறிந்த உவகையர் வேட்டமடிந்து
எமரும் அல்கினர் ஏமார்ந் தனமெனச்
சென்றுநாம் அறியின் எவனோ தோழி
மன்றப் புன்னை மாச்சினை நறுவீ
முன்றில் தாழையொடு கமழுந்
தெண்கடற் சேர்ப்பன்வாழ் சிறுநல் லூர்க்கே (நற். 49)

தோழி தலைமகளை இரவுக்குறி நயப்பித்தது. 721

## முதுகூற்றனார்

பெருமுது செல்வர் பொன்னுடைப் புதல்வர்
சிறுதோள் கோத்த செவ்வரிப் பறையின்
கண்ணகத் தெழுதிய குரீஇப் போலக்
கோல்கொண் டலைப்பப் படீஇயர் மாதோ
வீரை வேண்மான் வெளியன் தித்தன்
முரசுமுதற் கொளீஇய மாலை விளக்கின்
வெண்கோ டியம்ப நுண்பனி அரும்பக்
கையற வந்த பொழுதொடு மெய்சோர்ந்து
அவல நெஞ்சினம் பெயர உயர்திரை

*நீடுநீர்ப் பனித்துறைச் சேர்ப்பன்*
*ஓடுதேர் நுண்நுகம் நுழைத்த மாவே* (நற். 58)

பகற்குறிவந்து நீங்குந் தலைமகன் போக்கு நீக்கித் தோழி மாவின்மேல் வைத்துச் சொல்லியது. 722

## உலோச்சனார்

*உரவுக்கடல் உழந்த பெருவலைப் பரதவர்*
*மிகுமீன் உணக்கிய புதுமண லாங்கண்*
*கல்லென் சேரிப் புலவற் புன்னை*
*விழவுநாறு விளங்கிணர் வியந்துடன் கமழும்*
*அழுங்க லூரோ அறனின் றதனால்*
*அறனில் அன்னை யருங்கடிப் படுப்பப்*
*பசலை யாகி விளிவது கொல்லோ*
*புள்ளுற வொசிந்த பூமயங் கள்ளற்*
*கழிச்சுரம் நிவக்கும் இருஞ்சிறை இவுளி*
*திரைதரு புணரியிற் கழூஉம்*
*மலிதிரைச் சேர்ப்பனொ டமைந்தநந் தொடர்பே* (நற். 63)

அலரச்சத்தாற் றோழி சிறைப்புறமாகச் செறிப்பறிவுறீஇயது. 723

## பேரிசாத்தனார்

*சேய்விசும் பிவர்ந்த செழுங்கதிர் மண்டிலம்*
*மால்வரை மறையத் துறைபுலம் பின்றே*
*இறவருந்தி யெழுந்த கருங்கால் வெண்குருகு*
*வெண்குவட்டு அருஞ்சிறைத் தாஅய்க் கரைய*
*கருங்கோட்டுப் புன்னை இறைகொண் டனவே*
*கணைக்கான் மாமலர் கரப்ப மல்குகழித்*
*துணைச்சுறா வழங்கலும் வழங்கும் ஆயிடை*
*எல்லிமிழ் பனிக்கடல் மல்குசுடர்க் கொளீஇ*
*எமரும் வேட்டம் புக்கனர் அதனால்*
*தங்கின் எவனோ தெய்ய பொங்குபிசிர்*
*முழவிசைப் புணரி எழுதரும்*
*உடைகடற் படப்பையெம் உறைவின் ஊர்க்கே* (நற். 67)

பகற்குறிவந்து நீங்குந் தலைமகனைத் தோழி வரைவுகடாயது. 724

## இளம்போதியார்

*பேணுப பேணார் பெரியோர் என்பது*
*நாணுத்தக் கன்றது காணுங் காலை*
*உயிரோர் அன்ன செயிர்தீர் நட்பின்*
*நினக்கியான் மறைத்தல் யாவது மிகப்பெரிது*
*அழிதக் கன்றால் தானே கொண்கன்*
*யான்யாய் அஞ்சுவல் எனினுந் தானே*
*பிரிதல் சூழான் மன்னே இனியே*
*கானல் ஆயம் அறியினும் ஆனாது*
*அலர்வது அன்றுகொல் என்னும் அதனால்*
*புலர்வது கொல்லவன் நட்பெனா*
*அஞ்சுவல் தோழிஎன் நெஞ்சத் தானே* (நற். 72)

தோழி சிறைப்புறமாகத் தலைவிக்கு உரைப்பாளாய்ச் சொல்லியது. 725

## கீரங்கீரனார்

*கோட்சுறா வழங்கும் வாட்கேழ் இருங்கழி*
*மணியேர் நெய்தல் மாமலர் நிறையப்*
*பொன்னேர் நுண்தாது புன்னை தாஅம்*
*வீழ்தாள் தாழைப் பூக்கமழ் கானல்*
*படர்வந்து நலியுஞ் சுடர்செல் மாலை*
*நோய்மலி பருவரல் நாமிவண் உய்கம்*
*கேட்டிசின் வாழி தோழி தெண்கழி*
*வள்வாய் ஆழி உள்வாய் தோயினும்*
*புள்ளுநிமிர்ந் தன்ன பொலம்படைக் கலிமா*
*வலவன் கோலுற அறியா*
*உரவுநீர்ச் சேர்ப்பன் தேர்மணிக் குரலே* (நற். 78)

தோழி வரைவு மலிந்தது. 726

## பிசிராந்தையார்

*நீயுணர்ந் தனையே தோழி வீயுகப்*
*புன்னை பூத்த இன்நிழல் உயர்கரைப்*
*பாடிமிழ் பனிக்கடல் துழைஇப் பெடையொடு*
*உடங்கிரை தேருந் தடந்தாள் நாரை*

*ஐய சிறுகண் செங்கடைச் சிறுமீன்*
*மேக்குயர் சினையின் மீமிசைக் குடம்பைத்*
*தாய்ப்பயிர் பிள்ளை வாய்ப்படச் சொரியும்*
*கானலம் படப்பை ஆனா வண்மகிழ்ப்*
*பெருநல் ஈகைநம் சிறுகுடிப் பொலியப்*
*புள்ளுயிர்க் கொட்பின் வள்ளுயிர் மணித்தார்க்*
*கடுமாப் பூண்ட நெடுந்தேர்*
*நெடுநீர்ச் சேர்ப்பன் பகல்இவண் வரவே (நற். 91)*

தோழி தலைமகட்கு வரைவு மலிந்துரைத்தது. 727

## கோக்குளமுற்றனார்

*இதுவே, நறுவீ ஞாழல் மாமலர் தாஅய்ப்*
*புன்னை தைைந்த வெண்மணல் ஒருசிறைப்*
*புகுவது புணர்ந்த பொழிலே உதுவே*
*பொம்மற் படுதிரை நம்மோடு ஆடிப்*
*புறந்தாழ்பு இருளிய பிறங்குகுரல் ஐம்பால்*
*துவரினர் அருளிய துறையே அதுவே*
*கொடுங்கழை நிவந்த நெடுங்கால் நெய்தல்*
*அம்பகை நெறித்தழை அணிபெறத் தைஇத்*
*தமியர் சென்ற கானல் என்றாங்கு*
*உள்ளுதோ றுள்ளுதோ றுருகிப்*
*பைஇப் பையப் பசந்தனை பசப்பே (நற். 96)*

சிறைப்புறமாகத் தோழி தலைவிக்குரைப்பாளாய் வரைவுகடாயது. 728

• • • • •

*அத்த இருப்பைப் பூவின் அன்ன*
*துய்த்தலை இறவொடு தொகைமீன் பெறீஇயர்*
*வரிவலைப் பரதவர் கருவினைச் சிறாஅர்*
*மரன்மேற் கொண்டு மான்கணந் தகைமார்*
*வெந்திறல் இளையவர் வேட்டெழுந் தாங்குத்*
*திமில்மேற் கொண்டு திரைச்சுரம் நீந்தி*
*வாள்வாய்ச் சுறவொடு வயமீன் கெண்டி*
*நிணம்பெய் தோணியர் இகுமணல் இழிதரும்*

*பெருங்கழிப் பாக்கங் கல்லென*
*வருமே தோழி கொண்கன் தேரே* (நற். 111)

விரிச்சி பெற்றுப் புகன்ற தோழி தலைவிக்குரைத்தது. 729

## காஞ்சிப்புலவனார்

*உரையாய் வாழி தோழி இருங்கழி*
*இரையார் குருகின் நிரைப்பறைத் தொழுதி*
*வாங்குமடற் குடம்பைத் தூங்கிருள் துவன்றும்*
*பெண்ணை ஓங்கிய வெண்மணல் படப்பைக்*
*கானல் ஆயமொடு காலைக் குற்ற*
*கட்கமழ் அலர தண்ணறுங் காவி*
*அம்பகை நெறித்தழை அணிபெறத் தைஇ*
*வரிபுனை சிற்றில் பரிசிறந்து ஓடிப்*
*புலவுத்திரை உதைத்த கொடுந்தாள் கண்டல்*
*செம்பேர் இரணை அலவற் பார்க்குஞ்*
*சிறுவிளை ஆடலும் அழுங்க*
*நினக்குப் பெருந்துய ராகிய நோயே* (நற். 123)

தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைவிக்கு உரைப்பாளாய்ச் சொல்லியது.
730

## மோசி கண்ணத்தனார்

*ஒன்றில் காலை அன்றில் போலப்*
*புலம்புகொண்டு உறையும் புன்கண் வாழ்க்கை*
*யானும்ஆற் றேனது தானும்வந் தன்று*
*நீங்கல் வாழியர் ஐய ஈங்கை*
*முகைவீ அதிரல் மோட்டுமணல் எக்கர்*
*நௌவி நோன்குளம்பு அழுந்தென வெள்ளி*
*உருக்குறு கொள்கலங் கடுப்ப விருப்புறத்*
*தெண்ணீர்க் குமிழி இழிதருந்*
*தண்ணீர் ததைஇ நின்ற பொழுதே* (நற். 124)

பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைவற்குரைத்தது. 731

## சீத்தலைச்சாத்தனார்

*இருங்கழி துழைஇய ஈர்ம்புற நாரை*
*இறகெறி திவலையிற் பனிக்கும் பாக்கத்து*

*உவன்வரின் எவனோ பாண பேதை*
*கொழுமீன் ஆர்கைச் செழுநகர் நிறைந்த*
*கல்லாக் கதவர் தன்னையர் ஆகவும்*
*வண்டல் ஆயமொடு பண்டுதான் ஆடிய*
*ஈனாப் பாவை தலையிட்டு ஓரும்*
*மெல்லம் புலம்பன் அன்றியுஞ்*
*செல்வாம் என்னுங் கான லானே* (நற். 127)

பாணற்குத் தோழி வாயின் மறுத்தது. 732

## உலோச்சனார்

*ஆடிய தொழிலும் அல்கிய பொழிலும்*
*உள்ளல் ஆகா உயவு நெஞ்சமொடு*
*ஊடலும் உடையமோ உயர்மணற் சேர்ப்ப*
*திரைமுதிர் அரைய தடந்தாள் தாழைச்*
*சுறவுமருப்பு அன்ன முள்தோடு ஒசிய*
*இறவார் இனக்குருகு இறைகொள இருக்கும்*
*நறவுமகிழ் இருக்கை நற்றேர்ப் பெரியன்*
*கள்கமழ் பொறையாறு அன்னவென்*
*நற்றோள் நெகிழ மறத்தல் நுமக்கே* (நற். 131)

மணமனையிற் பிற்றைஞான்று புக்க தோழியைத் தலைவன் வேறுபடாமை யாற்றுவித்தாய் பெரியை காண் என்றாற்குத் தோழி சொல்லியது. 733

• • • • •

*பேரூர் துஞ்சும் யாரும் இல்லைத்*
*திருந்துவாய்ச் சுறவம் நீர்நான்று ஒய்யெனப்*
*பெருந்தெரு உதிர்தரு பெயலுறு தண்வளி*
*போரமை கதவப் புரைதொறும் தூவக்*
*கூரெயிற்று எகினம் நடுங்கும் நன்னகர்ப்*
*பயில்படை நிவந்த பல்பூஞ் சேக்கை*
*அயலும் மாண்சிறை யதுவே அதன்றலைக்*
*காப்புடை வாயில் போற்றோ என்னும்*
*யாமங் கொள்பவர் நெடுநா ஒண்மணி*
*ஒன்றெறி பாணியின் இரட்டும்*
*இன்றுகொல் அளியேன் பொன்றும் நாளே* (நற். 132)

காப்புமிகுதிக்கண் ஆற்றாளாகிய தலைவிக்குத் தோழி சொல்லியது. 734

## கதப்பிள்ளையார்

*தூங்கல் ஓலை ஓங்குமடற் பெண்ணை*
*மாவரை புதைத்த மணன்மலி முன்றில்*
*வரையாத் தாரம் வருவிருந்து அயருந்*
*தண்குடி வாழ்நர் அங்குடிச் சீறூர்*
*இனிதுமன் றம்ம தானே பனிபடு*
*பல்சுரம் உழந்த நல்கூர் பரிய*
*முழங்குதிரைப் புதுமணல் அழுந்தக் கொட்கும்*
*வாலுளைப் பொலிந்த புரவித்*
*தேரோர் நம்மொடு நகாஅ ஊங்கே (நற். 135)*

வரைவுநீட்டிப்ப அலராமெனக் கவன்ற தோழி, சிறைப்புறமாகச் சொல்லியது. 735

## அம்மூவனார்

*உவர்விளை உப்பின் குன்றுபோல் குப்பை*
*மலையுய்த்துப் பகரும் நிலையா வாழ்க்கைக்*
*கணங்கொள் உமணர் உயங்குவயின் ஒழித்த*
*பண்ணழி பழம்பார் வெண்குருகு ஈனும்*
*தண்ணந் துறைவன் முன்னாள் நம்மொடு*
*பாசடைக் கலித்த கணைக்கால் நெய்தல்*
*பூவுடன் நெறிதரு தொடலை தைஇக்*
*கண்ணறிவு உடைமை அல்லது நுண்வினை*
*இழையணி அல்குல் விழவாடு மகளிர்*
*முழங்குதிரை இன்சீர் தூங்கும்*
*அழுங்கல் மூதூர் அறிந்தன்றோ இன்றே (நற். 138)*

அலராயிற்றென ஆற்றாளாய தலைமகட்குத் தலைவன் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது. 736

## நம்பிகுட்டுவன்

*இருங்கழி பொருத ஈர வெண்மணல்*
*மாக்கொடி அடும்பின் மாயிதழ் அலரி*
*கூந்தன் மகளிர் கோதைக் கூட்டுங்*
*காமர் கொண்கன் நாம்வெங் கேண்மை*
*அமைந்தே தில்லா ஊங்கு நம்மொடு*
*புணர்ந்தனன் போல உணரக் கூறித்*

*தான்யாங் கென்னும் அறனில் அன்னை*
*யானெழில் அறிதலும் உரியள் நீயும்நம்*
*பராரைப் புன்னைச் சேரி மெல்ல*
*நள்ளென் கங்குலும் வருமரோ*
*அம்ம வாழியவர் தேர்மணிக் குரலே* (நற். 145)

இரவுக்குறிவந்த தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி வரைவுகடாயது.
737

## உலோச்சனார்

*சிலரும் பலரும் கடைக்கண் நோக்கி*
*மூக்கின் உச்சிச் சுட்டுவிரல் சேர்த்தி*
*மறுகின் பெண்டிர் அம்பல் தூற்றச்*
*சிறுகோல் வலந்தனள் அன்னை அலைப்ப*
*அலந்தனென் வாழி தோழி கானல்*
*புதுமலர் தீண்டிய பூநாறு குரூஉச்சுவல்*
*கடுமா பூண்ட நெடுந்தேர்க் கடைஇ*
*நடுநாள் வரூஉம் இயல்தேர்க் கொண்கனொடு*
*செலவயர்ந் திசினால் யானே*
*அலர்சுமந்து ஒழிகவிவ் அழுங்கல் ஊரே* (நற். 149)

தோழி தலைவியை உடன்போக்கு வலித்தது. 738

## கண்ணம்புல்லனார்

*மணிதுணிந்து அன்ன மாயிரும் பரப்பின்*
*உரவுத்திரை கெழீஇய பூமலி பெருந்துறை*
*நிலவுக்குவித்து அன்ன மோட்டுமணல் இடிகரைக்*
*கோடுதுணர்ந்து அன்ன குருகொழுக்கு எண்ணி*
*எல்லை கழிப்பினம் ஆயின் மெல்ல*
*வளிசீத்து வரித்த புன்னை முன்றில்*
*கொழுமீன் ஆர்கைச் செழுநகர்ச் செலீஇய*
*எழுவெனின் அவளும் ஒல்லாள் யாமும்*
*ஒழியென வல்ல மாயினம் யாமத்து*
*உடைதிரை ஒலியின் துஞ்சு மலிகடல்*
*சில்குடிப் பாக்கங் கல்லென*
*அல்குவது ஆகநீ அமர்ந்த தேரே* (நற். 159)

தலைவியின் ஆற்றாமையும் உலகியலுங் கூறித் தோழி வரைவுகடாயது. 739

• • • • •

*உயிர்த்தன வாகுக அளிய நாளும்*
*அயிர்த்துகள் முகந்த ஆனா ஊதையொடு*
*எல்லியும் இரவும் என்னாது கல்லெனக்*
*கறங்கிசை இனமணி கைபுணர்ந்து ஒலிப்ப*
*நிலவுத்தவழ் மணற்கோடு ஏறிச் செலவர*
*இன்றென் நெஞ்சம் போலத் தொன்றுநனி*
*வருந்துமன் அளிய தாமே பெருங்கடல்*
*நீல்நிறப் புன்னைத் தமியொண் கைதை*
*வானம் மூழ்கிய வயங்கொள் நெடுஞ்சுடர்க்*
*கதிர்காய்ந்து எழுந்தகங் கனலி ஞாயிற்று*
*வைகுறு வனப்பில் தோன்றும்*
*கைதையங் கானல் துறைவன் மாவே* (நற். 163)

வரைவுமலிந்து சொல்லியது. 742

• • • • •

*கருங்கோட்டுப் புன்னைக் குடக்குவாங்கு பெருஞ்சினை*
*விருந்தின்வெண் குருகு ஆர்ப்பின் ஆஅய்*
*வண்மகிழ் நாளவைப் பரிசில் பெற்ற*
*பண்ணமை நெடுந்தேர்ப் பாணியின் ஒலிக்கும்*
*தண்ணந் துறைவன் தூதொடும் வந்த*
*பயன்தெரி பனுவல் பைதீர் பாண*
*நின்வாய்ப் பணிமொழி களையா பன்மாண்*
*புதுவீ ஞாழலொடு புன்னை தாஅம்*
*மணங்கமழ் கானல் மாண்நலம் இழந்த*
*இறையேர் எல்வளைக் குறுமகள்*
*பிறையேர் திருநுதல் பாஅய பசப்பே* (நற். 167)

தோழி பாணர்க்கு வாயின் மறுத்தது. 743

• • • • •

*விளையாடு ஆயமொடு வெண்மணல் அழுத்தி*
*மறந்தனம் துறந்த காழ்முளை அகைய*
*நெய்பெய் தீம்பால் பெய்தினிது வளர்ப்ப*
*நும்மினுஞ் சிறந்தது நுவ்வை ஆகுமென்று*
*அன்னை கூறினள் புன்னையது சிறப்பே*
*அம்ம நாணுதும் நும்மொடு நகையே*
*விருந்திற் பாணர் விளரிசை கடுப்ப*

*வலம்புரி வான்கோடு நரலும் இலங்குநீர்த்*
*துறைகெழு கொண்கநீ நல்கின்*
*நிறைபடு நீழல் பிறவுமா ருளவே* (நற். 172)

பகற்குறிவந்த தலைமகனைத் தோழி வரைவுகடாயது. 742

• • • • •

*நெடுங்கடல் அளித்த கொடுந்திமில் பரதவர்*
*கொழுமீன் கொள்ளை அழிமணல் குவைஇ*
*மீன்நெய் அட்டிக் கிளிஞ்சில் பொத்திய*
*சிறுதீ விளக்கின் துஞ்சும் நறுமலர்ப்*
*புன்னை ஓங்கிய துறைவனோடு அன்னை*
*தானறிந் தன்றோ இலளே பானாள்*
*சேரியம் பெண்டிர் சிலசொல் நம்பிச்*
*சுடுவான் போல நோக்கும்*
*அடுபால் அன்னஎன் பசலை மெய்யே* (நற். 175)

தோழி சிறைப்புறமாகச் சொல்லியது. 743

• • • • •

*ஆடமை ஆக்கம் ஐதுபிசைந்து அன்ன*
*தோடமை தூவித் தடந்தாள் நாரை*
*நலனுணப் பட்ட நல்கூர் பேடை*
*கழிபெயர் மருங்கின் சிறுமீன் உண்ணாது*
*கைதையம் படுசினைப் புலம்பொடு வதியும்*
*தண்ணந் துறைவன் தேரே கண்ணின்*
*காணவும் இயைந்தன்று மன்னே நாணி*
*நள்ளென் யாமத்துங் கண்படை பெறேஎன்*
*புள்ளொலி மணிச்செத்து ஓர்ப்ப*
*விளிந்தன்று மாதவத் தெளிந்தஎன் நெஞ்சே* (நற். 178)

சிறைப்புறமாகத் தோழி செறிப்பறிவுறீஇயது. 744

• • • • •

*தம்நாட்டு விளைந்த வெண்ணெல் தந்து*
*பிறநாட்டு உப்பின் கொள்ளை சாற்றி*
*நெடுநெறி ஒழுகை நிலவுமணல் நீந்தி*
*அவணுறை முனிந்த ஒக்கலொடு புலம்பெயர்ந்து*

*உமணர் போகலும் இன்னா தாகும்*
*மடவை மன்ற கொண்க வயின்தோறு*
*இன்னா தலைக்கும் ஊதையொடு ஓரும்*
*நும்மில் புலம்பின் மாலையும் உடைத்தே*
*இனமீன் ஆர்ந்த வெண்குருகு மிதித்த*
*வறுநீர் நெய்தல் போல*
*வாழாள் ஆதல் சூழா தோயே* (நற். 183)

வரைவிடைவைத்துப் பிரியுந் தலைவற்குத் தோழி சொல்லியது. 745

## உலோச்சனார்

*சிறுவீ ஞாழல் தேன்தோய் ஒள்ளிணர்*
*நேரிழை மகளிர் வார்மணல் இழைத்த*
*வண்டற் பாவை வனமுலை முற்றத்து*
*ஒண்பொறிச் சுணங்கின் ஐதுபடத் தாஅங்*
*கண்டல் வேலிக் காமர் சிறுகுடி*
*எல்லிவந் தன்றோ தேரெனச் சொல்லி*
*அலரெழுந் தன்றிவ் வூரே பலருளும்*
*என்னோக் கினளே அன்னை நாளை*
*மணிப்பூ முண்டகங் கொய்யே னாயின்*
*அணிக்கவின் உண்மையோ அரிதே மணிக்கழி*
*நறும்பூங் கானல் வந்தவர்*
*வறுந்தேர் போதல் அதனினும் அரிதே* (நற். 191)

தோழி தலைமகன் சிறைப்புறமாகச் செறிப்பறிவுறுப்பான் வேண்டிச் சொல்லியது. 746

• • • • •

*அருளா யாகலோ கொடிதே இருங்கழிக்*
*குருளை நீர்நாய் கொழுமீன் மாந்தித்*
*தில்லையம் பொதும்பிற் பள்ளி கொள்ளும்*
*மெல்லம் புலம்ப யான்கண் டிசினே*
*கல்லென் புள்ளின் கானலந் தொண்டி*
*நெல்லரி தொழுவர் கூர்வா ளுற்றெனப்*
*பல்லிதழ் தயங்கிய கூம்பா நெய்தல்*
*நீரலைத் தோற்றம் போல*
*ஈரிய கலுழுநீ நயந்தோள் கண்ணே* (நற். 195)

களவின்கண் நெடுங்காலம் வந்தொழுக ஆற்றாளாயின தோழி, வரைவு கடாயது. 747

## உலோச்சனார்

*முழங்குதிரை கொழீஇய மூரி எக்கர்த்*
*தடந்தாள் தாழை முள்ளுடை நெடுந்தோட்டு*
*அகமடற் பொதுளிய முகைமுதிர் வான்பூங்*
*கோடு வார்ந்தன்ன வெண்பூத் தாழை*
*எறிதிரை உதைத்தலிற் பொங்கித் தாதுசோர்புசிறுகுடிப்*
*பாக்கத்து மறுகுபுலா மறுக்கும்*
*மணங்கமழ் கானல் இயைந்தநங் கேண்மை*
*ஒருநாள் பிரியினும் உய்வரிது என்னாது*
*கதழ்பரி நெடுந்தேர் வரவாண்டு அழுங்கச்*
*செய்ததன் தப்பல் அன்றியும்*
*உயவுப்புணர்ந் தன்றிவ் வழுங்கல் ஊரே (நற். 203)*

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி சொல்லி வரைவு கடாயது. 748

• • • • •

*கண்டல் வேலிக் கழிசூழ் படப்பை*
*முண்டகம் வேய்ந்த குறியிறைக் குரம்பைக்*
*கொழுமீன் கொள்பவர் பாக்கங் கல்லென*
*நெடுந்தேர் பண்ணி வரலா னாதே*
*குன்றத் தன்ன குவவுமணல் நீந்தி*
*வந்தனர் பெயர்வர்கொல் தாமே அல்கல்*
*இளையரும் முதியருங் கிளையுடன் குழீஇக்*
*கோட்சுறா எறிந்தெனச் சுருங்கிய நரம்பின்*
*முடிமுதிர் பரதவர் மடமொழிக் குறுமகள்*
*வலையுந் தூண்டிலும் பற்றிப் பெருங்கால்*
*திரையெழு பௌவம் முன்னிய*
*கொலைவெஞ் சிறாஅர் பாற்பட் டனளே (நற். 207)*

நொதுமலர் வரைவுழித் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது. 749

## கோட்டியூர் நல்லந்தையார்

*யார்க்குநொந் துரைக்கோ யானே ஊர்கடல்*
*ஓதஞ் சென்ற உப்புடைச் செறுவின்*
*கொடுங்கழி மருங்கின் இரைவேட் டெழுந்த*
*கருங்கால் குருகின் கோளுய்ந்து போகிய*

*முடங்குபுற இறவின் மோவாய் ஏற்றை*
*எறிதிரை தொகுத்த எக்கர் நெடுங்கோட்டுத்*
*துறுகடல் தலைய தோடுபொதி தாழை*
*வண்டுபடு வான்போது வெரூஉந்*
*துறைகெழு கொண்கன் துறந்தனன் எனவே (நற். 211)*

வரைவுநீட ஒருதலை ஆற்றாளாமென்ற தோழி சிறைப்புறமாகத் தன்னுள்ளே சொல்லியது.
750

## மதுரைச் சுள்ளம்போதனார்

*குணகடல் இவர்ந்து குரூஉக்கதிர் பரப்பிப்*
*பகல்கெழு செல்வன் குடமலை மறையப்*
*புலம்புவந் திறுத்த புன்கண் மாலை*
*இலங்குவளை மகளிர் வியனகர் அயர*
*மீன்நிணந் தொகுத்த ஊன்நெய் ஒண்சுடர்*
*நீல்நிறப் பரப்பின் தயங்குதிரை உதைப்பக்*
*கரைசேர்பு இருந்த கல்லென் பாக்கத்து*
*இன்றுநீ இவணை யாகி எம்மொடு*
*தங்கின் எவனோ தெய்ய செங்கால்*
*கொடுமுடி அவ்வலை பரியப் போகிய*
*கோட்சுறாக் குறித்த முன்பொடு*
*வேட்டம் வாயாது எமர்வா ரலரே (நற். 215)*

பகற்குறிவந்து மீள்வானை, 'அவள் ஆற்றுந் தன்மையள் அல்லள்; நீயிர் இங்குத் தங்கற்பாலீர்; எமரும் இன்னதொரு தவற்றினர்' எனத் தோழி தலைமகற்குச் சொல்லியது. 751

## உலோச்சனார்

*இவள்தன், காமம் பெருமையிற் காலையென் னாள்நின்*
*அன்புபெரி துடைமையின் அளித்தல் வேண்டிப்*
*பகலும் வருதி பல்பூங் கானல்*
*இந்நீ ராகலோ இனிதால் எனின்இவள்*
*அலரின் அருங்கடிப் படுகுவள் அதனால்*
*எல்லி வம்மோ மெல்லம் புலம்ப*
*சுறவினங் கலித்த நிறையிரும் பரப்பின்*
*துறையினுந் துஞ்சாக் கண்ணர்*
*பெண்டிரும் உடைத்திவ் வம்பல் ஊரே (நற். 223)*

பகற்குறி வந்து மீள்வானைத் தோழி இரவுக்குறி நேர்வாள் போன்று அது மறுத்து வரைவுகடாயது.
752

## தேவனார்

*அறிந்தோர் அறனிலர் என்றலர் சிறந்த*
*இன்னுயிர் கழியினும் நனியின் னாதே*
*புன்னையங் காவல் புணர்குறி வாய்த்த*
*பின்ஈர் ஓதியென் தோழிக்கு அன்னோ*
*படுமணி யானைப் பசும்பூண் சோழர்*
*கொடிநுடங்கு மறுகின் ஆர்க்காட்டு ஆங்கண்*
*கள்ளுடைத் தடவின் புள்ளொலித்து ஓவாத்*
*தேர்வழங்கு தெருவின் அன்ன*
*கௌவையா கின்றது ஐயநின் அருளே* (நற். 227)

வரையாது நெடுங்காலம் வந்தொழுகத் தோழி தலைமகனை வரைவுமுடுகச் சொல்லியது. 753

## இளநாகனார்

*மையற விளங்கிய மணிநிற விசும்பின்*
*கைதொழு மரபின் எழுமீன் போலப்*
*பெருங்கடல் பரப்பின் இரும்புறந் தோயச்*
*சிறுவெண் காக்கை பலவுடன் ஆடுந்*
*துறைபுலம்பு உடைத்தே தோழி பண்டும்*
*உள்ளூர்க் குரீஇக் கருவுடைத் தன்ன*
*பெரும்போது அவிழ்ந்த கருந்தாள் புன்னைக்*
*கானலங் கொண்கன் தந்த*
*காதல் நம்மொடு நீங்கா மாறே* (நற். 231)

சிறைப்புறமாகத் தோழி சொல்லி வரைவுகடாயது. 754

• • • • •

*உரவுத்திரை பொருத பிணர்படு தடவுமுதல்*
*அரவுவாள் வாய முள்இலைத் தாழை*
*பொன்னேர் தாதின் புன்னையொடு கமழும்*
*பல்பூங் கானல் பகற்குறி வந்துநம்*
*மெய்கவின் சிதையப் பெயர்ந்தன னாயினுங்*
*குன்றில் தோன்றும் குவவுமணல் ஏறிக்*
*கண்டனம் வருகஞ் சென்மோ தோழி*
*தண்தார் அகலம் வண்டிமிர்பு ஊதப்*

*படுமணிக் கலிமா கடைஇ*
*நெடுநீர்ச் சேர்ப்பன் வரூஉம் ஆறே* (நற். 235)

வரைவுநீட ஆற்றாளாங்காலத்துத் தோழி வரைவுமலிந்தது. 755

## குன்றியனார்

*ஞான்ற ஞாயிறு குடமலை மறைய*
*மான்ற மாலை மகிழ்ந்த பரதவர்*
*இனிதுபெறு பெருமீன் எளிதினின் மாறி*
*அலவன் ஆடிய புலவுமணல் முன்றில்*
*காமர் சிறுகுடிச் செல்நெறி வழியின்*
*ஆய்மணி பொதியவிழ்ந் தாங்கு நெய்தற்*
*புல்லிதழ் பொதிந்த பூத்தப மிதிக்கும்*
*மல்லல் இருங்கழி மலிநீர்ச் சேர்ப்பற்கு*
*அமைந்துதொழில் கேட்டன்றோ இலமே முன்கை*
*வார்கோல் எல்வளை உடைய வாங்கி*
*முயங்கெனக் கலுழ்ந்த இவ்வூர்*
*எற்றா வதுகொல்யா மற்றொன்று செயினே* (நற். 239)

தலைமகன் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது. 756

## அல்லங்கீரனார்

*நகையா கின்றே தோழி தகைய*
*அணிமலர் முண்டகத்து ஆய்பூங் கோதை*
*மணிமருள் ஐம்பால் வண்டுபடத் தைஇத்*
*துணிநீர்ப் பௌவந் துணையொடு ஆடி*
*ஒழுகுநுண் நுசுப்பின் அகன்ற அல்குல்*
*தெளிதீங் கிளவி யாரை யோவென்*
*அரிதுபுணர் இன்னுயிர் வெளவிய நீயெனப்*
*பூண்மலி நெடுந்தேர்ப் புரவி தாங்கித்*
*தான்நம் அணங்குதல் அறியான் நம்மின்*
*தான்அணங் குற்றமை கூறிக் கானல்*
*சுரும்பிமிர் சுடர்நுதல் நோக்கிப்*
*பெருங்கடற் சேர்ப்பன் தொழுதுநின் றதுவே* (நற். 245)

குறைநேர்ந்த தோழி தலைமகளை முகம்புக்கது. 757

## உலோச்சனார்

*வண்டல் தைஇயும் வருதிரை உதைத்தும்*
*குன்றோங்கு வெண்மணல் கொடியடும்பு கொய்தும்*
*துனியில் நன்மொழி இனிய கூறியும்*
*சொல்லெதிர் பெறாஅய் ஆகி மெல்லச்*
*செலீஇய செல்லும் ஒலியிரும் பரப்ப*
*உமணர் தந்த உப்புநொடை நெல்லின்*
*அயினி மாஇன்று அருந்த நீவிக்*
*கணம்நாறு பெருந்தொடை புரளும் மார்பின்*
*துணியிலை தமியை சேக்குவை அல்லை*
*நேர்கண் சிறுதடி நீரின் மாற்றி*
*வானம் வேண்டா உழவினெம்*
*கானலஞ் சிறுகுடிச் சேர்ந்தனை செலினே (நற். 254)*

தோழி படைத்து மொழிந்தது. 758

## நக்கீரர்

*பல்பூங் கானல் பகற்குறி மரீஇச்*
*செல்வல் கொண்க செறித்தனள் யாயே*
*கதிர்கால் வெம்பக் கல்காய் ஞாயிற்றுத்*
*திருவுடை வியனகர் வருவிருந்து அயர்மார்*
*பொற்றொடி மகளிர் புறங்கடை உகுத்த*
*கொக்குகிர் நிமிரல் மாந்தி எற்பட*
*அகலங் காடி அசைநிழற் குவித்த*
*பச்சிறாக் கவர்ந்த பசுங்கண் காக்கை*
*தூங்கல் வங்கத்துக் கூம்பிற் சேக்கும்*
*மருங்கூர்ப் பட்டினத்து அன்னவிவள்*
*நெருங்கேர் எல்வளை ஓடுவ கண்டே (நற். 258)*

தோழி செறிப்பறிவுறீஇயது. 759

## இளவெயினனார்

*பிறைவனப்பு இழந்த நுதலும் யாழநின்*
*இறைவரை நில்லா வளையும் மறையாது*
*ஊரலர் தூற்றும் கௌவையும் நாணிட்டு*
*உரையவற்கு உரையாம் ஆயினும் இரைவேட்டுக்*

*கடுஞ்சூல் வயவொடு கானலெய் தாது*
*கழனி ஒழிந்த கொடுவாய்ப் பேடைக்கு*
*முடமுதிர் நாரை கடல்மீன் ஒய்யும்*
*மெல்லம் புலம்பற் கண்டுநிலை செல்லாக்*
*கரப்பவுங் கரப்பவுங் கைம்மிக்கு*
*உரைத்த தோழி உண்க ணீரே* (நற். 263)

சிறைப்புறமாகத் தோழி தலைமகனை வரைவுகடாயது. 760

## கபிலர்

*நொச்சி மாஅரும் பன்ன கண்ண*
*எக்கர் ஞெண்டின் இருங்கிளைத் தொழுதி*
*இலங்கெயிற்று ஏஎர் இன்நகை மகளிர்*
*உணங்குதினை துழவும் கைபோன் ஞாழல்*
*மணங்கமழ் நறுவீ வரிக்குந் துறைவன்*
*தன்னொடு புணர்த்த இன்னமர் கானல்*
*தனியே வருதல் நனிபுலம் புடைத்தென*
*வாரேன் மன்யான் வந்தனென் தெய்ய*
*சிறுநா வொண்மணித் தெள்ளிசை கடுப்ப*
*இனமீன் ஆர்கை ஈண்டுபுள் ஒலிக்குரல்*
*இவைமகன் என்னா அளவை*
*வயமான் தோன்றல் வந்துநின் றனனே* (நற். 267)

தோழி காப்புக் கைமிக்குக் காமம்பெருகிய காலத்துச் சிறைப்புறமாகச் சொல்லியது. 761

## பரணர்

*தடந்தாள் தாழைக் குடம்பை நோனாத்*
*தண்தலை கமழும் வண்டுபடு நாற்றத்து*
*இருள்புரை கூந்தல் பொங்குதுகள் ஆடி*
*உருள்பொலி போல எம்முனை வருதல்*
*அணித்தகை அல்லது பிணித்தல் தேற்றாப்*
*பெருந்தோள் செல்வத்து இவளினும் எல்லா*
*எற்பெரி தளித்தனை நீயே பொற்புடை*
*விரியுளைப் பொலிந்த பரியுடை நன்மான்*
*வேந்தர் ஓட்டிய ஏந்துவேல் நன்னன்*

*கூந்தல் முரற்சியின் கொடிதே*
*மறப்பன் மாதோநின் விறல்தகை மையே* (நற். 270)

தோழி வாயினேர்கின்றாள் தலைமகனை நெருங்கிச் சொல்லி வாயிலெதிர் கொண்டது. 762

## உலோச்சனார்

*படுகாழ் நாறிய பராரைப் புன்னை*
*அடுமரல் மொக்குளின் அரும்புவாய் அவிழப்*
*பொன்னின் அன்ன தாதுபடு பன்மலர்*
*சூடுநர் தொடுத்த மிச்சில் கோடுதொறும்*
*நெய்கனி பசுங்காய் தூங்குந் துறைவனை*
*இனியறிந் திசினே கொண்கன் ஆகுதல்*
*கழிச்சேறு ஆடிய கணைக்கால் அத்திரி*
*குளம்பினுஞ் சேயிறா ஒடுங்கின*
*கோதையும் எல்லாம் ஊதைவெண் மணலே* (நற். 278)

தோழி தலைமகட்கு வரைவுமலிந்தது. 763

## மதுரை மருதனிளநாகனார்

*ஒண்ணுதல் மகளிர் ஓங்குகழிக் குற்ற*
*கண்நேர் ஒப்பின் கமழ்நறு நெய்தல்*
*அகல்வரிச் சிறுமனை அணியுந் துறைவ*
*பல்லோர் ஆய்ந்த தொல்கவின் தொலைய*
*இன்னை ஆகுதல் தகுமோ ஓங்குதிரை*
*முந்நீர் மீமிசைப் பலர்தொழத் தோன்றி*
*ஏமுற விளங்கிய சுடரினும்*
*வாய்மை சான்றநின் சொல்நயந் தோர்க்கே* (நற். 283)

பகற்குறி வந்த தலைமகனைத் தோழி வரைவுகடாயது. 764

## கபிலர்

*நீர்பெயர்ந்து மாறிய செறிசேற்று அள்ளல்*
*நெய்த்தலைக் கொழுமீன் அருந்த இனக்குருகு*
*குப்பை வெண்மணல் ஏறி அரைசர்*
*ஒண்படைத் தொகுதியின் இலங்கித் தோன்றும்*

*தண்பெரும் பௌவநீர்த் துறைவற்கு நீயுங்*
*கண்டாங்கு உரையாய் கொண்மோ பாண*
*மாயிரு முள்ளூர் மன்னன் மாவூர்ந்து*
*எல்லித் தரீஇய இனநிரைப்*
*பல்லான் கிழவரின் அழிந்தவிவள் நலனே* (நற். 291)

வாயிலாகப் புக்க பாணற்குத் தோழி தலைமகளது குறிப்பறிந்து நெருங்கிச் சொல்லியது. 765

## ஔவையார்

*முரிந்த சிலம்பி னெரிந்த வள்ளியின்*
*புறனழிந்து ஒலிவருந் தாழிருங் கூந்தல்*
*ஆயமும் அழுங்கின்று யாயுமஃ தறிந்தனள்*
*அருங்கடி அயர்ந்தனள் காப்பே எந்தை*
*வேறுபல் நாட்டிற் கால்தர வந்த*
*பலவினை நாவாய் தோன்றும் பெருந்துறைக்*
*கலிமடைக் கள்ளின் சாடி அன்னஎம்*
*இளநலம் இற்கடை ஒழியச்*
*சேறும் வாழியோ முதிர்கம் யாமே* (நற். 295)

தோழி செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது. 766

## வடமவண்ணக்கன் பேரிசாத்தனார்

*உருகெழு யானை உடைகொண் டன்ன*
*ததர்பிணி அவிழ்ந்த தாழை வான்புதர்*
*தயங்கிருங் கோடை தாக்கலின் நுண்தாது*
*வயங்கிழை மகளிர் வண்டின் தாஅங்*
*காமர் சிறுகுடி புலம்பினும் அவக்காண்*
*நாமிலம் ஆகுதல் அறிதும் மன்னோ*
*வில்லெறி பஞ்சி போல மல்குதிரை*
*வளிபொரு வயங்குபிசிர் பொங்கும்*
*நளிகடற் சேர்ப்பனொடு நகாஅ ஊங்கே* (நற். 299)

தலைமகன் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது. 767

## அம்மூவனார்

*கவர்பிரி நெடுந்தேர் மணியும் இசைக்கும்*
*பெயர்பட இயங்கிய இளையரும் ஒலிப்பர்*

*கடலாடு வியலிடைப் பேரணிப் பொலிந்த*
*திதலை அல்குல் நலம்பா ராட்டிய*
*வருமே தோழி வார்மணற் சேர்ப்பன்*
*இற்பட வாங்கிய முழவுமுதற் புன்னை*
*மாவரை மறைகம் வம்மதி பானாள்*
*பூவிரி கானல் புணர்குறி வந்துநம்*
*மெல்லிணர் நறும்பொழிற் காணா*
*அல்லல் அரும்படர் காண்கம்நாம் சிறிதே* (நற். 307)

குறிநீட ஆற்றாளாகிய தலைமகளைத் தோழி வற்புறுத்தியது. 768

## உலோச்சனார்

*பெயினே, விடுமான் உழையினம் வெறுப்பத் தோன்றி*
*இருங்கதிர் நெல்லின் யாணர் அஃதே*
*வறப்பின், மாநீர் முண்டகந் தாஅய்ச் சேறுபுலர்ந்து*
*இருங்கழிச் செறுவின் வெள்ளுப்பு விளையும்*
*அழியா மரபின்நம் மூதூர் நன்றே*
*கொழுமீன் சுடுபுகை மறுகினள் மயங்கிச்*
*சிறுவீ ஞாழல் துறையுமார் இனிதே*
*ஒன்றே தோழிநங் கானலது பழியே*
*கருங்கோட்டுப் புன்னை மலர்த்தா தருந்தி*
*இருங்களிப் பிரசம் ஊதஅவர்*
*நெடுந்தேர் இன்னொலி கேட்டலோ அரிதே* (நற். 311)

அலர் கூறப்பட்டு ஆற்றாளாகிய தலைமகளைத் தோழி ஆற்றுவித்தது. 769

## வடமவண்ணக்கன் பேரிசாத்தனார்

*ஓங்கித் தோன்றுந் தீங்கள் பெண்ணை*
*நடுவ ணதுவே தெய்ய மடவரல்*
*ஆயமும் யானும் அறியாது அவண*
*மாய நட்பின் மாண்நலம் ஒழிந்துநின்*
*கிளைமை கொண்ட வளையார் முன்கை*
*நல்லோள் தந்தை சிறுகுடிப் பாக்கம்*
*புலிவரி எக்கர்ப் புன்னை உதிர்த்த*
*மலிதாது ஊதுந் தேனோடு ஒன்றி*
*வண்டின் இன்னிசை கறங்கத் திண்தேர்த்*

*தெரிமணி கேட்டலும் அரிதே*
*வருமாறு ஈதவண் மறவா தீமே* (நற். 323)

தோழி இரவுக்குறி நேர்ந்தது. 770

## உலோச்சனார்

*உவர்விளை உப்பின் உழாஅ உழவர்*
*ஓகை உமணர் வருபத நோக்கிக்*
*கான லிட்ட காவற் குப்பைப்*
*புலவுமீன் உணங்கல் படுபுள் ஓப்பி*
*மடநோக்கு ஆயமொடு உடனுப்பு ஏறி*
*எந்தை திமிலிது நுந்தை திமிலென*
*வளைநீர் வேட்டம் போகிய கிளைஞர்*
*திண்திமில் எண்ணும் தண்கடற் சேர்ப்ப*
*இனிதே தெய்யஎம் முனிவில் நல்லூர்*
*இனிவரின் தவறும் இல்லை எனையதூஉம்*
*பிறர்பிறர் அறிதல் யாவது*
*தமர்தம் அறியாச் சேரியும் உடைத்தே* (நற். 331)

தோழி இரவுக்குறி நேர்ந்தது. 771

## மோசிகீரனார்

*மாவென மதித்து மடலூர்ந்து ஆங்கு*
*மதிலென மதித்து வெண்தேர் ஏறி*
*எண்வாய் நின்மொழி மாட்டேன் நின்வயின்*
*சேரி சேரா வருவோர்க் கென்றும்*
*அருளல் வேண்டும் அன்புடை யோயெனக்*
*கண்ணினி தாகக் கோட்டியுந் தேரலன்*
*யானே எல்வளை யாத்த கானல்*
*வண்டுண் நறுவீ நுண்ணிதின் வரித்த*
*சென்னி சேவடி சேர்த்தின்*
*என்னெனப் படுமோ என்றலும் உண்டே* (நற். 342)

குறைநேர்ந்த தோழி தலைமகளை முகம்புக்கதன் சொற்கேளாது விடலின், இறப்ப ஆற்றானாயினான் என உணர்ந்து ஆற்றாளாய்த் தன்னுள்ளே சொல்லியது. 772

## நம்பி குட்டுவனார்

*கானல் காண்டல் கழன்றுகு பைங்காய்*
*நீல்நிற இருங்கழி உட்பட வீழ்ந்தென*
*உறுகால் தூக்கத் தூங்கி ஆம்பல்*
*சிறுவெண் காக்கை ஆவித்து அன்ன*
*வெளிய விரியுந் துறைவ என்றும்*
*அளிய பெரிய கேண்மை நும்போல்*
*சால்பெதிர் கொண்ட செம்மை யோருந்*
*தேறா நெஞ்சங் கையறுபு வாட*
*நீடின்று விரும்பா ராயின்*
*வாழ்தல்மற் றெவனோ தேய்கமா தெளிவே (நற். 345)*

தோழி தெளிவிடை விலக்கியது. 773

## உலோச்சனார்

*தானது பொறுத்தல் யாவது கானல்*
*ஆடரை ஒழித்த நீடிரும் பெண்ணை*
*வீழ்கா வோலைச் சூழ்சிறை யாத்த*
*கானல் நண்ணிய வார்மணல் முன்றில்*
*எல்லி அன்ன இருள்நிறப் புன்னை*
*நல்லரை முழுமுதல் அவ்வயின் தொடுத்த*
*தூங்கல் அம்பித் தூவலஞ் சேர்ப்பின்*
*கடுவெயில் கொதித்த கல்விளை உப்பு*
*நெடுநெறி ஒழுகை நிரைசெலப் பார்ப்போர்*
*அளம்போகு ஆகுலங் கடுப்பக்*
*கௌவையா கின்றது ஐயநின் நட்பே (நற். 354)*

தோழியாற் செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது. 774

## நக்கீரர்

*பெருந்தோள் நெகிழ அவ்வரி வாடச்*
*சிறுமெல் ஆகம் பெரும்பசப்பு ஊர*
*இன்னேம் ஆக எற்கண்டு நாணி*
*நின்னொடு தெளித்தனர் ஆயினும் என்னதூஉம்*
*அணங்கல் ஓம்புமதி வாழிய நீயெனக்*
*கணங்கெழு கடவுட்கு உயர்பலி தூஉய்ப்*

*பரவினம் வருகஞ் சென்மோ தோழி*
*பெருஞ்சேய் இறவின் துய்த்தலை முடங்கல்*
*சிறுவெண் காக்கை நாளிரை பெறூஉம்*
*பசும்பூண் வழுதி மருங்கை அன்னஎன்*
*அரும்பெறல் ஆய்கவின் தொலையப்*
*பிரிந்தாண்டு உறைதல் வல்லி யோரே* (நற். 358)

பட்டபின்றை வரையாது பொருள்வயிற் பிரிந்த காலத்துத் தோழி இவள் ஆற்றாளாயினள்; இவளை இழந்தேனெனக் கவன்றாள் வற்புறுத்தது. 775

## உலோச்சனார்

*கண்டல் வேலிக் கழிசூழ் படப்பைத்*
*தெண்கடல் நாட்டுச் செல்வன் யானென*
*வியங்கொண்டு ஏகினை யாயின் எனையதூஉம்*
*உறுவினைக் கசாவா உலைவில் கம்மியன்*
*பொறியறு பிணைக்கூட்டுந் துறைமணல் கொண்டு*
*வம்மோ தோழி மலிநீர்ச் சேர்ப்ப*
*பைந்தழை சிதையக் கோதை வாட*
*நன்னர் மாலை நெருநை நின்னொடு*
*சிலவிலங்கு எல்வளை ஞெகிழ*
*அலவன் ஆட்டுவோள் சிலம்புஞெமிர்ந் தெனவே* (நற். 363)

பகற்குறி வந்துநீங்குந் தலைமகனைத் தோழி தலைமகளை என்னை யாற்றுவிக்குமென்றாகாதோ எம்பெருமான் கவலாது செல்வது; யான் ஆற்றுவிக்கும் இடத்துக் கவன்றால் நீ ஆற்றுவியெனச் சொல்லியது. 776

## உலோச்சனார்

*அழிதக் கன்றே தோழி கழிசேர்பு*
*கானல் பெண்ணைத் தேனுடை அழிபழம்*
*வள்ளிதழ் நெய்தல் வருந்த மூக்கிறுபு*
*அள்ளல் இருஞ்சேற்று ஆழப் பட்டெனக்*
*கிளைக்குருகு இரியுந் துறைவன் வளைக்கோட்டு*
*அன்ன வெண்மணற்று அகவயின் வேட்ட*
*அண்ணல் உள்ளமொடு அமர்ந்தினிது நோக்கி*
*அன்னை தந்த அலங்கல் வான்கோடு*
*உலைந்தாங்கு நோதல் அஞ்சி அடைந்ததற்கு*
*இனையல் என்னும் என்ப மனையிருந்து*

*இருங்கழி துழவும் பனித்தலைப் பரதவர்*
*திண்திமில் விளக்கம் எண்ணுங்*
*கண்டல் வேலிக் கழிநல் லூரே* (நற். 372)

மேல் இற்செறிப்பான் அறிந்து ஆற்றாளாகின்ற தலைமகள் ஆற்றவேண்டி உலகியன்மேல் வைத்துச் சிறைப்புறமாகச் செறியாரெனச் சொல்லியது. 777

## பொதும்பில்கிழார் மகன் வெண்கண்ணி

*நீடுசினைப் புன்னை நறுந்தாது உதிரக்*
*கோடுபுனை குருகின் தோடுதலைப் பெயரும்*
*பல்பூங் கானல் மல்குநீர்ச் சேர்ப்ப*
*அன்பிலை ஆதலின் தன்புலன் நயந்த*
*என்னும் நாணும் நன்னுதல் உவப்ப*
*வருவை ஆயினோ நன்றே பெருங்கடல்*
*இரவுத்தலை மண்டிலம் பெயர்ந்தென உரவுத்திரை*
*எறிவன போல வரூஉம்*
*உயர்மணல் படப்பைஎம் உறைவின் ஊரே* (நற். 375)

வரையாது நெடுங்காலம் வந்தொழுகத் தலைமகளது நிலையுணர்ந்த தோழி வரைவுகடாயது. 778

## வடமவண்ணக்கன் பேரிசாத்தனார்

*யாமமும் நெடிய கழியுங் காமமும்*
*கண்படல் ஈயாது பெருகுந் தெண்கடல்*
*முழங்குதிரை முழவின் பாணியின் பைபயப்*
*பழம்புண் உறுநரின் பரவையின் ஆலும்*
*ஆங்கவை நலியவும் நீங்கி யாங்கும்*
*இரவிறந்து எல்லை தோன்றலது அலர்வாய்*
*அயலிற் பெண்டிர் பசலை பாட*
*ஈங்கா கின்றாள் தோழி ஓங்குமணல்*
*வரியார் சிறுமனை சிதைஇ வந்து*
*பரிவுதரத் தொட்ட பணிமொழி நம்பிப்*
*பாடிமிழ் பனிநீர்ச் சேர்ப்பனொடு*
*நாடாது இயைந்த நண்பினது அளவே* (நற். 378)

தோழி சிறைப்புறமாகச் சொல்லியது. 779

## மதுரை மருதனிளநாகனார்

*கடுஞ்சுறா எறிந்த கொடுந்தாள் தந்தை*
*புள்இமிழ் பெருங்கடல் கொள்ளான் சென்றென*
*மனையழுது ஒழிந்த புன்தலைச் சிறாஅர்*
*துனையதின் முயன்ற தீங்கண் நுங்கின்*
*பணைகொள் வெம்முலை பாடுபெற்று உவக்கும்*
*பெண்ணை வேலி உழைகண் சீறூர்*
*நன்மனை அறியின் நன்றும தில்ல*
*செம்மல் நெஞ்சமொடு தாம்வந்து பெயர்ந்த*
*கானலொடு அழியுநர் போலாம் பால்நாள்*
*முனிபடர் களையினுங் களைப*
*நனிபேர் அன்பினர் காத லோரே* (நற். 392)

தோழி இரவுக்குறி முகம்புக்கது. 780

## அம்மூவனார்

*யாரை எலுவ யாரே நீயெமக்கு*
*யாரையும் அல்லை நொதும லாளனை*
*அனைத்தாற் கொண்களம் இடையே நினைப்பின்*
*கடும்பகட்டு யானை நெடுந்தேர்க் குட்டுவன்*
*வேந்தடு களத்தின் முரசதிர்ந் தன்ன*
*ஓங்ககல் புணரி பாய்ந்தாடு மகளிர்*
*அணிந்திடு பல்பூ மரீஇ ஆர்ந்த*
*ஆபுலம் புகுதரு பேரிசை மாலைக்*
*கடல்கெழு மாந்தை அன்னஎம்*
*வேட்டனை அல்லையால் நலந்தந்து சென்மே* (நற். 395)

நலந்தொலைந்தது எனத் தலைவனைத் தோழி கூறி வரைவுகடாயது. 781

## உலோச்சனார்

*உருகெழு தெய்வமும் கரந்துறை யின்றே*
*விரிகதிர் ஞாயிறுங் குடக்குவாங் கும்மே*
*நீரலைக் கலைஇய கூழை வடியாச்*
*சாஅய் அவ்வயிறு அலைப்ப உடனியைந்து*
*ஓரை மகளிரும் ஊரெய் தினரே*

*பல்மலர் நறும்பொழில் பழிச்சி யாம்முன்*
*சென்மோ சேயிழை என்றனம் அதனெதிர்*
*சொல்லாள் மெல்லியல் சிலவே நல்லகத்து*
*யாணர் இளமுலை நனைய*
*மாண்எழில் மலர்க்கண் தெண்பனி கொளவே (நற். 398)*

முன்னுறவுணர்ந்து பகற்குறி வந்து மீளுந் தலைமகனை நீயே இவளது தன்மையை ஆற்றுவியெனத் தோழி சொல்லியது. 782

## நல்லந்துவனார்

*ஒண்சுடர் கல்சேர உலகூருந் தகையது*
*தெண்கட லழுவத்துத் திரைநீக்கா எழுதரூஉந்*
*தண்கதிர் மதியத் தணிநிலா நிறைத்தரப்*
*புள்ளினம் இரைமாந்திப் புகல்சேர ஒலியான்று*
*வள்ளிதழ் கூம்பிய மணிமருள் இருங்கழி*
*பள்ளிபுக் கதுபோலும் பரப்புநீர்த் தண்சேர்ப்ப!*
*தாங்கருங் காமத்தைத் தணந்துநீ புறமாறத்*
*தூங்குநீ ரிமிழ்திரை துணையாகி யொலிக்குமே*
*உறையொடு வைகிய போதுபோல் ஒய்யென*
*நிறையானா திழிதரூஉம் நீர்நீந்து கண்ணாட்கு;*
*வாராய்நீ புறமாற வருந்திய மேனியாட்*
*காரிருள் துணையாகி அசைவளி அலைக்குமே*
*கமழ்தண்தா துதிர்ந்துக ஊழுற்ற கோடல்வீ*
*இதழ்சோருங் குலைபோல இறைநீவு வளையாட்கு;*
*இன்றுணை நீநீப்ப இரவினுள் துணையாகித்*
*தன்றுணைப் பிரிந்தயாஅந் தணிக்குரு குசவுமே*
*ஒண்சுடர் ஞாயிற்று விளக்கத்தான் ஒளிசாம்பு*
*நண்பகன் மதியம்போல் நலஞ்சாய்ந்த அணியாட்கு;*
*எனவாங்கு,*
*எறிதிரை தந்திட இழிந்தமீன் இன்துறை*
*மறிதிரை வருந்தாமற் கொண்டாங்கு நெறிதாழ்ந்து*
*சாயினள் வருந்தியாள் இடும்பை*
*பாய்பரிக் கடுந்திண்டேர் களையினோ விடனே (**கலி.** 121)*

தலைவன் ஒருவழித் தணந்தவிடத்துத் தலைவி யாற்றாமை கூறி வரையக் கருதினாயாயின் இஃதிடமெனச் சொல்லியது. 783

*ஞாலமூன் றடித்தாய முதல்வற்கு முதுமுறைப்*
*பாலன்ன மேனியான் அணிபெறத் தைஇய*
*நீலநீ ருடைபோலத் தகைபெற்ற வெண்டிரை*
*வாலெக்கர் வாய்சூழும் வயங்குநீர்த் தண்சேர்ப்ப!*
*ஊரல ரெடுத்தரற்ற உள்ளாய்நீ துறத்தலின்*
*கூருந்தன் எவ்வநோய் என்னையும் மறைத்தாள்மன்*
*காரிகை பெற்றதன் கவின்வாடக் கலுழ்பாங்கே*
*பீரல ரணிகொண்ட பிறைநுத லல்லாக்கால்;*
*இணைபிவ்வூ ரலர்தூற்ற எய்யாய்நீ துறத்தலின்*
*புணையில்லா எவ்வநோய் என்னையும் மறைத்தாள்மன்*
*துணையாருள் தகைபெற்ற தொன்னலம் இழந்தினி*
*அணிவனப் பிழந்ததன் அணைமென்றோ ளல்லாக்கால்;*
*இன்றிவ்வூ ரலர்தூற்ற எய்யாய்நீ துறத்தலின்*
*நின்றதன் எவ்வநோய் என்னையும் மறைத்தாள்மன்*
*வென்றவேல் நுதியேய்க்கும் விறல்நலன் இழந்தினி*
*நின்றுநீ ருகக்கலுழும் நெடும்பெருங்கண் அல்லாக்கால்;*
*அதனால்,*
*பிரிவில்லாய் போலநீ தெய்வத்திற் றெளித்தக்கால்*
*அரிதென்னாள் துணிந்தவள் ஆய்நலம் பெயர்தரப்*
*புரியுளைக் கலிமான்தேர் கடவுபு*
*விரிதண்தார் வியன்மார்ப விரைகநின் செலவே* **(கலி. 124)**

'வெளிப்பட வரைதல் படாமை வரைதலென், றாயிரண்டென்ப வரைத லாறே' என்பதனாற் களவு வெளிப்பட்டபின் வரையாது பொருள்வயிற் பிரிந்து வந்தானைத் தோழி எதிர்ப்பட்டு நின்று தலைவியது ஆற்றாமை கூறி வரைவுகடாயது. 784

*கண்டவ ரில்லென உலகத்துள் உணராதார்*
*தங்காது தகைவின்றித் தாஞ்செய்யும் வினைகளுள்*
*நெஞ்சறிந்த கொடியவை மறைப்பினும் அறிபவர்*
*நெஞ்சத்துக் குறுகிய கரியில்லை யாகலின்*
*வண்பரி நவின்ற வயமான் செல்வ*
*நன்கதை யறியினும் நயனில்லா நாட்டத்தால்*
*அன்பிலை யெனவந்து கழறுவல் ஐயகேள்;*
*மகிழ்செய் தேமொழித் தொய்யில்சூழ் இளமுலை*
*முகிழ்செய முள்கிய தொடர்பவள் உண்கண்*

அவிழ்பனி யுறைப்பவும் நல்காது விடுவாய்
இமிழ்திரை கொண்க கொடியை காண்நீ;
இலங்கே ரெல்வளை யேர்தழை தைஇ
நலஞ்செல நல்கிய தொடர்பவள் சாஅய்ப்
புலந்தழப் புல்லாது விடுவாய்
இலங்குநீர்ச் சேர்ப்ப கொடியை காண்நீ;
இன்மணிச் சிலம்பிற் சின்மொழி யைம்பால்
பின்னொடு கெழீஇய தடவர லல்குல்
நுண்வரி வாட வாராது விடுவாய்
தண்ணந் துறைவ தகாஅய் காண்நீ;
எனவாங்கு,
அனையளென் றளிமதி பெரும நின்னின்
றிறைவரை நில்லா வளையள் இவட்கினிப்
பிறையேர் சுடர்நுதற் பசலை
மறையச் செல்லுநீ மணந்தனை விடினே (கலி. 125)

வரைவுநீட ஆற்றாத தலைவி நிலைமை தலைவற்குத் தோழி கூறி அவனை நெருங்கி வரைவுகடாயது. 785

பொன்மலை சுடர்சேரப் புலம்பிய இடன்நோக்கித்
தன்மலைந் துலகேத்தத் தகைமதி யேர்தரச்
செக்கர்கொள் பொழுதினான் ஒலிநீவி இனநாரை
முக்கோல்கொள் அந்தணர் முதுமொழி நினைவார்போல்
எக்கர்மேல் இறைகொள்ளும் இலங்குநீர்த் தண்சேர்ப்ப!
அணிச்சிறை யினக்குரு கொலிக்குங்கால் நின்திண்தேர்
மணிக்குர லெனஇவள் மதிக்குமன் மதித்தாங்கே
உள்ளான்ற ஒலியவாய் இருப்பக்கண் டவைகானல்
புள்ளென உணர்ந்துபின் புலம்புகொண் டினையுமே;
நீர்நீவிக் கஞன்றபூக் கமழுங்கால் நின்மார்பின்
தார்நாற்றம் எனஇவள் மதிக்குமன் மதித்தாங்கே
அலர்பதத் தசைவளி வந்தொல்கக் கழிப்பூத்த
மலரென வுணர்ந்துபின் மம்மர்கொண் டினையுமே;
நீள்நகர் நிறையாற்றாள் நினையுநள் வதிந்தக்கால்
தோள்மேலாய் எனநின்னை மதிக்குமன் மதித்தாங்கே
நனவெனப் புல்லுங்கால் காணாளாய்க் கண்டது
கனவென உணர்ந்துபின் கையற்றுக் கலங்குமே;

எனவாங்கு,
பலநினைந் தினையும் பைதல் நெஞ்சின்
அலமரல் நோயுள் உழக்குமென் தோழி
மதிமருள் வாண்முகம் விளங்கப்
புதுநலம் ஏர்தரப் பூண்கநின் தேரே (கலி. 126)

தோழி தலைவியது ஆற்றாமை கூறித் தலைவனை வரைவுகடாயது. 786

தெரியிணர் ஞாழலுந் தேங்கமழ் புன்னையும்
புரியவிழ் பூவின கைதையுஞ் செருந்தியும்
வரிஞிமி றிமிர்ந்தார்ப்ப இருந்தும்பி யிமைபூதச்
செருமிகு நேமியான் தார்போலப் பெருங்கடல்
வரிமணல் வாய்சூழும் வயங்குநீர்த் தண்சேர்ப்ப!
கொடுங்கழி வளைஇய குன்றுபோல் வாலெக்கர்
நடுங்குநோய் தீரநின் குறிவாய்த்தா ளென்பதோ
கடும்பனி யறலிகு கயலேர்கண் பனிமல்க
இடும்பையோ டினைபேங்க இவளைநீ துறந்ததை;
குறியின்றிப் பன்னாள்நின் கடுந்திண்டேர் வருபதங்கண்
டெறிதிரை யிமிழ்கானல் எதிர்கொண்டா ளென்பதோ
அறிவரு ருழந்தேங்கி ஆய்நலம் வறிதாகச்
செறிவளை தோளூர இவளைநீ துறந்ததை;
காண்வர இயன்றஇக் கவின்பெறு பனித்துறை
யாமத்து வந்துநின் குறிவாய்த்தா ளென்பதோ
வேய்நல மிழந்ததோள் விளங்கிழை பொறையாற்றாள்
வாள்நுதல் பசப்பூர இவளைநீ துறந்ததை;
அதனால்,
இறைவளை நெகிழ்ந்த எவ்வநோய் இவள்தீர
உரவுக்கதிர் தெறுமென ஓங்குதிரை விரைபுதன்
கரையமல் அடும்பளித் தாஅங்
குரவுநீர்ச் சேர்ப்ப அருளினை அளியே (கலி. 127)

தோழி தலைவியது ஆற்றாமை கூறித் தலைவனை வரைவுகடாயது. 787

தொல்லூழி தடுமாறித் தொகல்வேண்டும் பருவத்தால்
பல்வயி னுயிரெல்லாம் படைத்தான்கட் பெயர்ப்பான்போல்
எல்லுறு தெறுகதிர் மடங்கித்தன் கதிர்மாய

*நல்லற நெறிநிறீஇ யுலகாண்ட அரசன்பின்*
*அல்லது மலைந்திருந் தறநெறி நிறுக்கல்லா*
*மெல்லியான் பருவம்போல் மயங்கிருள் தலைவர*
*எல்லைக்கு வரம்பாய இடும்பைகூர் மருள்மாலை;*
*பாய்திரை பாடோவாப் பரப்புநீர் பனிக்கடல்*
*தூவறத் துறந்தனன் துறைவனென் றவன்திறம்*
*நோய்தெற உழப்பார்கண் இமிழ்தியோ எம்போலக்*
*காதல்செய் தகன்றாரை யுடையை யோநீ;*
*மன்றிரும் பெண்ணை மடல்சே ரன்றில்*
*நன்றறை கொன்றன ரவரெனக் கலங்கிய*
*என்துய ரறிந்தனை நரறியோ எம்போல*
*இன்துணைப் பிரிந்தாரை யுடையை யோநீ;*
*பனியிருள் சூழ்தரப் பைதலஞ் சிறுகுழல்*
*இனிவரின் உயருமன் பழியெனக் கலங்கிய*
*தனியவ திடும்பைகண் டினைதியோ எம்போல*
*இனியசெய் தகன்றாரை யுடையை யோநீ;*
*எனவாங்கு,*
*அழிந்தய லறிந்த எவ்வ மேற்படப்*
*பெரும்பே துறுதல் களைமதி பெரும*
*வருந்திய செல்லல் தீர்த்த திறனறி யொருவன்*
*மருந்தறை கோடலிற் கொடிதே யாழநின்*
*அருந்தியோர் நெஞ்சம் அழிந்துக விடினே* **(கலி. 129)**

'தன்னுட் கையா றெய்திடு கிளவி'யால் தலைவி ஆற்றாளாயினவாறு தோழி தலைவற்குக் கூறியது. 788

*பெருங்கடல் தெய்வநீர் நோக்கித் தெளித்தென்*
*திருந்திழை மென்றோள் மணந்தவன் செய்த*
*அருந்துயர் நீக்குவேன் போன்மற் பொருந்துபு*
*பூக்கவின் கொண்ட புகழ்சால் எழிலுண்கண்*
*நோக்குங்கால் நோக்கின் அணங்காக்குஞ் சாயலாய் தாக்கி*
*இனமீன் இகன்மாற வென்ற சினமீன்*
*எறிசுறா வான்மருப்புக் கோத்து நெறிசெய்த*
*நெய்தல் நெடுநாரப் பிணித்தியாத்துக் கையுளர்வின்*
*யாழிசை கொண்ட இனவண் டிமிர்ந்தார்ப்பத்*

தாழா துறைக்குந் தடமலர்த் தண்டாழை
வீழுசல் தூங்கப் பெறின்;
மாழை, மடமான் பிணைபியல் வென்றாய்நின் னூசல்
கடைஇயான் இகுப்பநீள் தூங்காய் தடமென்றோள்
நீத்தான் திறங்கள் பகர்ந்து;
நாணினகொல் தோழி நாணினகொல் தோழி
இரவெலாம் நற்றோழி நாணின என்பவை
வாள்நிலா ஏய்க்கும் வயங்கொளி யெக்கர்மேல்
ஆனாப் பரிய அலவன் அளைபுகூஉங்
கானற் கமழ்ஞாழல் வீயேய்ப்பத் தோழியென்
மேனி சிதைத்தான் துறை;
மாரிவீ ழிருங்கூந்தல் மதைஇயநோக் கெழிலுண்கண்
தாழ்நீர முத்தின் தகையேய்க்கும் முறுவலாய்
தேயாநோய் செய்தான் திறங்கிளந்து நாம்பாடும்
சேயுயர் ஊசல்சீர் நீயொன்று பாடித்தை;
பார்த்துற் றனதோழி பார்த்துற் றனதோழி
இரவெலாம் நற்றோழி பார்த்துற்றன என்பவை
தன்துணை யில்லாள் வருந்தினாள் கொல்லென
இன்துணை யன்றில் இரவின் அகவாவே
அன்றுதான் ஈர்த்த கரும்பணி வாடஎன்
மென்தோள் ஞெகிழ்த்தான் துறை;
கரைகவர் கொடுங்கழிக் கண்கவர் புள்ளினந்
திரையுறப் பொன்றிய புலவுமீ னல்லதை
இரையுயிர் செகுத்துண்ணாத் துறைவனை யாம்பாடும்
அசைவரல் ஊசற்சீர் அழித்தொன்று பாடித்தை;
அருளினகொல் தோழி அருளினகொல் தோழி
இரவெலாந் தோழி அருளின என்பவை
கணங்கொள் இடுமணற் காவி வருந்தப்
பிணங்கிரு மோட்ட திரைவந் தளிக்கும்
மணங்கமழ் ஐம்பாலா ரூடலை யாங்கே
வணங்கி யுணர்ப்பான் துறை;
எனநாம்
பாட மறைநின்று கேட்டனன் நீடிய
வானீர்க் கிடக்கை வயங்குநீர்ச் சேர்ப்பனை
யானென உணர்ந்து நீநனி மருளத்

*தேனிமிர் புன்னை பொருந்தித்*
*தானூக் கினைவ் வூசலை வந்தே* **(கலி. 131)**

வரைவுநீட ஆற்றாளாய தலைவியைத் தோழி அவன் முன் அருமை செய்து அயர்த்த காலத்து அவன் வரைவினை யானறிந்து ஊசலாட நின்னைக் கொண்டுபோய் ஆடுகின்ற காலத்து யான் இயற்பழிக்க நீ இயற்பட மொழிவதுகேட்டு வந்து ஊசலை ஊக்கியவன் இக்காலத்து வருந்தவிடாது வருத்தமறிந்து வரைந்து கொள்வனென ஆற்றுவித்தது. 789

*உரவுநீர்த் திரைபொர ஓங்கிய எக்கர்மேல்*
*விரவுப்பல் லுருவின வீழ்பெடை துணையாக*
*இரைதேர்ந்துண் டசாவிடூஉம் புள்ளினம் இறைகொள*
*முரைசுமூன் றாள்பவர் முரணியோர் முரண்தப*
*நிரைகளி றிடைபட நெறியாத்த இருக்கைபோல்*
*சிதைவின்றிச் சென்றுழிச் சிறப்பெய்தி வினைவாய்த்துத்*
*துறையகலம் வாய்சூழத் துணிகடல் தண்சேர்ப்ப!*
*புன்னைய நறும்பொழில் புணர்ந்தனை யிருந்தக்கால்*
*நன்னுதால் அஞ்சலோம் பென்றதன் பயனன்றோ*
*பாயின பசலையாற் பகற்கொண்ட சுடர்போன்றாள்*
*மாவின தளிர்போலும் மாணலம் இழந்ததை;*
*பன்மலர் நறும்பொழிற் பழியின்றிப் புணர்ந்தக்கால்*
*சின்மொழி தெளியெனத் தேற்றிய சிறப்பன்றோ*
*வாடுபு வனப்போடி வயக்குறா மணிபோன்றாள்*
*நீடிறை நெடுமென்றோள் நிரைவளை நெகிழ்ந்ததை;*
*அடும்பிவ ரணியெக்கர் ஆடிநீ தணந்தக்கால்*
*கொடுங்குழாய் தெளியெனக் கொண்டதன் கொளையன்றோ*
*பொறையாற்றா நுசுப்பினாற் பூவீந்த கொடிபோன்றாள்*
*மறைபிற ரறியாமை மாணாநோ யுழந்ததை;*
*எனவாங்கு,*
*வழிபட்ட தெய்வந்தான் வலியெனச் சார்ந்தார்கண்*
*கழியுநோய் கைம்மிக அணங்காகி யதுபோலப்*
*பழிபரந் தலர்தூற்ற என்றோழி*
*அழிபட ரலைப்ப அகறலோ கொடிதே* **(கலி. 132)**

வரைவு நீட்டித்துழிப் பகற்குறிவந்து நீங்குந் தலைவனை எதிர்ப்பட்டுத் தோழி அவனை நாணு நெஞ்சலைப்ப வரைவுகடாயது. 790

*மாமலர் முண்டகந் தில்லையோ டொருங்குடன்*
*கான லணிந்த உயர்மணல் எக்கர்மேல்*
*சீர்மிகு சிறப்பினோன் மரமுதல் கைசேர்த்த*
*நீர்மலி கரகம்போல் பழந்தூங்கு முடத்தாழைப்*
*பூமலர்ந் தவைபோலப் புள்ளல்குந் துறைவகேள்;*
*ஆற்றுதல் என்பதொன் றலந்தவர்க் குதவுதல்*
*போற்றுதல் என்பது புணர்ந்தாரைப் பிரியாமை*
*பண்பெனப் படுவது பாடறிந் தொழுகுதல்*
*அன்பெனப் படுவது தன்கிளை செறாஅமை*
*அறிவெனப் படுவது பேதையார் சொல்நோன்றல்*
*செறிவெனப் படுவது கூறியது மறாஅமை*
*நிறைவெனப் படுவது மறைபிற ரறியாமை*
*முறையெனப் படுவது கண்ணோடா துயிர்வௌவல்*
*பொறையெனப் படுவது போற்றாரைப் பொறுத்தல்;*
*ஆங்கதை யறிந்தனி ராயினென் தோழி*
*நன்னுதல் நலனுண்டு துறத்தல் கொண்க*
*தீம்பா லுண்பவர் கொள்கலம் வரைதல்*
*நின்றலை வருந்தியாள் துயரம்*
*சென்றனை களைமோ பூண்கநின் தேரே* **(கலி. 133)**

வரைவுடம்பட்டோர்க் கடாவல் வேண்டினும் என்பதனால் தலைவன் தெருளாதவனைத் தெருட்டித் தோழி வரைவுகடாயது. 791

*துணைபுணர்ந் தெழுதரும் தூநிற வலம்புரி*
*இணைதிரள் மருப்பாக எறிவளி பாகனா*
*அயில்திணி நெடுங்கத வமைத்தடைத் தணிகொண்ட*
*வெயிலிடு களிறேபோல் இடுமணல் நெடுங்கோட்டைப்*
*பயில்திரை நடுநன்னாட் பாய்ந்துறூஉந் துறைவகேள்;*
*கடமலர்ப் புன்னைக்கீழ்க் காரிகை தோற்றாளைத்*
*தொடிநெகிழ்ந்த தோளளாத் துறப்பாயான் மற்றுநின்*
*குடிமைக்கண் பெரியதோர் குற்றமாய்க் கிடவாதோ;*
*ஆய்மலர்ப் புன்னைக்கீழ் அணிநலந் தோற்றாளை*
*நோய்மலி நிலையளாத் துறப்பாயான் மற்றுநின்*
*வாய்மைக்கண் பெரியதோர் வஞ்சமாய்க் கிடவாதோ;*
*திகழ்மலர்ப் புன்னைக்கீழ்த் திருநலந் தோற்றாளை*
*இகழ்மலர்க் கண்ணளாத் துறப்பாயான் மற்றுநின்*

*புகழ்மைக்கண் பெரியதோர் புகராகிக் கிடவாதோ;*
*எனவாங்கு,*
*சொல்லக் கேட்டனை யாயின் வல்லே*
*அணிகிளர் நெடுவரை அலைக்குநின் அகலத்து*
*மணகிள ரார நாரொடு துயல்வர*
*உயங்கின ளுயிர்க்குமென் தோழிக்*
*கியங்கொலி நெடுந்திண்தேர் கடவுமதி விரைந்தே* **(கலி. 135)**

வரையாது வந்தொழுகுந் தலைவனைத் தோழி நெருங்கி வரைவு கடாயது.
792

*இவர்திமில் எறிதிரை ஈண்டிவந் தலைத்தக்கால்*
*உவறுநீர் உயரெக்கர் அலவனா டளைவரித்*
*தவலில்தண் கழகத்துத் தவிராது வட்டிப்பக்*
*கவறுற்ற வடுவேய்க்குங் காமர்பூங் கடற்சேர்ப்ப!*
*முத்துறழ் மணலெக்கர் அளித்தக்கால் முன்னாயம்*
*பத்துருவம் பெற்றவன் மனம்போல நந்தியாள்*
*அத்திறத்து நீநீங்க அணிவாடி அவ்வாயம்*
*வித்தத்தால் தோற்றான்போல் வெய்துயர் உழப்பவோ;*
*முடத்தாழை முடுக்கருள் அளித்தக்கால் வித்தாய*
*மிடைத்தங்கக் கண்டவன் மனம்போல நந்தியாள்*
*கொடைத்தக்காய் நீயாயின் நெறியல்லாக் கதியோடி*
*உடைப்பொதி இழந்தான்போல் உறுதுயர் உழப்பவோ;*
*நறுவீதாழ் புன்னைக்கீழ் நயந்துநீ அளித்தக்கால்*
*மறுவித்தம் இட்டவன் மனம்போல நந்தியாள்*
*அறிவித்து நீநீங்கக் கருதியாய்க் கப்பொருள்*
*சிறுவித்தம் இட்டான்போல் செறிதுயர் உழப்பவோ;*
*ஆங்கு*
*கொண்டுபலர் தூற்றுங் கௌவை அஞ்சாய்*
*தீண்டற் கருளித் திறனறிந் தெழீஇப்*
*பாண்டியஞ் செய்வான் பொருளினும்*
*ஈண்டுக இவள்நலம் ஏறுக தேரே* **(கலி. 136)**

வரைவிடை வைத்துப் பிரியக்கருதிய தலைவனைத் தோழி தலைவியாற்றாமை கூறிச் செலவு விலக்கி வரைவுகடாயது. 793

நிரைதிமில் களிறாகத் திரையொலி பறையாகக்
கரைசேர் புள்ளினத் தஞ்சிறை படையாக
அரைசுகால் கிளர்ந்தன்ன உரவுநீர்ச் சேர்ப்பகேள்!
கற்பித்தான் நெஞ்சழுங்கப் பகர்ந்துண்ணான் விச்சைக்கண்
தப்பித்தான் பொருளேபோல் தமியவே தேயுமால்
ஒற்கத்துள் உதவியார்க் குதவாதான் மற்றவன்
எச்சத்துள் ஆயினுமஃ தெறியாது விடாதேகாண்;
கேளிர்கள் நெஞ்சழுங்கக் கெழுவுற்ற செல்வங்கள்
தாளிலான் குடியேபோல் தமியவே தேயுமால்
சூள்வாய்த்த மனத்தவன் வினைபொய்ப்பின் மற்றவன்
வாய்வாய்நன் றாயினுமஃ தெறியாது விடாதேகாண்;
ஆங்கு,
அனைத்தினிப் பெரும அதனிலை நினைத்துக்காண்
சினைஇய வேந்தன் எயிற்புறத் திறுத்த
வினைவரு பருவரல் போலத்
துனைவரு நெஞ்சமொடு வருந்தினள் பெரிதே (**கலி. 149**)

வரைவு நீட்டித்துழித் தோழி தலைவியது ஆற்றாமை கூறித் தலைவனை வரைவு கடாயது. 794

அயந்திகழ் நறுங்கொன்றை யலங்கலந் தெரியலான்
இயங்கெயி லெயப்பிறந்த எரிபோல எவ்வாயுங்
கனைகதிர் தெறுதலின் கடுத்தெழுந்த காம்புத்தீ
மலைபரந்து தலைக்கொண்டு முழங்கிய முழங்கழன்
மயங்கதர் மறுகலின் மலைதலைக் கொண்டென
விசும்புற நிவந்தழலும் விலங்கரு வெஞ்சுரம்;
இறுந்துதாம் எண்ணிய எய்துதல் வேட்கையால்
அறந்துறந் தாயிழாய் ஆக்கத்திற் பிரிந்தவர்
பிறங்குநீர் சடைக்கரந்தான் அணியன்ன நின்னிறம்
பசந்துநீ இனையையாய் நீத்தலும் நீப்பவோ;
கரிகாய்ந்த கவலைத்தாய்க் கல்காய்ந்த காட்டகம்
வெருவந்த ஆறென்னார் விழுப்பொருட் ககன்றவர்
உருவவேற் றூர்தியான் ஒள்ளணிநக் கன்னநின்
உருவிழந் தினையையாய் உள்ளலும் உள்ளுபவோ;
கொதித்துராய்க் குன்றிவர்ந்து கொடிக்கொண்ட கோடையால்

*ஓதுக்கரிய நெறியென்னார் ஒண்பொருட் ககன்றவர்*
*புதுத்திங்கட் கண்ணியான் பொற்பூண்ஞான் றன்னநின்*
*கதுப்புலறுங் கவினையாய்க் காண்டலுங் காண்பவோ;*
*ஆங்கு,*
*அரும்பெறல் ஆதிரையான் அணிபெற மலர்ந்த*
*பெருந்தண் சண்பகம் போல ஒருங்கவர்*
*பொய்யா ராகுதல் தெளிந்தனம்*
*மையீ ரோதி மடமொழி யோயே* **(கலி. 150)**

பொருள்வயிற் பிரிந்த தலைவனை நினைந்து ஆற்றாத தலைவியைத் தோழி ஆற்றுவித்தது. 795

# செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசை

**(எண் : பக்க எண்)**

*

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113

## அண்மை வெளியீடுகள்

| | ரூ.பை. |
|---|---|
| தமிழர் பண்பாட்டுச் சொற்கோவை-ஒப்பனையியல் | 250.00 |
| தமிழிலக்கியக் குறியீடுகள் அகராதி | 225.00 |
| அரங்கேற்றுக்காதை ஆராய்ச்சி | 140.00 |
| பழந்தமிழ் அமைப்பியல் மற்றும் குறியியல் ஆய்வுகள் | 45.00 |
| Essays and Tributes on Tirukkural (1886-1986) | 100.00 |
| இந்தியச் சூழலில் மொழிஇழப்பு ஒரு சமுதாய மொழியியல் பார்வை | 60.00 |
| நீறணி பவளக் குன்றம் | 35.00 |
| உலகப் பகுத்தறிவு நீரோட்டத்தில் பெரியார் | 35.00 |
| கலீலியோ முதல் கலாம் வரை | 35.00 |
| குலோத்துங்கன் கவிதைகள் ஒரு கோபுர தீபம் | 60.00 |
| தமிழறிஞர் அடிகளாசிரியரின் சிறுவர் இலக்கியப் பாடல்கள் | 30.00 |
| நாமக்கல் கவிஞரின் தமிழ்ப்பணி | 30.00 |
| ஈழத்தில் கண்ணகி கலாச்சாரம் | 30.00 |
| சிறுபஞ்சமூலம்- ஒரு சமுகவியல் பார்வை | 30.00 |
| சங்கத் தமிழ் பகுதி 1 | 100.00 |
| சங்கத் தமிழ் பகுதி 2 | 100.00 |
| சங்கத் தமிழ் பகுதி 3 | 115.00 |
| சங்கத் தமிழ் பகுதி 4 | 130.00 |
| சங்கத் தமிழ் பகுதி 5 | 110.00 |
| ம.பொ.சி.யின் வாழ்க்கை வரலாற்று இலக்கியங்கள் | 60.00 |
| தொல்காப்பியம், சங்க இலக்கியம் பதிப்பும் பதிப்பாளரும் | 160.00 |
| இந்தி நாடகப்பனுவல் (ஆடிமாதத்தில் ஒரு நாள்) | 50.00 |
| திராவிட இயக்கத்தில் அன்னை மணியம்மையின் பங்கு | 40.00 |
| பண்பாட்டுப் பார்வையில் திருமந்திரம் | 70.00 |
| காரைக்கால் அம்மையார் பாடல்கள் ஓர் ஆய்வு | 40.00 |
| Freudism in the Novels of James Joyce and T.Jankiraman: A comparative study | 125.00 |
| இலக்கணத்தொகை யாப்பு பாட்டியல் | 290.00 |
| தென்கிழக்கு ஆசியா நாடுகளில் தமிழ்ப்பண்பாடு | 310.00 |
| பதிற்றுப்பத்து மூலமும் ஆராய்ச்சிப்புத்துரையும் | 170.00 |
| தமிழ் மொழிபெயர்ப்பு முன்னோடிகள் | 185.00 |
| மனிதப் புனிதர் கக்கன் | 110.00 |
| மொழிபெயர்ப்பு:ஒரு கவின்கலை | 75.00 |
| மூவர்தமிழ் மூன்று பார்வைகள் | 50.00 |
| காமன்வெல்த் நாடுகளின் கவிதைகள் | 100.00 |
| அறிஞர்கள் பார்வையில் பேரறிஞர் அண்ணா | 145.00 |
| அறிஞர் அண்ணா-மொபசான் சிறுகதைகள்-ஒப்பாய்வு | 160.00 |
| இராசேந்திர சோழன் வெளியிட்ட எசாலம் செப்பேடுகள் | 55.00 |
| கடலடியில் தமிழர் நாகரிகம் | 55.00 |
| கடற்பொறியியற் கலைச்சொற்கள் (குறுங்கலைக்களஞ்சியம்) | 150.00 |
| சங்க இலக்கியத்தில் சமுக ஆய்வுகள் | 55.00 |

**665 சங்க அகப்பாடல்கள் தோழி கூற்று** **170.00**